தி.ந. உலகநாதன்

மெய்கண்டார் அருளிய

# சிவஞான போதமும் விளக்கவுரையும்




மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே.

T.N.Ulaganathan..



உரையாசிரியர்:
பேராசிரியர் திரு. வை. முருகேசன்



மெய்கண்டான் அருளிய

# சிவஞான போதமும் விளக்கவுரையும்

~~திருஉலகநாதன்~~



உரையாசிரியர் :

**பேராசிரியர் திரு. வை. முருகேசன்**

அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T




பதிப்பகம் :
மெய்கண்டான் பண்ணை
15D-3/1, வள்ளலார் தெரு, திருவத்திபுரம் - 604 407.

பதிப்பு : நவம்பர் 1993

உரிமை பதிவு : திரு வை. முருகேசன்,

மெய்கண்டார் அருளிய சிவஞானபோதமும் விளக்கவுரையும்.

விளக்கவுரையாசிரியர் : பேராசிரியர் திரு வை. முருகேசன்.

பக்கம் : 370.

தாள் : சேஷசாயி கி[illegible] GSM.

அச்சகம் : பாரதி அச்சகம், திருவத்திபுரம்

பதிப்பகம் : மெய்கண்டான் பண்ணை,
15D-3/1, வள்ளலார் தெரு, திருவத்திபுரம் - 604407.

நூல் கிடைக்கும் முகவரி : திரு. வை. முருகேசன்
15D-3/1, வள்ளலார் தெரு,
திருவத்திபுரம் – 604 407.
பாரதி பதிப்பகம்,
18/5, ஹைஸ்கூல் ஒற்றைவாடைத்தெரு,
செய்யாறு - 604 407.

விலை : ரூ. 60/– ( அறுபது உருபா )

---

Sivagnana Botham and its Commentery

Author : Professor. T. V. Murugesan

Total Pages : 370

Paper : SPB Cream Wove, 7.3 Kg., 55 GSM.

Printers : Bharathi Achagam,
36/1, Arcot Road, Cheyyar - 604 407.

Publishers : Maigandan Pannai,
15–D-3/1, Vallalar Street, Thiruvathipuram - 604407

Address for getting Copies : Thiru. T. V. Murugesan,
15D-3/1, Vallalar Street,
Thiruvathipuram – 604 407.
Bharathi Pathipagam,
18/5, High School Othavadai Street,
Cheyyar - 604 407.

Price : Rs. 60/- ( Rupees Sixty only )

அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T

73-4

# முகவுரை

நமக்கு வாழ்வு தருகின்ற இந்த உலகம் மிகவும் தொன்மையானது. இது சடப்பொருளும் உயிர்ப்பொருளு மாய்க் கலந்து விளங்குவது. அவை நம் கண்ணாலும் கருத் தாலும் அறிய முடிந்தவை. அவ்வாறு எளிதில் அறிய முடியாத மூன்றாவதொருபொருளும் இந்த உலகில் நீக்க மறக்கலந்துள்ளதென்று நம்முன்னோராகிய சான்றோர்கள் தமது மெய்யுணர்வால் கண்டு தெளிந்தனர். அதைத்தான் இவ்வுலகிற்கு முதற்பொருள் என்றும் கடவுள் என்றும் இறை என்றும் சொல்லி அழைத்தனர். முதல்வன் இறைவன் கடவுள் என்ற அப்பெயர்கள் உலக மக்கள் அனைவராலும் ஏற்றுக்கொள்ளக்கூடிய பொதுப்பெயர்களே.

இறைவன் முதல்வன் கடவுள் என்ற பெயர்களைப்போலச் சிவம் என்ற பெயரும் உலகோர் அனைவருக்கும் பொது வானதே. செம்மை என்ற வேர்ச்சொல்லில் இருந்து கிளைத்தது சிவம் ஆதலின் அதனைச் செம்பொருள் எனவும் வழங்குவர். பொது மறை கண்ட வள்ளுவர் சிவம் என்னும் முதற்பொருளைச் செம்பொருள் என்றே வழங்கினர். ''பிறப் பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் - செம்பொருள் காண்பதறிவு'' என்பது வள்ளுவம். ஆகவே சிவம் என்பதும் செம்பொருள் என்பதும் சைவர்என்னும் ஒருசாரார்க்குமட்டில் சொந்தமான பெயர்கள் அல்ல. உலகில் உள்ள எல்லா நாட்டவரும் எல்லாமதத்தவரும் பொதுவாக ஏற்கக்கூடிய பெயர்களே அவை. அதனால்தான் சமணம் பௌத்தம் முதலிய அனைத்து மதங்களும் ஏற்கக்கூடிய வகையில் உலகில் நின்றனவும் சரிப்பனவுமாகிய அனைத்தும் சிவமே என்று பாண்டியனுக்கு விளக்கினார் திருஞான சம்பந்தப் பிள்ளையார். அது குறித்தே அவருடைய அவதாரத்தைக் கூறவந்த சேக்கிழார் பெருமானும் ''தாவில் சராசரங்க ளெலாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார் என்று பாடினார். உலகில் உள்ள சரம் அசரம் ஆகிய ஒவ்வொரு பொருளும் சிவமே என்று கண்டு தெளிந்த நம் முன்னோர்களின் இறை அனுபவந்தான் எத்துணை ஆழமானது என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

இனிச்சிவம் என்னும் உலக முதற்பொருள் ஆணாக இருந்ததா, பெண்ணாக இருந்ததா, அலியாக இருந்ததா என்று ஒரு கேள்வி எழலாம். அரிய காட்சியர் அவர் ஆனதால் அவரை யாரும் தீர அறிந்ததில்லை என்பதும்உண்மைதான். ஆனாலும் உலகமே அவன் உருஎன்பதால் அவன் அம் மூன்றாயும் இருந்தான் என்று தெளிந்தனர் நம் முன்னோராகிய அருளாளர்கள். ''பெண் ஆண் அலி எனும்பெற்றியன் கண்டாய்''. என்பது நாவரசர் வாக்கு. அவ்வகையில் அந்த உலக முதற்பொருளைச்சிவன்என்றும், சிவை என்றும், சிவம் என்றும் சொல்லி அனுபவித்தனர் நம் முன்னோர்கள்.

சிவனை வழிபட்டு வந்த நெறி சிவநெறி எனப்பட்டது. சிவநெறி திருநெறி என்றெல்லாம் அது மறை நூல்களில் குறிக்கப்பட்டு வந்தது. ஒரு காலத்து ஒருவரால் அது ஆக்கப் பட்டதன்று. தமிழ் மக்கள் அனைவராலும் மேற்கொண்டு ஒழுகி வரப்பட்டது அந்நெறி. சான்றோர் சென்ற நெறி என அது முதலில் பேசப்பட்டுப்பிறகு சிவநெறி என்ற பெயரால் அழைக்கப்பட்டது. சமணம் பௌத்தம் முதலிய மதங்கள் அப்படி வந்தவை அல்ல. அவை ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு அறிஞரால் தோற்றுவிக்கப்பட்டு மக்களிடையே பிரசாரத்திற்கு உரியவையாக இருந்து வந்தவை. அதனால் அவையெல்லாம் மதங்கள்என்றபெயரால் அழைக்கப்பட்டன. சிவநெறியாளர்கள் அன்னாரோடு வாதிட்டுத்தமது கொள் கையை நிலைநாட்ட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டபோது தான் சிவநெறி என்பதும் சைவம் என்றும் சைவமதம் என்றும் பெயர் மாற்றம் பெற்றது. என்றாலும் இது தமிழ்மக்கள் வாழ்வில் இயல்பாகவே மலர்ந்த ஒரு வழிபாட்டுநெறி என்பதில் ஐயமில்லை.

இந்தச் சிவநெறியானது இப்பொழுதுள்ள மதங்கள்எல்லா வற்றுக்கும் முந்தியது. அதாவது வரலாற்றுக்கும் முற்பட்டது என்று அறிஞர்கள் கருதுவர். சிவவழிபாடு பாரதத்தில் நிலை கொண்டிருந்தபொழுது உலகில் எங்கும் எந்தக் கடவுள் மதமும் இருந்ததில்லை என்று நாம் நம்பலாம். அரப்பா மொகஞ்சதாரோ என்ற இடங்களில் புதைந்து கிடந்த உண்மைகள் இக்கூற்றினை வலியுறுத்தும். அங்குப் புதை

யுண்ட நாகரிகம் கி. மு. ஐயாயிரத்திற்கும் முற்பட்டதென்று சர்.ஜான் மார்ஷல் என்னும் மேலைநாட்டறிஞர் கருதினார். அப்புதைபொருள்களில் சிவலிங்கம் காணப்பட்டதென்றும் சிவனை வழிபட்டு வந்த மக்கள் அங்கு வாழ்ந்து புதையுண்டு போனார்கள் என்றும் அறியப்படுவதால் சிவநெறி உலகிலேயே மிகப்பழமையான நெறி என்று அவர் உரைத்துச் சென்றார். இதையொட்டிப்பார்க்கின்றபொழுது அந்தக் காலத்தில் கிறித்துவ மதத்தைத் தாபித்த கிறித்துவும் தோன்றவில்லை. முகமதிய மதத்தை உருவாக்கிய நபிகள் நாயகமும் தோன்றவில்லை. புத்தம் சமணம் வைணவம் ஆகிய மதங்களும் பிரசித்தமடையவில்லை. மேலும் சொல்லப் போனால் ஆரியர்கள் பாரதத்தில் கால் ஊன்றாத காலம் அதுவென்றும் அறியலாம். அறியவே சிவநெறி என்பது வேத காலத்திற்கும் முற்பட்டதாய் இந்தியாவில் தென்கோடியிலிருந்து வடவெல்லை வரை பரவி வாழ்ந்த தமிழ் பேசிய மக்களிடையே வழக்கத்தில் இருந்து வந்ததான ஒரு பழமையான வழிபாட்டுநெறி என்பது தெளிவாகிறது.

வடமொழி வேதங்களில் ஆதியில் சிறுதெய்வ வழிபாடு முதன்மை பெற்றிருந்தது அறியப்படுகிறது. கதிரவன் வருணன் இந்திரன் முதலான தெய்வங்கள் அவை. அதற்குப் பிறகு உருத்திரனாகிய சிவனை வழிபடும் வழக்கமும் வேதத்தில் இடம் பெற்றது. இது ஆரியர்கள் பாரத்தில் வந்து காலூன்றி அங்கு வாழ்ந்து வந்த தமிழ் பேசிய மக்களுடன் தொடர்புகொண்டதன் பின்னரே பிரசித்தமடைந்திருக்கலாம் என்று தமிழறிஞர்கள் சிலரும் கருதினர். தமிழர் ஆரியர் கலப்புப்பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்னரே ஏற்பட்டுவிட்டபடியால் சிவவழிபாட்டு நெறி முதலில் யாருடையது என்று இப்பொழுது பிரித்தறிய முடியாமற் போய்விட்டது. என்றாலும் சிவனை வழிபடும் நெறி தமிழரிடையே நீண்ட நெடுங்காலமாக இருந்து வருகின்றதென்பது உணர முடிகின்றது.

சிவநெறியாகிய சைவத்தின் தொன்மையை இப்பொழுது வடமொழி தென்மொழியாகிய இருமொழிகளிலுமே சிறப்பாகக்காணலாம்.

நீலமேனி வாலிழைபாகத்
தொருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்ந்தன முறையே

இது சங்கத்துச்சான்றோராகிய பெருந்தேவனார் பாடல். அம்மையப்பர் வடிவினனாகிய சிவபெருமானே உலகங்கள் அனைத்தும் தோன்றுவதற்கு முழுமுதற் காரணன் என்று இப்பாடல் உணர்த்துகிறது.

புருடனாவான் மகானாகிய உருத்திரனே. சத்தாகிய அவனுக்கு வணக்கம்.

இது யசுர் வேதத்துள் வருவது. உருத்திரன் என்பது இங்குச்சிவனையே குறிக்கும்.

சத்து என்ற சொல்லின் பகுதி விகுதிகள் சத்தியையும் சிவனையுமே குறிக்கும் என்று நீலகண்ட சிவாசாரியார் கருதியதாக திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் எழுதி யுள்ளார்கள். இந்த அடிப்படையில் நீலமேனி வாலிழை பாகத்தொருவன் என்பதும் சத்தாகிய அவன் என்பதும் ஒரு பொருளே குறித்தனவென்று உணரலாம். இவ்வாறுசிவநெறி பற்றிய உண்மைகள் இரு மொழியிலும் இருந்த போதிலும் அவை செம்மையும் தூய்மையும் பெற்று விளங்குவது தமிழ் மொழியில் மட்டுமே என்பது திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்களின் கருத்தாகும்.

சங்க காலத்தில் சான்றோர் சென்ற நெறி எனப் போற்றப்பட்டுச் சிலப்பதிகாரம் மணிமேகலை முதலியபெருங் காப்பியங்களால் சிவனது முழு முதற்றன்மைஒப்புக்கொள்ளப் பட்டு மூன்றாம் நூற்றாண்டு தொடங்கி எட்டாம்நூற்றாண்டு வரை திருவாதவூரடிகள் திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரர் ஆகிய நால்வர் முதலியோரால் சிறப்பாக வளர்க்கப் பட்டு வந்தது சிவநெறி.

தமிழகத்தின் இருண்ட காலத்திற்குப்பிறகு கலை இலக்கியம் சமயநெறி முதலியவற்றின் மறுமலர்ச்சி எழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஏற்பட்டது. அதற்குக்காரணரா யிருந்த நாயன்மார்கள் திருஞானசம்பந்தரும் திருநாவுக்

கரசருமேயாவர். அவ்வருளாளர்களால் புறச்சமய இடர்கள் நீங்கப்பெற்றுச் சிவநெறியும் வைதிக நெறியும் தமிழகத்தில் தழைத்து வளர்ந்தன.

எட்டாம் நூற்றாண்டில் திருமால் அடியவர்களான நம்மாழ்வார் பெரியாழ்வார் முதலியோர் பிரசித்தமடைந் தனர். இவர்கள் திருமாலை முதற்கடவுளாகக்கொண்டு பிரபந்தங்களைப் பாடினார்கள். தமிழகத்தில்சிவநெறியோடு வைணவ நெறியும் நன்கு வளரலாயின.

ஆழ்வார்கள் நெறி நாயன்மார்களின் சிவநெறியோடு ஒருவாறு ஒத்திருந்தாலும் சைவர்கள் அதனை மாறாகவே கருதினர். அதற்குக்காரணங்கள் இருந்தன. சிவநெறியில் முதற் கடவுளுக்குப் பிறப்பு இறப்புக் கூறப்படுவதில்லை. பிறப்பு இறப்பிற்கு ஆளானவர்கள் சீவான்மாக்களே என்பது சைவர்களின் உறுதியான கொள்கை. ஆழ்வார்கள் கடவுளுக் குப்பத்து அவதாரங்களைக்கூறிப்பிறப்புஉண்டு என்று உடன் பட்டவர்கள். இப்படிப்பல அடிபடைக்கொள்கைகளில்சைவத் திற்கும் வைணவத்திற்கும் வேறுபாடுகள் இருந்தன.

ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தே நான்மறை முடிவாகிய உபநிடதங்கள் சிலவற்றுக்கும் பிரம சூத்திரங் கட்கும் உரை காணத்தொடங்கினர் சிலர். அதன்வாயிலாகச் சில மதங்கள் தோன்றி ஒன்றுக்கொன்று முரணுவனவாயின.

சங்கரர் என்பவர் எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றி ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த வர். உபநிடதங்களின் முடிவு பிரமம் ஒன்றே உள்ளபொருள், உலகு உயிர் என்பனவெல்லாம் பிரமத்தின் சாயை என்பது அவர் கோட்பாடு. இது ஒரு பொருட்கொள்கை ஆனதால் இதனை ஏகான்ம வாதம் என்றும் அத்வைதம் என்றும் கூறினர்.

சங்கரர் பிரமம் என்று குறிப்பது ஒவ்வொரு உயிரிலும் உணர்வுக்கு அடிப்படையாக உள்ள ஒன்றைத்தான் என்பது விளங்குகிறது. அதுவும் ஒன்றே என்பதும் பலவல்லஎன்பதும் அவரது கொள்கை. இதைச் சைவர்கள் ஏற்கமாட்டார்கள்.

உணர்வுக்கு அடிப்படையாகவுள்ள ஒன்று ஆன்மாவே என்பதும், அது ஒன்றல்ல பல என்பதும் சைவர்களின் கோட்பாடு. அன்றியும் சைவர் இறை உயிர் உலகு என்ற முப் பொருள்களும் அநாதியே உண்டு என்ற கொள்கையும் உடையவர்கள். அம்மூன்றும் ஒன்றே என்றோ ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியது என்றோ உடன்படமாட்டார்கள். அம்மூன்றும் என்றும் உள்ள பொருள்களே என்றாலும் இறை யாகிய முதற்பொருளே ஏனையிரண்டுக்கும் தலைமை வாய்ந்தது என்றும் அதனால் அவையிரண்டையும் தனது சருவ வியாபகத்துள் அடங்கக்கொண்டு அவற்றைப் பிறப் பிறப்புக்கு ஆளாக்கி முடிவில் அவற்றின் குற்றங்களைக் கெடுத்து அவற்றுச்குப் பேரின்பம் நல்கிக் கொண்டிருப்பது என்றும் கருதுவர். இறைப்பொருள் சருவ வியாபகப்பொருள் என்றால் உலகும் உயிரும் அந்த வியாபகத்துள் அடங்கி நின்ற வியாப்பியப்பொருள்களாம். அவற்றுள் ஒன்று முதற் பொருளுக்கு உடைமையும் ஒன்று அடிமையுமாய் நிற்பன. இறைப்பொருள் ஒன்றே உணர்த்தும் திறன் உடையது. ஏனையவற்றுள் ஒன்று உணர்த்த உணர்வது. மற்றொன்று உணர்த்தினாலும்உணராதசடப்பொருள். முதற்பொருளாகிய அந்த ஒன்று ஏனையிரண்டிலும் சருவ வியாபியாய்க் கலந்துள்ள காரணத்தாலேதான் வேதங்கள் அதனை ஏகம் என்றும் அத்துவிதம் என்றும் சொல்லி வைத்தன என்ற கோட்பாட்டை உடையவர்கள்.

சங்கரர் அத்வைதம் என்ற சொல்லுக்குக் கொண்ட பொருள் பெரிதும் ஆராய்ச்சிக்கு உரிய தொன்றாகவே இருக் கிறது என்பது திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்களின் கருத்தாகும். சாந்தோக்கிய உபநிடதத்துள் அது வந்துள்ள இடத்தைச்சுட்டி அவர் விளக்குகிறார்.

சுவேதகேது என்ற தன் மகனுக்கு அவன் தந்தை முதற் பொருளை உணர்த்துகின்ற இடம் அது. ஏ நல்லோய், இது முதற்கண் ஒன்றேயாய் அத்விதீயமாகிய சத்தாக இருந்தது என்பது அந்த இடம். இங்கு இது என்பதுஉலகைக் குறித்த தாகவுள்ளது. முதற்கண் என்றது இவ்வுலகம் சிருட்டிக்கப் படுவதற்கு முன் என்பது பொருள். சத்தாக இருந்தது என்ப

தற்குச் சத்தோடு ஒடுங்கி ஒன்றாயிருந்தது என்பதுதான் பொருள். எனவே இந்த உலகம் சிருட்டிக்கப்படுவதற்கு முன்னால் தான் வேறு புலப்படாது காரண ரூபத்தில் முதற் பொருளிடத்து ஒடுங்கிக் கிடந்தது என்பதே அதற்குஉண்மை யான தாற்பரியமாகும் என்பது. இல்லாத ஒன்று என்றுமே தோன்றாதாகலான் ஒடுங்கி முன் காரண ரூபத்தில் உள்ளதா யிருந்த அந்த ஒன்றே காரியப்பட்டுத்தோன்றியது என்று கொள்வதுதான் வாதத்திற்கும் பொருந்துவதாகும். அந்த வகையில் நோக்கும்போது ஒடுக்கி நிற்பதாகிய இறைப் பொருள் ஒன்றும், ஒடுங்கி நிற்பனவாகிய உயிர்ப்பொருள் சடப்பொருளென இரண்டுமாகிய மூன்றும் என்றும் உள்ள பொருள்களாகவே கருதப்படல் வேண்டும். இதைத்தான் கச்சியப்ப சிவாசாரியார் தாம் படைத்த கந்த புராண நூலினுள்,

சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்
மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த்தொகை
வான்திகழ் தளையென வகுப்ப ரன்னவே.

என உறுதிபடக்கூறினார்.

சங்கரர்க்குப்பிறகு பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் இராமானுசர். ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்வியப்பிரபந்தங்கட்கு மாறுபடாத வகையில்பிரமசூத்திரங் கட்கு உரை செய்து சங்கரர் கொள்கையை மறுத்துத் தாமொரு மதம் நிறுவினார்.

அத்விதீயம் என்பதற்குச் சங்கரர் பொருள் கொண்டது போலவே பொருள் ஒன்றேஉள்ளதுஎனக்கொண்டாராயினும் அதற்குத் தாற்பரியம் வேறாகக்கொண்டார் அவர். அரசன் ஒருவன் இருந்தான் என்றால் அவனுக்கு நாடில்லை, குடிமக்கள் இல்லை, அவனுந்தான் ஆடையணிகலன்களின்றி நிருவாணியாயிருந்தான் என்று யாரும் கருதமாட்டார்கள். அதனால் சத்தாகிய அந்த முதற்பொருளுக்கு உலகமாகிய உடைமையும் உயிர்களாகிய அடிமையும் அவற்றை ஆள் வதற்கான அனந்த கலியாண குணங்களாகிய அரசப்பண்பும்

இருந்தனவென்று வேதங்களில் விசேடணங்களாகக் கூறப் பட்டிருத்தலினாலே அவற்றால் விசேடிக்கப்பட்ட விசிட்ட மாய் உள்ள பிரமம் ஒன்றே என்பது அவர் கொள்கை. இது சிவநெறியாளர் கொள்கைக்கு ஒரு வகையில் ஒத்துவருகின்ற தென்றாலும் அத்விதீயம் என்பதற்குப் பொருள் ஒன்று எனக்கொண்டதைச் சைவர்கள் உடன்படுவாரல்லர். அத்து விதம் என்ற சொல்லாலே இரண்டு அல்லாதது - ஒன்று. அதாவது ஏகம் எனப்பொருள் கொண்டால் ஏகம் தானே தன்னை ஏகம் என்று சொல்லிக்கொள்ளாது ஆகலானும், ஏகத்தை ஏகம் என்று சுட்டிக்கூறும் பிறிதொரு பொருளும் இருந்தது எனப்படும் ஆகலானும், அத்துவிதம் என்ற சொல் தானும் ஏகத்திற்கு அந்நியமாய்ப்பிறிது பொருளும்இருந்தது என முன்னர் உடன்பட்டுப் பின்னர் அது கலப்பினால்இன்றா யிற்று என மறுக்குமாகலானும் இங்கு இவ்வான்மாக்கள் எல்லாமே முதல்வன்தான் என்று கருதும்படியாக அந்தமுதற் பொருளின் சருவ வியாபகத்துள் முற்ற அடங்கி ஒன்றென நின்றன என்று கொள்வதுதான் உண்மையான தாற்பரிய மாகும் என்பது சைவர்களின் உறுதியான கோட்பாடாகும்.

இனி மத்துவர் என்பவர் சங்கரர் இராமாநுஜர் ஆகிய இருவர் மதங்களையும் மறுத்துத்தாமொரு மதம் நிறுவினார். இறை வேறு உயிர் வேறு என்ற அடிப்படையில் அவரது கொள்கை இருந்தது. இவர் காலம் மெய்கண்டார் காலத்துக் கும் பிந்தியது ஆகலின் மெய்கண்டார் கொள்கையைத்தான் மத்துவர் தழுவிக்கூறினார் என்று கருதவும் இடமுண்டு. இவ்வளவும் எனக்குத்தொடக்கம் முதலே ஞானாசிரியராய் விளங்கிய காஞ்சிபுரம் திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் தமது சைவம் என்ற நூலில் சிவநெறி பற்றி எழுதி யுள்ள செய்திகளைத் தழுவிக் கூறியவையாகும்.

ஏழாம் நூற்றாண்டில் திருஞான சம்பந்தர் திருநாவுக் கரசர் ஆகிய அருளாசிரியன்மார்களால் நிலைநாட்டப்பட்ட முப்பொருட்சைவக்கோட்பாடு பின்வந்த சங்கரர் முதலியவர் களால் ஏற்றுக்கொள்ளப்படாமல் ஒவ்வொருவரும்ஒவ்வொரு மதத்தைத் தாபித்துப் பிர்சாரத்தால் மக்களை மயக்கத்தில் ஆழ்த்தி விட்டனர். பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்

கத்தில் மெய்கண்டார் தோன்றி அவற்றுக்கெல்லாம் விடை யளிக்கும் பாவத்தோடு சிவஞான போதம் என்ற சீரிய சாத்திர நூலை அருளிச்செய்து சைவசித்தாந்த மதத்தை மீண்டும் நிலை நிறுத்தினார். இவர் யாரையும்நேர்முகமாகக் கொண்டு மறுக்கவில்லை என்றாலும் தன்கோள் நிறுவுகின்ற வாற்றானே மாற்றான் கோள் வலியிழக்கும்படி நூலைப் படைத்துள்ளார். நூல் கற்பார் அதனைப்பெரிதும்உணர்வர். இனி மெய்கண்டாரது சைவ சித்தாந்தக் கருத்துக்களைஅவர் படைத்த சிவஞானபோதம் என்ற நூலிலிருந்து திரட்டிக் காண்போம்.

ஆசிரியர் மெய்கண்டார் தம் முன்னைப்பல பிறவிகளிலும் சரியை கிரியை யோகமாகிய நற்றவங்களைமுற்றமுடித்தவர். அச்செய்தவப்பயனால் தவம்செய்த ஒரு நற்குடிக்கண் வந்து பிறந்து இருவினை ஒப்பு உணர்வு வாய்த்தபின்றைஇளமை-யிலேயே முதல்வன் உள்நின்று உணர்த்தவும், குருவாய் வந்து முன்நின்று உணர்த்தவும் சிவஞானப்பேற்றினைப் பெற்றவர். வடமொழி தென்மொழியாகிய இருமொழிகளி லும் புலமை நிரம்பி வேதாகம உபநிடதங்களைச் சிறப்பாகக் கற்று உணர்ந்தவர். தமிழிலக்கண இலக்கியங்களையும் சைவ சித்தாந்த சமய நெறிக்கலைகளையும் கற்றுத் துறை போயவர். திருவெண்ணெய்நல்லூர்ப்பொல்லாப்பிள்ளையார் திருக்கோயிலின்கண்ணே தங்கி அம்மூத்த நாயனாரைத்தம் ஞானாசிரியனாயும் உளங்கொண்டவர். ஞானநெறியினைத் தலைப்பட்டு ஞானக்கண்கொண்டு முதல்வனைச்சிந்தை-யுள்ளே தேடிக்கண்டு திருவைந்தெழுத்தால் ஆன்மசுத்தியும் செய்துகொண்டவர் அவனே தானேயாகிய நெறியில் முதல் வனது சருவ வியாபகநிலையுள் அடங்கி ஏகனாகி இறைபணி நின்று மும்மலங்களையும் வீறழியக்கொண்டு சீவன் முத்த ராய்த் தேகாந்தபரியந்தம் சிவானுடவத்தில் மூழ்கித்திளைத் தவர். சிந்தைக்கெட்டாச் சிவபரம்பொருளைச் சிந்தைக்கெட் டும் திருவுருவில் வைத்துத் தேகாந்தபரியந்தம் திருவேடத் தாரையும் சிவாலயத்தையும் சிவன் எனவே கண்டு வழிபட்டு வந்தவர். தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற அருள்பழுத்த உள்ளத்தோடு தாம்பெற்றசிவானுபவங்களைத் திரட்டிச் சிவஞான போதம் என்ற சீரிய ஞானநூலாக ஆக்கி

உலகிற்கு உபகரித்தவர். மெய்கண்டுணர்ந்த சிவஞான யோகியானதால் தமது இயற்பெயர் மறையவே வாழ்ந்து வந்து, தேகாந்தத்தே சிவன்கழலை நிரந்தரமாய்அணைந்து பிறவா இன்பப்பெரும்பயன் பெற்றவர்.

மெய்கண்டார் தாம் படைத்த ஞானநூலுக்குச் சிவஞான போதம் என்று பெயர் சூட்டினார். சிவஞானத்தைப்போதிக்கும் நூல் என்பது அதற்குப்பொருள். ஞானாசிரியன் ஒருவன் தன் மாணாக்கனுக்குச் சிவஞானத்தைப் படிமுறையில் உணர்த்துவதாக அந்நூலின்போக்கு அமைந்திருக்கிறது. இது ஒரு முதல்நூலேயன்றி மொழிபெயர்ப்பு நூலன்று என்பதை அறிஞர் பெருமக்கள் பலரும் தக்க சான்றுகளைக் காட்டிக்கூறிமுடித்துவிட்டனர். அதனால் அதுபற்றியவாதத்திற்கு இங்கு இடனின்று எனலாம்.

சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரங்களைக்கொண்டது. சூத்திரங்களைக் கண்ணழித்து மேற்கொண்ட மேற்கோள்கள் முப்பத்தொன்பது. அவற்றை அதிகரணங்கள் என்று ஆசிரியர் அறிமுகப்படுத்தினார். ஒவ்வொரு மேற்கோளும் ஒவ்வொரு ஏதுக்கொண்டு நிலைநாட்டப்பட்டது. மேற்கோள்களை விளக்கவரும் உரைப்பாட்டுக்கள் எண்பது. அவை வெண்பாக்களால் அமைந்தவை. அவற்றோடு குரு வணக்கம் எனக்கருதப்படும் காப்புச்செய்யுளாகிய மங்கல வாழ்த்துப்பாடல் ஒன்றும், அவையடக்கச் செய்யுள்ஒன்றும், நூல் கேட்டற்குரியார் இன்னார் என்று உணர்த்தவரும் நூலிறுதிவெண்பா ஒன்றுமாக நூல் நிறைவு பெறுகிறது. நூலில் வரும் சூத்திரங்கள் வடமொழியில் உள்ள பிரமசூத்திரங்களைப்போல மிகவிரிந்த நுண்பொருள்களைத் தம்மகத்தே அடக்கி நின்றன என்று அறிஞர்கள் கருதுவார்கள்.

சூத்திரங்கள் பன்னிரண்டும் ஓரதிகாரமாகவே செய்யப்பட்டனவென்றாலும் அவை மூன்று இயல்களாகப் பகுத்துப் பொருள் உணரும்படி அமைந்துள்ளன. முதல் ஐந்து சூத்திரங்கள் பெத்தவியல் எனப்படும் பிறப்பியல் பற்றிவருவன. இறுதி ஐந்து சூத்திரங்கள் முத்தி இயல் எனப்படும் வீட்டியல் பற்றி வருவன. இடைநின்ற இரண்டு சூத்திரங்கள்—ஆறும் ஏழுமாகிய சூத்திரங்கள் சைவ சித்தாந்தக்கருப்பொருள்களா

கிய பதி பசு பாசம் எனப்பட்ட முப்பொருளியல்புகளைச்சத்து அசத்து என்னும் இரண்டு அளவைகளைக்கொண்டு வரையறுத்து உணர்த்துகின்றன. ஆதலால் அவை இரண்டும் பொதுவியல் பற்றி வருவன. இப்பொதுவியல் ஞானம் பிறப்பியலுக்கும் வீட்டியலுக்கும் பொதுவாய் அமைதலின் அது பொதுவியலாயிற்று. இந்தப் பாகுபாடு சூத்திரங்களின் போக்கை உணர்ந்து நாமாக ஆக்கிக்கொண்டது.

பிறப்பியலில் வரும் முதற்சூத்திரத்தால் பிரபஞ்சத்தின் பிறப்பு இறப்புப்பற்றிய செய்தியும், இரண்டாம் சூத்திரத்தால் ஆன்மாக்களின் பிறப்பு இறப்புப்பற்றிய செய்தியும், அவற்றுக்கு உபகாரப்பட்ட இருவினை நுகர்ச்சி முதலான பலபிற செய்திகளும், மூன்று நான்காம் சூத்திரங்களால் உடம்பு பொறி கரணங்களின் வேறாயும் பரம்பொருளின் வேறாயும் ஆன்மா உண்டு எனஉணரும் செய்தியும், ஐந்தாம் சூத்திரத்தால் மாயையால் உணர்த்தப்பட்டு உலகைப்புசித்துவந்த ஆன்மாச் சகசமலத்தின் சேட்டையால் மாயையின் உபகாரமும் கிடைக்கப்பெறாமல் ஐந்தவத்தைகட்கு உள்ளாகி மூலாதாரத்தில் உயிர்ப்பும் பிறவுமின்றிக்கிடந்த நிலையில் தமது முதல் உபகாரத்தால் உயிர்ப்பும் உணர்வும் பெறும் செய்தியும் இன்னோரன்ன பிற செய்திகளும் உணர்த்தப்பட்டன. இவையெல்லாம் பிறப்பால் அறியப்படும் அல்லது பிறப்பிற்கு உபகாரப்படும் செய்திகளேயாமாதலின் இவைபற்றிக்கூறும் இயல் பிறப்பியலாயிற்று.

வீட்டியலில்வரும் எட்டாம் சூத்திரம் வீடுபேற்றுக்கு முதற்கண் வேண்டப்படுவதான ஞானத்தினை உணரும் முறைமை கூறியது. ஒன்பதாம் சூத்திரம் ஞானக்கண் கொண்டு முதல்வனைச்சிந்தையுள் தேடிக்கண்டு தெளியும் வழியினையும், தெளிந்துநின்ற அனுபவம் மாறாதிருத்தற் பொருட்டு ஆன்மாத்திருவைந்தெழுத்தினை விதிப்படிக் கணித்து ஆன்ம சுத்திசெய்துகொள்ளும் வழியினையும் உணர்த்தியது. பத்தாம் சூத்திரம் பாசங்களை முற்றக்கெடுத்துக்கொள்ளும் வழியினைக்கூறியது. அதாவது ஏகனாகி இறைபணி நின்று பாசங்களை முற்றவும் தேய்த்துக்கொள்ளும் வழியினைககூறியது. பதினொன்றாம் சூத்திரம் பாசங்கள் அகன்றநிலையில் நெருங்கிவந்து நிற்கும் முதல்வனை

இடையறாது நினைந்துருகித்தேகாந்தத்தே உடம்பினையும் உதறியெறிந்து முதல்வன்தாளை அணைந்து வீடுபெற்று உய்யும் நெறியினை உணர்த்திற்று. பன்னிரண்டாம் சூத்திரம் தேகாந்த பரியந்தம் முத்தான்மாக்கடைப்பிடித்து ஒழுக வேண்டிய ஒழுகலாறுகளை உணர்த்திற்று. அதாவது மும் மலங்களை ஞானநீரால் கழுவிக்களைந்து, பத்தர் கூட்டத் தோடு எந்நேரமும் கலந்திருந்து, திருவேடத்தாரையும் சிவா லயத்தையும் சிவன் எனவேகண்டு வழிபட்டுவரும் ஒழுகலாறு களை உணர்த்திற்று. இவையெல்லாம் வீடுபேற்றுக்கு உப காரப்பட்ட செய்திகளேயாமாதலின் இவைபற்றிக்கூறும் இயல் வீட்டியலாயிற்று.

ஆறாம் சூத்திரமும் ஏழாம் சூத்திரமும் பொதுவியலில் வருவன. சத்து அசத்து என்னும் அளவைகளைக்கொண்டு சைவசித்தாந்தக் கருப்பொருள்களாயுள்ள பாசம் பதி பசு என்னும் முப்பொருளியல்புகளை வரையறுத்து உணர்த்து கின்றன. ஆறாம் சூத்திரத்தால் பாசப் பொருளும் பதிப் பொருளும் வரையறுக்கப்பட்டன. ஏழாம் சூத்திரம் பசுப் பொருளை வரையறுத்து உணர்த்திற்று. இச்செய்திகள் பிறப் பியலுக்கும் வீட்டியலுக்கும் பொதுவாய் அமைதலின் இவ் வியல் பொதுவியல் ஆயிற்று.

இனி நூலினுள் உணர்த்தப்படும் பொருள்களைத் தொகுத்துக்காண்போம்.

ஆசிரியர் மெய்கண்டார் தமக்கு இளமை முதலே புகலிடம் அளித்து மெய்ஞ்ஞானத்தை அருளிய மூத்த நாயனாராகிய பொல்லாப்பிள்ளையாரை நூல்முதற்கண்ணே நினைவு கூர்கின்றார்.

கல்லால மரத்து நிழலில் யோகவுருவில் அமர்ந்து முனிவர்க்கு நான்மறையின் உட்பொருளை உணர்த்திய வரும், மலையை வில்லாகக்கொண்டு போகவுருவில் நின்று திரிபுரத்தவுணரைக் கொன்று உலகோர் துன்பம் போக்கிய வருமான பரமேசுவரனாரால் அருளப்பட்ட பொல்லாப் பிள்ளையாரது திருவடி மலர்களை நல்லவர் தம் தலைமேற் சூடுவர் என்பதால் தாமும் அதுவே செய்யக்கருதியதாகக் குறிப்பால் உணர்த்தி நூலைத் தொடங்கினார்.

பூச்சூடல் மங்கல வினையாதலாலே மங்கலங்கூறி நூலைத்தொடங்கிய ஆசிரியர் மங்கலச் சொல்லாலே நூலையும் இனிது முடித்தார்

இனி அவையடக்கத்துள் தம் நூலுக்குக் குற்றம் கூறும் தகுதியுடையார் அது கூறார் எனவும், தகுதியில்லார் கூறும் புறங்கூற்றுத் தம்மால் பொருட்படுத்தற்கின்று எனவும்கூறித் தமது மெய்யுணர்வை நிலைப்படுத்தினார் ஆசிரியர்.

ஆன்மாக்களுக்குள்ள இருவகை நிலையினை இங்குச் சீவன் முத்தராயினார் மேல் வைத்து உணர்த்தினார் ஆசிரியர். அவை பிறப்பு நிலை வீட்டுநிலை என்பன. தம்மை உணர்தல் என்பது பிறப்பு நிலையின் முடிந்தஅனுபவம். அது ஆன்மப்பிரகாசம் உணர்த்தும் சூத்திரங்களால் உணர்த்தப் பட்டது. அது முற்றுப்பெறுவது வீட்டியலில் தான் என்பதை உணரவேண்டும். ''ஞானத்தை முன் உணர்ந்து நாடில் அது தனுவாய்த்தான் அத்தின் வேறாகும் தான்'' எனப் பிறப் பியலில் வரும் உரைப்பாட்டின் தொடரால் அது அறியப் பட்டது. தம்மை உடைய தலைவனை உணர்ந்து அவனோடு ஒன்றுதல் என்பது வீட்டு நிலையின் முடிந்த அனுபவம். இந்த இரண்டு அனுபவங்களைச் சொல்லிப் பிறப்பியல் வீட்டியல் எனப்பாகுபடுத்தினார் ஆசிரியர்.

இனிப் பிறப்பியற் செய்திகள் வருமாறு:-

பிறப்பியலில் வரும் முதற்சூத்திரம், பிரபஞ்சத்திற்குச் சங்காரக் கடவுளே முதற்காரணன் என்றுகூறும் முகத்தாலே பிரபஞ்சத்தின் பிறப்பிறப்புக்கள் கூறப்பட்டன. இப்பொழுது நிலைபேற்றில் இருந்து வருகின்ற பிரபஞ்சம் முன் ஒரு காலத்தில் தோன்றியிருக்க வேண்டும், பின் ஒரு காலத்தில் மறையவும் வேண்டும். அதுதான் நியதி. உலகத்து உறுப் பாகிய ஒவ்வொரு பொருளும் தோன்றி நின்றுமறைகின்றன. அதனால் உலகமும் தோன்றி நின்று மறையத்தான் வேண்டும். தோன்றி நின்ற இவ்வுலகம் ஒரு காலத்தில் சங்காரக்கடவுளிடத்தே சென்று ஒடுங்கிப் பிறிதொரு காலத் தில் மீளவும் தோன்றலாம். அவ்வாறு ஒடுங்கித்தோன்றுவது எதற்காகவென்றால் அதனிடத்துள்ள மாசுஅகலுவதற்காகத் தான்.

ஒருபொருள் எங்கே சென்று ஒடுங்குமோ அங்கிருந்து தோன்றும் என்பதுதான் முறையாகும். நெற்செடி நெல்லில் ஒடுங்குகிறது. தோன்றும்போது அது நெல்லிலிருந்தே தோன்றுகிறது. இது தருக்க நூல் விதி. அவ்விதிப்படி பிரபஞ்சம் சங்காரக் கடவுளிடத்தே சென்று ஒடுங்கும் என முன்னர் அறிந்தோம். ஒடுங்கிய பிரபஞ்சம் மீளத்தோன்றும் போது அச்சங்காரக் கடவுளிடத்திருந்தே தோன்றல் வேண்டும் என்பதன்றித் திதிக்கடவுளிடமிருந்தோ சிருட்டிக் கடவுளிடமிருந்தோ தோன்றாது. ஆகவே பிரபஞ்சத்தின் ஒடுக்கத்திற்குக் காரணனாயிருந்த சங்காரக் கடவுள் அதன் தோற்றத்திற்கும் காரணன் ஆகின்றான். நிலைபேற்றிற்கும் அவனே காரணமாவான். ஆகவே பிரபஞ்சத்தின் தோற்றம் நிலைபேறு ஒடுக்கத்திற்கு எவன் காரணனோ அவனே முதற்கடவுள் என்று முடிக்கப்படும். முத்தொழிற்கும் காரணன் ஒருவனேயன்றி மூவரல்லர் என்பதை நாம் இங்கு உணர்தல் வேண்டும். படைப்புக்கு ஒருவன் காப்புக்கு ஒருவன் என்று இப்படியாக வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றனவேயென்றால் அவை உபசாரமாகச் சொல்லப்பட்டன. உண்மை ஆகா. ஆகலின் அழிக்கும் கடவுளாகிய சங்காரக்கடவுள் ஒருவனே உலகிற்கு முதற் காரணன். அவனிடத்தில் உலகம் உடைமைப்பொருளாகும். உயிர்கள் அடிமைப்பொருளாகும். அவையிரண்டும் அவனிடத்துத்தொழும்பு உடையவை. அதாவது தம் சுதந்திரம் இழந்து நிற்பவை. அதாவது அவனது சருவ வியாபகத்துள் முற்ற அடங்கி நின்று அவன் இயக்க இயங்குபவை என்பதுதான்.

சங்காரக்கடவுளின் முதன்மை கூறுமுகத்தால் இந்தச் சூத்திரம் பிரபஞ்சத்தின் பிறப்பிறப்புக்களைக் கூறியது.

இரண்டாம் சூத்திரம் முதல்வனது சருவ வியாபக நிலையினை உணர்த்தும் முகத்தால் ஆன்மாக்களின் பிறப்புஇறப்புகளைக் கூறுகின்றது. இங்கு ஆன்மாக்கள் இறந்து பிறந்து வருதலைஆசிரியர் புனர் உற்பவம் என்று குறித்தார். போக்குவரவுஎன்றதும் அதுவே.

இங்கு இந்த ஆன்மாக்கள் பலவும் முதல்வனே என்று சொல்லும்படி அவனது சருவ வியாபகத்துள் அடங்கி நின்று அவனது அருளாணையாலே அவைதாம் ஈட்டிய இருவினைப் பயன்களைத் துய்த்து வருதல் காரணமாக மேலும் அவவினை களை ஈட்டி அவ்வினைகள் காரணமாக இறந்தும் பிறந்தும் வருதற்பொருட்டு அவன் அவ்வுலகுயிர்களோடு பிரிவின்றிக் கலந்தே இருந்தான் என்பது சூத்திரத்தின் திரண்ட பொருளாகும்.

இங்கு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வனே என்று கருதும்படியாக முதல்வன் உலகுயிர்களோடு சருவ வியாபக னாய்ப் பிரிவின்றிக்கலந்துள்ள நிலையினைத் தவறாகப் புரிந்துகொண்டு பிரமம் என்னும் ஒரு பொருளே உள்ள பொருள் என்றும் உலகுயிர் என்பனவெல்லாம் பொய்யே என்றும், அவை பிரமத்தின் சாயையே என்றும் கொண்டு ஒரு பொருட்கொள்கைக்கு வந்துவிடல் கூடாது என்பது ஆசிரியர் கோட்பாடாகும்.

வேதங்களில் ஏகம் என்றும் அத்துவிதம் என்றும்இரண்டு சொற்கள் ஆங்காங்கு வருகின்றன என்பது தெரிந்ததே. அத்துவிதம் என்பதற்கு இரண்டு அல்லாதது அதாவது ஒன்றே என்ற முடிவுக்கு வந்து விட்டால் ஏகம் தானே தன்னை ஏகம் என்று சொல்லிக்கொள்ளாதல்லவா? ஏகத்தை ஏகம் என்று சுட்டிக்கூறும் பிறிதொரு பொருளும் இருந்தது எனக்கருதலாம் அல்லவா? அன்றி அத்துவிதம் என்ற சொல் தானும் ஏகத்திற்கு அந்நியமாய்ப் பிறிது பொருளும் இருந் தது என முன்னர் உடன்பட்டுப்பின்னர் அதனை மறுத்து இல்லை என்று உணர்த்துவதாகவும் இருக்கலாம் அல்லவா? ஆகவே அந்த இரண்டு சொற்களுக்கும் உண்மையான தாற் பரியம் வேறு இருக்க வேண்டும் என்று தெரிகிறது. அவை இவையே.

வேதங்களில் வரும் ஏகம் என்ற சொல்லுக்கு உண்மை யான தாற்பரியம் முதல்வன் ஒருவனே. இருவர் மூவர் என்று இப்படி இல்லை என்பது தான். அந்த ஒன்றே பதி எனப்படு வது. அந்த ஒன்றை ஒன்றெனச்சுட்டி உணர்ந்த பிறிதொன் றும் உண்டல்லவா? அதுவே பசுவெனப்படுவது. பசுவென்று அதனைச் சொல்வதற்குக்காரணம் அதுபாசத்தோடு இருந்

தது என்பதுதான். ஆகவே ஆதியில் உண்டென நிச்சயிக்கப்பட்ட பொருள்கள் பதி, பசு, பாசம் என மூன்றேயன்றி ஒன்று அன்று என்பதுதான்.

இனி நாத மாத்திரையால் பிறந்த அகரமாகிய எழுத்து ஒன்று இல்லையானால் ஏனை உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் இல்லையாம். அதுபோல முதல்வன் ஒருவன் இல்லையானால் ஏனைஉயிரும்உலகும் இல்லையாமாதலின்அவனே மற்றெல்லாம் என்ற கருத்தில் வேதங்கள் முதல்வனை ஏகம் என்ற சொல்லால் சொல்லிவைத்தன, அவ்வளவே. ஏகத்திற்கு அந்நியமாய் ஆதியில் பிறபொருள்களும் இருந்தனவென்று கோடற்கு அச்சொல்தடையாய் இருந்ததில்லைஎன்பதுதான். இது ஏகம் என்ற சொல்லுக்கு மெய்கண்டார் கூறிய உண்மையான தாற்பரியம்.

பண்ணும் ஓசையும் போலவும், பழமும் சுவையும் போலவும், அண்ணலும் அவனதருளும் குணிகுணவகையால் இரண்டுமாய்ப் பொருள் வகையால் ஒன்றுமாய்க்கருதப்படுங் காரணத்தால் ஒன்று என்ற பொருளில் ஏகம் என்று சொல்லி வைத்த வேதங்கள் இரண்டுமாய் இரண்டற்றதுமாம் என்ற பொருளில் அத்துவிதம் என்றும் சொல்லிவைத்தன. இது அத்துவிதம் என்ற சொல்லுக்கு மெய்கண்டார் கொண்ட உண்மையான தாற்பரியம்.

இந்த உண்மைகளைச் சரியாகப்புரிந்துகொள்ளாமல் பொருள் ஒன்றே உள்ளது என்ற ஏகான்மவாதத்திற்கு வந்து விடல்கூடாது என்று ஆசிரியர் விளக்கினார். ஏகான்மவாதக் கொள்கை உடையவர்கள் முதல்வனது சருவவியாபகத் தன்மையை மறந்துவிட்டவர் என்பதுதான்.

இனி முதல்வனது சருவ வியாபகநிலையினை நாம் எவ்வாறு உணர்வது! உடம்பிற்கு இட்ட பெயரைச்சொல்லி ஒருவன் அழைக்குங்கால் உயிரே முன்வந்து ஏன் என்று விடை கூறுகிறது. அது ஏன்? உடம்பில் உயிரானது சருவவியாபியாய்க்கலந்து ஒட்டி ஒன்றெனநின்ற காரணத்தாலேதான். அதுபோல உயிரிலும் முதல்வன் சருவ வியாபியாய்க்கலந்து

ஒட்டிஒன்றென நின்றான். நின்றான் ஆயினும் முதல்வன் வேறு, உயிர் வேறுதான். முதல்வன் உயிராக மாட்டான், உயிர் முதல்வனாக மாட்டாது. என்றாலும் முதல்வன் தனது சருவ வியாபகத்தால் அங்கு உயிராயும் உடம்பாயும் நின்று அவற்றை இயக்கி நின்றான், அவ்வளவே. இது முதல்வன், உயிராய் ஒட்டி ஒன்றென நின்றதற்கு விளக்கம்.

சார்ணைக்கல்லானது அரக்கும் கற்பொடியும் சேர்ந்து ஒன்றானது. அதுபோல முதல்வன் உலகோடு கலந்துஒட்டி ஒன்றென நின்றான். உலக வடிவினனாகிய அம்முதல்வனை ஞானிகள் சீவன் முத்தநிலையில் உணர்ந்து அவனோடு ஒன்றென நிற்பர். அவனும் அவர்கள் உள்ளத்தில் உலகவடிவில் தங்கியிருப்பன். அதுகொண்டு அந்த ஞானிகள் தாங்களும் உலகாகிவிட்டதாகக் கருதுவது உண்மையாகாது. உண்மையில் உலகாயினோன் அம்முதல்வன் ஒருவனே என்பதுதான். இது முதல்வன் உலகோடுஒட்டி ஒன்றென நின்றதற்கு ஆசிரியர் கூறிய விளக்கம்.

இனி இறந்துபோன உயிருக்கு அதுதான் முன்னர் ஈட்டிச் சேர்த்த பழவினையே ஒரு உடம்பினைத் தோற்றுவிக்கும். அந்தக்கருவில் உயிர் சென்றுதங்கும்போது அது ஈட்டிச் சேர்த்த பழவினையும்சென்று தங்குவதாம். கருவில்அவ்வுயிர் அசையும் ஒவ்வொரு அசைவிற்கும் அப்பழவினைதான் காரணம். அது முதல்வனது சங்கற்பத்தால் நிகழ்கிறது. உழவன் உழுது பயிர்செய்தாலும் உழவின்பயனை விளைநிலமே கொடுக்கும். அதுபோல முதல்வனது சங்கற்பமே உயிர்கட்கு வினைப்பயனை ஊட்டிக்கொண்டிருக்கிறது. வினை தானே சென்று செய்தானை அடைவதில்லை. ஒரு நாட்டைக்காக்கும் பேரரசன் ஒருவனது நாட்டிலுள்ள பல்லாயிரக்கணக்கான ஊர்களில் ஊர்க்காவல் தொழில்கள் அந்தந்த ஊர்த்தலைவரால் நடக்குமாயினும் அவை அப்பேரரசனது ஆணைவழி நடப்பன என்று கருதுவதுபோலஉயிர்கள்புசிக்கும்பழவினைப் புசிப்பு முதல்வனது சங்கற்பத்தாலே நிகழ்வன என்று கருதல் வேண்டும். வினைதானே சென்று செய்தானை அடைவது என்று கருதல் கூடாது.

உயிர்களும் தாம்செய்த வினைகளைத்தாமே அறிந்து எடுத்து நுகரமுடியாது. காந்தமும் இரும்பும் வேறுவேறு இடங்களில் இருந்தால் அவைஒன்றைஒன்று பற்றுவதில்லை. அவையிரண்டையும் நெருங்கக்கொணர்ந்து நேரொக்கக் காட்டும் ஒருவனைப்போல முதல்வனது ஆணைகாட்டுகிறது. உயிர்கள் வினைப்பயனைப் புசிக்கின்றன. உயிர்கள் வினைப் பயன்களைத்தாமே அறிந்தெடுத்துப்புசியாமைக்குக்காரணம் அவற்றிடமுள்ள மலக்குற்றங்களேயாகும். கதிரவன் தாமரை மலர்களை நாள்தோறும அலர்த்தியும் குவித்தும் வந்து முடிவில் ஒருநாள் அவை முற்றவும் கருகி உதிரும்படிச் செய்து விடுவதுபோல முதல்வனும் உயிர்களின் வினைகளைப்பெருக்கியும் குவித்தும்வந்து முடிவில் ஒருநாள் அவை முற்றவும் கெடுமாறு செய்கின்றான். இது அவனுக்கு ஒரு நீங்காத விளையாட்டு. வினைப்புசிப்பைப்பற்றி ஆசிரியர் கூறிய விளக்கம் இது.

உயிர்கள் வினைகளைப்புசித்து வருகின்றபோதே புதிய வினைகளையும் செய்துவிடுகின்றன. அவற்றால் அவைஇறந்தும் பிறந்தும் வரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விடுகிறது. இதைத்தான் போக்குவரவு என்று ஆசிரியர் குறித்தார். புனர் உற்பவம் என்பதும் அதுதான். இறக்கும்போது உடம்பு மட்டும்தான் அழிகிறது. உயிர் அழிவதில்லை. அது உள்ள பொருள். உள்ள பொருளுக்குத் தோற்றமும் உண்டு. முடிவும் உண்டு. அவை மாறிமாறி வந்துகொண்டுதான் இருக்கும். இந்தப்புனர் உற்பவத்தை ஏகான்மவாதிகள் நம்பமாட்டார்கள். உயிர் உடம்பைவிட்டு நீங்கிப்போகின்றவழிக்கு அவர்கள் குடாகாயத்தையும் கூத்தாட்டையும் உவமை கூறுவார்கள். குடம் ஒன்று நிலைபெறுங்காறும் குடத்திற்குள்ளிருந்த ஆகாயம் குடாகாயம் எனப்பட்டுக்குடம் உடைந்தவழி அது பரத்திலுள்ள ஆகாயத்தோடு கலந்து பராகாயம் ஆனாற்போல உயிர் ஒன்று உடம்பில் நிலைபெறுங்காறும் அது சீவான்மா எனப்பட்டு உடம்பு நீங்கும் காலத்து அது பரமார்த்தத்தில் உள்ள பிரம்த்தோடு கலந்து பர்மான்மாவாகிவிடும் என்றும், சாத்தன் என்பான்ஒருவன் யாதானும் ஒரு உன்மத்தவேடம் புனைந்துவந்து அரங்கில் நடித்து ஆட்டம் முடிந்தவுடன் வேடம் கலைத்துப்பழைய சாத்தனேயாய் நிற்பதுபோல

பிரமம் என்னும் ஒருபொருளே உலகாயும் உயிராயும் பரிண மித்துத்தோன்றி முடிவில் அப்பொய்த்தோற்றம் கலைந்து பிரமம் என்னும் அவ்வொரு பொருளேயாய் நிற்கும் எனவும் ஏகான்மவாதிகள் அவற்றுக்கு விளக்கம் கூறுவர். பதி, பசு, பாசம் எனப்பொருள் மூன்றென வரையறுத்துக்கொண்ட சைவ சித்தாந்த நெறிக்கு அவை பொருந்தாவெனச்சொல்லி உயிர்கள் பிரமத்தின் வேறே எனவும், பாசத்தடையால் அவற் றுக்குப்புனர் உற்பவமுண்டு எனவும், அந்நெறியால் அவை உருமாறிப்பிறந்தே வருமெனவும்கூறி வேறு மூன்று உவமை களைச்சொன்னார் ஆசிரியர். அவை பாம்பு தோல் உரிப்பது, கனவுகாண்பது, யோகி கூடுவிட்டுக்கூடு பாய்வது என்பன.

உயிர் உடம்பை விட்டுப்போகின்றவழிக்கு அவையே உவமைகளாம் என்றதால் பாம்பு தன்மேல்தோலை உரித்துப் போகட்டு உள்ளிருந்த தோலோடு செல்லுதல்போல உயிர் தன் மரணகாலத்தில் தூலவுடம்பைப்படுக்கையில் கழித்துச் சூக்குமவுடம்போடு செல்லும் எனவும், கனவுக்காலத்து உயி ரானது தன் தூலவுடம்பைப்படுக்கையில் விட்டுச் சூக்கும வுடம்போடு வேறு வேறிடங்கட்குச்சென்று இன்பத்துன்பம் நுகர்ந்தாற்போல மரணகாலத்து உயிரும் தன் தூலவுடம்பை மரணப்படுக்கையில் கழித்துச் சூக்குமவுடம்போடு துறக்க நிர யங்கட்குச்சென்று இன்பத்துன்பம் நுகரும் எனவும், யோகி தன் தூலவுடம்பை ஓரிடத்தில் விட்டு நீங்கிச்சூக்குமவுடம் போடுசென்று வேறுஒரு தூலவுடம்பில் நுழைந்து வருதல் போல மரிக்கும் உயிரும் தான் வாழ்ந்துவந்த தூலவுடம்பைக் கழித்துச் சூக்குமவுடம்போடுசென்று வேறுஒரு தூலவுடம்பா கிய கருவில் நுழைந்து பிறந்து வரும் எனவும் விளக்கம் குறித் தார் ஆசிரியர். இறந்துசெல்லும் உயிர் மீளவந்து பிறந்தற்கு இந்த மூன்று உவமைகளும் பொருத்தமாதலைக் கண்டு தெளியலாம்.

உயிர்களின் இக்காரியங்களை முதல்வன் எங்கோ விலகி நின்று செய்கின்றான் என்று எண்ணுதல் கூடாது. அவன் உலகு உயிர்களிடத்துச்சருவ வியாபியாய்க்கலந்து ஒன்றென நின்றே இக்காரியங்களைத்தனது அருளாணையால் நிறை வேற்றிக்கொண்டு வருகின்றான். இரவியினிடத்து ஒளிபோல

அவன் உலகு உயிரெங்கணும் நீக்கமற நிறைந்திருக்கின்றான். நீரில் இட்ட உப்புக்கட்டி கரைந்து நீர் முழுவதும் வியாபித்து நின்றாற்போல அவனது வியாபகம் இருக்கிறது. உப்புக் கரைந்தநீரை வாயில்இட்டுச் சோதித்துப்பார்த்தால் அதில் கரைந்துள்ள உப்புத்தென்படுவதுபோல உலகத்துப்பொருள் ஒவ்வொன்றையும் நுனித்துக்கண்டறிந்தால் அங்கு வியாபக னாய்க்கலந்து ஒளிந்துநின்ற முதல்வன் தென்படுவான். அண்ட சராசரங்கள் அனைத்துமே அவனருளில் மிதப்பதை அருட்கண்ணார் அறிவர். நாமறிந்து கொள்ளற்குப் பார்வை யில் போதுமான தெளிவுவேண்டும். அந்தத்தெளிவையும் காலப்போக்கில் அவனருளே நமக்கு வழங்குகிறது என்பதே சாத்திரங்களின் துணிபாகும். இவ்வளவும் இரண்டாம் சூத் திரத்தால் அறிந்தவை.

மூன்றாம் சூத்திரம் ஆன்மாவின் உண்மை உணர்த்து கிறது. தம்மை உணர்தலும் தலைவனை உணர்தலும் என சிவஞானியின் அனுபவங்களாக ஆன்ம அனுபவங்கள்இரண்டு அவையடக்கத்தே கூறப்பட்டன அல்லவா? அவற்றுள்தம்மை உணர்தற்கு வேண்டிய அனுபவங்களே இங்குப் பிறப்பியலில் ஆன்மப் பிரகாசம் என்ற பெயரால் அறிவுறுத்தப்படுகின்றன. ''உடம்பு தர்ப்பணம் போல் காட்டலால் சார்மாயை நீ அல்லை, தற்பரமும் அல்லை, தனி'' என்பது இங்கு வந்த முதல் உரைப்பாட்டிலிருந்து கிடைத்த குறிப்பு. ''ஞானத்தை முன் உணர்ந்து நாடில் அது தனுவாய்த்தான் அத்தின் வேறாகும்'' என்பது இறுதி உரைப்பாட்டிலிருந்து கிடைத்த குறிப்பு. இந்த இரண்டுவகைக்குறிப்புக்களையும் கொண்டு நோக்கினால் தம்மை உணர்தலாகிய ஆன்ம தரிசனத்திற்கு வேண்டிய அனுபவங்களே ஆன்மப் பிரகாசம் என்றபெயரால் இங்கு மூன்றாம் சூத்திரத்தால்அறிவுறித்தப்பட்டனவென்பது உணரலாம். இந்தப் பெத்தகாலத்திலும் உடம்பைக்காணும் ஒருவற்கு உடம்பு கண்ணாடிபோல ஆன்மாவை வேறு பிரித்துக்காட்டி விடுமாதலால் ஆன்மாத்தான் சார்ந்துள்ள உடம்பும் தான் அன்று எனவும், தன்னைச் சார்ந்துள்ள தற் பரவத்துவும் தான் அன்று எனவும் அறியலாம் என்பது முதற் கண் வந்த குறிப்பால் உணர்த்தப்பட்டது. முத்திக்காலந்தில் ஞானத்தை முதற்கண் உணர்ந்து பின்னர் ஆன்மாவைப்

பற்றிவிசாரிக்கத்தொடங்கினால் ஆன்மாத்தற்பரவத்துவாகிய முதல்வனின் வேறாய் உள்ளது புலப்படும் என்பது இரண்டாவதாக வந்த குறிப்பால் உணர்த்தப்பட்டது. படவே ஆன்ம தரிசனத்திற்கு வேண்டிய அனுபவங்களையே ஆன்மப்பிரகாசம் என்ற தலைப்பினால் ஆசிரியர் இங்குப் பிறப்பியலில் உணர்த்தினார் என்று நம்மால் தெளிவாக அறிய முடிகின்றது அந்த அனுபவங்கள் இங்குப் பிறப்பியலில் பெரும்பாலன உணர்த்தப்பட்டனவாயினும் ''ஞானத்தை முன் உணர்ந்து நாடில்'' என்று வந்த் குறிப்பை வைத்துநோக்கும் போது அது வீட்டியலில் தான் நிறைவு பெறுகிறது என்பதையும் நாம் அறிகின்றோம். ஆன்மப் பிரகாசம் இங்கு ஏழு அதிகரணங்களால் விளக்கப்பட்டது.

உடம்பினுள் ஆன்மாவைத்தேடி அறிய முற்பட்டஒருவன் ஆன்மா என்பது கையும் அன்று, காலும் அன்று, மெய்யும் அன்று, வாயும் அன்று என ஒவ்வொன்றாகக் கழித்து ஒதுக்கி விட்டு முடிவில் ஆன்மா என்பதே இவ்வுடம்பினுள் இல்லை என்று முடித்துக் கூறுவன் அன்றே. அவ்வாறு கூறி நின்ற ஏதோ ஒன்று அங்கு இருந்தது என்று நமக்குத்தெரிந்ததல்லவா. அதுவே ஆன்மாவாம் என்று ஆசிரியர் இங்கு முடித்துக்கூறினார். ஆசிரியர் கூற்றின்படி ஆன்மா அங்கு உறுப்பு வடிவில் இல்லை என்றாலும் உணர்வு வடிவில் இருந்தது என்பது தெளியப்பட்டது.

இது எனது உடம்பு என்று ஒருவன் சொல்லும்போது உடம்பைச் சொந்தம் கொண்டாடுகின்ற ஒன்று அந்த உடம்பினுள்ளே ஆனால் அவ்வுடம்பிற்கு வேறாய் இருந்தது என்று தெரிந்ததல்லவா? அது ஆன்மா என்றது இரண்டாம் அதிகரணம்.

கண்ணுக்குக் காணும் அறிவு மட்டுந்தான் உண்டு. காதுக்குக்கேட்கும் அறிவு மட்டுமே உண்டு. மற்றைப்பொறிகட்கும் ஒவ்வொரு அறிவே உண்டு. ஆனால் இந்த ஐந்து பொறிகளையும் கொண்டு கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறிகின்ற ஐந்து அறிவுகளையும் உடைய ஒன்று அப்பொறிகட்கு வேறாய் இருந்தது என்று நம்மால்

அறிய முடிந்ததல்லவா? அதுவே அந்த ஆன்மா என்றது மூன்றாம் அதிகரணம்.

உயிர் ஒரு நேரத்தில் உடம்பை மறந்து அந்த உடம் பினுள் எங்கோ சென்று ஒடுங்கி விடுகிறது. அதனை உறக்கம் என்கிறோம். உறக்கத்தில் கனவு தோன்றுகிறது. கனவுக்குக் கதாநாயகன் புருடன். புருடற்கு அங்குக்கிடைத்த உடம்போ சூக்குமவுடம்பு. கனவில் சூக்கும வுடம்புடன் வெளிப்பட்ட புருடன் பற்பல விளையாடல்களையும் புரிந்துவிட்டு மீண்டும் தனது பழைய குடிலுக்கே மீள்கிறான். அவற்றை எல்லாம் அந்த உறக்கத்திலும் நினைத்துப்பார்க்கின்ற ஒன்று இருந் தது. அதுதான் ஆன்மா என்று விளக்கினார் ஆசிரியர். இங்கு ஆன்மா என்பது மாயையால் விளைந்த புருடற்கு வேறாயும் அப்புருடன் கொண்ட சூக்குமவுடம்பிற்கும் வேறாயும் இருந் தது என்பது அறியப்பட்டது.

உயிர் உடம்பை மறந்து உறங்கும்போது உடம்பிற்கு இன்பத்துன்பப் புசிப்பு வேண்டியிராது. உடம்போடு கூடி யிருந்த காலத்தில் மட்டுமே அதற்கு அது வேண்டியிருந்தது. இதனால் நாம் அறிவது என்ன? இன்பத்துன்பங்களைக் கொண்டு உண்மையில் சீவிப்பது உடம்பு அன்று, உயிரே என்று தெரிந்தது. தெரியவே இன்பத்துன்பம் சீவனம் உடையதுஎதுவோ, அது ஆன்மா என்று இங்கு உணர்த்தப் பட்டது. இது ஐந்தாம் அதிகரணம்.

பதிப்பொருளாகிய முதற்பொருள் உணர்த்தும் திறன் உடையது. பசுப்பொருளாகிய ஆன்மாவோ உணர்த்த உணரும் தன்மை வாய்ந்தது. முத்திக்காலத்தில் முதற் பொருளால் உணர்த்தப்பட்டு உணரும் ஆன்மா உணர்த்தும் திறன் உடைய அந்த ஒன்றின் வேறாயிருந்தது என்பது விளங்குமல்லவா? அது ஆன்மா என்று ஆறாம் அதிகரணம் உணர்த்தியது.

மாயையால் விளைந்த ஒரு அழகான இயந்திரம் போன்றதுதான் உடம்பு. உடம்பும் உடம்பு பற்றிய அறிவு களுமே பாசம் எனப்படுவன. அந்தப்பாசம் கலையாதிமண் அந்தம் வரையான தத்துவக்கூட்டங்களால் ஆனது. அந்தப்

பாசத்தாற்பிணிப்புண்டு அதினின்று மீள முடியாமல் அகப்பட்டு நின்ற அந்த ஒன்றே பசுவெனப்பட்டது. பாசமாகிய உடம்போ அழியக்கூடியது. நிலையில்லாதது. பசுவாகிய ஆன்மாவோ நிலைத்த ஒன்று. நிலையில்லாத உடம்புக்கு வேறாய் நிலைத்த ஒன்றாக இருந்த அந்த ஒன்றே ஆன்மாவாம் என்று இங்கு உணர்த்தப்பட்டது. இவ்வாறெல்லாம் உணர்ந்த பின்னரும் இந்தப் பெத்தகாலத்தில் ஆன்மாவைப் பற்றி முழுவதுமாய் உணரமுடியாது என்பதுதான் உண்மை. ''ஞானத்தை முன் உணர்ந்து நாடில் அது தனுவாய்த்தான் அத்தின் வேறாகும்'' என்று ஆசிரியர் இங்கு முடித்துக் கூறினார். முத்திக்காலத்தில் ஞானத்தைமுதற்கண்உணர்ந்து பின்னர் ஆன்மாவைப்பற்றி விசாரிக்கத்தொடங்கினால் ஆன்மா என்பது அத்தின் வேறாய் இருந்தது அறியப்படும் என்பதே அத்தொடர்க்கு நேரான பொருளாகும். அத்தின் வேறாகும் என்பதற்கு அந்த உடம்பின் வேறாகும் என்றும், அந்தத்தற்பரவத்துவின்வேறாகும் என்றும் இரட்டுறமொழிதலால் பொருள் உரைத்துக்கொள்ள வேண்டும். வேண்டவே ஆன்மாத்தான் சார்ந்திருந்த உடம்பும் தானன்று எனவும், தன்னைச் சார்ந்திருந்த தற்பரவத்துவும் தானன்று எனவும், அவ்விரண்டினும் வேறாய்த்தன்னை ஒரு தனிப்பொருளாய்க் காண்பதுவே ஆன்மப்பிரகாசம் எனப்படும் ஆன்ம தரிசனமாம் எனவும் ஆசிரியர் இங்குக் குறிப்பித்தாராயிற்று. இவ்வளவும் மூன்றாம் சூத்திரத்தால்அறியப்பட்டவை.

நான்காம் சூத்திரம் அந்தக்கரணங்களின் வேறாயும் ஆன்மா இருந்தது என்று கூறியது. மனம் புத்தி ஆங்காரம் சித்தம் என்பன அந்தக்கரணங்களாம். சாத்திரங்கள் மனம் என்ற ஒன்றையே அதன் தொழில் வேறுபாட்டால்நான்காகப் பகுத்துக்கூறின. ஆனால் தமிழ்மறை மொழிந்த வள்ளுவர் மனம் என்ற ஒன்றையே நூல் முழுவதும் ஆண்டிருக்கிறார். கண் முதலிய உணர்வுப்பொறிகள் உடம்பின் சிதறல்களாகக் கருதப்பட்டவை. மனம் முதலிய அந்தக்கரணங்கள் உயிரின் சிதறல்களாகக் கருதப்படுபவை. உடம்பின் சிதறல்களாகிய பொறிகள் முதலியவற்றின் வேறாய் ஆன்மா இருந்தது என்பது மூன்றாம் சூத்திரத்தால்

உணர்த்தப்பட்டது. உயிரின் சிதறல்களாகிய அந்தக்கரணங்களின் வேறாயும் ஆன்மா இருந்தது என்று உணர்த்துவது நான்காம் சூத்திரம். இது மூன்று அதிகரணங்களைஉடையது.

பொறிகள் மனத்தின் உதவியால் உணர்வனவாதலால் பொறிகள்வேறு மனம்வேறு என்று அறிகின்றோம். அதுபோல மனம் ஆன்மாவின் உதவியால் அறிகின்றதால் மனம் வேறு ஆன்மா வேறு என்று அறிதல் வேண்டும்.

ஆன்மா ஒன்றுதானே மனமாகி நின்று ஒரு பொருளைப் பற்றுகிறது. புத்தியாய் நின்று ஆராய்கிறது. ஆங்காரமாய் எழுந்து அதன்மேல் விழுந்து படிகிறது. சித்தமாய் நின்று முடிவில் அதனைச் சிந்தித்துத் தெளிகிறது. இந்த வகையில் ஆன்மாவே அந்தக்கரணங்களாம் என்பது ஒரு புடை ஒக்குமாயினும் அந்தக்கரணங்கள் வேறு ஆன்மா வேறு என்றே அறிதல் வேண்டும். அதற்கு ஆசிரியர் கூறும் காரணம்மிகவும் நுட்பமானது. அதனை ஒரு அழகான உவமையால்உணர்த்துவார். காலம் என்னும் முதற்பொருளின் சிதறல்களாகிய காலை மாலை பகல் இரவு நாள் வாரம் பக்கம் திங்கள் இருது கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் முதுவேனில் ஆண்டு எனப்படும் காலக்கூறுகளினின்று காலம் வேறாயினாற்போல ஆன்மா என்னும் முதற்பொருளின் சிதறல்களாயுள்ள மனம் புத்தி ஆங்காரம் சித்தம் ஆகிய ஆன்மக்கூறுகளினின்று ஆன்மா வேறானதே என்பது ஆசிரியர் தந்த விளக்கம்.

அந்தக் கரணங்களோடு ஆன்மாப்பிரிப்பின்றிக் கூடிநிற்கும் உறவினை ஆசிரியர் மேலும் விளக்குவார். அந்தக்காரணங்களோடு கூடிநிற்கும் ஆன்மாப்பிரணவ வடிவாயிருப்பது. ஓம் என்னும் சொல்லே பிரணவ மந்திரமாகும். அது எல்லா மந்திரங்கட்கும் முன் நிற்பது. ஓம் என்ற சொல்லானது இரண்டு எழுத்துக்களாகத் தோற்றப்பட்டாலும் மூன்று எழுத்தொலிகளைக்கொண்டது அது. அவை அ உ ம் என்பன அகர வடிவாயிருப்பது அகங்காரம். உகரவடிவாயிருப்பது புத்தி. மகர வடிவாயிருப்பது மனம். இந்த மூன்று ஒலியாலுமான் ஓம் என்னும் சொல் வடிவாயிருப்பதே சித்தமாகும்.

அதனை விந்து வடிவு என்றும் சொல்வர். அச்சொல்லில் நாத மாத்திரையாய் விளங்கும் ஒலிவடிவே அல்லது நாத வடிவே ஆன்மாவாகும். இவற்றைப்பகுக்காமல் உச்சரித்துப் பார்த்தால் ஆன்மாப்பிரணவ வடிவாயிருப்பது தெரியும். பிரணவத்தின் சொரூபமாக ஆன்மா விளங்குவதால் ஆன்ம போதம் கடலலைபோல ஒன்றுபின்ஒன்றாய் ஆன்மாவின்கண் உதித்து வரும் என்று உணர்த்தப்பட்டது.

இந்த உறவை மேலும் விளக்க ஓம் என்னும் சொல்லையும் சொல்லொலியையும் அதிட்டித்து நிற்கும் தெய்வங்களும் கூறப்பட்டன. ஓம் என்னும் சொல்லையும் சொல்லொலியையும் அதிட்டித்துநிற்கும் தெய்வங்கள் சதாசிவனும் சிவனுமாவர். அகர உகர மகரங்களை அதிட்டித்துநிற்பவர் அயனும் மாலும் உருத்திரனும் ஆவர். இவ்வாறு அந்தக்கரணங்களோடுகூடிநின்ற ஆன்மாவின் சொரூபம் பிரணவச்சொரூபம் ஆனதாலும் அப்பிரணவத்தை அதிட்டித்துநிற்கும் தெய்வங்களின் சகாயத்தாலும் ஆன்மாவிடத்து எண்ண அலைகள் கடலலைகள் போன்று உதித்து ஒன்று பின் ஒன்றாய் வரும் என்று உணர்த்தப்பட்டது.

இனிச் சகசமலத்தால் ஆன்மா உணர்வின்றானது என்பதனை இரண்டாம் அதிகரணம் விளக்கியது. சகச மலம் என்பது ஆணவமலம். அது ஆன்மாவினிடத்துச் செயற்கையானன்றி இயற்கையாகவே உடன் இருந்ததாகலின் சகச மலம் எனப்பட்டது. மூலமலம் என்றும் இருள்மலம் என்றும் அதனைக்கூறுவதுண்டு. ஆன்மா உண்டானவன்றே ஆன்மாவின் குணமாக அதுவும் இருந்ததாகலின் இடையில் வந்து நுழைந்ததன்று அது. அதனால் அதனை இயற்கை மலம் என்றும் சொல்வர். உலகிருள் ஒளியால் துரத்தப்படுவது. இந்த மலவிருளோ ஒளியைத்துரத்துவது. அதாவது ஆன்மவொளியை மங்கச்செய்வது. அவ்வளவு கடுமையான உயிர்க் குற்றம் அது. செம்பிற்களிம்பு போல உயிரில்அநாதியேயுள்ள ஒரு குற்றமது. அதனால் அதனைத் திரவியம் என்றல் சாலாது. அதனை ஏகம் என்றும் எண்ணிறந்த சத்திகளையுடையது என்றும் கூறுவது சரியன்று. அதனைப் பொருளெனக் கொண்டாலன்றோ பொருட்கொரு குணம் கூறல்

தக்கதாம். குணம் எனக்கொண்டபின் குணத்திற்கு ஒரு குணம் கூறல் தக்கதன்று. அன்றியும் இதனைப் பொருள் எனக் கொண்டால் சைவசித்தாந்தக் கருப்பொருள் மூன்றே என்ற வரையறையும் பொய்த்துப்போகலாம். ''போதகாரியம் மறைத்து நின்றது புகல் மலங்காண், ஓதலாம் குணமுமாக உயிரினுள் விரவலாலே'' என வரும் சித்தியார் பாடலையும் இங்கு நினைவு கூறலாம்.

இந்த இருள்மலம் ஞானதிரோதகமாய் ஆன்ம அறிவைப் பூரணமாய் மறைத்து நிற்பதால் ஆன்மா அறியும் திறனை இழந்தது என்று ஆசிரியர் கூறினார். இங்கு ஒரு அழகான உவமையும் கூறப்பட்டது. காட்டுவிறகானது நெருப்பைத் தன்னுள் மறைத்து அது தானேயாய்த் தோன்றுவதுபோல ஆணவமலம் ஆன்மாவை முழுவதுமாய் மறைத்து அது தானேயாய்த் தோற்றமளிப்பது என்பது அந்த உவமை. இந்தச் சேட்டையிலிருந்து விடுபட ஆன்மாவுக்குக்கிடைத்த சாதனங்களே உடம்பும் பொறிகரணங்களும் ஆகும். அவற்றின் உதவியால் ஆன்மா ஓரளவுஆணவத்தின்சேட்டை யிலிருந்து தப்புகிறது என்றாலும் அங்கும் ஆணவமலம் ஆன்மாவுக்கு உறக்கத்தைக் கொடுத்து உடம்பையும் அந்தக் கரணங்களையும் முற்றவும் மறக்கச்செய்து ஆன்மாவைமூலா தாரத்தில் கொண்டு போய்த் தனியாக நிறுத்தி உணர்வும் உயிர்ப்பும் அறவே இல்லாமற்செய்து விடுகிறது. எந்தநேரத் திலும் அந்தக்கரணங்களோடு கூடியே நின்ற ஆன்மா ஆண வத்தின் சேட்டையால் மூலாதாரத்திலே ஒளிந்து ஐந்தாம் அவத்தைப்படுகின்ற அந்தநேரத்தில் அந்தக் கரணங்களி னின்றும் வேறாய்ப் பிரிந்து நிற்றலை உணரலாம் என்று ஆசிரியர் முடித்துக்கூறி மேற்கோளை முற்றவும்விளக்கினார். அங்குத்தான் ஆன்மாத்தன் சொரூபம் இழந்துஆணவத்தின் சொரூபமே தனக்குச் சொரூபமாகக்கொண்டு கிடந்தது என் அறியலாம். அன்றாடம் ஆன்மா அடைகின்ற ஐந்து அவத்தைகளையும் விளக்கவுரையில் கண்டு தெளியலாம்.

இப்படியாக ஆணவத்தின் சேட்டையிலிருந்து தப்பு வதற்கு ஆன்மாவுக்குக்கிடைத்த சாதனங்களாகிய உடம்பு

பொறிகரணங்கள் ஆகிய அனைத்துமே ஆணவத்திற்கு முன்னால் தோற்றுப்போன நிலையில் அன்றாடம் உணர்வும் உயிர்ப்பும்இன்றி மூலாதாரத்தில்தனித்துக்கிடந்துஅவத்தைப் படுகின்ற ஆன்மாவிற்கு மீளவும் உணர்வும் உயிர்ப்பும் நல்கி உபகாரம் புரிந்து கொண்டு நிற்பது தற்பரவத்துவாகியபதிப் பொருளே என்பதைத்தான் ஐந்தாம் சூத்திரம் விளக்க வருகிறது.

ஐந்தாம் சூத்திரம் ஆன்மாக்களுக்குத் தமது முதல் உபகாரம் உணர்த்துகிறது.

மெய் வாய் கண் மூக்குச்செவியாகிய பொறிகள் ஐந்தும் ஆன்மாவால் விடயங்களை அறிகின்றன என்றாலும் அறியக் காரணமாயிருந்த ஆன்மாவை அவை அறிவதில்லை. அது போலவே ஆன்மாவும் ஆணவத்தின் பிடியிலிருந்து தப்பத் தனக்குக் கிடைத்த சாதனங்களாகிய உடம்பு பொறிகரணங்க ளாகிய அனைத்தும் தோற்றுப்போன நிலையில் உணர்வும் உயிர்ப்புங்கூட இன்றித் தனிமையில் அவத்தைப்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் முதல்வனால் மீளவும் உணர்வு பெறுகின்றது என்றாலும் தான் உணரக்காரணமாயிருந்த முதல்வனை அது உணர்வதில்லை. இதுதான் பெத்த காலத்து நிலை என்று ஆசிரியர் ஐந்தாம் சூத்திரத்தால் விளக்கினார். ஆன்மாக்கள் முதல்வனை உணராவாயினும் முதல்வன் அவற்றைப்புறக்கணியாது இடையறாது உணர்த் திக்கொண்டு தானிருப்பன் என்றே நாம் இங்கு உணர வேண்டும்.

மேற்கூறிய உவமையால் பொறிகள் உணர்ந்த விடயங் களை ஆன்மாவும் உணர்ந்து துய்த்தாற்போல் ஆன்மா உணர்ந்த விடயங்களை முதல்வனும் உணர்ந்து துய்ப்பன் என்பது பெறுதுமன்றே. அதுதான் முறை என்றாலும் பெத்த காலத்தான்மாக்கள் துய்க்கும் விடயங்களில் முதல்வன் பங்கேற்பதில்லை என்பதும், முத்திக்காலத்தான்மாக்கள் ''ஏகனாகி இறைபணி நின்று நானாக ஒன்றையும் செய்ய வில்லை, எல்லாம் அவன் செய்வதே'' என்றெண்ணிச்செயல் புரிவதால் அவ்வான்மாக்கள் புசிக்கும் இன்பத்துன்பமாம் அசத்தினை முதல்வனும் புசிப்பன் என்பதும்சாத்திரங்கள் ஒப்ப

முடிந்த உண்மையாகும். அது குறித்தே 'எண்ணான் சிவன் அசத்தை இன்று''. என்று கூறி, இன்று எண்ணான் என்ப தால் அன்று எண்ணுவன் என்பதும்பெற வைத்தார்ஆசிரியர். வைத்ததோடு, இரவில் இருளினைத் தனித்தே உண்டு திரிந்த விண்மீன்கள் பகலில் அதனை வெய்யோனொடு பகிர்ந்தே உண்ணுமதுபோலப் பெத்த காலத்தில் ஐம்புல விடயங்களைத் தனித்தே புசித்து வந்த ஆன்மாக்கள் முத்திக் காலத்தில் அவற்றை முதல்வனோடு பகிர்ந்தே புசிக்கும் என்னும் பொருள் தோன்ற

> வெய்யோனொளியில் ஒடுங்கி விளங்காது
> வெய்யோனை ஆகாத மீன்போலவெ(மெ)ய்யோனின்
> கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனைக்
> கண்டுடனாய் மன்னுதலைக் காண்.

என்ற உரைப்பாட்டால் விளக்கியும் சென்றார் ஆசிரியர். ஆசிரியர் கருத்துப்படி பெத்தகாலத்தை ஆன்மாக்களுக்கு இரவுக்காலம் என்றும், முத்திக்காலத்தை அவற்றுக்குப்பகற் காலம் என்றும் நாம் இங்கு உணரவேண்டியிருந்தது.

இப்படியெல்லாம் ஆன்மாக்களை அவற்றின் தகுதிக் கேற்ப முதல்வன் உணர்த்திக்கொண்டிருப்பதற்குஅவனருளே காரணமாம் என்றும் கூறி ஆசிரியர் ஐந்தாம் சூத்திரத்தை முடித்தார். இங்குப்பிறப்பியல் முற்றுப்பெறுகிறது.

ஆறாம் சூத்திரம் பொதுவியலில் வருகிறது. பொது வியலாவது பிறப்பியலுக்கும் வீட்டியலுக்கும் பொதுவாய் வரும் செய்திகளைக்கூறுவது. அவை பதி பசு பாசம் எனப் படும் சைவசித்தாந்தக்கருப்பொருள் பற்றிய செய்திகளாம். அவற்றைச் சத்து அசத்து என்னும் அளவைகளைக்கொண்டு வரையறுத்து உணர்த்துவது ஆசிரியர் நோக்கமாயிருந்தது.

ஒன்று அறிவினால் சுட்டி உணரப்படும் பொருளாம் எனின் அது அசத்தாம். அவ்வாறு சுட்டி உணரவாராதாயின் அது இல்லாத ஒன்றாம், அதாவது சூனியமாம். இவ்விரண்டு வகையானுமன்றி வேறு இரண்டு வகையானும் உள்ள தொன்றே சிவமாகிய சத்துப் பொருளாம் என்றுஉயர்ந்தோர் ஒருதலையாகக் கூறுவர் என்பது சூத்திரப்பொருளாகும்.

இதிலிருந்து நாம் அறிய வேண்டியவை பலவுள்ளன. அவற்றை முறையாகக் காண்போம்.

பிரபஞ்சம் அறிவினால் சுட்டியறியப்பட்டது. அதனால் அது தோன்றி நின்று அழியக்கூடியதாகலின் அசத்தாயிற்று.

முயற்கோடு அறிவினால் சுட்டியறிய வாராதது. அதனால் அது தோன்றாமே நின்றுஅழியக் கூடியதாகலின் அதுவும் அசத்தே ஆயிற்று.

சிவமாகிய பதிப்பொருள் பிரபஞ்சம் போலச் சுட்டி அறியப்பட்ட பொருளுமன்று. முயற்கோடு போலச்சுட்டி அறியவாராத சூனியமும் அன்று. ஆனால் ஆன்ம அறிவால் அறிய வாராதாயினும் மெய்யறிவால் ஒரு தலையாகஅறியப் பட்ட பொருளாமாதலின் அதுவே சத்தாயிற்று என்பது.

சத்து என்பது நிலைபேறுடையது என்ற பொருளையும் அசத்து என்பது நிலைபேறில்லாதது என்ற பொருளையும் தருவனவாம். அவற்றை முறையே மெய்ப்பொருள் பொய்ப் பொருள் எனவும் வழங்கலாம்.

சிவமாகிய மெய்ப்பொருள் பிரபஞ்சம் போலத்தோன்றி நின்று அழிதல் மாலைத்தன்றி என்றும்உள்ளபொருளாதலின் அதனைச்செம்பொருள் எனவும் வழங்கலாம். வள்ளுவர் சிவமாகிய சத்துப்பொருளை மெய்ப்பொருள் என்றும் செம் பொருள் என்றும் வழங்கியிருத்தலைக் காணலாம்.

இங்கு இவ்வாறு கூறியவாற்றால் அறிவறிந்த ஒன்று பிரபஞ்சம் போல்வதான அசத்து என அறியப்பட்டது. அறிவறியாப் பொய்யென ஒன்று இருந்தது. அதுமுயற்கோடு போல்வதான அசத்து என அறியப்பட்டது. அறிவறியாமெய் யென ஒன்றும் இருந்தது. அதுவே சிவனருளாகிய சத்துப் பொருளாம் என்று அறியப்பட்டது என்பதாம்.

இங்கு ஆசிரியர் கையாண்ட அளவைகள் இரண்டென அறியப்பட்டது. ஒன்று-அறிவினால் சுட்டியறியப்படுவது என்பது ஒரு அளவை. அதன்கண் பிரபஞ்சம் போல்வதான அசத்தெல்லாம் அடங்கின மற்றொன்று-அறிவினால் சுட்டி

அறிய வாராதது என்பது ஒரு அளவை. அதன்கண் முயற் கோடு போல்வதான அசத்தெல்லாம் அடங்கின. முன்னதை அறிவறிந்த மெய் எனக்கொண்டால் பின்னதைஅறிவறியாப் பொய் எனக்கொள்ளலாம். கொள்ளவே அறிவறியாமெய் என ஒன்றும் இருந்தது. அதுவே சத்தாயுள்ள சிவனருளாம் என்று தெளியப்பட்டது. இங்கு இறுதியிற் கூறியதைஅளவை என்று சொல்வதை விட அனுபவம் என்று கொள்வதே வலியுடைத்தாம். ஏனென்றால் அளவையாதொன்றானும் அறிய முடியாத அந்த ஒன்றே பதிப்பொருளாம் என்ப வர்கலின்.

அறிவினால் சுட்டி அறியப்பட்ட பொருள் அசத்தாதல் யாங்ஙனம் என்ற வினாவிற்கு ஆசிரியர் அழகாக விளக்கம் தந்தார். பிரகாசமாய் நின்று அப்பிரகாசமாய்க் கழியும் பொருள்கள் அசத்தே என்பது அவர் கூறிய விளக்கம். தோற்ற முற்று நின்று பின் தோன்றாதொழியும்பொருள்கள் எல்லாம் அசத்தே என்பது இங்கு ஆசிரியர் கருத்தாக இருந் தது. இதனைச் சில உவமைகளாலும் உறுதிப்படுத்தினார். நீர்மேல் எழுத்து, கனவு நிகழ்ச்சி, கானல் நீர் என்பன அவர் கூறிய உவமைகள்.

தோன்றுங்காலே நிலையாதொழியும் அசத்துக்களுக்கு நீர்மேல் எழுத்து உவமை ஆயிற்று. தோன்றிச் சிலபோது இருந்து பின் நிலையாதொழியும் அசத்துக்களுக்குக் கானல் நீர் உவமை ஆயிற்று. பொய்யாகத் தோற்றமளித்து நிரூபிக்கின் இல்லையாய் ஒழிகின்ற அசத்துக்களுக்குக்கானல் நீர்உவமை ஆயிற்று இந்த மூன்றுஉவமைகளும் மேற்கூறிய வற்றை முடித்துக்கூறப் போதுமானவையாக இருந்தன.

இரண்டாம் அதிகாணத்தால் வாக்குமானாதீத கோசர மாய் நின்றது எதுவோ அது பதிப்பொருள் என்று விளக்கி னார். இங்கு உருவ வழிபாட்டு உணர்வு நெறியும் பாவக வழிபாட்டு உணர்வு நெறியுங்கூட மெய்யுணர்வாகாது என்றே ஆசிரியர் விளக்கினார். சரியை கிரியை யோகமார்க் கங்களால் பதிப்பொருளை அறிதல் என்பது வேறு. ஞான மார்க்கத்தால் பதிப்பொருளை அறிதல் வேறு என்பதே மெய்கண்டார் துணிபாக இருந்தது. சரியை கிரியை யோக

மாகிய தவங்களைச் செய்துழி அவை ஞானநெறியைக்காட்டி யல்லது மோக்ஷத்தைக்கொடா என்று ஆசிரியர் திட்டவட்ட மாகக் கூறியவதனால் உருவ வழிபாட்டு உணர்வு நெறியும் பாவக வழிபாட்டு உணர்வு நெறியும் மெய்யுணர்வாகா வென்பதை அவர் வலியுறுத்தினார். கிரியா மார்க்கத்திலும் யோக மார்க்கத்திலும் நின்றவர் அடையும்பேறுகள் முறையே சாமீபம் எனவும் சாரூபம் எனவும், ஞான மார்க்கத்தில் நின்றவர் அடையும்பேறு சாயுச்சியம் எனவும் ஆகமங்கள் வரையறுப்பன கொண்டும் இங்கு ஆசிரியர் கருத்தைத் தெளியலாம் என்பதுதான்.

இனிப் பெத்தகாலத்தறிவுக்குப் பதிப்பொருள் அதீத மாயே நிற்கும் என்பதை ஆசிரியர் ஒரு அழகான உவமை கொண்டு விளக்கினார். ''கண் அறியா மெய்யென்னக் காட்டாதறிவறிந்து கண்டு'' என்பது அவர் கூறிய உவமை. கண்ணை அறியாத மெய்யினை-உடம்பினைப்போலப்பெத்த காலத்து அறிவு பதிப்பொருளை அறியாது, அறிந்து காட் டாது என்பது அதற்கு நேரான உரை. கண்ணுக்கு ஒரு உணர்வு உண்டு. அது காட்சியுணர்வு. உடம்பிற்கும் ஒரு அறிவு உண்டு. அது ஊற்றுணர்வு அதாவது தொட்டால் தெரிந்து கொள்கிற உணர்வு. ஊற்றுணர்வையுடைய உடம் பானது தன்னில் ஒரு உறுப்பாயுள்ள கண்ணைக் கண்டறியா தாற்போலப் பெத்த காலத்தறிவானது தன்னில்ஒளிந்திருந்த பதிப்பொருளைக் கண்டறியாது. அறிந்து ஆன்மாவுக் காட்டாது என்பதே இங்கு ஆசிரியர் கருதியது. ஆசிரியர் கருத்தை உணராது இங்கெல்லாம் வேறுவேறாய் உரைத்துச் சொற்குணம் வாளா போயினாரும் உளர்.

இனி முத்திக்காலத்தில் பதிப்பொருள் கோசரமாம் நிலையினையும் ஆசிரியர் விளக்கினார்.

பதிப்பொருளானது சுட்டி உணரப்படுகின்ற பிரபஞ்சம் போல்வதான பொருளும் அன்று. சுட்டி உணர வாராத முயற்கோடு போல்வதான சூனியமும் அன்றாய் அதனின் வேறான சத்துப்பொருளே அது. முத்திக்காலத்தில் பதிப் பொருளை உள்ளவாறு அறிகின்ற மெய்யறிவும் முத்தான்மா வுக்கு உள்ளதாம். அவ்வறிவு கொண்டு அது அதனை

அறிகின்ற பொழுது அது அந்த அறிவுக்கு வேறாய் நிற்ப தன்றாகலான் அதனை அறிந்த அவ்வறிவே சிவமாதலும் ஆம் என்று விளக்கினார் ஆசிரியர். பெத்த காலத்தில் வாக்கு மனாதீதமாயிருந்த ப தி ப் பொ ா ரு ள் முத்திக்காலத்தில் கோசரப்பட்ட அனுபவங்களாகும் இவை. அறிவே சிவமாம் என்றதால் அறிவு வேறு சிவம் வேறு என்று உணராமல் அறிவும் சிவமும் ஒன்றெனவே உணர்வர் மெய்யுணர்ந்தோர் என்பதுதான். இதனை உணர்ந்துகொள்ள மு ற் றி ய அனுபவம் வேண்டும் என்பதே.

அறிவும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அறிவே சிவமாவ தாருமறிகிலார்
அறிவே சிவமாவ தாரும் அறிந்தபின்
அறிவே சிவமாய மர்ந்திருப்பாரே.

எனவரும் திருமூலரது மெய்யுணரனுபவத்தையும் இங்கு ஒப்பு நோக்கலாம். இங்கு ஆறாம் சூத்திரம் முற்றுகிறது.

ஏழாம் சூத்திரம் முப்பொருள்களில் இனி எஞ்சி நின்ற தான ஆன்மாவை வரையறுத்து உணர்த்துகிறது. மூன்று நான்காம்சூத்திரங்கள்ஆன்மாவைப்பற்றிக்கூறினவே என்றுல் அவை ஆன்ம தரிசனத்திற்கு வேண்டிய அனுபவங்களைக் கூறின. இது ஆன்மாச் சத்துமன்று, அசத்துமன்று, சத்த சத்தாம்என்பதுஉணர்த்துகிறது.அங்குப்புருடன்ஆன்மாவைத் தரிசிக்கும் சூழ்நிலை. இங்கு ஆன்மாவுக்கு இருதிறன் அறிவு உண்டு என்ற வரையறை.அது பிறப்பியல், இதுபொதுவியல்.

சத்தினை எதிர்ப்படும்போது அசத்துச் சூனியமாய் இல்லாத ஒன்றாகிவிடும். அதனால் சத்து அசத்தை அறிந்து புசிக்காது. அசத்தும் சத்தை அறிந்து புசிக்காது. அவ் விரண்டையும் வேறு வேறு காலத்தில் அறிந்து புசிக்கும் மூன்றாவதொரு பொருளும் இருந்தது. அதுவே இருதிறன் அறிவுடைய ஆன்மா என்பது சூத்திரத்தால் அறியப்பட்ட பொர்ருள்.

சத்தினிடத்து அசத்துப்பிரகாசியாது என்பதற்கு மெய்யி னிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலை ஆசிரியர்

உவமை கூறினார். மெய்யினிடத்துப்பொய் தோற்றமுறா தாற் போலச் சத்தினிடத்து அசத்துத் தோற்றமுறாது என்ப தாம். மெய்யினிடத்துப் பொய் தோற்றமுறாது என்பதனை முயலிடத்துக்கோடு தோன்றாமை போலக்கருதி உணரலாம். எவ்வாறெனில் முயல் மெய்யாக முயற்கோடுபொய்யாகலான் என்பது. இங்குச்சத்து என்றது பதிப்பொருளையும் அசத்து என்றது பாசப்பொருளையும் குறித்தன. பதி-இறை. பாசம்-உலகம்.

இறைவன் உலகோடு உடனாயும் வேறாயும் நின்ற இரு நிலைகளிலும் வைத்து ஆசிரியர் இங்கு மேற்கோளை விளக்கி னார். உடனாய் நின்ற நிலைக்கண் உலகம் அவனறிவில் தோன்றாது எனவும், வேறாய் நின்ற நிலைக்கண் அது சூனியமாய்த் தோன்றும் எனவும் விளக்கம் தரப் பட்டது. சூனியமாய்த்தோன்றும் என்பதற்குக் கதிரவன் முன் இருள்போல என்னும் உவமையும் கூறப்பட்டது.

கதிரும் இருளும் ஒன்றை ஒன்று அறியாதாக அவ் விரண்டினும் வேறாய் நின்ற கண்ணொளி அவ்விரண்டையும் அறிந்து துய்த்தாற்போலச் சத்தும் அசத்தும் ஒன்றை ஒன்றை அறியாதாக அவ்விரண்டினும் வேறானஆன்மா அவ் விரண்டையும் அறிந்து புசிக்கும் என்பதொரு இறைச்சிப் பொருளும் அங்குக் கருதப்பட்டது.

இனி அசத்தாகிய உலகம் சத்தின்முன் சூனியமாம்என்று நிரூபிக்கப்பட்டதால் அதுவும் சத்தினை அறிந்து புசிக்காது என்பது இரண்டாம் அதிகரணம்.

பேய்த்தேர் நீர்போலத்தோற்றமளிப்பது. யாருக்கு? தூரத்தே நின்று பார்ப்பவருக்கு. நெருங்கிச்சென்று சோதிப்ப வர்க்கு அது பொய்யாகவே தோன்றும். அதுபோல அசத் தாகிய உலகம் அறியாதவர்க்கு உள்ளாய்த்தோன்றலாம். ஆனால் மெய்யுணர்ந்தார்க்கு அதுசூனியமாகவே தோன்றும். அந்தச்சூனியம் தன்னைச் சூனியமாக்கிய அந்த ஒன்றை ஒரு ஞான்றும் அறியாது, அறிந்து புசிக்காது என்பதுதான். இது ஆசிரியர் தந்த விளக்கம்.

இனி இவ்விரண்டையும் அறிந்து புசிக்கும் இரண்டு வகை அறிவினையும் உடைய ஆன்மாவைப்பற்றியது மூன்றாம் அதிகரணம்.

ஆன்மாவானது அறிவிக்க அறியும் இருவகை அறிவினால் சத்தாகிய இறையையும் அசத்தாகிய உலகையும் அறிகின்றது. மலரும் மணமும் போல உடலும் உயிருமாய் ஒன்று கூடிப்பிறக்கிறது. பிறந்து நிலையுங்கால் உடம்போடு ஒருங்கி நிலைவதில்லை. உடம்பு நிலையின்றி அழிய உயிர் அழியாமல் நீங்குகிறது. நீங்கின உயிர் மீண்டும் பிறவாமல் இருப்பதில்லை. இக்காரணங்களால் அது சத்தும் ஆகாது அசத்தும் ஆகாது என்பது அறியப்பட்டது.

பசி வந்தபோது மயங்குகிறது. பசிப்பிணி மருந்தால் மயக்கம் தெளிகிறது. ஒருபோது மறக்கிறது. மறதிக்குப் பின் திரும்பவுணர்கிறது. இக்காரணங்களால் அது சத்தாகாது. உடம்போடு கூடிச் செய்த வினைப்பயனை உடம்பு புசிப்பதில்லை. உயிரே புசிக்கின்றது, அதனால் அது அசத்தும் ஆகாது. ஆகவே அது சத்தாயும் அசத்தாயும் இருந்தது என்பதுதான்.

உடம்பு அசத்து ஆதலால் உடம்பால் ஆன்மாவுக்கு உண்மை ஞானம் விளைவதில்லை. உலக ஞானம் வேண்டுமானால் விளையலாம். ஆன்மா உண்டானவன்றே ஆன்மாவின்கண் இருவகை அறிவிற்கான கருக்களும் கருக்கொண்டிருந்தன. விளையுங்காலத்தில் அவை மாயையாலும் ஞானதேசிகனாலும் விளைந்து உலகையும் இறையையும் புசித்துவரும். சத்தசத்தாகிய ஆன்மாவுக்கு இயல்பாக அமைந்த குணங்கள் இவையென முடித்துக் கூறியது ஏழாம் சூத்திரம்.

பொதுவியற் சூத்திரங்கள் இரண்டாலும் பாசம் பதி பசுவாகிய முப்பொருள்கள் வரையறுத்துக்கூறப்பட்டன. இங்கு ஏழாம் சூத்திரம் முற்றுகிறது.

எட்டாம் சூத்திரம் வீட்டியலில் வருகிறது. வீடு பேறு அடைவதற்கு முதற்கண் வேண்டப்படுவது ஞானம் ஆகலின்

அதனை அடைகின்ற முறைகளை இந்தச்சூத்திரம் விளக்குகிறது.

வீடு பேறு அடைதற்குரிய ஞானமே இங்கு ஞானம் என்று பேசப்பட்டது. ஆன்மாக்கட்கு முற்செய்தவத்தால் மட்டுமே ஞானம் நிகழும் என்று மேற்கொள்ளப்பட்டது. அத்தவம் சரியை கிரியை யோகமாகிய சிவபுண்ணியச் செயல்களாம். வேள்வி முதலிய காமிய வினைகளாகியஏனைத்தவங்கள் எல்லாம் ஞானப்பேற்றுக்கு வாயில்கள் ஆகமாட்டா. அவை பசி வந்தபோது உண்டு பசியாறி மீண்டும் பசிக்கின்றானது பசியைப் போல ஆராவியற்கையன. சரியை முதலான தவங்களே ஞானப்பேற்றினை உறுதிப்படுத்துவன: அவை பேராவியற்கையன. சரியையாவது திருக்கோயிலில் தொண்டுப்பணி. கிரியையாவது சிவபூசைப்பணி. யோகமாவது நிட்டை கூடி இறைவனோடு ஒன்றுகின்றதியானப்பணி இம்மூன்றுக்குப்பிறகு ஆன்மா அடையும் நெறியேஞானநெறி ஆகும். ஞான உணர்வு ஆன்மாவுக்கு மேற்கூறிய தவங்களால் உண்டாகும் என்பது ஆசிரியர் நம்பிக்கை. தவமும் தவமுடையார்க்கு ஆகும் என்பதே பெரியோர் அனுபவம். ஆன்மா முன்னைப்பல பிறவிகளிலும் சரியை முதலான சிவபுண்ணியச் செயல்களைச் செய்து வந்த காரணத்தால் பின் வரும் ஒரு பிறவியில் தவம் செய்த ஒரு நற்குடிக்கண் வந்து பிறக்கும். தவத்தின் பயனாலும் நற்குடிச் சார்பாலும் இருவினை ஒப்பு என்னும் சமனிலை உணர்வு வாய்க்கும். அது உலகியல் நீங்கினார் பெற்றி ஆகலின் அந்நிலையில் முதல்வன் உள்நின்று உணர்ந்த அந்த ஆன்மா ஞான நெறியில் நாட்டம் கொள்ளும். உடல்உலகப்பற்றுக்களைவிட்டொழித்து உண்மைப்பொருளை அறிதற்கு அலைந்து திரியும். முன்னர் உள்நின்று உணர்த்திய முதல்வன் இப்பொழுது ஞானாசிரியனாய் முன்வந்தும் உணர்த்துவன். உணர்த்த உணர்ந்த ஆன்மா முதலில் தன்னைத்தீர உணரும். பின்னர்த் தன்னுள் இருந்த தலைவனை உணரமுற்படும். அந்நிலையில்தனக்குஅந்நியமின்றி நெருங்கி வந்து நிற்கும் முதல்வன் தாளைஇறுகப்பற்றிச்சரண்புகும். அதுவே அந்த ஆன்மாவுக்கு ஞானக்கண் பெற்ற பேறாகும் என்று சொல்லப்பட்டது. ஞானம் வாய்த்த பின்னர் அந்த ஆன்மா ஐம்புல இன்பங்களைத் துறக்கும்.

உடல் உலகப் பற்றுக்களை அறுத்துக்கொள்ளவே முயலும். வேம்பினைத்தின்று பழகிய புழுவினுக்கு விளங்கனியும் தேமாங்கனியும் தின்னக்கிடைப்பினும் அவற்றை விடுத்துப் பழக்க வாசனையால் திரும்பவும் அந்த வேம்பினையே நாடிச் செல்வது போல அந்த ஆன்மாவுக்கு அப்படியொரு சலனம் ஏற்படலாம். நீர்ப்பாசி போல நீங்கியும் நீங்காதுமாய் வருகின்ற அப்பற்றுக்களை மேலும் சில சாதகங்களைச்செய்து விட்டொழிக்கும். மலம் மாயை தன்னொடு வல்வினையும் அறக்கழன்ற நிலையில் தேகாந்தத்தே தன்னுள் நீங்காது நின்ற முதல்வன்தாளை இடையறாது நினைந்து இறுகப் பற்றி நின்று வீடு பெற்று உய்யும். பின் பிறவிக்குத்திரும்பாது என்று முடிக்கின்றது எட்டாம் சூத்திரம்.

நீர்ப்பாசி போல் பற்றுக்கள் நீங்கியும் நீங்காதுமாய் வருகின்ற அவலநிலை மாற ஆன்மாவுக்கு மேலும் சில சாதகங்கள் வேண்டியிருந்தன. அவ்வழியில் ஆன்ம சுத்திக்கான அனுபவங்களை ஒன்பதாம் சூத்திரம் உணர்த்துகிறது.

ஊனக் கண்ணாலும் கருத்தாலும் உணர முடியாத பதிப் பொருளை ஞானக்கண்ணாலே சிந்தையில் தேடும் அந்த ஆன்மா. பதிப்பொருளைச் சிந்தையில் தேடி உணர உணரப் பாசங்கள் அகலும். கானல் நீரைப்போல அவை முற்றவும் அகன்ற நிலையில்அந்தப்பதிப்பொருள்குளிர்ந்ததருநிழலாய்த் தோன்றி அந்த ஆன்மாவை இளைப்பாற்றும். அந்தப் பேரின்ப அனுபவம் மாறாதிருக்க அந்த ஆன்மாத்திருவைந் தெழுத்தை விதிப்படிக் கணித்து வரும். அதனால் ஆன்மசுத்தி உண்டாகும் என்பது சூத்திரக்கருத்து.

இது மூன்று அதிகரணங்களை உடையது. முதல்வனை உள்ளத்தில் தேடிக்காண வேண்டும் என்பதற்கான காரணத்தை முதலதிகரணம் உணர்த்தியது. முதல்வன் வாக்குமனாதீத கோசரமாய் நிற்பவன் என்பது ஆகமங்களின் துணிபு. ஆன்ம அறிவிற்கு அப்பாற்பட்டவன் ஆனால் மெய் யறிவிற்கு விடயமாகின்றவன்என்பதுஅதற்குப்பொருளாகும். ஆகவே அவனை வேறு எங்கும் தேடுவதில் பயனில்லை ஆதலால் சிந்தையில் தேடிக் காணவேண்டும் என்று ஆசிரியர் வலியுறுத்தினார். கலையாதி மண் அந்தம்வரையானதத்துவ

உணர்வுகளை எல்லாம் விட்டொழித்து ஆன்மாத்தன்னைத் தான் அறிந்த அந்த அறிவுகொண்டு அந்தமுதற்பொருளைச் சிந்தையில் தேட வேண்டும். அந்த அறிவுதான் மெய்யறிவு. அந்த அறிவிற்கு அவன் எப்படியும் கிடைப்பான். அறிவில் ஒளிந்திருந்த அக்கள்ளனை அந்த அறிவால் அறிய முடியும் என்று ஆசிரியர் துணிந்து வலியுறுத்தினார்.

பாச உணர்வுகள் அறவே அகன்ற நிலையில் முதல்வன் சிந்தையில் தானே வெளிப்படுவான் என்றது இரண்டா மதிகரணம்.

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியானந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வன் அற்புதம்போல்
ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானோ
வானே முதல் களையின் வந்து

இதுதான் பதிப்பொருளை அறிய ஆசிரியர் அறிவுறுத்திய மகாவாக்கியத்திருமந்திரம். மெய்ப்பொருளை அறிய வேண்டுவோர் இந்தப்பாடலை இடைவிடாது உச்சரித்துக் கொண்டிருக்கவேண்டும் என்பதே.

இந்தப்பாடலில் வான்முதல் களைதல் என்றது பிரபஞ்ச உணர்வு அகற்றல் என்பதுதான். அதாவது மாயையால் விளைந்த கலையாதி மண் அந்தம் வரையான தத்துவ உணர்வுகளை அகற்றி ஆன்மாத்தன்னைத்தான் உணர்ந்த தற்போத உணர்வு கொண்டு முதல்வனைச் சிந்தையுள் தேடினால் முக்குணங்களும் அற்றவனாய், மும்மலங்களும் இல்லாதவனாய், என்றும் வற்றாத பேரின்ப வடிவினனாய், ஆன்மாக்களுக்கெல்லாம் மேலான பரமான்மாவாய் விளங்கும் ஒப்பற்ற முதல்வன் அற்புதமாக வெளிப்பட்டு அளவைகளுக் கெல்லாம் அப்பாற்பட நின்று அறிவை விட்டு நீங்கானாய்த் தோன்றுவன் என்று உணர்த்தினார் ஆசிரியர். எனவே இது ஆன்மாப் பதிப்பொருளை உணரும் அனுபவமாயிற்று. இந்த அனுபவத்தை ஆசிரியர் மூன்றாகப் பகுத்து மூன்று உரைப் பாட்டுக்களால் விளக்கினார். அவை உணர்தல் புணர்தல் பழகுதல் என்பனவாம். நட்பிற்குக் கூறப்பட்ட இந்த அனுபவங்கள் மெய்ப்பொருளோடு உறவு கொள்ளற்கும் பொருந்துமாகலின் அவ்வாறு கூறப்பட்டது.

இனி இவ்வாறு உணரப்பட்ட அந்தப் பதிப்பொருளோடு ஆன்மாப் புணர்ந்தே நிற்றல் வேண்டும் என்ற அனுபவத்தை அடுத்த உரைப்பாட்டால் விளக்கினார். அவ்வாறு புணர்ந்து நிற்பதால் அதுகாறும் ஆன்மாவைப் புணர்ந்திருந்த பொய் யான பாச உறவுகள் எல்லாம் ஆன்மாவை விட்டுத்தாமாக விலகிவிடும் என்றும் ஆசிரியர் தமது அனுபவத்தையும் உடன் கூறி விளக்கினார்.

உணர்ந்து புணர்ந்து நின்ற அப்பதிப்பொருளோடு ஆன்மாப் பலகால் பல முறை பழக வேண்டும் என்றும் ஆசிரியர் வலியுறுத்தினார் கருடோபாவனையால் பாம்பின் விடம் தானாக நீங்குதல் போலப் பதிப்பொருளின் பழக்கத் தால் ஆன்மாவைப்பற்றியிருந்த பாசங்கள் தாமாகவே அகன் றொழியும் என்றும் கூறப்பட்டது. பாசம் அகன்ற நிலை நீடிக்க ஆன்மா அங்குத் திருவைந்தெழுத்தை விதிப்படி உச்சரித்து வரவேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது. அது மூன்றாம் அதிகரணத்தால் உணர்த்தப்பட்டது.

திருவைந்தெழுத்தாவது ஐந்து எழுத்துக்களாலான ஒரு மாமந்திரம். அது எல்லா மந்திரங்கட்கும் மேலான மந்திர மாகும். அதனை, ''நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க'' எனவரும் திருவாசக முதலடியுள் முதற் சீராக வந்த அதனை ஒற்று நீக்கி உச்சரித்துக் காணலாம். நம என்னும் இரண்டெழுத்துக்களும் ஆன்மாவைப்பற்றி நின்ற மும்மலங் களையும்குறிப்பன என்றும், சி வா என்னும் இரண்டெழுத்துக் களும் சிவனையும் சிவனருளையும் குறிப்பன என்றும், ய என்னும் ஓரெழுத்து ஆன்மாவைக் குறிப்பது என்றும் சாத் திரங்கள் கூறாநிற்கும். நம சிவாய என்பது வணக்கம் சிவனுக்கு என்ற பொருளைத்தருவது. அதனாலே சிவமே அங்குத் தலைமை பூண்டு நிற்பது. மற்றவை அச்சிவத்திற்கு உடைமையாய் நிற்பன. அதனை உணர்ந்து சிவனைஇதயத் தில் வைத்து ஐந்தெழுத்தால் அருச்சனை செய்து, நாபியில் ஐந்தெழுத்தால் ஓமம் செய்து முடிவில் புருவ நடுவில் ஐந்தெழுததால் தியானம் செய்து வந்தால் அந்தப்பாவகன் சிவசொரூபத்தை அடைவான் என்று உணர்த்தப்பட்டது. திருவைந்தெழுத்தை உச்சரித்துச் சிவனைச்சிந்தை யில் காண முயன்றால் சிவனே தனதிருப்பை ஆன்மாவுக்குக்

காட்டுவன். விறகில் ஒளிந்திருந்ததீயானது கடையுங்காலத்து வெளிப்பட்டுத் தோன்றினாற் போலத் திருவைந்தெழுத்தை உச்சரிக்குங்காலத்து வெளிப்பட்டுத்தோன்றுவன். நெருப்புத் தன்னை அணைந்த இரும்பினைத்தன் வண்ணமாக்கினாற் போல முதல்வனும் தன்னை உணர்ந்த ஆன்மாவைத் தன் வண்ணமாச் செய்வான். இதயத்தை ஒரு தெய்விக கமலமாக உருவகித்தும் திருவைந்தெழுத்தை உச்சரித்துவரலாம் என்றும் ஒரு விதிமுறை கூறப்பட்டது. இவையெல்லாம் பாவனாருச்சனை என்றே ஆசிரியர் கருதினார். இந்த அகப் பூசையே இறைவனை உணரப்போதுமானது என்பதும் ஆசிரியர் நம்பிக்கை. இவ்வாறு திருவடி ஞானம் பெற்றுத் திருவைந்தெழுத்தால் ஆன்ம சுத்தியும் பண்ணிக்கொண்டு நின்ற ஆன்மா மேலும் சில சாதகங்களைச்செய்து கொள்ள வேண்டியிருந்தது. அவை பத்தாம் சூத்திரத்தால் அறிவுறுத்தப்பட்டன.

பாசங்களை முற்றத்தேய்த்துக்கொள்ள ஆன்மா மேலும் ஒருபடி முன்னே செல்லும். முதல்வனது சருவ வியாபக நிலையினை எண்ணிப்பார்க்கும். அவனே தான் ஆகிய உண்மை ஆன்மாவுக்கு அப்பொழுது விளங்கும். தானும் அவனோடு ஏகனாகி இறைபணி நிற்கும். எண்ணும்போது தான் அவன் எனப்பிரித்து எண்ணினால் வினை செய்யும் போதும் தானே செய்ததாக எண்ண வேண்டி வருமல்லவா? அதனால்அவனே தான் என எண்ணும். தான் ஒழிந்து ஒழுகக்கற்றுக்கொள்ளும். இந்திரியங்களும் தம்முடையனவல்ல; அவ்விந்திரியங்கள் வழியாக நிகழும் விடய நுகர்ச்சிகளும் தம்முடையனவல்ல. தாம் சிவனுடைமையாதலின் தாமும் தாமல்ல என்று இவ்வாறு எண்ணிச்செயல் புரியும். எடுத்த பிறவியில் இனி ஈட்டப்படும் வினைகள் அடுத்தொரு பிறவிக்கும் வித்தாகி விடுமல்லவா? அந்த நிலை நேரக்கூடாது. இறை பணித்த வழியில் ஆன்மா ஒழுகி வருமானால் அங்கு ஆன்மாச் செய்யும் வினைப்பயன் ஆன்மாவைச் சாராது. இறைவனையே சாரும். ஏகனாகி இறைபணி நிற்பதால் மலமாயை தனொடு வல்வினையும் இன்று என்கிறார் ஆசிரியர் இதுதான் பாசக்ஷயம் என்பது. பற்றுக்களை முற்றக்கெடுத்துக்கொள்ளல் என்பதுதான் அது.

இறைபணி நிற்பார்க்குப் பழவினையும் இல்லை. புதுவினையும் இல்லை என்கிறார் ஆசிரியர். காயத்தை வைத்தெடுத்த பாத்திரத்தில் காயம் இல்லை என்றாலும் காயத்தின் மணம் நீங்காது நிற்றல் போல ஞானிபால் முன்செய்த பழவினைப் பயன் அதுதான் தேடிக்கொடுத்த உடம்பில் ஒரோவழி மூண்டாலும் இப்பிறப்பில் செய்யும் புதுவினைமூளவேமூளாது என்கிறார். மூண்ட அப்பழவினைப் பயனையும் அவன்உடம்பு ஒருவாறு உணருமதுவேயன்றி ஞானி அதனால் ஒரு சிறிதும் தாக்குறான் என்றும் சொல்லப்பட்டது. அவன் மனம் இறை பணியில் உறைத்து நிற்குமாதலால் பழவினைப்பயன்தாக்கும் போது அவன் சிறிதும் கலங்க மாட்டான் என்கிறார். அங்கி நடுவில் நின்று தவம் புரிகின்றவர்களை அங்கி சுடாதாற் போலவும், பரிமா கடவிச்சென்று போர்க்களத்தில் உயிர் துறத்தலையே குறிக்கோளாகக்கொண்ட போர் வீரரைப் போரச்சம் தாக்காதாற்போலவும் பழவினைப்பயன் ஞானி யைத்தாக்காது என்கிறார். அவ்விருவகை வினைப்பயனும் எரிமுன் பஞ்சுத்துய்போல ஞானி முன் தீய்ந்து கெடும் ஆதலால் இறைபணி நிற்பார்க்கு வினைப்பற்று அறவே இராது என்பதுதான். இந்த வகையில் பத்தாம் சூத்திரம் பாசங்களை முற்றக்கெடுத்துச் கொள்ளும் வழியினையே உணர்த்திற்று எனலாம்.

பதினொன்றாம் சூத்திரம் பரமேசுவரனது சீபாதங்களை முத்தான்மாத் தேகாந்தத்தே அணையுமாற்றினை உணர்த்துகின்றது.

சைவசித்தாந்தப்பெருநெறி வரையறுத்துமேற்கொண்ட சத்து அசத்து சத்தசத்து என்னும் முப்பொருளியல்புகளை ஆராய்ந்து தெளிந்த வழியானே பல பிறவிகளிலும் செய்து வந்த சரியை கிரியை யோகமாகிய செய்தவங்களாலும், இரு வினை ஒப்பு உணர்வாலும், முதற்குருவின் உபதேசத்தாலும் ஞானத்தினை உணர்ந்து அந்த ஞானக் கண்கொண்டு முதல் வனைச் சிந்தையுள் தேடி உணர்ந்து பாசம் களைந்து, அந்த அனுபவம் மாறாதிருத்தற்பொருட்டுத் திருவைந்தெழுத்தை விதிப்படிக்கணித்து ஆன்ம சுத்தியும் செய்து கொண்டு பின் அவனேதான் ஆகிய நெறியால் தானும் அவனோடுஏகனாகி இறைபணி நின்று மாயாமல கன்மங்களை முற்றவும் தேய்த்

துக்கொண்ட முத்தான்மாவுக்கு இனித்தேகாந்தத்தே பரமேசுவரனது சீபாதங்களைப் பேரன்போடு இடையறாது மனமுருகி நினைந்து அணையும் வழி யொன்றைத்தவிர வேறு வழியின்றாகலால் முறையாக அதனையே உணர்த்துகின்றது இந்தப்பதினொன்றாம் சூத்திரம் என்பது.

பொருள்களைக் காண்கின்ற கண்ணுக்குப் பொருள்களைக் காட்டித் தானும் உடனிருந்து காண்கின்றது ஆன்மா. அதைப்போல விடயங்களை அறிகின்ற முத்தான்மாவுக்கு விடயங்களை அறிவித்துத்தானும் உடனிருந்து அறிகின்றான் இதுபொழுது முதல்வன் ஆதலாலே முதல்வனது இந்தப் பேரருட்டிறத்தினை எண்ணி எண்ணி அன்பால் மனமுருகி இடையறாது நினைந்து வந்து தேகாந்தத்தே உடம்பாகிய மாயாமலமும் கழன்ற நிலையில் முதல்வனது சீபாதங்களை நிரந்தரமாய் அணைந்து வீடு பெற்று உய்யும் என்பது சூத்திரத்தின் திரண்ட பொருளாகும்.

இது இரண்டு அதிகரணங்களை உடையது. இந்த முத்திக்காலத்தில் உள்ள ஆன்மாக்கள்முதல்வனைத்தவிர்ந்து எந்த ஒரு விடயத்தையும் நினையாவாகலின் இங்கு அவை நுகரும் விடயங்களை முதல்வனும் நுகர்கின்றான் என்பது தான் முதலதிகரணம்.

இங்கு விடயம் என்பது மூவகையால் வருவது. அவை ஞானேந்திரியங்களின் தொழிற்பாட்டால் வரும் இச்சை, கன்மேந்திரியங்களின் தொழிற்பாட்டால் வரும் செயல், அந்தக்கரணங்களின் தொழிற்பாட்டால் வரும் அறிவு என்பன. முத்தான்மாவின் இச்சை கிரியை ஞானமாகிய மூவகைத் திறன்களால் வரும் அனுபவங்களே இங்கு விடயங்களாகும். முத்தான்மாவுக்கு இதுபொழுது ஞானேந்திரிய கன்மேந்திரிய அந்தக்கரணங்கள் எல்லாமே பசு கரணங்களாய் இயங்குதலின்றிப் பதிகரணங்களாய் இயங்குவன. பெத்தநிலையில் உள்ள ஆன்மாவின் அனுபவம் நான் சுவைத்தேன், நான் செய்தேன், நான் அறிந்தேன். என்று இட்படியாக வருவன. முத்தி நிலையில் உள்ள ஆன்மாவின் அனுபவம் அவ்வாறு அன்று. எந்த ஒரு விடயத்தையும்அதுமுதல்வனைத்தவிர்ந்து அனுபவியாது. அவனே தான் ஆகிய நெறியால் தானும்

அவனோடு ஏகனாகி இறைபணி நின்ற காரணத்தால் நான் என்ற சொல்லுக்கு அங்கு இடமே இல்லை. அவன் சுவைக்கின்றான், அவன் செய்கின்றான், அவன் அறிகின்றான் என்று இப்படி வரும் அனுபவந்தான் முத்தான்மாவின் அனுபவமாகும். இதனால் இங்குச் சிவஞானி உலகவாழ்வில் தாமரை இலைத்தண்ணீர் போல ஒட்டாதே நிற்பன். அதனால்தான், ''எத்தொழிலைச்செய்தாலும் ஏதவத்தை பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே'' எனவும், 'ஏடு தரும் மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும் இறைஞானம்-கூடுமவர் கூடரிய வீடும் கூடிக் குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர்''. எனவும் அன்னாரது சிவானுபவங்களை அடையாளம் காட்டிச்சென்றனர் பெரியோர்கள். இவ்வாறு முத்தான்மாக்கள் முதல்வனிடத்தில் ஒளிக்காத சிந்தை உடையவர்கள் ஆனதாலே ''ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்று ஆசிரியர் மேற்கொண்டார்.

இரண்டாம் அதிகரணம் முதல்வனது பேரருட்டிறத்தினை எண்ணிப் பத்திமையோடு அவனை மறவாது எந்நேரமும் ஏத்திக்கொண்டிருத்தலாலே தேகாந்தத்தே அவனது சீபாதங்களை அணைந்து வீடு பெற்றுய்வார்கள் சிவஞானிகள் என்கின்றது. குருடர்க்கு ஞாயிறு எதிரே தோன்றினாலும்அது இருளாகவே தோற்றமளிப்பது. அது போலப்பாசத்தார் கண்ணுக்கு ஈசன் இருளாகவே தோற்றமளிப்பன். ஆனால் நேசத்தாரை ஈசன் புறக்கணிக்கமாட்டான். பகலவன் தாமரை மலர்களை மலர்த்தியும் குவித்தும் வந்து முடிவில் ஒரு நாள் அவற்றை உலர்த்துவதைப்போல முதல்வன்நேசத்தருடைய பாசத்தை உலர்த்துவன். பாசம் நீங்கவே நேசத்தர் அவனை எளிதில் அணைவர்.

மதி இருளை ஓட்டினாற்போல சீவன் முத்தர்களது அன்பில் நிலைகொண்ட முதல்வனும் அவர்களது மலவிருளை அகற்றுவான். அது அவனது சங்கற்ப வினையால் நிகழ்வது. அதனால் அவனுக்குச் சலனமோ விகாரமோ உண்டாவதில்லை. மலங்கெட்ட முத்தான்மாக்கள் முதல்வனோடு பிரிவின்றியே கலந்திருப்பர்.

மேன் மேலும் வந்து குவிந்த முகிற்படலத்தால் மறைப் புண்டிருந்த ஞாயிறு அம்மறைப்பு நீங்கியவழி உலகெங்கும் தன்னொளியே தோற்றினாற்போல அநாதி தொட்டுக் கணக்கிலவாகிய உடம்புகளால் மறைக்கப்பட்டு உலகை உண்டு கொண்டிருந்த அந்த முத்தான்மாவும் இப்பொழுது தனக்கு இறுதியாகக் கிடைத்திருந்த உடம்பினையும் உதறி எறிந்து பரமேசுவரனது சீபாதங்களை நிரந்தரமாய் அணைந்து வீடு பெற்று உய்திபெறும் என்று பதினொன்றாம் சூத்திரத்தை முடிக்கின்றார் ஆசிரியர்.

வீட்டியல் ஞானமாகிய சிவஞானத்தைப் போதிக்கத் தொடங்கிய ஆசிரியர் மெய்கண்டார் அதற்கு அடிப்படையாக உணர்த்த வேண்டுவனவற்றைப் பிறப்பியற்கண்ணும் பொது வியற்கண்ணும் உணர்த்திச் சிவஞானத்தினை உணரும் முறைமையினை வீட்டியலில், எட்டாம் சூத்திரம் தொடங்கி உணர்த்திக்கொண்டு வந்தவர் பதினொன்றாம் சூத்திரத்தில் முத்தான்மாத்தேகாந்தத்தேவீடு பெற்று உய்யும் நெறியினை இனிதாக முடித்து விட்டார். சிவஞானபோதம் இங்கு இனிது முடிந்ததாயினும் சிவஞானி எடுத்த தேகம் இன்னும் நின்ற தாகலின் அது தேய்ந்து அழியுங்காறும் அச்சிவஞானி கடைப் பிடிக்க வேண்டிய நெறி இன்னதென்பதை இனிவரும் பன்னிரண்டாம் சூத்திரத்தால் உணர்த்தி நூலை இனிது முடிப்பார் என்றே நாம் இங்கு உணரவேண்டும்.

பன்னிரண்டாம் சூத்திரம் அசிந்திதனாக நின்றபதியைச் சிந்திதனாகக்கண்டு வழிபடுமாற்றினை உணர்த்துகிறது.

சான்றவர் ஆய்ந்திடத்தக்கவாம்பொருள் மூன்றினையும் ஆய்ந்து தெளிந்த வழியாலே முன்செய் தவத்தாலும் இரு வினை ஒப்பு உணர்வாலும் முதற்குருவின் உபதேசத்தாலும் சிவஞானத்தினை முதற்கண் உணர்ந்து, அந்த ஞானக்கண் கொண்டு முதல்வனைச் சிந்தையுள்ளே தேடிக்கண்டு பாசங் களைந்து, அந்த அனுபவம் மாறாதிருக்கத் திருவைந் தெழுத்தை விதிப்படிக்கணித்து ஆன்மசுத்தியும் செய்து கொண்டு, அவனே தானாகிய நெறியால்தானும் அவனோடு ஏகனாகி இறைபணி நின்று பாசங்களை முற்றக்கெடுத்துக்

கொண்டு, தமக்குக் காட்டாயிருந்து தம் இச்சை செயல் அறிவுகள் அனைத்தையும் உடனிருந்துகண்டுகொண்டிருந்த முதல்வனது சீபாதங்களை இடையறாப் பேரன்பால் மன்முருகி நினைந்து வழிபட்டு அவனை எந்நேரமும் அணைந்தே நின்ற சீவன் முத்தராயினோர் இனித்தாம் எடுத்த உடம்பு அழியுங்காறும் தாம் பெற்றிருந்த சிவானுபவம் மாறாதிருத்தற்பொருட்டும் உலகியலில் நின்றாரும் தம்து அடிச்சுவட்டைப்பின் தொடர்ந்து வந்து உய்தி பெறற் பொருட்டும் உலகியற்கண் தாழ்வந்து தாம் இதுகாறும் உணர்ந்து வந்த சிந்தைக்கெட்டாச் சிவபரம்பொருளை இனிச்சிந்தைக்கெட்டும் திருவுருவில் வைத்து வழிபடு மாற்றினை உணர்த்துகின்றது இப்பன்னிரண்டாம் சூத்திரம் என்பது.

சீவன் முத்தனாவான் தான் எடுத்த உடம்பு அழியுங் காறும் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய ஒழுகலாறுகளை ஆசிரியர் இந்தச் சூத்திரத்தால் உணர்த்துகின்றார். அவை உலகியல் நீங்கினார்க்கேயன்றி உலகியலில் நின்றார்க்கும் உரிய கட்டப்பாடுகளாம் என்று உணர்தல் வேண்டும்.

ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலக்குற்றங்கள் ஞானநெறிக்கு இடையூறு விளைப்பன. அஞ்ஞானத்தையே உணர்த்துவனவாகலான் அவற்றைச் சீவன் முத்தனாவான் குறிக்கொண்டு அன்றாடம் ஞான நீறினால் கழுவிக் களைய வேண்டும் என்பது முதல் ஒழுகலாறு.

முதல்வனைப் பற்றிய சிந்தனையிலும் வழிபாட்டிலும் பொழுதைக்கழிப்பின் வினையும் குறையும், மாயையும் அகலும், ஆணவத்தின் சேட்டையும் அடங்கும்.

இனிச் சிவப்பத்தரல்லாரோடு இணக்கம் கொள்ளின் அவர் அஞ்ஞானத்தை உணர்த்துவராகலான் எந்நேரமும் சிவபத்தர்களோடு இணக்கம் கொள்ள வேண்டும் என்பது இரண்டாவது ஒழுகலாறு.

இனிப்பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனவே காண வேண்டும் என்பது மூன்றாவது ஒழுக

லாறு, இந்த இரண்டு இடங்களில் மட்டுமே அவன் பிரகாசனாய் நிற்பன். அல்லாத விடங்களில் அப்பிரகாசனாய் நிற்பன் ஆதலாலே அவ்விரண்டுஇடங்களையுமே வழிபாட்டுக்குரிய இடங்களாக மதிக்க வேண்டும் என்பதாம். காட்டு விறகில் காணாத தீயினைக் கடைந்த விறகில் எளிதாகக் காண முடியுமாதலால் முதல்வனைப் பிரகாசனாய்க் காண்டற்கு அவ்விரண்டு இடங்களையுமே நேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும் என்றார் ஆசிரியர்.

சிவபத்தர்கள் தன்னையே உணரவேண்டி அவர்க்குத் தனது உருவையே கொடுத்தான் முதல்வன். தன்னைத் தவிர வேறு ஒன்றையும் நினையாதிருக்க வேண்டி அவர் உள்ளத்திலும் தங்கியிருந்தான் முதல்வன் ஆதலால்சிவபத்தரிடத்துத் தயிரில் நெய்போல அவன் விளங்கித்தோன்றுவன்.

விறகுத் தீயானது கடையுங்கால் வேறாய் வெளிப்பட்டும் கடையாக்கால் உடனாய் மறைந்தும் நின்றாற்போலச்சிவாலயத்தே விளங்கும் சிவலிங்கத்திருமேனியில் முதல்வன் வேறாயும் உடனாயும் விளங்குவன். வழிபடுவோர் தாமறிந்ததொரு மந்திரத்தால் அருச்சித்து வழிபடுங்காலை அதனின் வேறாய் வெளிப்பட்டுத்தோன்றி அருள் புரிவன். ஆதலால் சீவன் முத்தராயினார்க்கு அங்கு அவனைக்காண்டல்எளிதாம் என்று விளக்கம் தரப்பட்டது.

இனி இவ்விரண்டு இடங்களையும் சீவன் முத்தனாவான் வழிபட்டுவரல் வேண்டும் என்பது நான்காவது ஒழுகலாறு.

வழிபடுங்காலத்தில் அவன் ஆண்டானும் இவன் அடிமையுமாய் நின்று அன்போடுவழிபடவேண்டும் என்றுவலியுறுத்தினார். வழிபாட்டால் வினையும் ஒழியும். ஞானமும்விளையும். சிவபோகமும் தழைக்கும் ஆதலின் வழிபாடே சிறந்தது என்றும் விளக்கினார். தன்னை அறிவித்துத்தான் தானாச் செய்தானைப் பின்னை மறந்து வழிபடாதொழிதல் நன்றி கொன்ற பாவமாம் ஆகலானும், அப்பாவம் தொலையப் பின்னும் பல பிறப்பு எடுக்க வேண்டிவரும் ஆகலானும், அவனை அவ்விடங்களில் வழிபட்டு வருதலே வலியுடைத்தாம் என்றும் விளக்கப்பட்டது.

நூலைத் தொடங்குங்கால்,

கல்லால் நிழன்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே

என்னும் காப்புச்செய்யுளை நூலுக்கு முதலாகக்கொண்டு நூலைத் தொடங்கிய ஆசிரியர் மெய்கண்டார்சிவபத்தரையும் சிவாலயத்தையும் தொழுது வருதலே சீவன் முத்தராயி னார்க்கு வலியுடைத்தாம் என்று கூறி நூலை இனிதே முடித் தார். முடித்தவர் இந்த நூலினைக் கேட்டற்குரியார் இன்னார் என்று கூற வந்து சகலர் ஆயினார் ஞானாசிரிய னால் கேட்டுத் தெளிவு பெறட்டும் என்றும் ஆணையிட்டார்.

15D, 3/1 வள்ளலார் தெரு, பேராசிரியன்,
நரசிம்ம நகர். திருவோத்தூர் வையாபுரி முருகேசன்,
திருவத்திபுரம்-604 407.
செய்யாறு தாலுக்கா. தி. ச. மா.

### நூலாசிரியர்

# மெய்கண்டார் வரலாறு

சிவஞான போத நூலாசிரியர் மெய்கண்டார் பிறப்பு வரலாறு குறித்து இரண்டு வகையான கருத்துக்கள் நிலவு கின்றன. ஒன்று, சிவஞான போத நூலுக்குப் பாண்டிப் பெருமாள் செய்த விருத்தியுரை நூற்பதிப்பில் கண்டது. இது காலத்தால் முந்தியதாக இருக்கலாம். மற்றொன்று, சிவஞான முனிவர் செய்த சிவஞானபாடியம் நூற்பதிப்பில் காணப்பட்டது. இது காலத்தாற் பிந்தியதாக இருக்கலாம். இவ்விரண்டனுள் உண்மை எதுவென்று துணிய முடிய வில்லை.

திருப்பெண்ணாகடத்துச் சைவ வேளாளர் அச்சுதன் என்பார் தமது உள்ளம் கவர்ந்த திருவெண்காட்டுத்தலத் தில் வாழ்ந்து வந்தார். உத்தமர். ஒழுக்கமுடையவர். சிவனை மறவாத சிந்தை வாய்த்தவர். திருஞானசம்பந்தப்பிள்ளையா ரது தேவாரத்தில் திருவெண்காட்டுப்பதிகத்தில் இரண்டா வது பாசுரமாகிய

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளம்நினை
வாயினவே வரம் பெறுவர் ஐயுறவேண்டாவென்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையாரவர் தம்மைத் தோயாவாந் தீவினையே

என்ற தேவாரப்பாடலில் நம்பிக்கையுடையராய்த் தமக்குப் பிள்ளைப்பேறில்லாத குறையினைத்திருவெண்காட்டீசரிடமே முறையிட்டுத்திருமுக் குளத்தில் நாள்தோறும் நீராடித் தவங் கிடந்தார். அவரது உண்மைத் தவத்திற்குப் பெருமான் திருவுளமிரங்கி, அவர் திருஞானசம்பந்தர்பால்கொண்டிருந்த நம்பிக்கை வீண் போகாவாறு ஒருநாள் குளக்கரையின் ஒரு பால் ஒரு தெய்விக குழந்தையைத் தோற்றுவித்து அதனை அவர் காணக்காட்டி அம்மகவை உன்மகவாக எடுத்து வளர்த்து வருவாய் என்று அசரீரியாகத்திருவாய் மலர்ந் தருளினார். இறைவன் திருவருளை வியந்துவிம்மிதமெய்திய அன்பரும் அன்போடு சென்று குழந்தையைத் தழுவியெடுத்து

மார்போடணைத்துச்சென்று மனைவி கையிற் கொடுத்துத் திருவெண்காட்டீசர் திருப்பெயராகிய சுவேதவனன் என்றே பிள்ளைக்குப்பெயர்சூட்டி அன்புடன் வளர்த்து வரலானார். இதைக்கண்ட ஊர்மக்கள் ''பழுதுடையாள் எவளோ ஒருத்தி பெற்றுக் குளக்கரையில் விட்டுப்போன குழந்தையைப் பிள்ளைப்பித்துடைய இவ்வேளாளர் வளர்த்து வருகிறார்'' என்று அலர் தூற்றினர். தெய்வானுக்கிரகத்தையே நிந்தை செய்யும் ஊரவரின் அலருக்கஞ்சி மனம் மிக வருந்திச் செய்வதறியாதிருக்கும் நாளில் திருவெண்ணெய்நல்லூரில் வாழ்ந்து வந்த தம் மனைவியின் சகோதரர் காங்கேய பூபதி என்பார் தமதில்லத்திற்கு வந்தார். வந்தவரிடம் அச்சுதன் என்பார் தமது வருத்தத்தைச் சொல்லிப் பரிகாரம் கேட்டார். அவரும் அதற்குப் பரிகாரமாக அக்குழந்தையைத் தாமே எடுத்துச் சென்று வளர்ப்பதாகக் கூறி விடைபெற்றுத்திருவெண்ணெய் நல்லூர்க்குக் குழந்தையுடன் வந்து அன்போடு குழந்தையை வளர்த்து வரலானார். இது மெய்கண்டாரின் வரலாற்று முன்பகுதி. முதலில் அச்சான பதிப்பில் இவ்வாறு உள்ளது.

பின்னர் வெளிவந்த சிவஞான பாடியம் நூற்பதிப்பில் இவ்வரலாறு வேறு வகையாக இருந்தது.

திருப்பெண்ணாகடத்து அச்சுத களப்பாளர் என்பார் தம் குல குருவாகிய சகலாகமபண்டிதர் திருத்துறையூர் அருணந்தி சிவாசாரியாரிடம் தமக்குப் பிள்ளைப்பேறில்லாக் குறையினைச் சொல்லி வருந்த, அது கேட்ட சிவாசாரியார் திருஞானசம்பந்தரது தேவாரச் சுவடியில் கயிறு சாத்தி இறைவன் திருக்குறிப்பை அறிய முற்பட்டபோது திருவெண்காட்டுத்திருப்பதிகத்தின் இரண்டாம் பாடல் உதயமாக, இறைவனது திருக்குறிப்பை உணர்ந்த அருணந்தி சிவாசாரியார் தம் சீடராகிய அச்சுதன் என்பாரைத் திருவெண்காட்டிற்குச் சென்று திருமுக்குளத்தில் நாளும் நீராடித்திருவெண்காட்டீசனைக் குறித்துத் தவம் புரியத் தூண்டியதாகவும், அவரும் அவ்வாறே மனைவியுடன் சென்று தவமிருக்குங்கால் திருவெண்காட்டீசர் தம் கனவிற் கூறிய வண்ணம் தம் மனைவி வயிற்றில் கருத்தரித்துக் குழந்தை பிறந்ததாகவும், அக்குழந்தைக்குத் திருவெண்காட்டீசர் நினைவாகச் சுவேத

வனன் என்றே பெயர் சூட்டி வளர்த்து வந்ததாகவும், அங்கு அப்பொழுது வந்த தம்மனைவியின் சகோதரர் திருவெண்ணெய் நல்லூர்க் காங்கேய பூபதி என்பார் அக் குழந்தையைத்தாம் வளர்த்து வருவதாகக்கேட்டு எடுத்துச் சென்று திருவெண்ணெய் நல்லூரில் வளர்த்துவந்ததாகவும், இந்தவாறாகத்திருப்பெண்ணாகடத்தில் அச்சுத களப்பாளர் மனைவி வயிற்றில் பிறந்த குழந்தை சுவேதவனன் திருவெண்ணெய் நல்லூரில் தாய்மாமன் வீட்டில் வளர்ந்து வந்ததாக மெய்கண்டாரின் வரலாற்று முற்பகுதி பின்னர் வெளிவந்த நூற்பதிப்பில் மாறுபட்டிருந்தது. முற்பகுதி இவ்வாறு இரண்டிலும் மாறுபட்டிருந்தாலும் வரலாற்றுப் பிற்பகுதி இரண்டிலும் பெரும்பாலும் ஒத்தே இருந்தது.

மெய்கண்டாரின் வரலாற்றுப்பிற்பகுதியில் திருக்கைலாயத்திருந்த பரஞ்சோதி மாமுனிவர் தமிழ் மண்ணிற்கு வருகையும், வடமொழிச் சிவஞான போதம்ஏட்டுச்சுவடியைத் திருவெண்ணெய் நல்லூரில் குழந்தை மெய்கண்டாரிடம் தருகையும், மெய்கண்டார் அதனைத் தமிழில் மொழி பெயர்ப்பு நூலாகச் செய்கையுமான மூன்று பிரதான செய்தி களே இடம் பெற்றிருந்தன. திருக்கைலாய ஞான பரம்பரை தமிழ் மண்ணில் மெய்கண்ட சந்தான ஞானபரம்பரையாக விளங்க வேண்டும் என்ற ஒரு அடிப்படையில் பரஞ்சோதி முனிவர் வழியாக வடமொழிச் சிவஞான போதநூல் திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்டார் கைக்கு வந்ததாக வும், அந்த அவர் அப்படியே மொழி பெயர்த்துத் தமிழில் பன்னிரண்டு சூத்திரங்களாகச் செய்து, வார்த்திகப் பொழிப் புரையும் உரைத்து, திருட்டாந்த வெண்பாக்களையும் கூறி ஒரு தமிழ் மொழி பெயர்ப்பு நூலாகச்செய்து விட்டதாகவும் அவ்விரு வரலாற்றிலும் ஒரே மாதிரியாகக் கூறப்பட்டிருந் தது. இந்தக்கருத்தைப்பல ஆண்டுகளுக்கு முன்னரே திரு. கா. சுப்பிரமணியப்பிள்ளை, **M.A.M.L.,** அவர்கள், மறைத்திரு. மறைமலை அடிகளார் அவர்கள், சைவசித்தாந்த மாமன்ற முதற்செயலாளர் திரு. ம. பாலசுப்பிரமணியம் **B.A.B.L** அவர்கள் முதலானோர் மறுத்து, மெய்கண்டார் சிவஞானபோதம் தமிழ் முதல் நூலே என்றும், வடமொழியி லிருந்து மொழி பெயர்த்துச் செய்யப்பட்ட மொழி பெயர்ப்பு

நூல் அன்று என்றும் கூறி உண்மையை நிலைநாட்டி விட்டார்கள். அதுபற்றிய வாதத்திற்கு இங்கு இப்பொழுது இடமே இல்லை என்று கருதலாம். ஆகவே மெய்கண்டாரின் வரலாற்றுப் பிற்பகுதியிலும் ஒரு திரிபுவடமொழிவல்லுநரால் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று ஊகிக்க இடம் இருக்கிறது. அதனால் மெய்கண்டாரின்உண்மையானவரலாற்றை அறிய,அவர் வாய் மொழிகளைக் கொண்டே அகச்சான்றுகளைத் தேடினேன். எனக்குக்கிடைத்தஅகச் சான்றுகளின்படி மெய்கண்டாரின் முற்பிறப்போடுங்கூடிய உண்மையான வரலாறு இதுதான்.

ஆசிரியர் மெய்கண்டார் தம் முன்னைப்பலபிறவிகளிலும் செய்து வந்த சரியை கிரியை யோகம் ஆகியசெய்தவங்களால் ஒரு நல்ல குடியில் நல்ல தாய் தந்தையர்க்குத் திருமகனாகத் தோன்றியவர். குழந்தைப் பருவ முதலே யாரிடமும்பேசாமல் மௌனமாகவே வாழ்ந்து வந்தவர். திருவெண்ணெய் நல்லூரில் பொல்லாப் பிள்ளையார் திருக்கோயிலின் கண்ணே தங்கி அம்மூத்த நாயனாரைத்தம் ஞான குருவாக ஏற்றுக்கொண்டவர். அப்பெருமான் அருளால் தமிழிலக்கண இலக்கியங்களையும் வடமொழி வேதாகமங்களையும் கற்றுணர்ந்தவர். சைவ சமயக்கலைகளையும் தமிழ்மறையாகிய திருமுறைகளையும் சிறப்பாகக் கற்றுத்தெளிந்தவர். வாழ்வில் இன்பத்துன்பங்களைச் சமமாக மதித்தவர்ஆதலால் இருவினை ஒப்பு உணர்வு இயல்பிலே வாய்க்கப்பெற்றவர். நற்குடிச்சார்பாலும் இருவினை ஒப்பு உணர்வாலும் இறைவன் உள்நின்று உணர்த்தவும், குருவாய் வந்து முன்னின்று உணர்த்தவும் சிவஞானப் பேற்றினைப் பெற்றவர். அதனால் தம்மைத் தம்முடம்பு பொறிகரணங்களின் வேறாயும் தம்முள்ளிருந்த தலைவனின் வேறாயும் பிரித்து உணர்ந்தவர். தம்முள்ளிருந்த தலைவனை உணர் முறப்பட்டுத்தம் சிந்தையுள்ளே அவனைத்தேடிக்கண்டுணர்ந்தவர். அதனால் உடல் உலகப்பாச உணர்வுகள் அறவே அகல நின்றவர். தருநிழலாய்த் தோன்றிய இறையின்பத்தில் மூழ்கித் திளைத்தவர். திருவைந்தெழுத்தை இடையறாது எண்ணி ஆன்ம சுத்தி செய்து கொண்டவர். அவனே தான் ஆகியமுதல்வனது சருவ வியாபக நிலையினை உளங்கொண்டு அவனோடு

தானும் ஏகனாகி இறைபணி நின்று மும்மலங்களையும் வீறழியக்கண்டவர். சீவன் முத்தராய்த் தேகாந்த பரியந்தம் சிவானுபவத்தில் தோய்ந்து திளைத்தவர். சிந்தைக்கெட்டாச் சிவம்பரம்பொருளைச் சிந்தைக்கெட்டும் திருவுருவில் வைத்து தேகாந்த பரியந்தம் திருவேடத்தாரையும் சிவாலயத்தையும் சிவன் எனவே கண்டு வழிபட்டு வந்தவர். தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற உயர்ந்த குறிக்கோளோடும், அருள்பழுத்த உள்ளத்தோடும், தாம் பெற்று அனுபவித்த சிவானுபவங்களை எல்லாம் திரட்டிச் சிவஞானபோதம் என்ற சீரிய தமிழ் ஞான முதல் நூலாகச் செய்து உலகிற்கு உபகரித்தவர். மெய் கண்டுணர்ந்தசிவஞானயோகி ஆனதால் தமது ஊர்ப்பெயரும் இயற்பெயரும் மறையவே வாழ்ந்து வந்து, தேகாந்தத்தே சிவன் கழலை நிரந்தரமாய் அணைந்து பிறவா இன்பப்பெரும் பயன் பெற்றவர். இது அவர்தம் வாழ்க்கை வரலாறாகக்கொண்டு மனம் நிறைவு பெறுவோமாக. இவையெல்லாம் அவரது வாய்மொழியாகிய அகச்சான்றுகளைக் கொண்டே அறிந்தவை.

இருடிகள் மூலமும் நதிகள் மூலமும் அறிய முடியாவென்பர் ஆன்றோர். ஆம், அது உண்மையே. தொல்காப்பியர் மூலத்தைநாம் அறிந்தோமா? இல்லையே! வள்ளுவர் மூலத்தை நாம்அறிந்தோமா? இல்லையே! அவைபோன்றதேமெய்கண்டார் மூலமும். என்றாலும் அவர்கள் உரைத்துச்சென்ற நூல்களே அவர்களை முழுமையாக அறிந்துகொள்ளப்போதுமானவை அல்லவா.

வாழ்க மெய்கண்டார்.
வெல்க அவர் சித்தாந்தம்.
விளங்குக அவர் சந்தானம்.

15D 3/1 வள்ளலார் தெரு,
நரசிம்ம நகர்,
திருவத்திபுரம்-604 407.

திருவோத்தூர் வையாபுரி முருகேசன்,

## உரையாசிரியர்
## பேராசிரியர் திரு. வை. முருகேசனார்
# வாழ்க்கை வரலாறு

திருஞான சம்பந்தப் பிள்ளையாரால் ஆண்பனை பெண் பனையாகிப் பூத்துக்காய்த்த அற்புதம் நிகழப்பெற்றதான திருவோத்தூர் என்னும் திருப்பதியில் செங்குந்தர் மரபில் வையாபுரிக்கும் மீனாட்சி அம்மைக்கும் ஏழாவது மகனாகத் தோன்றியவரே நம் உரையாசிரியர். பெற்றோர்களால் அவர்க்கிட்ட பிள்ளைத்திருநாமம் முருகேசன் என்பது. அவரோடு உடன் பிறந்த ஆண்மக்கள் மூவர். பெண்மக்கள் மூவர். இளமையில் அவர்தம் சிறிய தந்தையார் திரு. சுப்பிரமணிய முதலியார் அவர்களிடம் நம் உரையாசிரியர் எழுத்தறிவு பெற்றார். ஔவையாரது ஆத்தி சூடி நூலை மனனம் செய்து நாள்தோறும் ஒப்புவிக்க வேண்டுமாம். ''செய்வன திருந்தச்செய்''. ''சேரிடம் அறிந்து சேர்'' என்ற இந்த இரண்டு வரிகள் மட்டும் ஒப்புவிக்கும்போது முதல் நாள் தடைப்பட்டனவாம். அதற்காக ஆசிரியரிடம் நன்றாக அடி பட்டதுண்டு என்று அவர் சொல்வார். அதனால் அவர் வாங்கிய அடியும் மறந்ததில்லை; தடைப்பட்ட அந்த இரண்டு அடிகளும் வாழ்க்கையில் மறந்ததில்லை என்பார் அவர். பனையோலையில் எழுதும் பழக்கம் அந்த நாளில் இருந்ததுண்டாம்.

சாத்தானியார் திண்ணைப்பள்ளி ஒன்று அந்த ஊரில் இருந்தது. அதில் சில ஆண்டுகள் பயின்று திருவத்திபுரம் உயர்நிலைப்பள்ளியில் சேர்ந்தார். நான்காம் வகுப்பிலும் ஐந்தாம் வகுப்பிலும் படித்து முதன்மையாகத் தேர்ச்சிபெற்று முதற்படிவத்துக்கு மாற்றலானார். அவ்வகுப்பில்ஒருதிங்களே பயின்று பள்ளிக்கட்டணம் கட்ட முடியாமல் பள்ளியைவிட்டு விலக நேர்ந்தது. நம் உரையாசிரியரின் பள்ளி வாழ்க்கை அவருடைய பன்னிரண்டாம் வயதோடு நிறைவு பெற்றதாம்.

குலத் தொழிலாகிய நெசவுத் தொழிலில் ஈடுபட்டுப் பெற்றோர்க்கும் குடும்பத்திற்கும் உதவி வந்தார். வயது பத்தொன்பதில் தமிழ் கற்க வேண்டும் என்ற ஆவல்

எப்படியோ அவர் உள்ளத்தில் எழுந்தது. மாமண்டூரார் திரு. அண்ணாசாமி முதலியார் என்பவர் ஊரில் ஒரு சிறந்த தமிழறிஞர். அவர் அவ்வூரில் பானுகவி சுவாமிகளிடம் மாணாக்கராயிருந்து சிறந்த தமிழிலக்கியங்களைக் கற்றுப் புலமை நிரம்பப் பெற்றிருந்தவர். தெளிவாக மாணவர்உளங் கொள்ளப் பாடம் சொல்வார். நல்லொழுக்கம் உடையவர். யாரிடத்தும் இனிமையாகப் பேசுவார். கடுஞ்சொல் அவர் வாயிலிருந்து வராது. திருக்குறள் படிப்பார். படித்த வழியில் ஒழுகுவார். அவர் குடும்பம் ஊரில் ஒரு சிறந்த செல்வர் குடும்பமாக இருந்தது. பணம் சேர்ப்பதில் கருத்துடையவர். பட்டு மளிகை, கொடுக்கல் வாங்கல், நிலபுலங்கள் இத்தனை யும் இருந்தன. கணக்கு அவரே எழுதுவார். கணக்கில் ஒரு தம்பிடியும் பிசகாது. அடித்தல் திருத்தல் இருக்காது. எழுத்துக்கள் முத்து முத்தாக இருக்கும். பனையோலையிலும் எழுத்தாணி கொண்டு எழுதுவார். அந்த எழுத்துக்களும் கண்ணில் ஒற்றிக்கொள்ளலாம் போல இருக்குமாம். அந்தப் பெரியாரிடம் சென்று நம் உரையாசிரியர் தமது தமிழ்கற்கும் ஆவலை வெளிப்படுத்தினார். அவரும் உடனே ஒப்புதல் அளித்துத்தினமும் மாலையில் வந்து கற்றுப்போகும்படி சொன்னார். பகலில் நெசவுத் தொழிலைக் குறைவில்லாமல் செய்து விட்டுத்தினமும் மாலையில் சென்று ஆசிரியரிடம் தமிழ் பயின்று வருவார். சிவபிரகாசரின் சோண சைலமாலை யும் அதிவீரராமபாண்டியரின் திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதியும் அவரிடம் பாடம் கேட்ட முழுமையான நூல்க ளாம். இரவில் மேனிலை மாணாக்கர் சிலருக்கு நைடதம் அட்டப் பிரபந்தம் முதலான நூல்களும் பாடம் நடக்கும். அவர்களோடும் சேர்ந்து கொண்டு நம் உரையாசிரியர் பாடம் கேட்பதுண்டு. சிற்றிலக்கியங்களில் ஏதாவது ஒரு தமிழ்ப்பாடலை யெடுத்துப்பதம் பிரித்துப் பொருள் காணும் திறன் நம் உரையாசிரியருக்கு அப்போதுவாய்த்திருந்ததாம். நன்னூல் முதலான இலக்கண பாடங்களையும் கேட்க வேண்டும் என்ற எண்ணம் உண்டானதால் அப்பொழுது உயர்நிலைப்பள்ளியில் பணிபுரிந்து வந்த திரு. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்களிடம் சென்று படிக்கத் தொடங்கினார். அவரது பிரபாவம் தமிழுலகும் சைவஉலகும்

நன்கு அறிந்ததே. மாணவரின் தமிழ் ஆர்வத்தைக் கண்ட பிள்ளை அவர்கள் சென்னைப் பல்கலைக்கழகம் நடத்தும் புகுமுக வகுப்புக்குரிய பாடநூல்களைத் தருவித்துக் கொடுத்துப்படிக்கத்தூண்டினார். அதே ஆண்டில் அவற்றைப் படித்துத் தேர்வு எழுதி வெற்றியும் பெற்றார் நம் உரையாசிரியர் அதற்குப்பிறகு நம் உரையாசிரியர் வாழ்வில் ஒரு திருப்பு முனை ஏற்பட்டதென்றே சொல்லலாம்.

ஆசிரியர் திரு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை அவர்களிடம் பரிந்துரைக் கடிதங்கள் பெற்றுத் தஞ்சை கரந்தைக் கல்லூரிப்புரவலர், தமிழவேள் திரு.த.வே. உமாமகேசுவரன் பிள்ளை, அவர்களது உதவியால் திருவையாற்று அரசர் கல்லூரியில் தங்கிப் படிக்க இலவச உணவு விடுதியும் பெற்று நான்காண்டுகள் படித்துத் தேர்வில் கல்லூரி முதல் மாணவராகத் தேர்ச்சிபெற்று வித்துவான் பட்டத்தோடு வீடு திரும்பினார் நம்உரையாசிரியர். அதுஆயிரத்துத்தொள்ளாயிரத்து முப்பத்தொன்பதாம் ஆண்டு. அந்தக்கல்லூரிஇறுதியாண்டில் அங்குத் தேர்வு எழுத வந்த கடலூர் வண்டிப்பாளையம் வித்துவான் திரு. R. பழனியாண்டி முதலியார் அவர்களின் பழக்கமும் நட்பும் கிடைத்தன. அவர்கள் மூலமாகத் திருப்பாதிரிப் புலியூரில் ஸ்ரீ. ல. ஸ்ரீ. ஞானியார் சுவாமிகளைத் தரிசிக்கும் பேறும், மார்கழித்திங்களானதால் சுவாமிகள் முறையாகப் போதித்து வந்த திருவெம்பாவைப்பாடத்தில் "பாலறியா நான்முகனும் காணாமலை" எனத்தொடங்கும் திருப்பாடலுக்கு உரை விசேடங்களைச் சுவாமிகளின் வாய் மொழியாக அவர்களின் திருமுன் மாணாக்கனாயிருந்து கேட்கும் நல்லதொரு வாய்ப்பும் நம் உரையாசிரியருக்குக் கிடைத்தன. படிப்பை முடித்து வீட்டிற்கு வந்த சில்திங்களில் திருமணமும் நடந்தேறியது. வாழ்க்கைத் துணைவியாராக வாய்த்தவர் ஒரு நல்ல குடும்பத்துப்பெண். எனக்குத்தமக்கையார். அரசமணி என்பது அவர் பெயர். ஆசிரியர் பயிற்சி பெறத்தொடர்ந்து அதேஆண்டில்அண்ணாமலைப்பல்கலைக் கழகத்திற்குச் சென்றார். அதையும் முடித்துக்கொண்டு 1941-ல் வெளி வந்தார். அந்த ஆண்டில்தான் அங்கு அதே பயிற்சிபெற வந்த திரு. சி. அருணை வடிவேலு முதலியார், அவர்களின் பழக்கமும் நட்பும் கிடைத்தன. பயிற்சிப்படிப்பு

முடிந்ததும் குடும்பச் சுமை. பள்ளிகளில் வேலைதேடும் பணி. சென்னையில் இரண்டு பள்ளிகளில் இரண்டு ஆண்டு காலம் சென்றது. அப்பொழுது நம் உரையாசிரியருக்குத் திரு. வி. க. பழக்கமானார். திரு. அ. சு. ஞானசம்பந்தம் நண்பரானார். அதற்குப்பிறகு வடாற்காடு மாவட்டம் வேலூரில் ஊரிஸ் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியர் பணி தொடங்கிற்று. அங்குச் சில ஆண்டுகள்கழிந்தன. காஞ்சிபுரம் திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் அழைப்பின் பேரில் மாயவரம் மெய்கண்டார் சைவசித்தாந்தக்கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியை மேற்கொண்டார். அப்பொழுது திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் கல்லூரி முதல்வராக இருந்ததால் அவர்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு நம் உரையாசிரியருக்குக் கிட்டியது. விலைமதிக்க முடியாத அவர்கள் நட்பினால் சைவசித்தாந்தத்தில் நாட்டம் உண்டாயிற்றாம். 1946-47 ஆம் ஆண்டுகளிலிருந்து சைவ சித்தாந்த நூல்களை ஓரளவு படித்துக்கொண்டே வந்தார். ஆசிரியர் மனத்தைப் பெரிதும் கவர்ந்த சித்தாந்த நூல் மெய் கண்டாரின் சிவஞானபோதம் ஒன்றே என்று அவர் அடிக்கடி சொல்லுவார். மாயவரம் கல்லூரி தொடங்கி இரண்டே ஆண்டுகளில் மூடப்பட்டதும் அங்கிருந்து ஊருக்குத்திரும்பி வரும்போது மயிலம் சந்நிதானம் ஸ்ரீ. ல. ஸ்ரீ. சிவஞான பாலய சுவாமிகளைத்தரிசிக்கும் நற்பேறுகிட்டியதாம். சுவாமி களின் அருளாசியால் அவர்களால் நிறுவப்பட்ட மயிலம் தமிழ்க்கல்லூரியில் சில ஆண்டுகள் பணிபுரியும் நல்லதொரு வாய்ப்பும் கிடைத்தது. அதற்குப்பிறகு காஞ்சிபுரம் முனிசிபல் நடுநிலைப்பள்ளியில் இரண்டாண்டுகள் கழிந்தன. அப்பொழுதுதான். S. S. L. C. தேர்வுக்கான பாடநூல்களை எந்த ஒரு ஆசிரியரின் உதவியுமின்றித்தாமேபடித்துத்தேர்வு எழுதி வெற்றியும் அடைந்தார் நம் உரையாசிரியர். தொடர்ந்து இண்டர் மீடியட் வகுப்புத் தேர்விலும் வெற்றிபெற்றுள்ளார். இந்த வெற்றிகள் அவரை முதல் கிரேடு தமிழாசிரியராக உயர்த்தின. வடாற்காடு மாவட்டத்தில் உள்ள அரசு உயர் நிலைப்பள்ளிகளில் பணி மேற்கொண்டு இறுதியில் சொந்த ஊரான திருவத்திபுரத்தில் 1971-ல் ஓய்வு பெற்றார். ஓய்வு பெற்ற பிறகும் மயிலம் தமிழ்க்கல்லூரியில் இரண்டாண்டுகள்

பணிபுரிந்து 1973-ல் தமது அறுபதாம் வயதில் முழு ஓய்வும் பெற்று விட்டார்.

நம் உரையாசிரியர் 1940-ல் குடும்பச் சுமையினை ஏற்றார். 1951-க்குள் அவர் குடும்பம் பெருத்து விட்டது. மக்கள் அறுவரைப் பெற்றார். ஆண்மக்கள் நால்வர். பெண்மக்கள் இருவர். அவர்கள் அனைவரையும் படிக்க வைத்து ஆளாக்க வேண்டிய பெருஞ்சுமையினை ஏற்றார். உள்ளூர்களில் அப்பொழுது கல்லூரிகள் இல்லை. சென்னையில் மட்டுமே இருந்தன. பிள்ளைகளைச் சென்னைக்கு அனுப்பிக் கல்லூரிகளில் படிக்க வைத்தார். பள்ளியில் கிடைத்த ஊதியத்தைக் கொண்டே இத்தனையும் செய்ய வேண்டியிருந்தது. பிள்ளைகள் அறிவுள்ளவர்கள் ஆனதால் தந்தைக்குப் பாரமாக இருக்கவில்லை. ஒவ்வொருவகுப்பிலும் நல்ல முறையில் தேர்ச்சிபெற்று அனைவருமே கல்லூரி வாழ்க்கையை முடித்து விட்டனர். மூத்த மகன் மு. நடராசன் B.E., ஆரம்பத்திலேயே நாட்டுக்குச் சேவை செய்ய வேண்டும் என்ற எண்ணத்தோடு இந்திய விமானப் படையில் சேர்ந்து பணி புரிகிறார். இப்பொழுது AIR COMMODORE ஆக உயர்ந்த பதவியில் டெல்லி யிலிருக்கிறார். அடுத்த மகன் மு.மணிவாசகன் M.B.B.S.M.S. அவர் இப்பொழுது கர்னாடக மாநிலத்தில் பீஜப்பூரில் ஒரு மருத்துவமனையில் அறுவை சிகிச்சை மருத்துவராகப் பணி புரிகிறார். அடுத்த மகள் ஞானப்பூங்கோதை B Sc;M.A;M.Ed; டாக்டர் A. சுப்பிரமணியம் M.B.B.S. அவர்களை மணந்து கடலூரில் வாழ்க்கை நடத்துகிறார். இவர் கடலூரில் ஒரு பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிகிறார். நான்காமவர் டாக்டர் மு. சுந்தரம், M.B.B.S;M.D. தஞ்சையில் இராசா மிராசுதார் அரசு மருத்துவமனையில்பணிபுரிகிறார். ஐந்தாமவர் வழக்கறிஞர் மு. நம்பி, B.A.B.L. திருவத்திபுரத்தில் வழக் கறிஞராகப் பணிபுரிந்து கொண்டு தந்தையோடுஉடனிருந்து வருகிறார். கடைக்குட்டிப் பெண்ணாகிய செந்தாமரை என் பவர் சென்னை மேற்கு மாம்பலத்தில் R. அருணாசலம்BCom என்பவரை மணந்து வாழ்க்கை நடத்துகிறார். இவரும் ஒரு பள்ளி ஆசிரியராகவே இருந்து வருகிறார். இவர்களே டுநம் உரையாசிரியர் 1945-ல் காவேரிப்பாக்கத்தில் தமிழ சிரிய

ராகப் பணிபுரிந்தபோது அவரிடம் பள்ளியில் பயின்ற மாணவர் மு. துரைசாமி என்பவரும் நம் உரையாசிரியரின் இல்லத்தில் தங்கிப் பயின்ற வகையில் அவர்க்கு மகன்மை உரிமை கொண்டவரே. அவரே வயதில் மூத்த மகனாம் நிலையில் உள்ளவர். அவரும் டாக்டர் பட்டம் பெற்று மலேசியாவில் மருத்துவமனை ஒன்றை நடத்தி வருகிறார். அவர் குடும்பம் சென்னை அண்ணா நகரில் உள்ளது. ஆண்டில் இருமுறை தமிழகம் வருவார். தந்தையார் நிலையில் உள்ள நம் உரையாசிரியரை வணங்கி நல்லாசி பெற்றுச் செல்வார். இந்த எழுவர் மக்களிடமாக நம் உரையாசிரியருக்குப் பேரப் பிள்ளைகள் பதினறுவர் உள்ளனர். பதினாறும் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்ந்து வரும் அப்பெரியாருக்குக் கொள்ளுப் பேரன் பேத்திகளும் இருவர் உள்ளனர். இது நம் உரையாசிரியர் குடும்பச் சூழலின் வரலாறு.

நம் உரையாசிரியர் திருவோத்தூர் வையாபுரி முருகேசனார் அவர்கள் சைவ உணவினர். ஆன்மார்த்தமாக நாளும் சிவலிங்க பூசை செய்து வருவார். திருமுறைகள் ஓதுவார். நல்லவர்களோடு கலந்துரையாடுவார். சிந்திப்பார். எழுதுவார். எந்த நேரத்தில் நான் அவரைப் பார்க்கச்சென்றாலும் அறிவுத்தொண்டாக ஏதாவதொன்றைச் செய்து கொண்டு தானிருப்பார். தமது உள்ளம் கவர்ந்த திருத்தலமாகிய திருவண்ணாமலைக்கு ஒவ்வொரு ஆண்டிலும் கார்த்திகை திருநாளன்று சென்று தீபதரிசனம் செய்து வருவார். காஞ்சி திருவையாறு முதலிய சில குறிப்பிட்ட சிவதலங்கட்கு நினைத்தபோது சென்று வருவார். மேடையிற் பேசுவது, புகழ் சம்பாதிப்பது போன்ற செயல்களில் ஆதியிலிருந்தே ஏனோஅவர்க்கு நாட்டம் இருந்ததில்லை.அதனால்அவரைத் தமிழ் உலகம் அதிகம் அறிந்திராது என்றே நினைக்கிறேன். ஆனால் மேடையில் மற்றவர் பேசும் பேச்சுக்களையும் இலக்கியச்சொற்பொழிவுகளையும்விரும்பிக்கேட்பார்.வாரியார் சுவாமிகளின் தொண்டினையும் பிரபாவத்தினையும் ஓயாமல் போற்றிப் புகழ்ந்து கொண்டிருப்பார். "அந்த நாளில் ஊர் ஊராகச்சென்று மக்களை நல்வழிப்படுத்திய அருளாசிரியர் களாகிய திருஞானசம்பந்தரை நான் பார்த்ததில்லை.

திருநாவுக்கரசரைப்பார்த்ததில்லை. சுந்தரரைப்பார்த்ததில்லை மாணிக்கவாசகரைப் பார்த்ததில்லை. ஆனால் எனது வாழ் நாளில் நான் தவத்திரு. கிருபானந்த வாரியார் சுவாமிகளைப் பார்க்கிறேன். இந்த யுகத்தில் எனக்குக் கிடைத்த ஒரு நல்ல பேறு இது'' என்று பூரித்துப்போவார். சுருங்கச் சொன்னால் நம்உரையாசிரியர்ஒரு சிவத்தொண்டர்.ஒருநல்ல தமிழ்க்குடி மகனாராவார். பிறருக்கு உதவும் பண்பு உடையவர். அரியும் அயனும் அடியும், முடியும் தேடி அறிய இயலாத அருட் பெருஞ்சோதி திரு வண்ணாமலையாரின் அருளாசி பெற்ற வர். எளிமையானவர்.ஏற்றமிகு எண்ணங்களை உடையவர். சிறந்த தமிழ் அறிஞர். எண்பது வயதிலும் மூப்பு உணராப் பேராண்மையாளர். அவருடைய படைப்பாகிய இவ்வுரை நூல் தமிழ் உலகிற்குக் கிடைத்த ஒரு கலங்கரை விளக்க மாகும்''.

பிரமாதீச்ச ஆண்டு ஐப்பசித்திங்கள் நான்காம் நாள் (20-10-1913) திருவாதிரை நாளன்று நம் உரையாசிரியர் இம்மண்ணுலகிற்கு வந்தார். 20-10-1993 அன்றுஅவருக்கு எண்பது ஆண்டு நிறைவு பெறுகிறது. இறைவன் அருளால் நலம் பல பெற்று வாழ்க என வாழ்த்தி முடிக்கிறேன்.

இங்ஙனம்,

K. S. கலியாணசுந்தரம், B.Com.,
மண்டலச்செயலாளர்,
தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்.

15D, வள்ளலார் தெரு,
நரசிம்ம நகர்,
திருவத்திபுரம்-604 407.



உ
முருகா

சென்னை-11
18—X—93

# அணிந்துரை

மணிகளில் சிறந்தது மாணிக்கம். தலங்களில் சிறந்தது கச்சியம்பதி. நதிகளில் சிறந்தது கங்கை. மலைகளில் சிறந்தது இமயம். அதுபோல், நூல்களுள் சிறந்தது சிவஞான போதம். இதனைப் பதிகரணம் கைவரப்பெற்ற மெய்கண்ட தேவர் செந்தமிழில் அருளிச் செய்தார். இந்த ஞானநூலுக்கு நிகர் வேறு எங்கும் இல்லை.

இந்தச் சிவஞான போதத்துக்குத் திருவோத்தூர் செந்தமிழ்ச் செம்மல். உயர்திரு. முருகேசன் அவர்கள் எளிய முறையில் உரை எழுதியிருக்கிறார். இது மக்களுக்கு மிகவும் பயன்படும். இதைவிடச் சிறந்த புண்ணியச்செயல் இல்லை. வானோரும் போற்றும் இந்நூலை ஏனோரும் ஓதி உய்வு பெறுவார்களாக.

அன்பன்,
**கிருபானந்தவாரி.**

முனைவர் ஒளவை. நடராசன், துணைவேந்தர்.
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005.

நூல் : மெய்கண்டார் அருளிய
சிவஞான போதமும் விளக்கவுரையும்.

## அணிந்துரை

சித்தாந்தம் என்பதற்கு முடிந்த முடிபென்று பொருள். தோற்ற ஒடுக்கமில்லா முப்பொருளைச் சித்தாந்தம் இறை, உயிர், தளை-கட்டு எனக்குறிக்கும். இம்முப்பொருள் உண்மையைச் சைவப்பெரு நூல்கள் விளக்கமாக மொழி கின்றன. சைவத்திருநெறியில் ஊன்றிய கொள்கைநெறி யாளர் பதிஞானச்சிறப்பினை இலக்கியம், இலக்கணம், புராணம், ஆகமம் ஆகிய பலவகை நூல்களாலும் மாந்தர்க்கு அறிவுறுத்தினர். சைவ சித்தாந்தச் சாத்திர நூல்களுள் ஒப்புயர்வற்ற பெருமையுடைத்தாய்த்திகழ்வது சிவஞான போதமாகும். சித்தாந்தச் செறிவெல்லாம் அளவை முறை யால் ஆய்ந்து அனைத்துச்செய்திகளையும் நிரலேதொகுத்து ஒட்பமும் திட்பமும் மிளிரச் சுருங்கிய சொற்களால்-சூத்திரங் களால் கூறியவர் மெய்கண்டாரேயாவர்.

சிவஞான போதத்திற்குச்சிவஞான முனிவர் சிற்றுரை பேருரை என இரண்டும் செய்தனர். இவற்றுள் மாபாடியம் என்னும் பேருரை சித்தாந்திகள் பலரின் சிந்தை கவர்ந்த பெருநூலாகத்திகழ்கிறது. இன்றைய திறனாய்வு உலகில் புதிய கருத்துக்களும் முரண்களும் பல்கியதால் மாபாடிய உரைக்கு மனங்கொள்ளாதவருமுண்டு. மூல நூலாசிரியரின் உள்ளக்கிடக்கையைக்கூர்ந்து தெளிந்தநிலை யில் மாமுனிவர் உரைக்கு மாறுபாடாக எண்ணியோரும் உண்டு. இந்நிலையில் பெரும் புலமையும், நுண்மாண் நுழை புலமும், பன்னெடுங்காலக்கல்விப்பரப்பும், ஆசிரியப் பட்டறிவும் கொண்ட மூதறிஞர் முருகேசனார் சிவஞான போதத்துக்கு விளக்கவுரையை இந்நூலில் தாம் கண்ட நெறியில் வழங்கியுள்ளார்.

சிவஞான போதத்தைச் சிவஞான முனிவர் இயல் பிரித்த வாறு எண்ணாமல் முதல் ஐந்து நூற்பாக்களைப்பொதுவியல் என்னும் பிறப்பியல்என்றும்,பிந்தைய இரண்டு நூற்பாக்களைப் பொதுவியல் என்றும், இறுதி ஐந்து நூற்பாக்களை முத்தி

யியல் என்றும் பகுத்துக்கொண்டார். ஐந்தாம் சூத்திரத்தில் மாயையால் உணர்த்தப்பட்டு உலகைப் புசித்த ஆன்மா உயிர்ப்புப் பெறும் நிலை கூறுவதாலும், ஆறாம் சூத்திரமும் ஏழாம் சூத்திரமும் பொதுவான பதி,பசு,பாசப் பொருள்களைக் கூறுவதாலும், எஞ்சிய சூத்திரங்கள் ஆன்ம ஈடேற்றமாகிய வீடு பேற்றை நவில்கின்றமையாலும் இப்பாகுபாடுபொருந்து வதாகவே தோன்றுகிறது. முத்தியியலில் 12-ஆம் நூற்பா முத்தான்மா கடைப்பிடிக்கத் தகும் ஒழுகலாறுகளைக்கூறுவ தாகவும், 11-ஆம் நூற்பா வீடு பெற்றுய்யும், நிலையினை உரைப்பதாகவும் கூறுவதில் முரண்பாடுகிளைப்பதுப்போலத் தோன்றுவதை ஆசிரியர் மேலும் எண்ண இடமுண்டு. இந் நிலையில் அறிஞர் முருகேசனார் சுட்டும் பாகுபாடு சாலப் பொருந்துவதாகவும், நுண்ணிய அறிவாராய்ச்சி சார்ந்த தாகவும் அமைந்ததைப் போற்றி மகிழ்கிறேன்.

ஆசிரியருடைய உரை பலவிடங்களில் கூர்த்த மதி யையும் சீர்த்த சித்தாந்தத்திறனையும் புலப்படுத்துகின்றன.

''அரக்கொடு சேர்த்தி அணைத்தவக் கல்போல்
உருக்கி உடங்கியைந்து நின்று பிரிப்பின்றித்
தானே உலகாம் தமியேன் உளம்புகுதல்
யானே உலகென்பன் இன்று''

என்ற உரைப்பாட்டைப் புறனடையாகக்கொண்டு ஆசிரியர் உரைக்கும் உரை கருதத்தக்கது.

''என்பன் என்றதால் அவ்வாறு சொல்லிக்கோடல் மாத்திரையே அன்றி அது உண்மை ஆகாது என்பதாம். உண்மையில் உலகாயினோன் அம்முதல்வன் ஒருவனே என்பது கருத்தாகக்கொள்க. முத்தான்மாக்கள் முத்தி நிலை யிலும் முதல்வற்கு ஆளாம் என்றே ஆசிரியன் ஆங்காங்குக் கூறியதுகொண்டு இவ்வாறு உரைக்கப்பட்டது.

ஏகான்மவாதிகளுட் சிலர் யானே பிரமம் என்றும், யானே இன்று உலகாயினேன் என்றும் கூறிக்கொள்வரன்றே, அவர் அங்ஙனம் கூறுவது சித்தாந்த நெறிக்கு ஒவ்வாதாகலின் அதை மறுத்து அன்னார் மனம் புண்பட உரைத்தல் மெய்யுணர்ந்தார்க்குத் தக்கதன்றாம் எனக்கருதியே ஆசிரியன் அக்குறையினைத் தன்மேல் வைத்து நயம்படக் கூறிச்சென்றான் என்றே நாம் இங்கு உணர்தல் தகும்.

யானே உலகென்பன் இன்று என்றது உபமன்னிய முனிவன்பால் சிவதீக்கை பெற்றுத்தன்னையும் தலைவனையும் உணர்ந்து சிவோகம்பாவனை கைவரப்பெற்ற கண்ணன் அருச்சுனற்குக் கீதை நூல் உபதேசித்தபொழுது யானே உலகெலாம் ஆயினேன் என்று கூறியதைக்கருத்திற்கொண்டு கூறியதாகலாம் என்க.

அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கல் என்றது சாணைக்கல். அது அரக்கும் கற்பொடியும் சேர்ந்து ஒன்றானது. அரக்கு முதல்வற்கும், கற்பொடி உலகிற்கும் உவமையாகக் கருதுக, முன்னது பற்றுவதும் பின்னது பற்றப்படுவதுமாயிருத்தலின். இன்று என்றது இம்முத்திக்காலத்து என்றதாம். அதாவது பாசக்கட்டுக்களின் நீங்கித்தன்னையும் தலைவனையும் உணர்ந்து அவனே தானேயாகிய அந்நெறியால் ஏகனாகி இறைபணி நின்ற எல்லைக்கண் என்பதாம்'' என்பதும்,

''தூலவுடம்பு கெட்டவழி உயிரானது சூக்குமவுடம்போடு சேறலும், சென்று துறக்க நிரயங்களில் இன்ப துன்பங்கள் நுகர்தலும், நுகர்ந்து மீளவும் உலகிற்கு வந்து ஒரு கருவில் வீழ்தலுமாகிய செய்திகள் மறைநூல்களாலும் மெய்கண்டான் உரைத்த சம்பிரதாய உரைகளாலுமே தெளியப்படுவனவாமன்றி ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் சோதிக்கின் ஆகாதென்பதாம்''. என்றுரைத்தலும் கொண்டு இவ்வுரைத்திட்டம் உணரலாம்.

ஆசிரியர் கூறும் உவமைகளை உவமேயங்களுடன் பொருத்தி விளக்குகின்ற பகுதிகள் மிகவும் சுவையானவை. ஆசிரியரின் இலக்கண அறிவு பலவிடங்களில் தெளிவு காணுவதற்குப் பெருந்துணையாக அமைகின்றது.

செவி முதலாகிய புறக்கருவிகளையும், மனமுதலாகிய அகக்கருவிகளையும் விதந்து கூறி ஆன்மா இவற்றின் வேறாக இருப்பதை உணர்த்துகின்ற ஆசிரியரின் உணர்த்தாற்றல் உயரிய நிலையில் அமைந்துள்ளது. அவ்வாறு உரைத்து ''இதற்கு இவ்வாறு ஆசிரியர் கருத்துக்கேற்ப உரையாது மனம் போனவாறெல்லாம் உரைத்து அவர்க்குக் குறை நேர்வித்தாரும் உளர். அவற்றை அவர் உரையிற்

காண்க'' என்றுரைக்கும் ஆசிரியரின் சிந்தனைத்திறம் சிறப்புடையதாகும்.

உள்ளம் எது? ஆன்மா எது? அகக்கரணங்களுக்கும் புறக்கரணங்களுக்கும் ஆன்மாவிற்கும் உள்ள தொடர்பு எது என்பவற்றை இவ்வுரை அதிநுட்பமாக விளக்கிக்காட்டுகிறது.

மெய்கண்டாரிடத்தும் சிவஞான போதத்திடத்தும் அளவிறந்த ஈடுபாடும் அயரா அன்பும் உடையராதல் பற்றியே இவ்வுரை எழுந்தது எனத்தெள்ளிதின் உணருமாறு நூல் அமைந்துள்ளது. சத்தாய் உள்ளது சிவம் என்பதைவிளக்குங்கால் ''ஆசிரியன் மெய்கண்டான் மெய் கண்டானேயாம்'' என்று கூறுவதைக்காணலாம்.

அறிஞர் முருகேசனார் மரபு வழி வந்த சாத்திர ஒட்ப நுட்பங்களையெல்லாம் கற்ற நிலையில் உலகியல் உவமைகளாலும் எடுத்துக்காட்டுக்களாலும்விளக்கமாகஅமையுமாறு இவ்வுரையை யாத்துள்ளார். சிவஞான முனிவர்க்கு மறுப்புரை என்று எண்ணாது அறிவுவளர்ச்சியிலும்சிந்தனைத் திறத்திலும் படிமுறை வளர்ச்சியிலும் மூல ஆசிரியரை உள்ளவாறே கண்டுணரும் ஆர்வம் மீதூர்ந்ததால் கிளர்ந்த உரையாகவே இதனைக்கொள்ளலாம்.

இன்றைக்கு ஐம்பது ஆண்டுகட்கு முன்னர் சேயாற்றில் எந்தையார் ஆசிரியப்பணிபுரிந்த ஞான்று இலக்கியம் பயிற்றுவிப்பதோடு இளைஞர்க்குச் சித்தாந்தச் செம்பொருள் புகட்டுவதையும் பணியாகக்கொண்டிருந்தார். அவ்வகையில் எந்தையாரொடு அந்நாள் தொட்டே பழகிய பேரறிவினராகிய அறிஞர் முருகேசனார் அப்பரிவு காரணமாக இளமாணாக்கன் இவன் எனக்கருதாது பாயிரம் வரைதலும் முறையெனக்கருதி இப்பணி வழங்கியதை நன்றியொடு வணங்கியேற்றேன்.

சித்தாந்த சாத்திரங்களைக் கற்பாரும் தெளிவாரும் ஓதுவாரும் உணர்வாரும் சுருங்கிவரும் இக்காலத்தில் கற்றுணர்ந்த பேரறிவால் இந்நல்லுரையை நல்கும் சிவநெறிச்செல்வராகிய முருகேசனாரின் செந்தமிழ்ப்பணியைத் தமிழுலகம் நெஞ்சாரப் போற்றி மகிழும் என்பது என்துணிபு.

ஔவை நடராசன்.

## அணிந்துரை

பேராசிரியர். டாக்டர். கு. சுந்தரமூர்த்தி,
எம்.ஏ பி.எச்.டி.,
அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்.
தருமபுரம், மயிலாடுதுறை - 609 001.

பொய் கண்டார் காணாத புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ.

என்பர் தாயுமானார். இவ்வாறு போற்றப்பெற்ற மெய்கண்டாரால் அருளப்பெற்ற சிவஞான போதம் மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் தலையாய நூலாகும். பன்னிரண்டு நூற்பாக்களை அடிப்படையாகக்கொண்டு சைவ சித்தாந்தக் கருத்துக்களை ஆழ்ந்தும் அகன்றும் நுண்ணிதாக விளக்கும் நூல் இவ்வரிய நூலாகும். இதற்குச் செய்யுள் வடிவில் அமைந்த முதல் உரை சிவஞானசித்தியார் சுபக்கமேயாகும். இதன்பின் எழுந்த உரைகளுள் குறிப்பிடத் தக்கன பாண்டிப்பெருமாள் விருத்தியுரையும், சிவஞான முனிவரின் சிற்றுரை பேருரைகளுமாம். இவ்வுரைகளைத் தழுவி வரும் விளக்கங்கள் காலந்தொறும் எழுந்துகொண்டே யிருக்கின்றன. இவற்றுள் பேராசிரியர்திரு.வை.முருகேசனார் அவர்கள் எழுதிய விளக்கம் குறிப்பிடத்தக்கதாய் உள்ளது.

''கல்லால் நீழல்'' எனத்தொடங்கும் கடவுள் வாழ்த்துச் செய்யுளுக்கு உரைவகுக்கும் இவ்வாசிரியர் மெய்கண்டாரின் திருவுளத்திற்கு இயைந்த உரையை வகுத்துச்செல்கின்றார். சிவஞான போதத்தைப் பிறப்பியல், பொதுவியல், வீட்டியல் என மூவியலாகப் பகுத்துக்கொண்டு உரைகாணும் புதிய முயற்சி இவ்வாசிரியர் கண்ணதாகின்றது. 'மன்னு சிவன்' 'சொன்ன சிவன்', 'எண்ணான் சிவன்', எனவரும் தொடர் களுக்கும், நிலையாமைக்கு உவமையாகக்கூறிய 'நீரில் எழுத்தும்', 'நிகழ் கனவும்', 'பேய்த்தேரும்' எனவரும் தொடர்களுக்கும் உரை காண்பதில் முனிவரரின் உரை போற்றப்பெற்றுள்ளன. ''உராத்துனைத்தேர்த்தென'' என வரும் தொடரில் எனவென்னெச்சம் உவம உருபாக வரு தற்குந் ''தூதுணம் புறவு என'' எனவரும் தொடரை

மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளமை ஆசிரியர்தம் அஃகி அகன்ற புலமை நலத்தைக் காட்டுகின்றது.

தனித்த சொற்கு உரை எழுதுதலிலும், எளிய இனிய தமிழ் நடையில் விளக்கம் தருதலிலும் ஆசிரியரின் உரைத் திறனும் மொழித்திறனும் விளங்க நிற்கின்றன. இவ்வாற்ரால் இவ்வாசிரியர் தமிழ்ச் சைவ உலகிற்கு வேண்டப்படுவதொரு பேருதவியைச்செய்திருக்கிறார் என்பது புலனாகின்றது.

இவ்வகையில் இந்நூல்வழி உதவியிருக்கும் ஆசிரியர் மேலும் பல அஃகி அகன்ற சமய நூல்களுக்கும் விளக்கம் தரின் பெரும் பயனுடையதாகும். இதற்கேற்ப இவ்வாசிரியருக்கு நல்வாழ்வையும் நற்சூழலையும் வழங்கி யுதவ இறைவனை இறைஞ்சுகின்றேன்.

இவர்களின் அரிய தொண்டு நாளும் சிறக்க இறைவனை வேண்டுகின்றேன்.

கு. சுந்தரமூர்த்தி.

''ஆவினன் குடியகம்''
56, தருமபுரம் சாலை,
மயிலாடுதுறை - 609 001.
நாள்: 25—8—93.

## அணிந்துரை

தருமையாதீனப்புலவர், செஞ்சொற்கொண்டல்,
தமிழாகரர், திருமுறை உரைமணி,
நல்லாசிரியர், டாக்டர்.
**சொ. சிங்காரவேலன், M.A., Ph.D.,**

மெய்கண்டார் அருளிய **"சிவஞான போதம்"** தமிழ்ச் சாத்திர உலகம் பெற்றுள்ள அருட்கொடைகளுள் முடிமணி எனத்தக்கது. அதனை அருளிய நல்லாசிரியர் மெய்கண்டார், தாம் கூறும் கருத்துக்களில் திட்பம், நுட்பம், கலந்து மிகமிகச்சுருங்கிய சொற்களால் விழுமிய பொருளை அருளியுள்ளார். வடமொழியிலும் தென்மொழியிலும் தத்துவ ஞானத்தை அருளும்பலநூல்கள் உள்ளன; அவற்றுள்ளும் முதன்மையும், முழுமையும் வாய்ந்த நூல் சிவஞானபோதமே ஆகும்.

"மின்னமர் பொழில் சூழ் வெண்ணை
மேவி வாழ் மெய்கண்டான் நூல்
சென்னியிற் கொண்டு சைவத்
திறத்தினைத் தெரிக்கலுற்றாம்."

என்ற சிவஞானசித்தியார்ச் செய்யுளும், அதற்கமைந்த சிவஞான சுவாமிகள் உரையும் இதனைத் தெளிவுறுத்தும்.[1]

"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன் அருள் மேவுநாள் எந்நாளோ"

என்ற தாயுமானவரின் அருள்மொழி, அத்துவித மெய்கண்டவராக மெய்கண்டாரைச் சிறப்பித்துக் கூறுதலால், இச்சிவஞானபோதம் மொழிபெயர்ப்பு நூல்அன்று; முதனூலே என்று முடிவு காண்பர் பேரறிஞர்.[2]

---

1. சிவஞானசித்தியார் சுபக்கம் - பாயிரம்
2. காண்க : "சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்", மகாவித்துவான் சி. அருணைவடிவேலு முதலியார், தருமையாதீனம்(1984) பக். ங.

பன்னிரண்டு நூற்பாக்களை உடைய இந்நூல், பொது அதிகாரம், உண்மை அதிகாரம் என்ற இரண்டு அதிகாரப் பகுப்பு உடையது; பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயன் இயல், என்ற நான்கு இயல்களாக உள்ளது. சிவஞான சுவாமிகள் அருளிய சிற்றுரை, பேருரை என்ற இரண்டு படைப்புக்கள் இந்நூலின் பொருள் நுட்பங்களை அறியத் துணை புரிகின்றன. இவ்வுரை நூல்களும் பல பதிப்புக்களாக வெளிவந்துள்ளன. சித்தாந்த சைவ உலகம் பயன்கொண்டு வரும் இவ்வரிசையில், பேராசிரியர். திரு. வை. முருகேசனார் அவர்கள் விளக்கவுரையும் இப்போது இணைகின்றது.

திருவோத்தூரில் வாழ்ந்து வரும் பேராசிரியர் திரு. வை. முருகேசனார் அவர்கள் சித்தாந்த நூல்களைக் கற்றுத்துறைபோகிய அநுபவம் உடையவர்கள். பலர்க்கும் கற்பித்து வரும் அநுபவமும் வாய்க்கப் பெற்றவர்கள். மயிலாடுதுறையில் தருமையாதீனம் 24-ஆவது குருமகாசந்நிதானம் அருளாட்சிக் காலத்தில் அமைக்கப்பெற்ற மெய்கண்டார் சைவசித்தாந்தக் கல்லூரியில் கற்பித்த திறம் உடையவர்கள். தாம் பல்லாண்டுகளாகச் சிந்தித்துத்தெளிந்த வகையில் இந்த விளக்கவுரையை வரைந்துள்ளார்கள். இந்த அரிய நூலைப் படித்து மகிழ்ந்தேன். 'காலந்தோறும் மெய்யுணர்வு நூல்களுக்குத் தக்கவரைக் கொண்டு விளக்கம் காணச்செய்து, ஞான நூல்நெறியை வாழையடி வாழையாக வளரச்செய்து வருகின்ற பெருங்கருணையாளன் இறைவன் என்ற உண்மை என்னுள் முறுகி எழுந்தது.

இந்நூல் 254 பக்கங்களைக்கொண்டு விளங்குகின்றது.

முன்னோர் சென்ற நெறியில் நின்றும் சிறிது வேறுபட்டு இயல்வகை செய்துள்ளார் இப்பேராசிரியர்.

1. பிறப்பியல்
2. பொதுவியல்
3. வீட்டியல்

என்பது இவர்கொண்ட இயல்வகை.

1. பிரமாண இயல்
2. இக்கண இயல்
3. சாதன இயல்
4. பயன் இயல்

என்பது முன்னோர் கொண்ட இயல் பாகுபாடு.

''கல் ஆல் நிழல் மலை வில்லார் எனவும்
அருளிய பொல்லார் எனவும்
இணைமலர் நல்லார் புனைவர் ஏ எனவும்

இவ்வாறு பகிர்ந்து நின்று பொருள் உணர்த்தலைக் கூர்ந்து நோக்கின் முதல் ஐந்து சூத்திரங்கள் ஓரியலாயும், இடையிரு சூத்திரங்கள் ஓரியலாயும், இறுதியைந்து சூத்திரங்கள் ஓரியலாயும் பிரிந்து நின்று அவை முறையே பிறப்பியல், பொதுவியல், வீட்டியல் எனப்பெயர்பெறும் எனவும் கருதி உணரலாம்.'' என்பர்.*

இன்னும் இதனானே ஆறும் ஏழுமாகிய பொதுவியற் சூத்திரங்கள் இரண்டும் நடுநாயகமாய் அமைந்து, சைவ சித்தாந்தத்துக்கருப்பொருளாகிய பதி, பசு, பாசம், என்னும் முப்பொருள் உண்மையைச் சத்து அசத்து என்னும் இரண்டு அளவைகளைக் கொண்டே உணர்த்துவதோடு, பிறப்பியற்கும் வீட்டியற்கும் அப்பொதுவியல் ஞானம் பொதுவாய் நின்றதென்றும் உணரக்கிடந்ததாம்; இவ்வுணர்வு நெறியில் நின்று தாமும் இந்நூலினைப் பிறப்பியல், பொதுவியல் வீட்டியல் என மூன்றாகவே பகுத்து உரை வகுப்போம்.'' என்று நுதலிப் புகுகின்றார் இவ்வுரையாசிரியர். [1]

''சிவஞான போதம் முதனூலே, மொழிபெயர்ப்புஅன்று'' என்ற விழுமிய கருத்து இவ்வுரையாசிரியர்க்கு உண்டு என்பது கீழ்வரும் பகுதியான் விளங்கும். [2] ''ஆசிரியன் மெய்கண்டான், தான் ஆக்கிய தமிழ் முதனூலாகிய இந்த ஞான நூலுக்குச் சிவஞானபோதம் என்று பெயரிட்டு வழங்கினான். வேதாகம நூல்களினும் பல்வேறு ஞானநூல்களினும் ஆங்காங்குச் சிதறிக்கிடந்தசைவ சித்தாந்த நெறிப்பட்ட

*காண்க : இந்நூல் – பக். 3
1. இந்நூல் - பக். 3
2. இந்நூல் – பக். 5

உண்மைகளை ஆய்ந்தெடுத்து அனுபவித்துத் தொகுத்து முதல் நூலாக்கிய பெருமை ஆசிரியன் மெய்கண்டானையே சாரும்.''

சிவஞானபோதம் நூலாசிரியனும், உரையாசிரியனும் மெய்கண்டான் என்றே கொள்ளவேண்டும் என்பர் இவர். (சூத்திரங்களுடன், மேற்கோள்கள் முப்பத்தொன்பதும், உரைப்பாட்டுக்கள் எண்பதும், இணைந்தமையால் இவ்வாறு உணரத்தகும் என்பர்.)[1]

முதலைந்து சூத்திரங்களைப் பிறப்பியல் என்று தாம் வகுத்தமைக்குரிய காரணத்தையும் இவர் விளக்குவர். ''பிறப்பால் அறியப்பட்ட அல்லது பிறப்பிற்குஉபகாரப்பட்ட செய்திகளாமாகலின் அவற்றை உணர்த்துகின்ற இவ்வியல் பிறப்பியலாயிற்று'' என்பது காண்க.[2]

இந்நூல் முழுவதுமே மெய்கண்டான் மாணாக்கர்க்கு ஓதியருளியது ஆதலின் அதற்கேற்ப இவர் விளக்கும் பகுதி நுட்பமானது. ''இஃதோர் சாத்திர நூல் ஆகலானும் மெய்கண்டான் ஒருவனுழைப்பட்டம் கேட்டே பயில வேண்டுவது ஆகலானும் பேதாய் என்றது ஆசிரியன் மாணாக்கனை விளித்த்விளிஎனக்கொள்க.'' என்றதுகாண்க. ''பிற மதத்தாரை அவர் மனம் புண்பட விளித்ததாக உரைத்து ஆசிரியர்க்குப் பழியினைப் புகுத்த வேண்டா'' என்பது அழகிய பகுதி; நாகரிகமான நயவுரை.

''இவ்வெடுத்துக் காட்டில், ''பேதாய்'' என விளித்ததும் மாணாக்கனையேயன்றி உலகாயதனையன்றாம்; மாணாக்கனை அவ்வாறு விளித்ததும், அவன் மாட்டு எழுந்த கருணையாலேயாம்'' - என்பர் மகாவித்துவான் சி. அருணை வடிவேலு முதலியார் அவர்களும்,

திரு. வை. முருகேசனார் ஒவ்வொரு சூத்திரத்திற்கும் கண்டுள்ள விளக்கமும், உரையும் எளிமையாக அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. கண்ணழிவு,

1. இந்நூல் – பக். 5
2. இந்நூல் - பக். 6

பொழிப்புரை, விளக்கவுரை, என்று மூன்றாகப் பகுத்துக் கொண்டு எழுதிச் செல்கின்ற அமைப்பு முறையும் (Methodology) பாராட்டத்தக்க வகையில் பிறழாமல் உள்ளது.

மூவர் தேவாரப்பாக்களிலும், திருவாசகத்திலும், திருமந்திரத்திலும் சாத்திர நுட்பங்கள் விளக்கும் பகுதிகளும் பொருத்தமான இடங்களில் காட்டப்பெற்றுள்ளன.

| | |
|---|---|
| ''நன்றாக நால்வர்க்கும்...சாழலோ'' | (பக் 2) |
| ''நூறுகோடி பிரமர்கள்'' | (பக் 15) |
| ''போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்'' | (பக் 18) |
| ''கோடிகாவனைக் கூறாத...கழியுமே'' | (பக் 33) |
| ''நாமார்க்கும் குடியல்லோம்'' | (பக் 33) |
| ''பூவினிற் கந்தம் பொருந்தியவாறு போல'' | (பக் 148) |
| ''நன்றே செய்வாய் பிழைசெய்வாய்'' | (பக் 222) |
| ''படமாடக் கோயில்...பரமற்கதாமே'' | (பக் 243) |
| ''விறகிற் றீயினன்...நிற்குமே'' | (பக் 245) |
| ''உடையாய் உன் அடைக்கலமே'' | (பக் 248) |
| ''நானார் என்னுள்ளமார்...யாரறிவார்'' | (பக் 250) |
| ''ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே'' | (பக் 251) |

''யானே உலகென்பன் இன்று'' என்ற வெண்பாப் பகுதிக்கு ஆசிரியர், ''ஏகான்ம வாதிகளுட் சிலர் யானே பிரமம் என்றும். யானே இன்று உலகாயினேன். என்றும் கூறிக்கொள்வரன்றே'' அவர் அங்ஙனம் கூறுவது சித்தாந்த நெறிக்கு ஒவ்வாதாகலின் அதை மறுத்து அவர் மனம் புண்பட உரைத்தல் மெய்யுணர்ந்தார்க்குத் தக்கதன்றாம் எனக்கருதியே ஆசிரியன் அக்குறையினைத் தன்மேல் வைத்து நயம்படக்கூறிச்சென்றான் என்றே நாம் இங்கு உணர்தல் தகும்'' என்று உரையெழுதுதல் அறிவிற்கு விருந்தாய் உள்ளது. [1]

சருவ வியாபியாய் இருந்த காரணத்தால்தான் உலகெங்கணும் நீக்கமின்றிக் கலந்து நிற்பன் இறைவன் என்பதனைத் தங்கக்கட்டி, உப்புக்கட்டி என்ற எளிய

1. இந்நூல் - பக் 32

உதாரணம் ஒன்றால் விளக்கி நிறுவியமை, ஆசிரியர் கற்பிக்கும் திறனை விளக்குவதாகும்.[1]

ஐந்தவத்தைகளைத் தெளிவு படுத்தியுள்ள உரை விளக்கங்களும் அவ்வாறே.[2]

விளக்கத்திற்காகச் சில சொற்களையும்தொடர்களையும் வருவித்து உரைகாண்டல் உரையாசிரியர்இயல்பு. ''சாத்திர நூலாகலின் இவ்வுரைப்பாட்டிற்கு இவ்வாறு சில சொற்கள் வருவித்து உரைக்க வேண்டிற்று என உணர்க. அவ்வாறு உரையாக்கால் ஆசிரியனது மெய்யுணர் திறன் நூல் கற்பார்க்கு விளங்காமற் போகலாம் என்க''[3] என்று இதன் காரணத்தை ஓரிடத்தே தெளிவாக்கியுள்ளமை குறிப்பிடத் தக்கது.

இருவினைஒப்புணர்வு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆகிய தொடர்களின் பொருளைத் தெளிவுற விளக்கியுள்ளார் பிறிதோரிடத்தில்.[4]

''தமிழ்மறையாகிய திருவள்ளுவர் நெறியே மெய்கண்டார். நெறி'' என்ற கோட்பாட்டை உடையவர் இவ்வாசிரியர்.அதனைப்பல இடங்களிலும் விளக்குவரேனும் ''அந்நியம் இன்மையின் அரன் கழல் செலுமே'' என்ற தொடர்க்கு விளக்கம் எழுதுங்கால், ''ஆராவியற்கை'', ''கற்றீண்டு'' என்ற இரு குறட்பாக்களைக்கொண்டு தெளிவுறுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது.[5]

''சிறை செய்ய நின்ற செழும்புனலின்'' என்ற உரைப் பாட்டு விளக்கத்துள், ''நின்ற செழும்புனல்','சென்றடையும் ஆறு' என்று பகுத்துக்கூறியது ஆன்மாவின் பிறப்புநிலை, வீட்டுநிலைகளைக் குறித்தற்காம் என்றும், ஆற்றுவெள்ளம் சென்று அடங்குவது 'அலைகடல்' என்றும், ஆன்மாச் சென்று அமைவது சலனமில்லாத அரன் திருவடி என்றும்

1. இந்நூல் - பக் 47
2. இந்நூல் - பக் 94 - 100
3. இந்நூல் - பக் 109
4. இந்நூல் - பக் 137
5. இந்நூல் - பக் 144 - 145, 151, 178.

கூறிய வேற்றுமை நயத்தினை அறிந்து போற்றுக.''என்றும் எழுதும் தெளிவுரை பாராட்டத்தக்கது.[1]

''சைவ சித்தாந்தத்துள் வரும் தரிசனங்கள் இரண்டு என்பதே மெய்கண்டான் துணிபு. அவை பசு தரிசனம், பதி தரிசனம் என்பன. பாச தரிசனம் என்பது பசுதரிசனத்துள்ளே அடங்குவதாம். இவை இரண்டு அனுபவங்களையுமே ஆசிரியன் அவையடக்கத்துள், 'தம்மை உணர்தல்', 'தமை உடைய தன் உணர்தல்' எனக் குறித்துச்சென்றான் என உணர்க''[2] - என்ற நுட்பமான விளக்கம் இனியது.

'ஒன்றுதல்' என்ற தமிழ்ச்சொல் 'தியானம்' என்ற வடசொல்லின் பொருள்படவருவது என்றகுறிப்புஅழகியது.[3]

''எத்தனுவில் நின்றும் இறைபணியார்க்கு இல்லை வினை'' என்ற உரைப்பாட்டு விளக்கத்தில், மிகப் பொருத்தமாகத் திருமூலர் வரலாறு சான்றாகக் காட்டப்பட்டுக்குறித்த பொருளை இனிது விளக்குகின்றது.[4] (ஒரு பிறவியிலேயே கூடுவிட்டுக் கூடு பாய்ந்த குறிப்பிற்காக இது காட்டப் பட்டுள்ளது.)

பதினொன்றாம் சூத்திரத்தில், முத்தான்மா தேகாந்தத்தில் வீடு பெற்றுய்யும் நெறி உணர்த்தி முடிக்கப்பட்டபிறகு பன்னிரண்டாம் சூத்திரம் ஏன் தேவைப்படுகிறது என்பதற்கு ஆசிரியர் காட்டும் காரணம் நுட்பமானது; சிவஞான போதம் இங்கு இனிது முடிந்ததாயினும், சிவஞானி எடுத்த தேகம் இன்னும் நின்றதாகலின் அது தேய்ந்து அழியுங்காறும் அச்சிவஞானி கடைப்பிடிக்கவேண்டியநெறிஇன்னதென்பதை இனிவரும் பன்னிரண்டாம் சூத்திரத்தால் உணர்த்தி நூலை இனிதே முடிப்பான் என்று உணர்க.''[5]

---

1. இந்நூல் - பக் 166 - 167
2. இந்நூல் - பக் 164
3. இந்நூல் - பக் 191
4. இந்நூல் – பக் 208
5. இந்நூல் - பக் 234

''தன்னை அறிவித்துத் தான் தானாச்செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது''

என்ற உரைபாட்டுள், ''பிழையல்து - (முன்னே அறியாமையால் மறந்த குற்றம் போலக்) கழுவப்படுவதொரு குற்றம் அன்றாம்' என்று உரைகாணாது, 'பிழையலதும்' என்று பாடம்கொண்டு, 'இது பிழையாதல் அன்றியும்' என்று உரைகண்டுள்ளார்.; பாண்டிப்பெருமாள் வழிப்பட்ட உரையே தம் கருத்திற்கு உகந்ததாகலின் அவ்வாறு கொண்டனர் இவ்வுரையாசிரியர்.[1] சிவஞானபோதத்தில் பாண்டிப் பெருமாள் பதிப்பில் காணப்பெறும் பாடவேறுபாடுகளில் சிலவற்றை இவ்வுரையாசிரியர் ஏற்றுக்கொண்டுள்ளார்.

சுருங்கக்கூறினால், பேராசிரியர். வை. முருகேசனார் வரைந்துள்ள இச்சிவஞானபோத விளக்கவுரை இந்த நூற்றாண்டு கண்டுள்ள சிறந்த உரைகளுள் ஒன்றாகத் திகழ்கின்றது. பேராசிரியர் தம் அனுபவ அறிவின் துணையாலும், இறைவன் திருவருளாலும் பல்லாண்டுகள் வாழ்ந்து மெய்கண்ட சாத்திர நெறிப்பட்ட தத்துவ உலகிற்குப் பெரும் பயன் தரத்தக்க பல்வேறு படைப்புக்களை வழங்கிச் சிறப்பிப்பாராக.

1. இந்நூல் - பக் 251

குறிப்பு :- சிவஞானபோதம் விளக்கவுரை நூல் அச்சானதும் அப்பிரதி யொன்றை மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்களிடம் கொடுத்து நூலைப்பற்றிய அவர்களது கருத்தை அறிய விரும்பினேன். நூலுக்கு மதிப்புரையோ அல்லது பாராட்டுரையோ வழங்க மறுத்து எனக்கு வருத்தத்தோடு ஒருகடிதம் மட்டுமே எழுதினார்கள். அது உரை நூலைப்பற்றிய அவர்களது கருத்தாக இருக்கலாம் என்பதால் 19-7-93 இல் அவர்களை அவரது இல்லத்தில் சந்தித்து அவர்கள் உடன்பாடு பெற்று அக்கடிதத்தில் ஒரெழுத்தையும்மாற்றாமல் மறைக்காமல் இங்கு நூல்முகப்பில் அச்சிட்டுவழங்குகிறேன். அறிஞர்கள் கடிதத்தையும் படித்து உரை நூலையும் படிக்க வேண்டுகிறேன். அக்கடிதம் இது :

உ

சிவமயம்

தருமையாதீனப்புலவர்
முதுபெரும்புலவர்
திருமுறை உரைமணி.
சைவப்பேரறிஞர்.
தமிழ்ப் பேரவைச் செம்மல்.
சித்தாந்தக் கலைமணி.
மகாவித்துவான். டாக்டர்.

**சி. அருணைவடிவேலு முதலியார்,**

''ஆனந்த பரவசம்''
17–ஏ, இரண்டாவது மெயின்ரோடு,
நியூகாலனி, குரோம்பேட்டை,
சென்னை–600 044.
நாள் : 3–5–1993.

அன்புமிக்க நண்பர். பேராசிரியர். திரு. வை. முருகேசன் அவர்கட்கு வணக்கம்.

நலம். நலம் காண விழைவு.

நீங்கள் சில நாட்களாக முயன்றவகையில் நீண்ட நாட்களுக்குப்பின் காஞ்சியில் சந்திக்க நேர்ந்தது. சந்திப்பு மகிழ்ச்சியைத்தந்தது. அவ்வமயம் நீங்கள் தெரிவித்த உங்கள் விருப்பத்தை நான் நிறைவு செய்ய இயலாத ஒரு வருத்தத்தையே இக்கடிதம் வாயிலாக நான் உங்கட்குத் தெரிவிக்கின்றேன்.

சிவஞானபோதம் சித்தாந்த சாத்திரம் என்றாலும் அஃது ஒன்று மட்டுமே சித்தாந்த சாத்திரம் அன்று; வேறு பல சாத்திரங்களும் உள.

இனிச்சிவஞான போதத்திற்குச் சிவஞான சுவாமிகளது சிற்றுரை பேருரைகளே சிறந்த உரைகளாகப் போற்றப் பட்டாலும் அவருக்கு முன்பே சில உரைகள் எழுந்துள்ளன.

முற்காலத்து அறிஞர்கள் நிற்கப் பிற்காலத்தில் (நம் காலத்தில்) விளங்கிய அறிஞர்களும் உளர். அவர்கள் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ. ல. ஸ்ரீ. ஞானியார் சுவாமிகள், மறைமலையடிகளார், திரு. கா. சுப்பிரமணியப்பிள்ளை, திரு. வி. க., சென்னைச் சைவசித்தாந்த மகா சமாஜ முதற் செயலாளர் அட்வொகேட், திரு. மா. பாலசுப்பிரமணிய முதலியார், திரு. சச்சிதானந்தம் பிள்ளை, இன்னும் J. M. நல்லசாமிபிள்ளை, முதலியோர்.

இவர்களில் ஸ்ரீ ஞானியார் தவிர மற்றையோர் சொற் பொழிவு மட்டுமன்று; நூல்கள் வாயிலாகவும் சைவ சித்தாந்தத்தைப் பரப்பினர்.

இவையனைத்தையும் நான் ஓரளவு அறிந்து வந்த வகையில் நானும் சொற்பொழிவுகளோடு சில நூல்கள் வாயிலாகவும், நூல்களுக்கு எழுதும் உரைகள் வாயிலாகவும் சைவசித்தாந்தத்தை விளக்கியிருக்கின்றேன், விளக்கி வருகின்றேன்.

புதியனவாக என்னால் எழுதப்பட்ட நூல்களைப்பலர் படித்துச் சைவ சித்தாந்தத்தில் சிறப்புப் பெற்றனர்; பெற்று வருகின்றனர்.

எனக்கு நேரில் அறிமுகம் இல்லாதவர்கள் கூடக் கடிதம் வாயிலாகத் தொடர்பு கொண்டு என்பால் சில விளக்கங் களைப் பெறுகிறார்கள்.

தஞ்சைப் பல்கலைக்கழகத்துப் பேராசிரியர் ஒருவர் 2 நாட்களுக்கு முன்னர் எழுதிய கடிதத்திற்கு விடை எழுதி னேன்.

என்னுடைய நூல்கள் பல்கலைக்கழகங்களில் பார்வை நூல்களாகவும் பயன்பட்டு வருகின்றன. பயன்பெறுபவர்கள் தங்கள் எழுத்தில் அவைகளைக் குறித்தும் இருக்கின்றார்கள்.

எதற்காக இவைகளையெல்லாம் சொல்கின்றேன் என்றால் சைவசித்தாந்தம் பற்றிய என்னுடைய கருத்துக்கள் யாவை என்பதை அறிஞர் உலகம் நன்கறிந்துள்ளது என்பதைத் தெரிவித்தற்கேயாம்.

நான்பெற்ற சித்தாந்த ஞானத்திற்குப்பெரிதும் உறுதுணையாய் இருந்தவை, இருப்பவை மாதவச்சிவஞான யோகிகளது நூல் உரைகளும், தனி உரைகளும், நூல் களுமேயாகும்.

நான் மட்டும் அன்று, மேலே குறிப்பிடப்பட்ட ஸ்ரீ ல.ஸ்ரீ. ஞானியார் சுவாமிகள் முதலானவர்களும்அவரது கொள்கைகளையே கொண்டிருந்தது மட்டுமன்று; விள்க்கியும் வந்தார்கள்.

இவ்வாறான நிலைமையில் உங்களுடைய சிவஞான போத உரைப்பொருள்கள் பல, முற்றிலும் மேற்கண்ட பொருள்கட்கு வேறாய் உள்ளன.

வேறாய் உள்ளது மட்டுமன்று; மாறாயும் உள்ளன. சில புதியனவாயும் உள்ளன.

*சிவஞான சுவாமிகள் பெயரை நீங்கள் குறிக்கா விடினும் அவரது உரையைப் பல இடங்களில் மிக வன்மை யாக மறுத்திருக்கின்றீர்கள். ஓரிடத்தில் அவர் உரையைக் கேலி செய்தும் எழுதியுள்ளீர்கள்.*

என்வே என்னுடைய பாதைக்கு உங்களுடைய பாதை முற்றிலும் வேறாய் உள்ளது. ஆகவே, சிவஞான சுவாமிகளையே பெரும்பான்மையும் பின்பற்றிவருகின்ற நான் அவருக்கு மாறாய் உள்ள பாதைக்கு எப்படி ஓர் இணக் கம் தெரிவிக்க முடியும்?

உங்களுடைய உரைக்கு நான் ஒரு மதிப்புரையோ, பாராட்டுரையோ எழுதுவதாயின் நான் அதற்கு ஓரளவிலே னும் சிறப்புத் தருதல் வேண்டும்.

இல்லாவிடில் அதனால் யாருக்கு என்ன பயன்?

மேலும் நான் அதற்குச் சில வரிகளில் ஓர் பாராட்டுரை எழுதினாலும் பின்னால் பலர் என்னை உங்கள் உரையின் மாறுபாட்டிற்குக் காரணம் கேட்கத்தலைப்பட்டுவிடுவார்கள். அவர்களுக்கு விடையெழுதுவதே எனக்குவேலையாகிவிடும்.

உங்கள் உரையை நீங்கள் வெளியிடப்போகிறீர்கள். ''அதில் என்னுடைய உரை இருந்துதான் ஆகவேண்டும்''. என்ற கட்டாயம் என்ன இருக்கிறது.?

இல்லையென்றால் அதுபற்றி யார் என்ன சொல்லப் போகிறார்கள்?

*எனவே எனது உரை அதில் இல்லாதிருப்பதுதான் இருவருக்கும் நலம்.*

இந்த நிலைமைக்கு ஓர் உவமை சொல்ல விரும்புகிறேன். இக்காலத்தில் நாட்டில் அரசியல் கட்சிகள் பல உள. அவைகளில் கணவனும் மனைவியும் வேறு வேறு கட்சிகளில் இருக்கிறார்கள். அண்ணனும் தம்பியும் வேறு வேறு கட்சிகளில் இருக்கிறார்கள். அதனால் அவர்கள் குடும்ப உறவு பாதிக்கப்படுதல் இல்லை. அதுபோலச் சைவ சித்தாந்தத்தில் நாம் இருவரும் வேறு வேறு பாதையினராக இருக்கலாம். அதனால் நம் நட்பு பாதிக்கப்பட வேண்டியதில்லை. மன்னியுங்கள். இது கொள்கை வேறுபாடு. வணக்கம்.

அன்புள்ள

**சி. அருணைவடிவேலு முதலியார்.**

## பதிப்புரை

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தாறு. நாற்பத்தேழாம் ஆண்டுகளில் மாயவரத்தில் மெய்கண்டார் சைவ சித்தாந்தக்கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியனாக நான் பணி புரிந்தேன். கல்லூரி முதல்வராகக் காஞ்சிபுரம் திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் இருந்தார்கள். அப்பெரியாரது அன்பான அழைப்பின்பேரில் நான் அங்கு அப்பணிக்குச்செல்ல நேர்ந்தது. அவரது விலை மதிக்க முடியாத நட்பினால் சைவ சித்தாந்தத்தில் எனக்கு ஒரு நாட்டம் உண்டாயிற்று. என் உள்ளமறிந்தஅப்பெரியார் சிவஞான போதத்திற்குப் பாண்டிப்பெருமாள் செய்த விருத்தி உரைநூல் ஒன்றைக்கொடுத்துப்படிக்கத் தூண்டினார்கள். அது மிகப்பழைய பதிப்பு. அதில் சிவஞான முனிவர் செய்த சிற்றுரையும் இடம் பெற்றிருந்தது. இரண்டு உரைகளையும் படித்தேன். பாண்டிப்பெருமாள் உரைகொண்டு மெய்கண்டாரை ஓரளவு நெருங்க முடிந்தது. அதாவது ஓரளவு அவரைப் புரிந்துகொள்ள முடிந்தது. சிவஞான முனிவர் உரையினைக்கொண்டு மெய்கண்டாரைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. இது எனக்கு அப்பொழுது ஏற்பட்ட அனுபவம். காலப்போக்கில் அது மேலும் வலுப் பெற்றது. அதனால் ஆசிரியர் மெய்கண்டாரை முழுவதுமாய்ப்புரிந்துகொள்ள உரையாசிரியர்களின் துணையை நாடாமல் நூலாசிரியரின் துணையையே பெரிதும்நாடினேன் அதன் விளைவாக எழுந்ததுதான் இந்தச் சிவஞானபோத விளக்க வுரை நூல்.

மெய்கண்டாரின் சிவஞான போதத்தை நான் அணுகிய அணுகுமுறை புதிதுதான். ஆனால் எனது அணுகுமுறை ஆசிரியரின் கொள்கைக்கும் கோட்பாட்டுக்கும் பெரிதும் ஒத்தது என்பதே எனது திடமான நம்பிக்கை. சைவப் பேரறிஞர்கள் விருப்பு வெறுப்பின்றிப்படித்துச் சீர்தூக்கிப் பார்த்து ஒரு முடிவுக்கு வரட்டும்.மெய்கண்டாரதுமெய்கண்ட அனுபவத்திற்கு மாறாக நான் செல்லவே இல்லை. அதே நேரத்தில் அவர் காலம்வரை நிலவி வந்த சைவ சித்தாந்த மரபையும் நான் மீறவில்லை.சிவஞானமுனிவரது உரையினை

அவர் பெயரைக்குறிப்பிடாமலே பல இடங்களில் மிகவன்மை யாக மறுத்திருக்கின்றேன் என்பதும் உண்மைதான். நான் மறுத்தது சரியா தவறா என்பதை மட்டும் அறிஞர்கள் ஆய்ந்து பார்க்க வேண்டுகிறேன்.

சாத்திரம் என்பது மிகவும் நுட்பமான பொருளை உடையது என்பதை நாம் ஒத்துக்கொள்ளத்தான்வேண்டும் ஆனால் கற்பவர் உள்ளங்களைக் குழப்பக்கூடியதாக அது இருத்தலாகாது. வாதத்தையே குறிக்கோளாகக்கொண்டு வாதிட்டுக்கொண்டிருந்தால் மெய்ப்பொருளை நாம் அணுகவே முடியாது. அதனால் ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் சோதிப்பதையும் வாதிப்பதையும் விட்டுச்சுடர் விட்டு விளங்கும் மெய்ப்பொருளை மனம் பற்றவேண்டும். சாத்திரம் கற்பாருக்கு அதுவே சிறந்த பயனளிப்பதாகும்.

மெய்கண்டார் முப்பொருட்கொள்கையை உறுதியாகக் கடைப்பிடித்தவர். ஆறு ஏழாம் சூத்திரங்களால் அந்த மூன்று பொருள்களை மட்டுமே சத்து, அசத்து அளவைகளால் வலி யுறுத்திச்சென்றவர். அறுபொருட்கொள்கையும் எழுபொருட் கொள்கையும் காலப்போக்கில் எழுந்தனவே என்றால் அவற்றையெல்லாம் சிவஞான போதத்தில் கொண்டு வந்து திணிப்பது பொருந்தாதுஎன்பதே எனது திடமான நம்பிக்கை. அவை மரபு மீறிய செயலாகும் என்பதையும் நாமிங்கு அறிய வேண்டியுள்ளது. மரபு நிலை திரியின் பிறிது பிறிதாகும், மரபு நிலை திரியா மாட்சியவாதலே நூன்மரபாம் என்பதை யும் நாம் சிந்தித்துப்பார்க்கவேண்டுமல்லவா?

சிவஞானபோதத்தை நான் அணுகிய அணுகுமுறையில் சிவஞான முனிவர் மேற்கொண்ட அடித்தளம் முற்றவும் மாற்றப்பட்டது என்பதைச்சிறிது வருத்தத்தோடு ஒப்புக் கொள்ளுகின்றேன். ஆசிரியர் மெய்கண்டார் படைத்த சூத்திரங்களின் போக்கை விருப்பு வெறுப்பின்றி ஊன்றிப் படிப்பவர் எனது செயலை ஏற்கவே செய்வர். சிவஞான முனிவர் பன்னிரண்டு சூத்திரங்களையும் நான்கு சம கூறுக ளாக்கி மும்மூன்று சூத்திரங்கள் ஒவ்வோரியல் எனக்கொண்டு அவற்றுக்குப்பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் எனப்பெயரிட்டுப்பாகுபடுத்தினார். அந்தப்

பாடு எனக்குக்கொஞ்சமும் அமைதிதரவில்லை. ஆசிரியர் செய்த சூத்திரங்களின் போக்கை ஆழ்ந்து படித்தேன். அவை மூன்று இயல்களாகவே எனக்குப் பிரிந்து தோன்றின. முதல் ஐந்து சூத்திரங்கள் ஒரு இயலாகவும் இறுதி ஐந்து சூத்திரங்கள் ஒரு இயலாகவும் இடையிரு சூத்திரங்கள் அதாவது ஆறும் ஏழுமாகிய சூத்திரங்கள் ஒரு இயலாகவும் எனக்குப் பிரிந்து தோன்றின. அம்முறையில் அவற்றைப்பிறப்பியல் பொதுவியல் வீட்டியல் எனப்பெயரிட்டு உரை வகுத்தேன் இதற்குரிய விளக்கங்களை நூல் முகவுரையிலும் விளக்கவுரையிலும் விரிவாகத்தந்திருக்கின்றேன். அறிஞர்கள் படித்துச் சீர்தூக்கிப்பார்க்கட்டும்.

ஆசிரியர் மெய்கண்டார் அதிகரணங்கள் முப்பத்தொன்பது என்று வரையறுத்தார். அவர்கருத்துக்கு மாறாகச் சிவஞான முனிவர் அதிகரணங்கள் முப்பத்தெட்டு. இறுதி அதிகரணம் அதிகரணமன்று, அது புறனடை என்றார். சிவஞான முனிவர் சொல்லிவிட்டாரே என்பதற்காக இந்த ஒரு தவற்றினை நூறு ஆண்டுகட்கு மேலாகவும் நாம் சீரணித்து வருகிறோம். இது தேவைதானா?

முப்பத்தெட்டாவது அதிகரணத்தில் ஆசிரியர் மெய்கண்டார் என்ன சொன்னார்? ''பத்தர்துதிருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுவரன் எனக்கண்டு வழிபடுக'' என்று சொன்னார். இதற்கு அவர் கூறிய ஏது என்ன தெரியுமா? ''அவன் மற்றிவ்விடங்களில் பிரகாசனாய் நின்றே அல்லாதவிடத்து அப்பிரகாசனாய் நிற்றலான்'' என்பதுதான் ஆசிரியர் கூறிய ஏது. இந்த ஏது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனக் காண்டற்கா அல்லதுவழிபடற்கா என்று நாம் முதலில் சிந்திக்கவேண்டும். அவ்வாறு சிந்திக்க முற்பட்டால் அந்த ஏது அந்த இரண்டு இடங்களையும் சிவன் எனக்காண்டற்கு மட்டுமே கூறப்பட்டது என்பது புலப்பட்டு விடும். படவே மேற்கோளில் ஆசிரியர் கண்டு வழிபடுகஎன்று சொன்னாராயினும் காண்டல் ஒன்றே ஈண்டைக்குக் கருத்தாகக்கொள்ளவேண்டும் என்பது புரிந்து விடும். அதுதான் ஆசிரியர்க்குக் கருத்தாம் என்பதையும் நாம் உணர்ந்து கொள்ள முடியும். வழிபடுதலை வலியுறுத்த ஆசிரியர் வேறு

ஒரு அதிகரணம் வகுத்து அதற்கு வேறு ஒரு ஏதுக்கூறியுள்ளதையும் நாம் கருதிப்பார்க்கவேண்டும். அன்றியும் இங்கு வந்த உரைப்பாட்டுக்கள் இரண்டும் வழிபடுதலைப்பற்றி ஒன்றும் பேசாமல் திருவேடத்தையும் சிவாலயத்தையும்சிவன் எனக்காண்டற்கு மட்டுமே விளக்கம் தந்தன என்பதையும் உணரவேண்டும். ஆகவே முப்பத்தெட்டாவது அதிகரணம் ஆசிரியர் கருத்துப்படி திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனக்காண்டலை வலியுறுத்தற்கும், முப்பத்தொன்பதாவது அதிகரணம் அவ்விரண்டு இடங்களையும் வழிபடுதலை வலியுறுத்தற்கும் வந்தனவாதல் தெளியப்படும். படவே இங்குப்புறனடை என்ற பேச்சுக்கே இடமில்லை. புறனடை என்பது என்ன? ஒரு பொருளை முன் ஒரு சூத்திரத்தால் சொல்லி, அடங்காது எஞ்சி நிற்குமானால் அந்த எச்சத்தை அடுத்து வரும் சூத்திரத்தால் சொல்லும்போது அந்தச் சூத்திரம் புறனடை என்று ஆகும். ஆறாஞ்சூத்திரத்தால் ஆசிரியர் சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த்தத் தொடங்கினார். உலகு அசத்து என்று வரையறுத்தார். இறை சத்து என்று வரையறுத்தார். உயிர் இங்குவரையறுக்கப்படாமல் எஞ்சி நின்றது. அந்த எச்சத்தை ஏழாம்சூத்திரம் வரையறுத்து உணர்த்திற்று. அதனால் ''ஏழாம் சூத்திரம் புறனடை உணர்த்துதல் நுதலிற்று'' என்றார் ஆசிரியர். புறனடை இலக்கணம் இவ்வாறிருக்க, முப்பத்தெட்டாம் அதிகரணம் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுவரன் எனக்காண்கவென்று உணர்த்திற்று. முப்பத்தொன்பதாம் அதிகரணம் அவ்விரண்டிடங்களையும்வழிபடுக வென்று உணர்த்திற்று. காண்டல் வேறு. வழிபடல் வேறு. காண்டலுக்கு ஒரு ஏதுக் கூறப்பட்டது. வழிபடலுக்கு வேறு ஒரு ஏதுக் கூறப்பட்டது. காண்டலை வலியுறுத்தவந்த உரைப்பாட்டுக்கள் வேறு. வழிபடுதலை வலியுறுத்த வந்த உரைப்பாட்டுக்கள் வேறு. இப்படி வேறு வேறான பொருள்களை வேறு வேறான அதிகரணங்களால் ஆசிரியர் உணர்த்தும்போது, அவற்றுள் ஒன்று அதிகரணம் என்றும் ஒன்று புறனடை என்றும் கொள்வதில் என்ன நியாயம் இருக்கிறது? இல்லை அல்லவா! ஆகவே முன்னது அதிகரணம் என்றும் பின்னது புறனடை என்றும் சிவஞான

முனிவர் கூறுவாரேயானால் அது தவறுதானே! தவறு யார் செய்தாலும் தவறுதான்.

இவ்வாறாக எனது உரை இது காறும் இருந்து வந்த உரைகட்கு வேறாயும் மாறாயும் புதுமையாயும் இருத்தலைக் கண்டு அறிஞர்கள் வியப்படையத்தேவையில்லை என்று கேட்டுக்கொள்கிறேன். ஆசிரியர் மெய்கண்டார் கருதிய கருத்துக்கு என் உரை வேறு பட்டது மன்று, மாறுபட்டது மன்று, புதிதாகக்கொண்டுவந்து நுழைத்ததுமன்று என்பதை வலியுறுத்தவே விரும்புகிறேன். இதுகாறும் இருந்துவந்த உரைகட்கு வேறாயும் மாறாயும் இருக்கலாம். ஆசிரியர் மெய்கண்டார்வழிநின்று அறிஞர்கள்சீர்தூக்கிப்பார்க்கட்டும். எது ஆசிரியர் கருத்துக்கு ஒத்தது, எது ஒவ்வாதது என்பது தானே விளங்கிவிடும்.

அவத்தையைப்பற்றிய எனது அணுகு முறையும் வேறாகவே இருந்தது. அதைக்கொஞ்சம் விரிவாகவே இங்கு சொல்ல விரும்புகிறேன்.

சகலநிலை சுத்தநிலை என இரண்டு நிலைகளே ஆன்மாவுக்கு உள்ளன. கேவலம் என்பது சகல நிலையில் ஆன்மா ஆணவமலத்தின் சேட்டையால் அன்றாடம் அனுபவிக்கும் ஒருவகை அவத்தை நிலையாகும். ஆகவே கேவலம் சகலம் சுத்தம் என அவற்றை ஒருங்கு வைத்து மூன்றாக எண்ணுதல் வலியுடைத்தாகாது என்பதே. கேவலம் அவத்தை என்ற பெயரால் குறிக்கப்படலாம். சகலத்தையும் சுத்தத்தையும் அவத்தை என்ற பெயரால் குறிப்பது சரியன்று.

கலையாதிமண் அந்தம் வரையான முப்பத்தொரு தந்துவ உணர்வுகளோடு ஆன்மாக்கூடிநின்று ஆணவத்தின் சேட்டையிலிருந்து விடுபட்டுச்சமனிலை கடைப்பிடித்து உடம்பால் வரும் இன்பத் துன்பங்களையும் உலகால் வரும் இன்பத்துன்பங்களையும் அனுபவித்து வரும் நிலையே சகல நிலையாகும். இது ஆன்மாக்கள் அனைத்திற்கும் பொதுவாதலின் சகலம் எனப்பட்டது. ஆன்மா மாயையைத்துணையாகப்பற்றி நின்ற நிலையே சகலநிலை. மாயையின் தொடர்பை முறித்துக்கொண்டு ஆன்மா முதற்பொருளாகிய

இறையைப்பற்றி நிற்கும் நிலை சுத்த நிலை எனப்படும். இந்த இரண்டு நிலைகளையும் முறையே கட்டு நிலை கட்டறு நிலை எனவும், பெத்தநிலை முத்திநிலை எனவும், பிறப்புநிலை வீட்டுநிலை என்வும் கூறலாம்.

ஆன்மாச்சகல நிலையில் இருந்த பொழுது மாயையால் விளைந்த கலையாதிமண் அந்தம் வரையான முப்பத்தொரு தத்துவ உணர்வுகளுடன் கூடிநிற்கும் என்று முன்னர்க்கூறப் பட்டதல்லவா? அது அவ்வாறு சகல நிலையில் விழித்துக் கொண்டிருந்த பொழுதே ஆணவத்தின் சேட்டை அதிகரித்த தன் விளைவாக ஆன்மா முதலில் உலகைமறக்கும். அதன் விளைவாக அது கலை முதலாகப் பெற்றிருந்த ஆறு தத்துவ உணர்வுகளையும் இழந்து வருந்தும். அந்த இழப்பும் வருத்த மும் ஆன்மாவுக்கு அது நனவு நிலையில் இருந்த பொழுதே உண்டாவன. அதனால் அது நனவு அவத்தை என்றுசாத்திர நூலில் சொல்லப்பட்டது. இதனைச் சாக்கிராவத்தைஎன்றும் சொல்வர். சாக்கிராவத்தையில்ஆன்மா இலாடத்தானத்திலே நின்று கலை வித்தை அராகம் காலம் நியதிமோகினிஎன்னும் ஆறு தத்துவ உணர்வுகளை மட்டுமே இழந்து வருந்தும். எஞ்சியுள்ள இருபத்தைந்து தத்துவ உணர்வுகளே ஆன்மா வுக்குத்துணையாக நிற்கும். இங்கு ஆன்மாவுக்கு உயிர்ப்பு உண்டு என்பதால் வாயுக்கள் பத்தும்கூட இங்குக்கொள்ள இடமுண்டு. அந்தத் தத்துவங்கள் இருபத்தைந்தாவன:- தன்மாத்திரை ஐந்து, பூதம்ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, புருடன்ஒன்று ஆக இருபத்தைந்தாம். வாயுக்கள் பத்தாவன;- பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் நாகன் கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்பன. இங்குக் கூறப்பட்ட தத்துவங்கள் தூல தத்துவங்களாம்.

ஆனவத்தின் சேட்டை மேலும் அதிகரிக்கும். அதனால் இலாடத்தானத்தில் இருபத்தைந்து தூல தத்துவ உணர்வு களுடன் கூடியிருந்த ஆன்மாக் கண்டத்தானத்திற்குத்தள்ளப் படும். அங்கு ஆன்மாவைச்சிறிது உறக்கமும் ஆட்கொள்ளும். அதைக்கனவு நிலை என்று சாத்திரங்கள் கூறும். கனவு நிலையில் ஆன்மாத்தான் நனவில் பெற்றிருந்த

இருபத்தைந்து தூல தத்துவ உணர்வுகளையும் இழந்து நிற்கும். அவற்றின் சூக்கும உணர்வுகளே ஆன்மாவுக்குஇங்கு நிழலாடும். அந்தச் சூக்கும உணர்வுகளைக்கொண்டு அங்கு ஆன்மாக்கனவு காணும். கனவுக்குக் கதாநாயகன் புருடன். அது நிசப்புருடன் அன்று. நிழல்புருடன். அங்கு அப்புருடற்கு வாய்க்கும் உணர்வுகளும் நிச உணர்வுகள் அல்ல, நிழல் உணர்வுகள். நனவில் நிசப்புருடன் நிசமான மாமரத்தைக் கண்டு நிசமான மாங்கனிகளைப்பறித்துத்தின்றான். அதனால் அங்கு அவனுக்கு நிசமாகவே வயிறும் நிரம்பியது. கனவில் நிழல் புருடன் நிழல் வடிவான மாமரத்தைக்கண்டு நிழல் வடிவான மாங்கனிகளைப்பறித்துத்தின்றான், அவன் வயிறு அங்கு நிசமாக நிரம்பவே இல்லை. நனவில் கண்டெடுத்த காசு காய்கறிகள் வாங்க உதவிற்று. கனவில் கண்டெடுத்த காசு கருவேப்பிலைக்கும் உதவாமற்போய்விட்டது. நனவுக்கும் கனவுக்கும் உள்ள வேறுபாடு இதுதான். நனவில் ஆறு தத்துவ உணர்வுகளை மட்டுமே இழந்து வருந்திய ஆன்மாக் கனவில் இருபத்தைந்து தூல தத்துவ உணர்வுகளையும் இழந்து வருந்தியது. அவற்றின் சூக்குமங்களாகிய நிழல் உணர்வுகளே அங்கு ஆன்மாவுக்குத்துணையாக நின்றன. நனவில் இழந்த இழப்பினும் கனவில் இழந்த இழப்பு மிகப் பெரிது. அதனால் ஏற்பட்ட வருத்தமும் மிகப் பெரிதே. இதுவே கனவு அவத்தையாகும். சொப்பனாவத்தைஎன்பதும் இதுதான்.

ஆணவத்தின் சேட்டை மேலும் அதிகரித்தது. அதனால் கண்டத்தானத்தில் இருந்த ஆன்மா இதயத்தானத்திற்குத் தள்ளப்பட்டது. அங்கு ஆன்மாவை உறக்கம் ஆட்கொண்டு விட்டது. அதனால் அது உறக்க அவத்தை எனப்பட்டது. சுழுத்தி அவத்தை என்பதும் அதுதான். உறக்கத்தில் ஆன்மாத்தான் முன்னர்த்துணையாகப் பெற்றிருந்த இருபத்தைந்து சூக்குமதத்துவ உணர்வுகளில் இருபத்து நான்கினை இழந்தது. சூக்கும சித்தம் ஒன்று மட்டுமே துணையாக நின்றது. அதனால் மின்னலைப்போலத் தோன்றி உடனே மறைகின்ற கனவு போல ஒன்று அங்கு நிகழலாம். அதனை நினைத்துப்பார்க்க அங்கே புருடனும் இல்லை. மனமும் இல்லை. ஆதலாலே சித்தம்

போல ஒன்று இருந்தும் அதனால் ஆன்மாவுக்குப் பயன் ஒன்றும் இராது. கனவு நிலையில் ஏற்பட்ட இழப்பினும் உறக்க நிலையில் ஏற்பட்ட இழப்பு அதிகம். வருத்தமும் அதிகம்.

ஆணவத்தின் சேட்டை அந்த மட்டில் நிற்காது. மேலும் அதிகரிக்கும். அதனால் இதயத்தானத்திலிருந்த ஆன்மா நாபித்தானத்திற்குத் தள்ளப்படும். உறக்கம் அங்குப் பேருறக்கம் ஆகும். முன்னிருந்த சூக்கும சித்தத்தையும் ஆன்மா இங்கு இழந்து உணர்வின்றித்தவிக்கும். உயிர்ப்பு மட்டுமே உள்ளும் புறமும் போய் வந்து கொண்டிருக்கும். இழப்பும் வருத்தமும் இங்கு முன்னையினும் அதிகமே. அதனால் இது பேருறக்க அவத்தை ஆகும். துரியாவத்தை என்பதும் இதுவேதான்.

மேலும் மேலும் உயர்ந்துகொண்டேபோனஆணவத்தின் சேட்டையால் நாபித்தானத்திலிருந்த ஆன்மா அதற்குங் கீழான மூலாதாரத்திற்குத் தள்ளப்படும். அங்கு ஆன்மா உயிர்ப்புமின்றித் தனித்துக்கிடந்தே அவத்தையுறும். மல சொருபத்தில் மறைந்து அரூப சொரூபியாய் ஆன்மா நிற்கும் என்று ஆசிரியர் கூறியதற்குத் தத்துவவன்ன ரூபனாய் ஆன்மா நிற்கும் என்று சிவஞான முனிவர் உரைத்தாரே, அது தவறு. ஒவ்வொரு தானத்திலும் தத்துவ உணர்வுகளைப் படிப்படியாக இழந்து வந்து மூலாதாரத்தில் உணர்வும் உயிர்ப்புமின்றித் தனித்துக்கிடந்த ஆன்மாவுக்குத் தத்துவ வன்ன ரூபம் எங்கிருந்து கிடைத்துவிடும்? பொது புரிவதற் கென்றே சொல் வன்மை மிகுதியாகப்பெற்றிருந்த சிவஞான முனிவர்க்கு இவ்வாறெல்லாம் எழுதுவது கைவந்த கலை யாகும்.அரூப சொரூபியாய் நிற்றல் என்பதற்கு ஆன்மாத் தன் சொரூபம் இழந்து மலத்தின் சொரூபமே தனக்குச் சொரூபமாகக்கொண்டு கிடந்த நிலை என்பதே சரியான பொருள்.வன்னிதனைத்தன்னுள் மறைத்து ஒன்றாம்காட்டம் போல் என மலத்தால் மறைப்புண்டிருந்த ஆன்மாவுக்கு ஆசிரியர் எடுத்துக்கூறிய உவமையை உணர்ந்து பார்க்க வேண்டும். நெருப்பு மரத்தினுள் மறைந்து தன் வண்ண மிழந்து மரத்தின் வண்ணமாய்த் தோன்றுதல் போல

ஆன்மா மலத்தினுள் மறைந்து தன் உருவம் இழந்து மலத்தின் உருவமாயே தோன்றும் என்பதுதான் சரியானபொருள். ஆகவே அவத்தையைப்பற்றிச் சிவஞான முனிவர் உரைக்கும் போது நூல் கற்பார்க்கு நேரான பாதையைக்காட்டாமல் தவறான பாதையையே காட்டினார் என்பதுதான் எனது கருத்து. இதுபோல இன்னும் பல அவர்உரைகளில் எடுத்துக் காட்டலாம். வாது புரிவது எனக்கு நோக்கமன்று. நேரான வழியில் சென்று மெய்ப்பொருளை அணுகுவதுதான் எனது நோக்கமாயிருந்தது. அறிஞர்கள் பொறுமையாகப் படித்துச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வர வேண்டுகிறேன்.

எனக்கு நெடுநாளைய நண்பரும் எனது பெருமதிப்பிற்கு உரியவரும் சைவ சித்தாந்த சாத்திர நூல்களில் ஆழமான அறிவு படைத்தவரும் தக்கவருமான மகாவித்துவான். முனைவர் திரு. சி. அருணை வடிவேலு முதலியார் அவர்களை அணுகி, சிவஞான போத விளக்கவுரை நூற்பிரதியொன்றைத் தந்து அவரது கருத்துரை ஒன்றை வேண்டினேன். அவர்கள் கடிதமாக ஒன்றை வழங்கிக் கருத்துரை வழங்க மறுத்து விட்டார்கள். அவர்கள் எனக்கு எழுதிய கடிதமே உரை நூலைப்பற்றிய அவர்களது கருத்துரையாக இருக்கட்டுமே என்று கருதி நூல் முகப்பில் அக்கடித வாசகத்தையும்மாற்றாமல் மறைக்காமல் அச்சிட்டு நூலை நிறைவு செய்துள்ளேன். இந்த உரைநூலைக்கண்டு கருத்துரை வழங்க அவர்கள் ஒதுங்குவதற்குக்காரணம் எனக்குச் சரியாகப் புலப்படவில்லை. சாத்திர உலகில் அவர்களுக்கிருந்த சூழ்நிலை கருத்துரை வழங்க முடியாமைக்குக்காரணமாயிருச்குமோஎன்றுஒருவாறு தெளிவு பெற்றேன் அவர்களிடம் நான் தந்த உரைநூலைப் பெற்று ஐந்தாறு நாட்களில் முழுவதுமாய்ப்படித்துத் தமது போக்கிற்கு மாறாயிருத்தலை உணர்ந்து தமதுஉள்ளத்தைத் திறந்து காட்டி ஒளிவுமறைவின்றி அவர்கள் எனக்கு எழுதிய கடிதத்தை நான் படித்தபோது எனக்கு அவர்கள்பாலிருந்த மதிப்புப் பன்மடங்காய்ப் பெருகியதேயொழியக் குறையவில்லை. பெரியவர்கள் என்றும் பெரியவர்களே. எனக்கு அப்பொழுது நினைவில் வந்து நின்ற புற நானூற்று வரிகள் இவைகளே.

''ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கும்
ஒல்லா தில்லென மறுத்தலும் இரண்டும்
ஆள்வினை மருங்கிற் கேண்மைப்பாலே
ஒல்லா தொல்லு மென்றலும் ஒல்லுவ
தில்லென மறுத்தலும் இரண்டும் வல்லே
இரப்போர் வாட்டலன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயிலத்தை''

அறிஞர்கள் கடிதத்தையும் படித்து உரைநூலையும் படிக்க வேண்டும் என்பதே என் விருப்பம்.

''இடும்பைக்கே கொள்கலன் கொல்லோ குடும்பத்தைக் குற்ற மறைப்பான் உடம்பு'' என்ற வள்ளுவரது வாய்மொழிக்கிணங்க இடும்பைகளைச்சுமந்து குடும்பத்தை உயர்த்துவதையே குறிக்கோளாகக்கொண்டு எனது வாழ்நாளின் பெரும்பகுதியைச் செலவிட்டதுண்டு. அதுவும் ஆள்வினையுடைய குடிமகன் ஒருவனுக்குக் கடமையே என்பதையும் நான் அறிவேன். இப்பொழுது எனக்கு எண்பதாம் ஆண்டு ஓரிருதிங்களில் நிறைவுபெற வுள்ளது. மதிப்பும் பாராட்டும் எனது வாழ்நாளில் நான் விரும்பாதவை. அறிவுத்தொண்டாக ஏதாவதொன்றை எனது வாழ்நாளிற்குப் பிறகும் உலகில் எச்சமாக விட்டுச் செல்ல விரும்பினேன். அதுதான் இந்த உரைநூல். மெய்கண்டாரது நல்லாசியாலும் எல்லாம் வல்ல இறைவனது திருவருளாலும் அது உலகில் நின்று நிலவும்என்பது எனது நம்பிக்கை.

மெய்கண்டார் அருளிய சிவஞான போத விளக்கவுரை நூலாகிய இதனை என் சொந்தச்செலவில் அச்சிட்டு உலகிற்கு வழங்க விரும்பினேன். எனது எண்ணத்தைச் சொன்ன அக்கணமே காவேரிப்பாக்கத்தில் உயர்நிலைப் பள்ளியில் ஒரு காலத்தில் என்னிடம் பயின்ற மாணாக்கரும் என் குடும்பத்தில் பிள்ளைக்குப்பிள்ளையாய்ப் பழகியவரும், பிறகு மருத்துவப்படிப்பை முடித்து டாக்டராகித்தற்பொழுது மலேசியாவில் மருத்துவமனையொன்றை நிறுவிப்பணி புரிந்து வருபவரும், எனக்கு மூத்த மகனாம் உரிமை கொண்டவருமான டாக்டர் மு. துரைசாமி என்பார்

நூலைப்பதிப்பித்தற்குத் தமது பங்காக ரூபாய் ஆறாயிரம் கொடுத்து வழங்கினர். அவருள்ளம் மேருவினும் பெரியது. நூலைப்பதிப்பித்தற்காகும் எஞ்சிய தொகையினை என் மகள் ஞானபூங்கோதை சுப்பிரமணியமும், மகன் டாக்டர் மு. சுந்தரம் M.D., யும் ஏற்றுக்கொண்டனர். இந்த என் மக்கள் அனைவருக்கும் எனது உளம்கனிந்த வாழ்த்தும் நன்றியும் உரியன.

நூலை அச்சிடுவதற்குத் திருவத்திபுரம் பாரதி அச்சகத் தாரை அணுகினேன். அச்சக உரிமையாளர் திரு. K.N. பால கிருஷ்ணன் அவர்கள் என்னிடம் பயின்றவர். அன்போடும் உரிமையோடும் அப்பணியை முன்வந்து ஏற்றுக்கொண்டார் கள். அவர்களது அரிய முயற்சியால் இந்த உரைநூல் அழகிய பதிப்பாக வெளி வருகின்றது. அன்னார்க்கும் அவரது அச்சக ஊழியர் அனைவருக்கும் என் உளமார்ந்த் வாழ்த்தினையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கின்றேன்.

தாயும் தந்தையுமாயிருந்து என்னை இந்த உலகிற்குக் கொண்டு வந்த மீனாட்சி வையாபுரி ஆகிய என்முதுகுரவர் இருவரையும் முதலில் என் நெஞ்சில் நிறுத்திப் போற்று கிறேன். அன்றும் இன்றும் என்றும் அவர்கள் எனக்கு ''இயல்புடைய மூவரே'' அன்றோ? மூவர்-மூத்தவர்-மூப்பு உடையவர்.

தொடக்கத்தில் தமிழ் நூல்கள் சிலவற்றை எனக்குப் பாடம் சொல்லிக்கொடுத்துத் தமிழ்ச்சுவையூட்டி வளர்த்த பெரியவர் திருவத்திபுரம் மாமண்டூரார் திரு. அண்ணாசாமி முதலியார் அவர்கள்.

தமிழ்ப்புலவர் நிலைக்கு என்னை மேலும் உயர்த்திய ஆசிரியப் பெருந்தகையார் திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்.

கல்லூரியில் எனது நுண்ணுணர்வைத் தூண்டித் தொல்காப்பியம் முதலான இலக்கண இலக்கியங்களைச் சிறபபாகப் போதித்த பெருமைக்குரியவர் பேராசிரியர். கரந்தைக் கவியரசு. திரு. ஆர். வேங்கடாசலம் பிள்ளை அவர்கள்.

இந்த மூன்று ஆசிரியப் பெருந்தெய்வங்களை என் நெஞ்சம் இன்றும் மறந்ததில்லை. என்றும் மறக்காது. அந்த முப்பெருந்தெய்வங்களின் பொன்னார் திருவடிகளைப் போற்றி வணங்குகிறேன்.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய பெருமக்கள் மிகவும் உயர்ந்தவர்கள். சைவ சித்தாந்த சாத்திரவுலகில் நன்கு மதிக்கப்பெற்றவர்கள். சைவ சித்தாந்த நெறிகளைப்பரப்பி வருகின்ற திருத்தருமபுரம் மடத்தோடும், திருவாவடுதுறை மடத்தோடும் திருப்பனந்தாள் மடத்தோடும் மிக நெருக்கமான பழக்கம் உடையவர்கள்.

அணிந்துரை வழங்கியோர் வரிசையில் முதலாமவராக உள்ளவர் தஞ்சைத்தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராக இருந்து தமிழ் உலகிற்கு அரிய தொண்டாற்றி வருகின்ற திரு. ஔவை. து. நடராசன் அவர்கள். என்னை உயர்த்தி ஆளாக்கிய பெருமை மிக்க என் ஆசிரியப் பெருந்தெய்வம் திரு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை அவர்களின் முதல் வாரிசாக இருப்பவர்கள். எனது பெருமதிப்புக்கு உரியவர்கள். நான் முதலில் அவர்களை அணுகி நூலுக்கு அணிந்துரை வேண்டும் என்று கேட்டபோது மறுக்காமல் உடன்பட்டு எழுதி வழங்கினார்கள். அவர்களுக்கு எனது நன்றியை மனம்நிறைவோடு தெரிவித்துக்கொள்கிறேன். இந்த நன்றிக்கடன் அவர்கள் வழியாக என் ஆசிரியப் பெருந்தகையார்க்கும் போய்ச்சேரும் என்பது எனது நம்பிக்கை. ''தம் பொருளென்ப தம்மக்கள் அவர் பொருள் தம்தம் வினையான் வரும்'' என்பது தெய்வாக்கேயன்றோ?

அடுத்தபடியாக என் மதிப்புக்கு உரிய பெரியவர் மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்கள். அரை நூற்றாண்டுக்கு மேலாகவும் நான் அவர்களோடு பழகி வந்திருக்கிறேன். அவர்களை அணுகி உரைநூல் பிரதி ஒன்றைத்தந்து நூலைப்பற்றிய அவர்களது கருத்துரை அறிய விரும்பினேன். நூலுக்கு அணிந்துரையாக ஒன்று வழங்காவிட்டாலும் சைவசித்தாந்தத்தில் எனது பாதை வேறு என்பதை மிக அழுத்தமாகத்தமது கடிதம் வாயிலாக

வலியுறுத்தியிருக்கிறார்கள். அதை நான் முழுமனத்துடன் ஏற்றுக்கொள்கிறேன். எனது பாதை வேறு என்பதைச் சைவ உலகம் நன்கு புரிந்துகொள்ளவேண்டும் என்பதுதான் எனது பேராவல். அணிந்துரை வரிசையில் அவர்கள் கடிதத்தையும் அச்சேற்றியுள்ளேன். என் ஆவலை நிறைவு செய்த அப் பெரியார்க்கு என் மனமார்ந்த நன்றியைஉரித்தாக்குகிறேன்.

பேராசிரியர் டாக்டர் கு. சுந்தரமூர்த்தி எம்.ஏ.பி.எச்.டி. அவர்கள் என்னை நேரில் பார்க்காமலிருந்துங்கூட என் நூலைப்படித்து உரிய காலத்தில் அணிந்துரை வழங்கிச் சிறப்பித்தார்கள். அணிந்துரையோடு வந்த கடிதத்தில் அவர்கள் தமது அன்பினால் என்னை நனையவைத்து விட்டார்கள். அவர்கள் உள்ளம் மிகப்பெரியது. சைவசித்தாந் தம் மட்டுமன்று. சேனாவரையம் போன்ற சிறந்த இலக்கண இலக்கியங்களில் ஆழமான தெளிந்த புலமை உடையவர்கள் அவர்கள் என்பதை நான் அறிவேன். கல்லூரி முதல்வராக இருந்து சிறப்பாகப்பணியாற்றியவர்கள். ஓய்வுபெற்ற நிலை யிலும் ஒருநாளும் ஓயாமல் தமிழகத்தில் பல விடங்களுக்கும் சென்றுசொற்பொழிவு வாயிலாகத் தமிழையும்சைவத்தையும் பரப்பி வருகிறார்கள். அவர்களுககு என்மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

பேராசிரியர் டாக்டர். சொ. சிங்காரவேலன், எம்.ஏ., பி.எச் டி. அவர்களை, நான் நேரில் சென்று நூலுக்கு அணிந்துரை வேண்டினேன். சிரித்தமுகம், இனிமையான பார்வை, நயமான வாயுரை எல்லாம் சேர்ந்து என்னைப் பெரிதும் கவர்ந்துவிட்டன. சைவ சித்தாந்தத்திலும் தமிழிலக் கண இலக்கியங்களிலும் பெரும் புலமை உடையவர்கள். சைவ சித்தாந்தம் புதிய புதிய மெருகோடு நாளும் வளர வேண்டும் என்ற திடமான கொள்கை உடையவர்கள் என்பதை அவர்கள் பழக்கத்திலிருந்து அறிந்தேன். நூல் முழு வதையும் நன்கு படித்துப் பாராட்டி நூலுக்கு அணிந்துரை வழ்ங்கிச்சிறப்பித்தார்கள். அவர்களுக்கு என் இதயபூர்வமான நன்றியை உரித்தாக்குகிறேன்.

எல்லாவற்றுக்கும் மேலாக, இந்த வயதிலும் என் உடம்பில் ஒரு தெம்பினைக்கொடுத்து அது என்னோடு ஒத்துழைக்குமாறு செய்து, பிழை திருத்தம் முதலிய கடுமையான அச்சுப்பணிகட்கு என்னை ஓயுரமல்ஊக்குவித்துஎனக்குத் தோன்றாத் துணையாய் உள்ளிருந்து உதவியருளிய இறையருளை எண்ணி எண்ணி வழுத்துகின்றேன்.

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளாரடியாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்.

திருவோத்தூர். வையாபுரி **முருகேசன்,**
**15D-3/1 வள்ளலார் தெரு,**
**நரசிம்ம நகர்,**
**திருவத்திபுரம்-604 407.**

# ஒரு பதிலுரை

எனது அன்பிற்கும் பெருமதிப்பிற்கும் உரிய நண்பர் மகாவித்துவான் திரு. சி. அருணை வடிவேலு முதலியார் அவர்கள் தமது கடிதம் வாயிலாகச் சில குறைகளைச் சுட்டிக் காட்டினார்கள். அவற்றுக்குப்பதில் கூறுவது இங்கு என் கடமையாக இருந்தது.

திருப்பாதிரிப்புலியூர் அருள்திரு. ஞானியார் சுவாமிகள், அருள்திரு. மறைமலை அடிகளார், திரு. திரு. வி. க. திரு. சச்சிதானந்தம்பிள்ளை, திரு. மா. பாலசுப்பிரமணிய முதலியார் ஆகிய இவர்கள் எல்லோரும் சிவஞான முனிவர் கொள்கையைப்பின்பற்றியே சைவசித்தாந்தத்தைப்பரப்பி வந்தார்கள் என்று என் நண்பர் கடிதத்தில் குறிப்பிட்டார்கள் அவர்கள் மட்டும் அல்லர். மேலும் பலர் சிவஞான முனிவர் உரைகளைப்பின்பற்றியே வருகின்றனர் அதுகொண்டு சிவஞான முனிவர் உரை தவ்று கலவாத உரை என்று உறுதி யாகச்சொல்லிவிட முடியாது என்பதே எனது வாதம்.

சிவஞானபோதம் வடமொழிச் சிவஞானபோதம் நூலிலிருந்து மொழி பெயர்த்துச் செய்யப்பட்ட மொழி பெயர்ப்பு நூல் என்பதே சிவஞான முனிவர் கொள்கையாகும். இதை மேலே குறிப்பிட்ட பெரியவர்களில் பலரும் ஒப்புக் கொள்ளவில்லையே. அரும்பாடுபட்டுத்தக்க பல சான்றுகளைக் கூறி அது ஒரு முதல் நூலே என்று சாதித்து விட்டார்களே! அதனால் தவறு என்பது யார் பங்கிலும் நிகழலாம். அது இயற்கை. ''அரிய கற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால் இன்மை அரிதே வெளிறு'' என்பது திருவள்ளுவர்உணர்த்தும் சித்தாந்தமன்றோ?

சிவஞான முனிவரது பெயரைக் குறிப்பிடாமலே அவரது உரையைப் பலவிடங்களில் மிக வன்மையாக மறுத்திருக் கிறேன் என்பது கடிதத்தில் கூறப்பட்ட ஒரு குற்றச்சாட்டு. நான் மறுத்துள்ள இடங்களை நண்பர் அவர்கள் சுட்டிக் காட்டாவிட்டாலும் நானே ஒரு இடத்தைச்சுட்டிக்காட்ட விரும்புகிறேன். மறுத்தது சரியா தவறா என்பதை மட்டும் அறிஞர்கள் சீர்தூக்கிப்பார்த்து ஒரு முடிவுக்கு வரட்டுமே.

ஆறாம் சூத்திரத்துள் பதிப்பொருள் வாக்குமனாதீத கோசரமாய் நிற்பது என்பதை ஆசிரியர் உரைட்பாட்டுக்கள்ளால் விளக்கிக்கொண்டு வருகின்ற இடம் அது. பதிப்பொருள் வாக்குமனாதீதமாய் உள்ளது என்பதை உருவ வழிபாட்டு உணர்வு நெறியால் உணர்ந்ததுவும் பதிப்பொருளை உணர்ந்ததாகாது என்றும், பாவக வழிபாட்டு உணர்வுநெறியால் உணர்ந்ததுவும் பதிப்பொருளை உணர்ந்ததாகாது என்றும் ஆசிரியர் மெய்கண்டார் விளக்கிய பின்னர்ப் பெத்தகாலத்து ஆன்ம அறிவு பதிப்பொருளை உள்ளவாறு அறியாது, அறிந்து ஆன்மாவுக்குக்காட்டாது என்பதனை ஒரு உவமையால் விளக்கினார்.

''கண் அறியா மெய்யென்னக் காட்டாது அறிவு அறிந்து கண்டு'' என்பதே அங்கு ஆசிரியர் கூறிய உவமை. இதற்கு நேராகவே பொருள் காணலாம். அதுவே அந்த இடத்திற்குப் பொருத்தமாகவும் இருக்கும். அதை விடுத்து முனிவர் சொற்களை இடம்மாற்றிப்போட்டு வலிந்து பொருள் கண்டார். அந்த உவமைத்தொடர்க்கு நான் கொண்ட நேர் உரை இது. உடம்பானது தனக்குக் காட்டாயிருந்த கண்ணை அறியாதாற்போலவே ஆன்ம அறிவானது தனக்குப்பெத்த காலத்தும் காட்டாயிருந்த முதல்வனை அறியாது, அறிந்து ஆன்மாவுக்குக் காட்டாது என்பதே எனது உரை. இந்த உரை அங்குச் சொற்கள் கிடந்தவாறே கொண்டு உரைத்த உரையாகும். இதனைப் போலியுரை என்று கூறி மறுத்த சிவஞான முனிவர் ''கண் அறியா மெய் என்ன'' என்பதனை ''மெய் அறியாக்கண் என்ன'' என்று இயைத்து மெய் என்பதற்கு யாரும் கொள்ளாத உயிர் என்று வலிந்து பொருள் கொண்டும், கண் என்பதற்குக் கண்ணொளி என்று பொருள் கொண்டும் உரை வகுத்து இடர்ப்பட்டார். இவ்வாறு உரைத்தவர் உரைத்த தோடு நிற்காமல் நேராக உரைத்தவர்கள் உரையையும் போலியுரை என்று சாடினார். சாடினவர் என்ன காரணம் கூறினார் தெரியுமா? உடம்பிற்கு அறியும் தன்மை இன்மையானும் உடம்பிற்குக்கண் காட்டாதலும் இன்மையானும் அவ்வுரை போலியுரையெனறொழிக என்றுமறுத்துச் சென்றார். அங்கு அவரை நான் எவ்வாறு மறுத்தேன்

என்றால், கண்டு அறியும் அறிவு கண்ணுக்கு இருந்தாற் போலத்தொட்டு அறியும் அறிவு உடம்பிற்கும் உண்டாகலின் முனிவர் மறுத்தது வலியுடைத்தாகாது என்று கூறி மறுத்தேன்.

உடம்பிற்குக் கண் காட்டாதல் இல்லை என்றாரே, அதற்கும் நான் ஒரு எடுத்துக்காட்டுக்கூறி 'உண்டு' என்று விளக்கினேன். ''மங்கிய இருளில் காட்டு வழியில் நடந்து செல்கின்றுழிக் காலிற்பட்ட பரிசம் தாம்பினதா பாம்பினதா என்பதை அங்குக் கண்ணே அறிந்து காட்டுமாதலின் கண் உடம்பிற்குக்காட்டாதலும் அமையும் என்று கூறி விளக்கினேன். அறிஞர்கள் இரண்டு உரைகளையும்படித்துப்பார்த்து ஒரு முடிவுக்கு வரட்டுமே என்பதுதான் எனதுவேண்டுகோள்.

கண்ணுக்கு ஒரு அறிவு உண்டு. அது பார்த்துத்தெரிந்து கொள்கின்ற அறிவு. அது காட்சி அறிவு என்று சொல்லப் படும். அதுபோல உடம்பிற்கும் ஒரு அறிவு உண்டு. அது ஒரு பொருளைத்தொட்டுத்தெரிந்து கொள்கின்ற அறிவு. அது ஊற்றறிவு அல்லது உற்றறிவு என்று சொல்லப்படும். பரிச அறிவு என்பதும் அதுவேதான். பரிச அறிவினையுடைய உடம்பானது பரிசத்தைத்தான் உணருமே ஒழியக் காட்சியை உணராது. அதுபோலப்பெத்தகாலத்து ஆன்ம அறிவானது உலகைத்தான் அறியுமே ஒழிய இறையை அறியாது என்பது தான் ஆசிரியர் அங்குக் கருதியபொருளாகும். இதைப்போய்ச் சிவஞான முனிவர் மறுத்தாரே! அது வேறுபட்ட உரையா? இது வேறுபட்ட உரையா என்பதை அறிஞர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அவர் பிறரை மறுத்ததை மட்டும் ஏற்றுக் கொண்டு அவரைப் பிறர் மறுப்பது சரியன்று என்று கூறுவது எவ்வாறு சரியாகும்?

ஓரிடத்தில் கேலியும் செய்து எழுதியதாகக் கடிதத்தில் மற்றொரு குற்றச்சாட்டும் கூறப்பட்டது.

''எந்த இடத்தில் கேலி செய்தேன்'' என்று அங்கும் இடம் குறிக்கப்படவில்லை. என்றாலும் இதுவாகத்தான் இருக்கும் என்று நானாக ஊகித்தேன். அந்த இடம் இது

சத்துக்கு எதிராக அசத்துச் சூனியமாம் ஆகலின் சத்து அசத்தை அறியாது, அறிந்து புசிக்காது. அசத்தும் சத்தின் முன் சூனியமாய் இல்லாத ஒன்றே ஆகலின் அதுவும்சத்தினை அறியாது, அறிந்து புசிக்காது. இந்த இரண்டையும் அறிந்து புசிப்பதான மூன்றாவதொரு பொருளும் உண்டு. அதுவே ஆன்மா என்று ஆசிரியர் விளக்க வந்த இடம் அது.

அசத்தினுக்கு உணர்வு இன்று என்றது அதுநான் நிரு பிக்கில் இன்றாகலான் என்பது இங்கு ஆசிரியர்மேற்கொண்ட மேற்கோளாகும்.

இங்கு அதுதான் என்ற சுட்டு அசத்தைக் குறித்தது. இன்றாகலான் என்பதற்குச் சத்தின்முன்சூனியமாய்இல்லாத ஒன்றே ஆகலான் என்பது எனது உரை. இன்று ஆகலான் என்பதற்கு அறிவு இன்று ஆகலான் என்று சிவஞானமுனிவர் உரை கூறினார். சத்தினுக்கு முன்னால் அசத்துச்சூனியமாம் என்றதால் அசத்து இல்லாத ஒரு பொருளே ஆயிற்று. இல்லாத ஒருபொருளுக்கு அறிவுஉண்டா இல்லையா என்று ஆராய்வது முயற்கோடு குட்டையா நெட்டையா என்று ஆராய்வது போன்றதாம் என்று விளக்கினேன். அது அவர் களுக்குக் கேலியாகத் தோன்றியிருக்கலாம். கேலி செய்யும் நோக்கம் எனக்கு அறவே இல்லை. உள்ளதை எழுதினேன். அவ்வளவுதான்.

என் உரைகளில் சில புதியனவாயும் உள்ளன என்று மற்றொரு குற்றச்சாட்டும் கடிதத்தில் கூறப்பட்டது. அங்கும் இடம் குறிக்கப்படவில்லை. ஊகத்தால் இதுவாகத்தான் இருக்கும் என்று அறிந்தேன். அவத்தைகளைப்பற்றி ஆசிரியர் விளக்க வந்த இடம் அது.

ஆசிரியர் மெய்கண்டார் பிறமதக்கோட்பாடுகளை மட்டும் தமது நூலில் மறுக்கவில்லை. சைவ சித்தாந்தத்தில் ஊனம்பட்டுப்போன சில கோட்பாடுகளையும் சிந்தனைக்கு ஒவ்வாத சில கருத்துக்களையும் கூடத் தமது நூலில் குறிப் பாக மறுத்திருக்கிறார். அப்படிப்பட்டஇடங்களில்ஒன்றுதான் அவத்தையைப்பற்றி ஆசிரியர் கூறவந்த இடமும். அவத்தையைப்பற்றி முன்னால் உணர்ந்தவர்கள் எல்லாருமே

சரியாக உணரவில்லை என்பதே ஆசிரியர் கருத்தாக இருந்தது. இதை முதலில் நாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

ஆன்மாக் கேவலத்துள் அழுந்தும்போது கருவிகளைச் சார்ந்து துன்புறுவதுதான் அவத்தை என்பது அவர்கள் கருத்தாக இருந்தது. அதை ஆசிரியர் மெய்கண்டார் ஏற்க வில்லை. ஆணவத்தின் சேட்டையால் ஆன்மாத்தான் சார்ந்திருந்த் தத்துவ உணர்வுகளை இழந்து துன்புறுதலே அவத்தை என்பதுதான் ஆசிரியர் கோட்பாடாக இருந்தது.

இங்கு உரை வகுத்த சிவஞான முனிவர் தத்துவங்களையும் தாத்துவிகங்களையும் ஒன்றாகச்சேர்த்துக் குழப்பி விட்டார். அதற்குக்காரணம் அவருக்கு முன்னால் இருந்தவர்கள் செய்த தவற்றினை அவரும் மேற்கொண்டது தான் மெய்கண்டார் தத்துவங்களை மட்டும்தான் கணக்கில் கொண்டாரே ஒழியத்தாத்துவிகங்களைக் கணக்கில் கொள்ளவே இல்லை. வாக்காதி மெய்யாதி ஐயைந்து என்றால் அந்தஇருபத்தைந்தும் தத்துவங்களேதான், தாத்துவிகங்கள் அவற்றில் சேரவில்லை. அங்கு முனிவர் உரை வகுக்கும்போது வாக்காதி மெய்யாதி ஆகிய பத்தும்அந்தக்கரணங்கள் நான்கும் புருடன் ஒன்றுமாகப் பதினைந்து தத்துவங்களோடு சத்தாதி வசனாதி பத்துத் தாத்துவிகங்களையும் சேர்த்து இருபத்தைந்து என்று கணக்குக்கொடுத்தார். இதுதான் குழப்பம் ஆன்மா நனவு நிலையில் இருந்தபொழுது மாயையால் விளைந்த முப்பத்தொரு தத்துவ உணர்வுகளோடும் கூடியிருந்து ஆணவத்திற்கு மாறாக எதிர்வினை புரிந்து சமனிலை கடைப்பிடித்து வரும். அதுதான் ஆன்மாவுக்கு நனவு நிலை எனப்பட்டது. ஆணவத்தின் சேட்டை அதிகரித்ததன் விளைவாக ஆன்மா நனவு நிலையில் இருந்த பொழுதே கலை முதலான ஆறு தத்துவ உணர்வுகளை இழந்து வருந்தும். அவ்வாறு இழந்து வருந்திய நிலைதான் நனவு அவத்தை என்று சொல்லப்பட்டது. நனவு அவத்தையில் ஆன்மாவுக்கு எஞ்சியிருந்த தத்துவ உணர்வுகள் இருபத்தைந்து மட்டுமே. அவ்விருபத்தைந்தும் தத்துவங்களே ஒழியத் தாத்துவிகங்கள் அல்ல. அவ்விருபத்தைந்து தத்துவங்களாவன :- தன்மாத்திரை ஐந்து, பூதம் ஐந்து

ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக் கரணம் நான்கு, புருடன் ஒன்று ஆக இருபத்தைந்தாம் இவ்விருபத்தைந்தும் தூல தத்துவங்கள் என்றே நாம் இங்கு உணரவேண்டும். ஏனென்றால் இவ்விருபத்தைந்தின் சூக்கும நிழல் உணர்வுகள் கனவு அவத்தையில் ஆன்மாவுக்குத் துணையாக நிற்கும் என்பதால்தான்.

முனிவர் உரையில் இங்குக் கூறப்பட்ட இருபத்தைந்து தத்துவங்களில் தன் மாத்திரைகள் விலக்குண்டது ஏன்? பூதங்கள் விலக்குண்டது ஏன்? ஆன்மா நனவில் இருந்த பொழுது இவற்றின் உணர்வுகள் ஆன்மாவுக்கு இருக்க மாட்டாவா? நிலத்தை அதுஎண்ணி பார்க்காதா? நீரைக் குடித்து மகிழாதா? தீயைக்காணாதா? காற்றைச் சுவாசிக்காதா? ஆகாயத்தை அண்ணாந்து பார்க்காதா? அவைகள் எப்படி விலக்குண்டன? இந்தக்கேள்விகளுக்கு அவர்கள் உரைகளில் விடை கிடைக்காது. விலக்குண்ட கலை முதலான ஆறு தத்துவங்களுக்கு மட்டும் காரணம் கூறினார் முனிவர். அந்தக்காரணமும் பொருந்தாத காரணம். அந்த ஆறும் அவத்தைக்கு ஏது வாகாமையின் ஆசிரியர் உடன் எண்ணாராயினார் என்று முனிவர் காரணம் கூறினார். அவத்தைக்கு ஏது ஆணவ மலமா? கலை முதலான தத்துவங் களா? கலை முதலான தத்துவ உணர்வுகளைக்கொண்டே ஆன்மா ஆணவத்தின் சேட்டைகளுக்கு எதிர்வினைபுரிந்து அவத்தைக்கு ஆளாகாமல் சமநிலை கடைப்பிடித்து வந்தது. அதுதான் சகல நிலையில் நனவு நிலை என்று சொல்லப் பட்டது. விழிப்புநிலை என்றதும் அதுவேதான். நனவு நிலை யில் ஆன்மா முப்பத்தொரு தத்துவங்களுடன் சார்ந்திருக்கும். நனவு அவத்தையில் அது அவற்றுள் ஆறினை இழந்து இருபத்தைந்து தத்துவங்களுடன் சார்ந்திருக்கும். ஆணவத் தின் சேட்டையால் ஆன்மா இழந்த ஆறு தத்துவங்களும் அவத்தைக்கு ஏதுவாகாமையால் விலக்குண்டன என்று சொன்னால் அதை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? ஐந்து அவத்தைகளிலும் ஆன்மாச் சார்ந்திருக்கும் கருவிகள் அவர் கள் உரைகளில் இப்படித்தான் மாறாகவே இருக்கின்றன. அனுபவத்திற்கு ஒத்துவராததை ஆசிரியர் குறிப்பாக மறுத் திருப்பதையும் அவர்கள் உணர்ந்து பார்க்கவில்லை.

உயிர்ப்படக்கத்தில் ஆன்மாப்புருடன் ஒன்றோடு மட்டும் கூடியிருக்கும் என்று அவர்கள் சொல்கிறார்கள். அதுவும் பொருந்தாத கூற்றே ஆகும்.புருடன் என்பது ஒரு தத்துவமா யிற்றே.உயிர்ப்பும் உணர்வுமில்லாத ஒரு அவத்தைநிலையில் புருடனுக்கு மட்டும் என்ன வேலையிருக்கும். கேள்விக்குப் பதில் கிடைக்காது. கிடைத்தாலும் அது சரியான பதிலாக இருக்காது. இப்படிக்குழறுபடியானநிலையில் அவத்தையைப் பற்றி அவர்கள் உரைபோய்க்கொண்டே இருக்கிறது. இன்னும் சகலத்தில் கேவலம் என்றும் சகலத்தில் சகலம் என்றும் சகலத்தில் சுத்தம் என்றும் அவர்கள் அவத்தைகளை வளர்த்துக்கொண்டே போவார்கள். சகலத்திற் கேவலம் என்பதை ஒப்புக்கொள்ளலாம். சகலத்தில் சகலம், சகலத்தில் சுத்தம் என்பவை புரியாதவை. புரியவைக்க முடியாதவை. அவற்றால் எந்த ஒரு நிலையானபயனும் சாத்திரவுலகிற்குக் கிடைத்துவிடாது. இப்படி அவத்தைகளைப் பற்றித் தெளி வில்லாத கருத்துக்கள் சைவ சித்தாந்தத்தில் மலிந்திருந்தன வாதலால் ஆசிரியர் குறிப்பாகவே அவற்றை மறுத்திருக் கிறார். ''ஒன்று அணையா மூலத்து'' என்று ஆசிரியர் தெளி வாகவே கூறினார். மூலாதாரத்தில் ஆன்மாக் கருவிகளுள் ஒன்றனையும் சாராது தனித்திருந்தே துன்புறும் என்பதே ஆசிரியர் கருத்தாக இருந்தது. அணையா மூலத்து ஒன்று என மாற்றிப்புருடனைக் கொண்டார் முனிவர். எந்த ஒரு கருவியும் அணையாத மூலத்தில் புருடன் மட்டும் எவ்வாறு அணைந்தான் என்று கேட்டால் விடை கிடைக்காது. படை கொடுபவனிவந்த மன்னன் கடைதொறும் நிறுத்திக்காவலும் இட்டு அந்தபுரத்துக்குள் சென்று ஆனந்தமாகஉறங்கினாற் போலஎன்று கற்பனைசெய்து மகிழ்ந்தார்கள்.ஆன்மா ஆனந் தமுறும் இடமா அது? ஆணவத்தின் சேட்டையால் உணர்வு இழந்து உயிர்ப்பு இழந்து உயிர்ப்பொருளாயிருந்த ஆன்மாச் சடப்பொருள் ஆனநிலைமையன்றோ அது. அந்தப்பாட்டுக்கு எதிர்ப்பாட்டாக நாமும் ஒன்று இங்குப்பாடலாமே! படை கொண்டு போருக்குப்போன மன்னன் தன் படைகளை ஒவ் வொன்றாக இழந்து ஒவ்வொரு இடத்தில் பதுங்கியிருந்து முடிவில் அனைத்தையும் இழந்து அந்தகாரத்தில் தனிமைப் பட்டு அவத்தையுற்றாற்போல என்று பாடலாமே. இது

அவத்தைக்குப் பொருத்தமான பாட்டாகவும் இருக்கலாம். இப்படி அவத்தைக்குக் குழறுபடியாக உரை எழுதிவிட்டுத் தெளிவான உரையைப் புதுமையான உரை என்று கேலி செய்தால் நாம் அவர்களுக்கு என்ன பதிலைக்கூறமுடியும்? அறிஞர்கள் படித்துச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வர வேண்டுகிறேன்.

திருவோத்தூர் வையாபுரி முருகேசன்.



# நூற்பாயிரம்

உரையாசிரியர் குறிப்பு:- சிவஞானபோதத்திற்கு நூலுக்குப் பின்னால் ஒன்றும் முன்னால் ஒன்றுமாக இரண்டு பாயிரச்செய்யுட்கள்பதிப்புக்களில்காணப்பட்டன. இரண்டுமே நூலாசிரியர் காலத்துக்குப் பிந்தியவை என்பதே தெளிவு. பின்னால் உள்ளது வெண்பாவால் அமைந்தது. முன்னால் உள்ளது அகவற்பாவால் இயன்றது, வெண்பாவால் அமைந்த பாயிரச்செய்யுள் காலத்தால் முந்தியதாக இருக்கலாம் என்று தெரிகிறது. வெண்பாப்பாயிரத்தால் நூலாசிரியரது ஊரும் இயற்பெயரும் தெரியவில்லை. அகவற்பாப் பாயிரத்தால் அவையிரண்டும் தெரிகின்றன. பதிப்புக்களில் நூலாசிரியர் வரலாறு ஒன்றுக்கொன்று முரண்பட இருப்பதால் ஆசிரியர் மூலத்தை உண்மையாக அறிய முடியவில்லை என்பதே எனது கருத்தாக இருந்தது. விரிவு இந்நூலில் நூலாசிரியர் வரலாறு என்ற பகுதியில் கண்டு தெளியலாம்.

பாயிரச்செய்யுள் (ஒன்று)

**எந்தை சனற்குமரன் ஏத்தித் தொழுமியல்பால்**
**நந்தி அருள்செய்த ஞானநூல் சிந்தைசெய்திப்**
**போதுரைத்தான் மெய்கண்டான் பூதலத்தோர் தாமுணர**
**ஏது திருட் டாந்தத்தால் இன்று.**

கண்ணழிவு : எந்தை சனற்குமரன் ஏத்தி தொழும் இயல்பால் நந்தி அருள்செய்த ஞானநூல்-நூலினை மெய்கண்டான் சிந்தை செய்து பூதலத்தோர் தாம்-தாமும் உணர இப்போது இன்று ஏது திருட்டாந்தத்தால் (மேற்கோளும் சேர்த்து) உரைத்தான்.

பொழிப்புரை :- எம் தந்தையாகிய சனற்குமார பகவான் பலவாறாகத் துதித்துத்தொழுத வகையாலே திருநந்திதேவர் அவர்க்கு உபதேசித்தருளிய ஞானபாதப் பொருள்களை எல்லாம் ஆகமங்களில் உள்ளபடி திருவுளத் தடைத்து அவற்றைப் பூதலத்தில் உள்ளாரும் உணரும்படியாகப் பன்னிரண்டு சூத்திரங்களால் சிவஞான போதம் என்ற

தமிழ் ஞான முதல் நூலாகச்செய்து அதற்கு மேற்கோள் ஏது திருட்டாந்தங்களோடு கூடிய உரையும் வகுத்தருளினான் எ. று.

எனவே சிவஞானபோத முதனூலாசிரியனும் உரையாசிரியனும் மெய்கண்டான் ஒருவனே என்ற படியாம்.

மரபு வழி வந்த ஞானபாதப் பொருள்கள் ஆகமங்களில் ஆங்காங்குச் சிதறிக் கிடந்தவற்றையும், தனக்கு முன்னால் விளங்கிய திருவியலூர் உய்ய வந்த தேவநாயனார் முதலியோர் உரைத்த ஞான நூற்பொருள்களையும் உளங்கொண்டே மெய்கண்டான் இந்தச் சிவஞான போதம் ஆகிய முதனூலைப் பெத்தம் முத்தியாகிய இரண்டும் அமையப் படைத்து உரையும் வகுத்தானாகலின் "சிந்தை செய்து இப்போது உரைத்தான்" என்றார் பாயிரம்பாடினார். இப்போது உரைத்தான் என்றதால் தனக்கு முன்னால் விளங்கிய திருவியலூர்த்தேவர் முதலானோரையும் உளங்கொண்டு உரைத்தான் என்றதாம். ஞானநூல்-ஞானபாதப்பொருள்கள் எனவே அவை நூல் வடிவில் இல்லை என்பதும், ஆகமங்களில் இங்கொன்றும் அங்கொன்றுமாய்ச் சிதறிக்கிடந்தன என்பதும் பெற்றாம். அவற்றையெல்லாம் திரட்டியெடுத்து உளங்கொண்டு முதனூலாகச் செய்த பெருமை ஆசிரியன் மெய்கண்டானையே சாரும் என்பதாம். வடமொழியிலும் இதுபோல ஒன்று பன்னிரண்டு சூத்திர அளவில் மட்டும் உள்ளதே என்றால் அது இதிலிருந்து வடமொழி வல்லுநரால் பெயர்த்தெழுதிக்கொண்டது என்பதே சைவ சித்தாந்தப்பேரறிஞர்களின் துணிபு. அவை முன் எப்பொழுதோ நடந்து முடிந்துபோன வாதங்கள். அவற்றுக்கு இப்பொழுது இடமில்லை என்றே உணரலாம். ஏது திருட்டாந்தம் என்றதால் மேற்கோளும் உடன் சேர்ந்தது. அம்மூன்றும் நூலுக்கு அமைந்த உரைப்பகுதிகளாம். அவற்றுள் திருட்டாந்தம் என்பது உரை வடிவில் இல்லை, உரைப்பாட்டு வடிவில் உள்ளது என்பது தோன்ற "உரைத்தான்" என்றதாம். இன்று என்றது இக்கால எல்லையில் என்றதாம். என்றது பாயிரம் பாடியவர்க்கு முன்னாலும் இருந்திருக்கலாம் என்பதுதான். மெய்கண்டான் என்றதால் அவன் ஊரும்

பேரும் மறையவே வாழ்ந்தவன் என்பது பெற்றாம். மெய்கண்டான் என்றது மெய்கண்ட காரணத்தால் அவற்கு உலகோரிட்டு வழங்கிய பெயராம் எனவே அறிய லாம். அல்லதூஉம் நூலிற் பலவிடத்தும் மெய்கண்டான் என்று ஆசிரியன் ஆண்டிருந்தது கொண்டும் உலகோர் அவனை அவ்வாறு உணர்ந்திருக்கலாம் என்பதுதான்.

ஆசிரியன் மெய்கண்டான் உலகியல் கடந்த பெற்றி யோன் ஆதலாலும் அவன் செய்த நூலும் உலகியல் கடந் ததேயாதலாலும் ஆக்கியோன் பெயர் முதலாயின பாயிரத் துக்கேற்பக்கொணர்ந்து கூறும் கடப்பாடின்றாம் என வுணர்க. இப்பாயிரச்செய்யுள் தானும் இன்றெனினும் நூலுக்கோ நூலாசிரியனுக்கோ பெருமை குன்றிவிடாது என்பதுதான். ஆகமங்கட்குப்பாயிரம் இல்லை என்பதால் அவற்றின் பெருமை குன்றிப்போகவில்லையே!

இனிப்பாயிரச்செய்யுள் (இரண்டு) காண்போம்.

# சிறப்புப் பாயிரம்

மலர்தலை உலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளின் கண்டு கண்ணிருள்தீர்ந்
தருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர் சிவ ஞான போதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல் சூழ் வெண்ணைச் சுவேதவனன்
பொய் கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

என்பது பாயிரச்செய்யுள். இது இந்நூலை ஆக்கியோன் பெயர் முதலியன உணர்த்துகின்றது.

இதன்பொழிப்புரை :- விரிந்த இடத்தையுடைய உலகின் கண்ணே பலராலும் புகழப்படும் ஞாயிறு புறவிருள் கெடத்தோன்றிய வழியால் அதுவரையில் காண்டல் செல்லா திருந்த கண் காணுந்திறனைப் பெற்றாற்போல அகவிருள் கெடப் பெரும் பெயர்க் கடவுள் நெருங்கி வந்த வழியால் அகக்கண் முதற் பொருளைக் காணுந்திறன் பெற்று, அங்ஙனம் பெற்ற வதனால் மலவிருளும் கெட்டு, அவ்வாறு கெட்டநிலையில் உடல் உயிர் இறை ஆகிய முப்பொருளையும் ஆராய்ந்து தெளிந்த வகையானே, முனிவர் கூட்டத்திற்கு மயக்கந்தீர நந்தி உபதேசித்தருளிய ஞான பாதப் பொருளையெல்லாம் திரட்டி உயர்ந்த சிவஞான போதம் என்னும் முதனூலாக்கி அதற்கு ஏதுக்களோடு கூடிய மேற்கோள்களானும் உரைப்பாட்டுக்களானும் ஆகிய வார்த்திகப் பொழிப்பென்னும் உரையும் வகுத்தருளியவன் யாவனோ என்னில், பெண்ணை நதியால் சூழப்பட்ட திருவெண்ணெய் நல்லூரில் தோன்றியவனும், சுவேதவனன் என்ற பிள்ளைத் திருநாமத்தையுடையவனும், பொய்யான அசத்துக்களைக் கண்டு விலகியவனும், மெய்யான சத்துப்பொருளைக் கண்டு தெளிந்தவனும், அதனால் மெய்கண்டதேவன்

என்னும் சிறப்புப் பெயரைப்பூண்டவனும், வலிமிக்க பிறவிப் பகையைக் கடந்தவனுமாகிய-தவ சிரேட்டர்களது அடிமலர் களைச்சூடிய தலைமைப்பாட்டையுடையோனாவான் எ. று.

கோ இல் கோவில் என்றாகற்பாலது கோயில் என்று ஆனாற்போல மா இருள் மாவிருள்என்றாகற்பாலதுமாயிருள் என்றாயிற்று. அது மரூஉமொழி. உலகை வாழ்விக்கும் ஞாயிற்றினைப் பல சமயத்தவரும் போற்றுவராகலின் பலர் புகழ் ஞாயிறு எனப்பட்டது. ஞாயிறு படரினல்லது காண்டல் செல்லாக்கண் என அல்லதில் வாய்ப்பாட்டாற் கூறியவத னால் ஞாயிறு தோன்றாதிருந்தவரை காண்டல் செல்லா திருந்தகண் அது தோன்றிய வழிக்காணுந்திறனைப் பெற்ற தென்று உரைக்கப்பட்டது. உலகின் புறவிருள் கெடத் தோன்றும் ஞாயிறு போல முத்தான்மாக்களின் அகவிருள் கெடப்பெரும் பெயர்க்கடவுள் அன்னாரை நெருங்கி வருமாக லின் ''ஈண்டிய பெரும் பெயர்க்கடவுள்'' என்றதாம். பெரும் பெயர்க்கடவுள் என்றது ஒன்றானும் குறைவில்லாதபூரணனா கிய பதிப்பொருளைச் சுட்டியது. கடவுளின்-கடவுளாலே, கடவுளருளாலே. கண் கண்டு என மாற்றுக. கண் என்றது இங்கு ஞானக்கண் என்றவாறாம். கடவுளருளால் கிடைத்த ஞானக்கண்ணால் அக்கடவுளைக்கண்டு என உரைக்க. அங்ஙனம் கண்ட மாத்திரத்தானே மலவிருள்கெடுமாதலாலே கண்டு இருள் தீர்ந்து என்றதாம். குரம்பை-குடில். அது இங்கு உடம்பைக் குறித்தது. உடம்பு இடும்பைக்குக் கொள் கலனாதலால் ''அருந்துயர்க் குரம்பை'' எனப்பட்டது. கண்ணாடியைக் காணும் ஒருவற்குக் கண்ணாடி தன்னையும் தன்னுள் இயங்கும் உருவ நிழலையும் வேறு வேறாய்ப் பிரித்துக்காட்டுவது போல உடம்பைக்காணும் சிவஞானிக்கு உடம்பு தன்னையும் தன்னுள் இயங்கும் ஆன்மாவையும் வேறு வேறாய்ப்பிரித்துக் காட்டுமாதலின் ''குரம்பையின் ஆன்மா நாடி'' என்றதாம். ஆன்மா நாடி என்றதால் ஆன்மாவுக்குள் ஆன்மாவாய் விளங்கும் பரமான்மாவையும் அறிந்து என்றவாறாம். எனவே உடல் உயிர் இறை ஆகிய முப்பொருளையும் ஆராய்ந்து தெளிந்து என உரைக்கப் பட்டது. இத்துணையும் இந்நூலாசிரியன் நூலைப்படைத்தற் குரிய தகுதிகளாகக் கூறப்பட்டன. மயர்வு-மயக்கம். அது

முனிகணத்தவர்க்கு இருந்தது. நந்தி உபதேசத்தால் அது நீங்கியது. அளித்த-அளிக்கப்பட்டது சிவஞானம். அந்த ஞானபாதப்பொருளைத் திரட்டியே மெய்கண்டதேவன் சிவஞான போதம் என்னும் முதல் நூலாக்கினான். எனவே இது மொழிபெயர்ப்பு நூல் அன்று என்பது பெற்றாம். சிவஞான போதம் உரைத்தோன் என்றதால் சிவஞான போதம் என்ற நூலையும் ஆக்கி அதற்குவார்த்திகப்பொழிப்பு என்னும் உரையினையும் வகுத்தோன் என்றபடியாம். வார்த்திகப்பொழிப்பு என்பது மேற்கோள்களானும் ஏதுக் களானும் உரைப்பாட்டுக்களானும் ஆனது. வெண்ணை என்றது திருவெண்ணெய் நல்லூரை. அது நூலாசிரியன் வாழ்ந்த ஊர். சுவேதவனன் என்பது அவனது பிள்ளைத்திருநாமம். மெய்கண்டதேவன் என்பது அந்தச்சிவஞானிக்கு உலகோர் இட்டு வழங்கிய சிறப்புப்பெயர். சிவஞானிகள் தாம் பிறந்த ஊரும் பேரும் மறையவே வாழ்வர் என்பதால் இந்நூலாசிரியற்குப்பிள்ளைப் பெயர் மறைய மெய்கண்டான் என்ற சிறப்புப்பெயரே நிலைத்து விட்டது. பவப்பகை கடந்தவன் என்றதால் பேரா வியற்கைத்தாகிய பேரின்ப வீட்டினைப் பெற்றவன் என்ற தாம். அன்னோன் மீளவும் பிறவிக்கு வாரான் என்பதே. தவரடி புனைந்த தலைமையோன் என்றதால் தவசிரேட்ட ராகிய திருவேடத்தாரைச் சிவன் எனவே கண்டு வழிபட்ட வன் என்றதாம். திருவேடத்தாரை வழிபட்டவன் என்றதால் சிவாலயத்தையும் அவ்வாறே கருதி வழிபட்டவன் என்ற தாம். அசிந்திதனாக நின்ற பதியைச் சிந்திதனாகக்கண்டு வழிபடுவது சீவன் முத்தராயினார்க்குத் தேகாந்த பரியந்தம் உரிய கடப்பாடாம் என்று அவன் செய்த நூலில் அவனே முடித்துக் கூறியது கொண்டு அவ்வாறு உரைக்கப்பட்டது. பெருமை என்றுமே பணியுமாமன்றோ.

அல்லதை என்புழி வந்த ஐகாரம் சாரியை. பெண்ணைப் புனல் சூழ் வெண்ணைச் சுவேதவனன் என்புழி வெண்ணை என்பது ஓரடியின் கண்ணே சீரெதுகை நோக்கி அவ்வாறு வந்தது. வெண்ணெய் நல்லூர் என்பதேஇலக்கணமுடையது. அல்லதூஉம் அதனை மரூஉ எனினுமாம்.

கண்டு தீர்ந்து நாடி உரைத்தோன் என முடிக்க.

இந்தப் பாயிரச்செய்யுளைப் பாடினார் பெயர் தெரிய வில்லை. பாண்டிப்பெருமாள் விருத்தி உரைநூல் பதிப்பு ஒன்றில் அருணந்தி சிவாசாரியார் பாடினார் என்று காணப்பட்டது.

இது ஒரு ஞானநூல் ஆதலானும், இதனைச்செய்த ஆசிரியன் உலகியல் கடந்த பெற்றியோன் ஆதலானும் சிறப்புப் பாயிரத்திற்கு வேண்டும் பிற செய்திகளையெல்லாம் வலியக்கொணர்ந்து உரைக்கும் கடப்பாடின்றாம் எனக்கருதி வாளா போயினம். நூல் கற்பார்க்கு மனவெழுச்சி தோன்றற் கான நுண் திறன்கள் நூலின்கண் நிறையக் கிடந்தன. கற்பார் அதனைப் பெரிதும் உணர்வர்.

பாயிரம் முற்றியது.

# மெய்கண்டான் அருளிய

# சிவஞான போதம்

## விளக்கவுரை

**காப்புச் செய்யுள்**

கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே

என்பது காப்புச்செய்யுள். இது ஆசிரியன் மெய்கண்டான் தனக்கு மெய்ஞ்ஞானம் அருளிய திருவெண்ணெய் நல்லூர்ப் பொல்லாப் பிள்ளையாரை நூல் முதற்கண்ணே நினைவு கூர்ந்தது. குருவணக்கம் எனினுமாம்.

கண்ணழிவு : கல் ஆல் நிழல் மலை வில்லார் அருளிய பொல்லார் இணை மலர் நல்லார் புனைவர் ஏ என்பது.

பொழிப்புரை : கல்லால மரத்து நிழலில் எழுந்தருளியிருந்த வரும், மலையை வில்லாகவுடையவருமான பரமேச்சுவரனா ரால் அருளப்பட்ட பொல்லாப்பிள்ளையார் என்னும் திருப் பெயரையுடைய மூத்த நாயனாரது இரண்டு மலர்போன்ற திருவடிகளையும் ஞானிகள் தம் தலைமேல் சூடுவர் என்றவாறு.

என்வே யாமும் அதுவே செய்யக்கருதினம் என்பது சொல்லெச்சம்.

கல்லால மரத்து நிழலில் எழுந்தருளியிருந்தது தம்மை வழிபட்டாரை அருளுதற்கு. மலையை வில்லாக வளைத் தெடுத்தது அன்னார்க்கு ஊறுவிளைவித்தாரைக் கொன்று களைதற்கு. எனவே, அப்பெருமானாரால் அருளப்பட்ட மூத்த நாயனாரும் அத்தன்மையர் என்றவாறாம். அவர் தாமும் தம்மை வழிப்பட்டார்க்கு ஞானத்தை அருளி அவர்க்கு ஊறுவிளைவிக்கும் பாசத்தைக் களைவர் என்றதாம்.

இறைவன் தன்னை வழிபட்ட சனகன் முதலிய நால்வருக்கும் உண்மை ஞானம் உபதேசிக்கக் கல்லால மரத்து நிழலில் தென்திசை நோக்கி யோகியுருவில் குருவாய் எழந்தருளியிருந்தான் என்பதும், உலகிற்கு ஊறு விளைவித்து வந்த திரிபுரத்து அவுணரைக்கொன்று களைய மேருமலையை வில்லாக வளைத்தெடுத்தான் என்பதும் மரபாக அறிந்து வரும் செய்திகளாம்.

''ஓரால் நீழல் ஒண் கழல் இரண்டும் முப்பொழுது ஏத்திய நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை''. என்றும், ''சிலையது வெஞ்சிலையாகத் திரிபுரம் மூன்று எரி செய்த இலை நுனைவேல் தடக்கையன் ஏந்திழையாள் ஒருகூறன்''. என்றும் வருவன திருஞானசம்பந்தர் திருவாக்குக்கள்.

பொல்லார் எனபது திருவெண்ணெய் நல்லூரில் கோயில் கொண்டு விளங்கும் பொல்லாப்பிள்ளையாரைக் குறித்தது. பொள்ளார் என்றது பொல்லார் என மருவியதாகக் கூறுவர். உளியினால் போழப் படாதவர் அதாவது சுயம்புவாய் எழுந்தவர் என்பது அதன்பொருள்.

இணை மலர் என்றதால் திருவடிமலர் இரண்டையும் என்று உரைக்கப்பட்டது. அடியை மலர் என்றது உருவகம்.

நல்லார் புனைவர் என்றதால் தனக்கும் அது உடன் பாடாம் என்று ஆசிரியன் குறிப்பித்தானாகக் கொள்க.

ஆல்நிழல் என்றும் மலைவில் என்றும் வந்த குறிப்புக்களால் இறைவன் யோகியாயும் போகியாயும் இருந்து உலகை வாழ்விப்பன் என்பது உணரலாம். இவ்வாறே

''நன்றாக நால்வர்க்கும் நான்மறையின் உட்பொருளை
அன்று ஆலின் கீழிருந்து அங்கு அறம் உரைத்தான்
காணேடி
அன்றாலின் கீழிருந்தங்கு அறம் உரைத்தானாயிடினும்
கொன்றான் காண்புரம் மூன்றும் கூட்டோடேசாழலோ''.

எனத் திருவாதவூரடிகளும் அருளிச்செய்தமை காணலாம்.

இனி, இச்செய்யுளில் கல் ஆல் நிழல் மலை வில்லார் அருளிய பொல்லார் இணை மலர் நல்லார் புனைவர் ஏ என வரும் பன்னிரண்டு சொற்களும் இந்நூலகத்துச் சூத்திரங்கள் பன்னிரண்டெனக் குறிப்பால் உணர்த்தினவெனக் கருதலாம்.

கல் ஆல் நிழல் மலை வில்லார் எனவும்,
அருளிய பொல்லார் எனவும்,
இணைமலர் நல்லார் புனைவர் ஏ எனவும்

இவ்வாறு பிரிந்து நின்று பொருள் உணர்த்தலைக் கூர்ந்து நோக்கின் முதலைந்து சூத்திரங்கள் ஓரியலாயும், இடையிரு சூத்திரங்கள் ஓரியலாயும், இறுதியைந்து சூத்திரங்கள் ஓரியலாயும் பிரிந்துநின்று அவைமுறையே பிறப்பியல் பொதுவியல் வீட்டியல் எனப்பெயர் பெறுமெனவும் கருதியுணரலாம். இன்னுமிதனானே ஆறும் ஏழுமாகிய பொதுவியற் சூத்திரங்கள் இரண்டும் நடுநாயகமாய் அமைந்து இந்நூலிற்குக் கருப்பொருளாய் நிற்பனவென்றும், சைவசிந்தாந்தத்துக் கருப்பொருளாகிய பதி பசு பாசமென்னும் முப்பொருள் உண்மையைச் சத்து அசத்து என்னும் இரண்டுஅள்வைகளைக் கொண்டே உணர்த்துவதோடு பிறப்பியற்கும் வீட்டியற்கும் அப்பொதுவியல் ஞானம் பொதுவாய் நின்றதென்றும் உணரக்கிடந்ததாம். இவ்வுணர்வு நெறியில் நின்று நாமும் இந்நூலினைப் பிறப்பியல் பொதுவியல் வீட்டியல் என மூன்றாகவே பகுத்து உரை வகுப்போம்.

பிறப்பு வீடு என்பன பெத்தம் முத்திகளைக் குறிப்பன.

அருளிய பொல்லார் என்பது பெயரெச்சத்தொடர். மலை வில்லார் அருளினமை, ''பிடியதனுரு உமைகொள மிகு கரியது, வ்டிகொடு தனதடி வழிபடுமவரிடர், கடிகணபதி வர அருளினன் மிகுகொடை, வடிவினர்பயில் வலி வலம் உறை இறையே''. எனவரும் திருஞானசம்பந்தர் திருவாக்கால் உணரலாம்.

**அவையடக்கம்**

**தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்**
**எம்மை யுடைமை யெமை யிகழார் தம்மை**
**உணரார் உணரார் உடங்கியைந்து தம்மில்**
**புணராமை கேளாம் புறன்**

என்பது அவையடக்கச் செய்யுள். இது அவையடக்கம் கூறுகின்றது.

கண்ணழிவு :- தம்மை உணர்ந்து தம்மை உடைய தன்னை உணர்வார் எம்மை உடைமையான் எம்மைஇகழார். தம்மை உணரார் உணரார், உடங்கு இயைந்து தம்மில் புணராமையால் புறன் கேளாம் என்பது.

பொழிப்புரை :- தம்மைத் தம் உடம்பின் வேறாய் உணர்ந்து பின் தம்மை ஆளாகவுடைய் தம் தலைவனையும் உணர்ந்த ஞானிகள் சிவானுபூதி பெற்றுச் சிவனோடு ஒன்றி யோராதலின் அவர்தாம் எம்மையும் ஆளாகவுடைய காரணத் தால் யாம் கூறும் இந்நூலுக்குக் குற்றம் கூறி எம்மை இகழ மாட்டார். அவ்வாறு தம்மையே உணராதார் தம்தலைவனை யும் உணரார் அன்றியும் தம்முள் இருந்த அவனோடு ஒருங்கு இயைந்து ஒன்றவும் ஒன்றாராகலின் அன்னோர் வாக்கால் யாம் குற்றம் கேட்பதில்லை என்றவாறு.

எனவே ஆன்னோரை யாம் மதியேம் என்றதாம்.

இதனால் குற்றம் கூறும் தகுதியுடையார் அது கூறார் என்பதும், அத்தகுதியில்லார் கூறும் குற்றம் எம்மால் பொருட்படுத்தற்கின்று என்பதும் கூறியவாறாம்.

தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் என்றது சீவன் முத்தரை. அன்னார் உணர்ந்தமட்டில் அமையாது அவனே தானேயாகிய நெறிநின்று அவனோடு ஒன்றவும் செய்வார் ஆகலின் அவ்வாறு உரைக்கப்பட்டது.

தம்மில் புணராமையாவது தம்முள் இருந்த முதல்வ னோடு ஒன்றாமை. உணரார்க்கு ஒன்றாமைகூறவேண்டாம் பிறவெனின், அற்றன்று. உணராரும் ஒரோ வழி உணர்ந்து ஒன்றாருமென அவ்விருபாலாரும் அடங்க அவ்வாறு கூறல் வேண்டும் என்பது.

தம் தன் என்பன தாம் தான் என்பனவற்றின் திரிந்த பெயர்கள். முன்னது ஆன்மாக்களையும் பின்னதும்முதல்வனை யும் குறித்து நின்றன, ஆன்மாக்கள் பல்வாகலானும் முதல் வன் ஒருவன் ஆகலானும் என்க. இந்நூலில் பிறாண்டும் இவ் வாறு வருவனவற்றுக்கு இவ்வாறே உரைத்துக் கொள்க.

புறன் என்பது புறங்கூற்று என்னும் பொருள் தருவது. அச்சால் பில்லாதார் எதிர் நின்று குற்றமெடுத்துச் சொல்லற்குக் கூசுவர் ஆகலான் புறங்கூறலொன்றே அன்னார்க்கு இயைவதொன்றாம் என்பதுபடப்புறன் என்றான்.

இதனால் அவையடக்கம் கூறப்பட்டது. இனி நூல் வருமாறு.

ஆசிரியன் மெய்கண்டான் தான் ஆக்கிய தமிழ் முதல் நூலாகிய இந்த ஞான நூலுக்குச் சிவஞானபோதம் என்று பெயரிட்டு வழங்கினான். வேதாகம நூல்களினும் பலவேறு ஞானநூல்களினும் ஆங்காங்குச் சிதறிக்கிடந்த சைவ சித்தாந்த நெறிப்பட்ட உண்மைகளை ஆய்ந்தெடுத்து அனுபவித்துத் தொகுத்து முதல் நூலாக்கிய பெருமை ஆசிரியன் மெய்கண்டானையே சாரும்.

சிவனை உணரும் ஞானம் சிவஞானம், அதனைப் போதிக்கும் நூல் சிவஞான போதம் எனப்பட்டது.

இந்நூல் பன்னிரண்டு சூத்திரங்களானும், சூத்திரங்களைக் கண்ணழித்து மேற்கொண்ட ஏதுக்களோடு கூடிய மேற்கோள்கள் முப்பத்தொன்பதானும், அம்மேற்கோள்களை விளக்கவரும் உரைப்பாட்டுக்கள் எண்பதானும், நூல் முதற்கண் காப்புச் செய்யுள் ஒன்றானும், அவையடக்கச் செய்யுள் ஒன்றானும், நூல் கேட்டற்குரியார் இன்னார் என்று உணர்த்தவரும் நூலிறுதி வெண்பா ஒன்றானும் நிறைவு பெற்றது. எனவே ஆசிரியன் மெய்கண்டான் நூலாசிரியனுமாயினான், உரையாசிரியனுமாயினான் என்றே நாம் இங்கு உணர்தல் வேண்டும்.

## சிவஞான போதம் – பிறப்பியல்

### முதற் சூத்திரம்

அவனவள் அதுவெனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோவெனின் சங்கார காரணனாய் உள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

இங்குச் சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமென வந்தவை ஆசிரியன் கூறியவை.

ஆசிரியன் மெய்கண்டான் ஆக்கியருளிய முதல் நூலாகிய சிவஞானபோதம் என்னும்ஞானநூல் பிறப்பியல் பொதுவியல் வீட்டியல் என மூன்று இயல்களாகப் பகுத்து உணரப்பட்டது. நூலகத்துச் சூத்திரங்கள் பன்னிரண்டேயாக முதலைந்து சூத்திரங்கள் பிறப்பியலாகவும், இடையிரு சூத்திரங்கள் பொதுவியலாகவும், இறுதியைந்து சூத்திரங்கள் வீட்டியலாகவும் கருதப்பட்டன. பிறப்பியலில் வரும் முதற் சூத்திரத்தால் அவன் அவள்அதுவெனச்சுட்டியறியப்படும்பிரபஞ்சம்ஒடுங்கித் தோன்றிவரும் செய்தியும், இரண்டாம் சூத்திரத்தால் உயிர்கள் உருமாறிப் பிறந்து வரும் செய்தியும், மூன்று நான்காம் சூத்திரங்களால் உடம்போடு காணப்படும் ஆன்மாக்கள் அவ்வுடம்பு பொறி கரணங்களின் வேறாயும் முதல்வனின் வேறாயும் பிரித்தறியப்படும் செய்தியும், ஐந்தாம் சூத்திரத்தால்ஆணவமலத்தால் மறைப்புண்டுஅவத்தைகட்குஉள்ளாகி அறிவும் செயலுமின்றிக்கிடந்த ஆன்மாக்கட்கு முதல்வன் தனது சந்நிதி மாத்திரையானே உபகாரப்பட்டுநின்ற செய்தியும், அவற்றுக்குக் கருவியாய் ஆங்காங்கு வரும் இருவினை முதலிய வேறு பிற செய்திகளும் உணர்த்தப்பட்டன. இவையெல்லாம் பிறப்பால் அறியப்பட்ட அல்லது பிறப்பிற்கு உபகாரப்பட்ட செய்திகளாமாகலின் அவற்றை உணர்த்துகின்ற இவ்வியல் பிறப்பியலாயிற்று.

இனி இம் முதற் சூத்திரம் நுதலிய பொருள் யாதோ வென்னில் அது பிரபஞ்சம் தோன்றி நின்று ஒடுங்குதற்குக் காரணனாய் நின்ற சங்காரக் கடவுளாகிய முதல்வனே உலகிற்கு முதல்வனாம் என்பது.

இனிப் படைக்குந்தொழிலைச் செய்வான் ஒருவன் பிரமன் என்றும், காக்குந் தொழிலைச் செய்வான் ஒருவன் திருமால் என்றும், அழிக்குந் தொழிலைச் செய்வான் ஒருவன் உருத்திரன் என்றும் கூறும் ஆகம வசனங்களும் உண்டாமன்றே; அவ்வாறு சொல்லப்பட்ட அம்மூவருள்ளும் உலகிற்கு முதற்கடவுளாவான் யாவன் என்னும் ஒரு ஐயம் நூல் கற்கும் மாணாக்கற்குத் தோன்றுமன்றே; அங்ஙனம் அது தோன்றாவாறு சங்கார காரணனாயுள்ள முதல்வன் ஒருவனே ஏனைச் சிருட்டி திதிகட்கும் காரணனாம் என்பது உணர்த்தி அவன் ஒருவனே உலகிற்கு முதற் கடவுளாம் என்பதும் உணர்த்துகின்றது இச்சூத்திரம் என்பது.

*இதன் பொழிப்பு உரைத்துக் கொள்க.*

என்பது அசிரியன் உரைத்தது. அசிரியன் தான் கூறும் சூத்திரக் கருத்தை மேற்கோள்களானும், ஏதுக்களானும், உரைப்பாட்டுக்களானும் உணர்த்தியதே கொண்டு மாணாக்கன் சூத்திரத்தின் பொழிப்பினைத் திரட்டி உரைத்துக்கொள்வானாக என்று அசிரியன் நூல் முதற் கண்ணே அறிவுறுத்தியது இது. ஆசிரியனது ஆணைக்கேற்பவே இனிச்சூத்திரங்களையும் உரைப்பாட்டுச்சளையும் கண்ணழித்துப் பொழிப்புத் திரட்டி உரைத்து விளக்கிச் செல்வது இவ்வுரையாசிரியனது கடமை ஆயிற்று.

**கண்ணழிவு:-** அவன் அவள் அது என்னும் அவை மூவின்மையின் தோற்றிய திதியே ஒடுங்கி மலத்தால் மீண்டும் உளதாம் ஆகலான் அந்தம் ஆதி என்மனார் புலவர் என்பது.

பொழிப்புரை:- அவன் என்றும் அவள் என்றும் அது என்றும் சுட்டி அறியப்பட்ட உலகத்துப் பொருள்கள் அனைத்துமே தோன்றிநின்று அழிதலையுடைய காரணத்தால் ஒரு காலத்தில் ஒருவனால் தோற்றுவிக்கப்பட்டு இதுபொழுது நிலை

பேற்றின்கண் இருந்து வராநின்ற இவ்வுலகமே பிறிதொரு காலத்தில் உருத்தெரியாமல் அழிந்து ஒடுங்கிப் பின் ஒரு காலத்தில் அதனிடத்துள்ள மலக்குற்றம் நீங்கற்பொருட்டு மீளவும் தோன்றலுடையதாம். உலகிற்கு அவ்வாறு ஒடுக்கத்தைச் செய்யும் சங்கார காரணனாயுள்ள முதல்வன் ஒருவனே அதன் தோற்றத்திற்கும் நிலை பேற்றிற்கும் காரணனாம் எனப்பட்டு அவனே உலகிற்கு முதல்வனுமாம் என்று சொல்லுவர் அறிஞர் எ. று.

உயர்திணையும் அஃறிணையுமாய் உள்ள உலகத்துப் பொருள்கள் அனைத்துமே அவன் அவள் அதுவென்னும் மூவகைச் சுட்டினுள் அடங்குவனவாகலான் அவை என்றது உலகத்துப் பொருள்களையே என அறிக. உலகப்பொருள் மேல் வைத்து இங்கு உலகினது நிலையாமை கூறப்பட்டது. மூவினைமை என்றது தோன்றி நின்று அழியும் தன்மையை. தோற்றிய என்றதால் தானாகத் தோன்றலின்றி முதல்வன் பிறனொருவனால் தோற்றுவிக்கத் தோன்றினமை பெறப் பட்டது.

திதி என்பது காப்பு அல்லது நிலை பேறு என்பதாம். அது இங்கு நிலை பேற்றின்கண் இருந்துவரும் உலகிற்கு ஆகிவந்தது.

தோன்றி நின்று ஒடுங்கலும், மீளத்தோன்றலுமாகிய தொழில்கள் முதல்வனது ஆணைக்கு உட்பட்டு இடையறாது நிகழ்வனவாம் எனக்கொள்க. மீளத்தோன்றல் மலத்தீர்வின் பொருட்டு எனவும் அறிக. அடுத்து வரும் சூத்திரத்தால் அது விரித்துக் கூறப்படும்.

அந்தம் ஆதி என்பது சங்காரமே முதல்என்னும்கருத்துப் பட நின்றது. அந்தம் என்புழித்தேற்றேகாரம் தொக்கது.

ஆக்கற்கும் காத்தற்கும் காரணராம் பிறர் என்று ஒரோ வழிக் கூறப்படும் ஏனைக் கடவுளர் உலகிற்கு முதற்கடவுளர் ஆகார் என்பதும் அன்னார் அத்தொழில்கட்குக் காரணர் என்பதெல்லாம் உபசார வழக்காமன்றி உண்மையாகா வென்பதும் சங்காரகாரணனாயுள்ள முதல்வன் ஒருவனே

ஏனையிரு தொழிற்கும் காரணன் ஆவான் என்பதும் அறிஞர் துணிபு ஆகலான் அந்தம் ஆதி என்மனார் புலவர் என்றான். பதிப்பொருள் ஒன்று என்பதே சைவ சித்தாந்தத் துணிபு ஆகலான் ஆக்கற்கு ஒருவன் காக்கற்கு ஒருவன் அழித்தற்கு ஒருவன் என்று இவ்வாறு கடவுளர் பலரைக் கோடல் இழுக்காம் எனவும் இங்கு அறிக.

சங்காரமே உலகிற்கு முதல் என முடிவானதொரு செய்தியே சூத்திரத்துள் கூறப்பட்டதாயினும் அதற்கு உபகாரப்பட்ட வேறு இரு செய்திகளும் அடங்க மூன்றாகச் சூத்திரத்தைக் கண்ணழித்து, அவற்றுக்கு அதிகரணங்கள் எனப்பெயரிட்டு, அவற்றை மேற்கோள்களானும் ஏதுக்களானும் உரைப்பாட்டுக்களானும் மாணாக்கற்கு அறிவுறுத்திச் செல்வது இங்கு ஆசிரியன் மரபாயிருந்தது.

ஆகவே இச்சூத்திரம் மூன்று உறுப்பு அல்லது கருவி அல்லது கரணச் செய்திகளை உடையது என்றும், சூத்திரத்தின் அதிகாரம் அக்கரணங்கள் மூன்றன்பாலும் சென்று இயைவது என்றுமாயிற்று. ஆகவே சூத்திரத்தின் பிண்டச் செய்தி அதிகாரம் எனப்பட்டால் பிண்டித்த கருவிச் செய்தி அதிகரணம் எனப்படுவதாம். படவே அதிகாரம் என்பது அதிகாரகரணம் என்பதன் மரூஉவாகலாம் போலும் என்பது. அதிகார கரணம் அல்லது அதிகரணம் என்பது அதிகாரப்பட்ட பிண்டச்செய்தியினின்று பிண்டித்த செய்தி அல்லது கருவிச் செய்தி என்று பொருள்படுவதாம் எனக்கருதுக.

இனி இச்சூத்திரத்துள் அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின் தோற்றிய திதியே ஒடுங்கும் என்பது ஒரு அதிகரணம், ஒடுங்கி மலத்து உளதாம் என்பது ஒரு அதிகரணம், அந்தம் ஆதி என்மனார் புலவர் என்பது ஒரு அதிகரணமாக மூன்று அதிகரணத்தது இச்சூத்திரம் என்பது.

**முதலாம் அதிகரணம்**

*கண்டு உள்தாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசம் உடைத்து என்றது தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின்.*

மேற்கோளும் ஏதுவுமாய்வந்த இது ஆசிரியன் உரைத்தது.

சூத்திரத்தைக் கண்ணழித்துக் கொண்ட முதற்பகுதிக்கு முதலாம் அதிகரணம் எனப்பெயரிட்டு அதனை ஆசிரியன் மேற்கோளும் ஏதுவுமாய் உரைத்தான். மாணாக்கன் அதனை விளங்க அறிந்து கொள்ளும்பொருட்டு மேலும் உரைப்பாட்டானும் விளக்கிச் செல்வான். இவ்வாறு உரையானும் உரைப்பாட்டானும் வந்த பகுதிகட்கு உரிய விளக்கங்களை விளக்கவுரைப்பகுதியில் இனிக்காணலாம்.

ஈண்டு உளதாய் என்றது நிலைபேற்றில் உள்ளதாய் என்றதாம். உலகில் நிலைபேற்றின்கண் உள்ள யாதானும் ஒரு பொருட்கு முன்னும் பின்னும் தோற்றமும் இறுதியும் அமைந்து கிடந்தன என்று நாம் அறியலாம். அதாவது அப் பொருள் முன்னொரு நாள் இவ்வுலகில் தோன்றியதே என்றும் பின்னொரு நாள் அழிவதே என்றும் நாம் காட்சியளவையால் எளிதாக அறியக்கூடும். கூடவே உலகத்துப் பொருள் ஒவ்வொன்றும் இவ்வாறு தோன்றி நின்று அழிந்து போவதால் உலகமும் தோன்றி நின்று அழியக்கூடியதே என மேற்கொள்ளலாமன்றோ? ஆகவேதான் இதுபொழுது நிலைபேற்றில் உள்ளதாயும் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று இவ்வாறு சுட்டியறியப் படுவதாயும் உள்ள இப்பிரபஞ்சமும் தோன்றி நின்று அழிதலுடையதே என மேற்கொள்ளப் பட்டது.

ஒருவன் ஒருத்தி ஒன்று என்று இவ்வாறு சுட்டியறியப் பட்ட பிரபஞ்சம் என்றதால் பிரபஞ்சத்தின் ஒரு அங்கமாய் உள்ள மனிதன் ஒருவன் தோன்றி நின்று அழிவதைப் போலவே பிரபஞ்சமும் தோன்றி நின்று அழியக்கூடியதே என்று ஆசிரியன் மேற்கொண்டான். அவயவத்திற்கு நேர்ந்த கதி அவயவிக்கும் நேரும் ஆதலின் நிலைபேற்றின்கண் உள்ள இப்பிரபஞ்சம் ஒருகாலத்து அழிந்து ஒடுங்கும் என்பது உறுதியேயாமிற்று. அல்லதூஉம் ஒருவன் என்றும் ஒருத்தி என்றும் ஒன்று என்றும் இவ்வாறு உலகத்துப்பொருள் அனைத்தும் சுட்டியறியப்பட்ட பின்றை உலகென்றுசுட்டற்கு ஒன்றும் இன்று ஆகலான் உலகு தோன்றி நின்று அழிவது என்பது ஒரு சத்திய வசனமேயாம் என்க. இனி அம் மேற்கோளை விளக்க வரும் உரைப்பாட்டு வருமாறு.

**பூதாதி ஈறும் முதலும் துணையாகப்**
**பேதாய் திதியாகும் பெற்றிமையின் ஓதாரோ**
**ஒன்றொன்றில் தோன்றி உளதாய் இறக்கண்டும்**
**அன்றென்றும் உண்டென்ன ஆய்ந்து.**

என்பது உரைப்பாட்டு. இது பிரபஞ்சம் உற்பத்தி திதி நாச முடைத்து என மேற்கொண்ட மேற்கோளைக் காட்சியளவை யான் வலியுறுத்துகின்றது.

கண்ணழிவு:- பேதாய் பூதம் ஆதி ஈறும் முதலும் துணை யாக திதி ஆகும் பெற்றிமையானும், ஒன்று ஒன்றில் தோன்றி உளதாய் இறக் காண்டலானும், அன்று உலகிற்கு என்றேனும் உண்டு என்னஆய்ந்து ஓதாரோ மெய்யுணர்ந் தோர் எ. து.

பொழிப்புரை:- நில்லாத உலகத்தை நிற்பதெனக்கருதி அறியாமையால் மயங்கும் மாணாக்கனே, நிலம் நீர் தீ வளி வெளி என்னும் பருப்பொருள் ஐந்தினையும் தனக்கு முதலாக வுடையதும், ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டியறியப்படு வதுமான இப்பிரபஞ்சம் தோற்றத்தையும் முடிவையும் தனக்கு முன்னும் பின்னுமாகக்கொண்டே இதுபொழுது நிலைபேற்றின்கண் இருந்து வருவதாலும், இதன் அவயவங் களில் ஒன்று ஒரு காலத்தே தோன்றி ஒரு காலம்வரை நின்று பின்னொரு காலத்தே நில்லாது அழிந்து போதலைக் கண் ணெதிரே காண்டலானும் அவயவிக்கும் அந்த முடிவு நாள் என்றேனும் உண்டு என ஊகித்துச் சொல்லாரோ மெய் யுணர்ந்தோர் எ. று.

ஓகாரம் எதிர்மறை ஆகலின் சொல்லுவர் என்றதாம்.

பூதாதி என்பது ஐம் பெரும் பூதங்களைத் தனக்கு முதலாகவுடைய பிரபஞ்சத்தைக் குறித்தது, அவை ஐந்தும் கலந்த மயக்கமே உலகம் என்பவாகலின். பூதம் ஆதி பூதாதி என்பது வடநூல் முடிவு. ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டி அறியப்படுவது என்றது மேற்கோளில் வந்தது ஈண்டும் வாங்கி உரைக்கப்பட்டது, ஒன்று ஒன்றில் தோன்றி உளதாய் இறக்கண்டும் என அதனையே காட்சியளவையாகக் கூறி னன் ஆசிரியன் ஆகலின். அவயவங்கட்கு அடுத்த செய்தி

அவயவிக்கும் ஆம் ஆகலின் அன்று என்றும் உண்டு என்ன ஆய்ந்து ஓதுவர் மெய்யுணர்ந்தோர் என்றான்.

அன்று என்றது அவ்விறுதி நாள் என்றதாம். எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது.

இஃதோர் சாத்திரநூல் ஆகலானும், மெய்கண்டான் ஒருவனுழைப் பாடம் கேட்டே பயிலவேண்டுவது ஆகலானும் பேதாய் என்றது ஆசிரியன் மாணாக்கனை விளித்த விளி யெனக்கொள்க. ஒண்குருவால் இன்று இந்நூல் மும்மை மலர்க்கு என ஆசிரியன் நூலிறுதியில் ஆணையோடு அறிவுறுத்தியதையும் ஈண்டு உணர்க. பிறாண்டும் இவ்வாறு வருவனற்றுக்கு இவ்வாறே உரைத்துக்கொள்க. பிறமதத் தாரை அவர் மனம் புண்பட விளித்ததாக உரைத்து ஆசிரியற்குப்பழியினைப் புகுத்த வேண்டா. என்னை, மெய் கண்டுணர்ந்தார் எவருமே அத்தகைய இழிசெயலில் இறங் கார் ஆகலான். அல்லதூஉம் தன்கோள் நிறுவுகின்ற வாற்றானே பிறன்கோள் வலியிழக்கும் என்பதை ஆசிரியன் அறிவான் ஆகலான் பிறர் மனம்புண்படவுரைத்தல் அவற்குக் கருத்தன்றாம் எனவும் அறிக.

இதனால் தோன்றி நின்ற பிரபஞ்சத்திற்கு முடிவும் ஒரு நாள் உண்டு என்று காட்சியளவையால்வலியுறுத்தப்பட்டது.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி ஒடுங்கின சங்காரத்தின் வழியல் லது உற்பத்தி இல்லை என்றது இல்லதற்குத் தோற்றம் இன்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய் வின்ன இன்மையின்.*

மேற்கோளும் ஏதுவுமாய் வந்த இது ஆசிரியன் உரைத் தது.

பிரபஞ்சம் தான் ஒடுங்கிய சங்காரத்தின் வழியே மீளவும் உற்பத்தியாம் என்கின்றது இது.

முயற்கோடு போன்று இல்லாத ஒரு பொருள் என்றுமே தோன்றாது ஆகலால் ஒடுங்கி முன் உள்ளதாய் இருந்த பிர பஞ்சமே மீளவும் தோன்றும் என்பது பெறப்பட்டது. உள்ளது தோன்றுங்காலும் அது செய்வோனையின்றித்தோன்றாது என்பதால் பிரபஞ்சம் ஒடுங்குதற்குக் காரணனாயிருந்த சங் கார காரணமுதல்வன் ஒருவனே அதனை மீளவும் தோற்று விப்பன் என்பதும் பெறப்படும். படவே பிரபஞ்சம் ஒடுங்கும் போது சங்காரத்திலே ஒடுங்கித்தோன்றும்போதும் அச்சங் காரத்தின் வழியே தோன்றும் என்று ஆசிரியன் மேற்கொண் டான்.

எனவே சங்காரகாரணன் ஒருவனே ஏனைச் சிருட்டி திதி கட்கும் காரணனாம் என்பதும் உணரப்பட்டது.

ஒடுங்கி உளதாம்எனக் காணப்பட்ட பிரபஞ்சத்தின் மேல் வைத்துச் சூத்திரம் செய்தான் ஆயினும் ஒடுக்கித் தோற்று விப்பன் அச்சங்கார காரணனாகிய முதல்வன் என்பதுவே கருத்தாகக்கொள்க. இக்கருத்துப்பற்றியன்றே சூத்திரத்துள் தோற்றிய திதியே என்றதூஉம், மேற்கோளின்கண் செய் வோரின்றிச் செய்வினையின்மையின் என்றதூஉம்எனவுணர்க

செய்வோரின்றிச் செய்வினையின்மை என்றது செய்பவன் இல்லாமல் செயப்படுபொருள் இல்லை என்றதாம். குயவ னின்றிக்குடம் இல்லை என்றாற்போல்வதும் அது.

**இலயித்த தன்னில் இலயித்த தாம்மலத்தால்**
**இலயித்த வாறுளதா வேண்டும் இலயித்த**
**தத்திதியில் என்னில் அழியா தவையழிவு**
**தத்திதியும் ஆதியுமாம் அங்கு.**

என்பது உரைப்பாட்டு. இது ஒடுங்கின சங்காரத்தின் வழி யல்லது உற்பத்தியில்லை என வந்த மேற்கோளை விளக்கு கிறது. இல்லதற்குத் தோற்றம் இன்மையின் ஒடுங்கி முன் உள்ளதாய் இருந்த அதுவே மலத்தீர்வின் பொருட்டு மீளவும் தோன்றும் என்பதும் இதனால் வலியுறுத்தப்படுகிறது.

கண்ணழிவு:- இலயித்தது இலயித்ததன்னில் ஆம். மலத்தால் இலயித்தவாறு உளதாவேண்டும். இலயித்தது

அத்திதியில் என்னில் அழியாது. அத்திதியும் ஆதியும் ஆம் அவையும் அங்கு அழிவது எ. து.

பொழிப்புரை:- மாணவகா, ஒடுங்கிய ஒருபொருள் தான் ஒடுங்கிய ஒன்றிலிருந்தே தோன்றும் ஆகலான் சங்காரத்தில் ஒடுங்கிய பிரபஞ்சம் மலத்தீர்வின் பொருட்டுத் தோன்றும் போது அச்சங்காரத்திலிருந்தே தோன்றலை வேண்டும் தருக்கநூல் விதி. பிரபஞ்சம் ஒடுங்கியது சங்காரத்திலன்றித் திதியிலே என்பையாயின் திதி நிலை பேற்றினைச் செய்வதே யன்றி அழித்தலைச் செய்யாது ஆகலின் அது பொருந்துவது அன்று. ஆகவே பிரபஞ்சத்தைப் படைத்தும் காத்தும் வந்த தாக நீ கூறும் அந்தப் படைப்புக் கடவுளும் காப்புக்கடவுளு மாகிய அவரும் பிரபஞ்சம் ஒடுங்கும்போது அச்சங்காரத்திலே சேர ஒடுங்கித் தோன்றும்போது சேரத்தோன்றுவர் என்றலே பொருந்துவதாம் எ. று.

எனவே அவர்க்கு அத்தொழிலுரிமை உபசார வழக்கா மன்றி உண்மையாகாது என்று கோடலே வலியுடைத்தாம்.

இலயித்த தன்னில் இலயித்தது ஆம் என்பது தருக்கநூல் விதி. அதனைச் சற்காரியவாதம் என்பர். நெல்லின்கண் ஒடுங்கிய நெல்முளை அந்நெல்லினின்று தோன்றும் என்பதே யன்றிப் புல்லினின்று தோன்றாது என்பதே அது. இலயித்தது ஆம் ஆகலான் என்று ஒரு சொல் வருவிக்க.

உளதாதல் என்பது உளதா எனக் குறைந்து நின்றது. வேண்டும் என்பதற்கு எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது.

திதி ஆதி என்பன அத்தொழிற்கு உரியார்மேல் ஆகி நின்றன, ஆகுபெயர்கள். முன்னது காத்தல் தொழிலையும், பின்னது ஆக்கல் தொழிலையும் உணர்த்தும். அத்திதியும் ஆதியுமாம் அவை எனக்கொண்டு கூட்டுக. அவற்றோடு அழிவது என்பதனைத் தனித்தனிக்கூட்டி உரைக்க. அவ்வாறு உரைக்குமாறு,: அத்திதியாம் அது அங்கு அழிவது, அவ்வாதியாம் அது அங்கு அழிவது என்பதாம்.

அத்திதியும் ஆதியுமாம் அவை அழிவது அங்கு என்றதன் கருத்தாவது, யாதானும் ஒருபொருள் தோன்றி நின்று ஒடுங்கும் என்ற சித்தாந்த உண்மையை ஊன்றி நோக்குமிடத்துத் தோற்றம் நிலைபேற்றிலும், நிலைபேறு ஒடுக்கத்திலும் சென்று முறையாக ஒடுங்கும் என்பது தெளிவாகலாம். ஒடுங்கிய ஒருபொருள் அதுதான் ஒடுங்கிய இடத்திலிருந்தே மீளவும் தோன்றும் என்பது முன்னர் அறியப்பட்டதாகலான் சங்கார காரணனாயுள்ள முதல்வன் ஒருவனே உலகையும் உலகில் உள்ள அனைத்து உயிர்வருக்கங்களையும் தன்னுள் ஒடுக்கிப் பின் தோற்றுவிப்பன் என்பதும்,அவ்வாறுதோன்றிய வற்றை நிலைபெறுத்துவானும் அவனே என்பதும் தெளியப் படும். படவே தோற்றம் நிலைபேறுகட்கு ஒரோ வழிக்காரணராம் என்று வேதாகமங்களில் சொல்லப்பட்ட பிரம விட்டுணுக்கட்கு அவர்தம் தொழிலுரிமை அங்கு அவர்க்கு உபசார வழக்காய்ச் சொல்லப்பட்டனவேயன்றி உண்மை யாகாவென்பதும் தெளியப்படுவதாம். ஆகவேஇம்முறையான் உலகு உயிர்கள் ஒடுங்கும்போது அன்னாரும் சேர ஒடுங்கித் தோன்றும்போது சேரத்தோன்றுவர் என்று கோடலே வலி யுடைத்தாம் என்றுஅறிதல்வேண்டும்.அவ்வாறுஆகலினன்றே பிரமவிட்டுணு முதலாயினோரையும் ஆன்மவகையுள்அடக்கிப் பன்மை வாசகத்தால் அன்னாரைப் பலர் என்றும் ஈறில்லா தவன் ஈசன் ஒருவனே என்றும் மறைநூல்கள் ஒப்பக்கூறா நின்றன.

நூறுகோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறுகோடி நாராயணர் அங்ஙனே
ஏறுகங்கை மணல்எண்ணில் இந்திரர்
ஈறிலாதவன் ஈசன் ஒருவனே.

எனவரும் திருநாவுக்கரசரது அருள்மொழிகளைச் சிந்தித்து உணர்க. மேலும் விட்டுணுவுக்குப் பலபிறவிகள் இருந்தன என்று ஆகமங்களில் கூறப்படும் செய்தியும் இக்கருத்தை வலி யுறுத்துவதாம் எனவும் அறிக.

இலயித்தவாறு உளதா வேண்டும் என்றது சங்காரத்தில் ஒடுங்கியவாறே அச்சங்காரத்திலிருந்து தோன்றலையும் வேண்டும் அளவை நூல் துணிபு என்றதாம். அவ்வாறு தோன்றுவது மலத்தீர்வின் பொருட்டே ஆகலான் மலத்தால் இலயித்தவாறு உளதாவேண்டும் என்றான்.

திதி ஆதி என்பன உலகு உயிர்களின் நிலைபேற்றுக்கும் தோற்றத்திற்கும் காரணராம் என்று உபசாரமாகச் சொல்லப் பட்ட விட்டுணுவையும் பிரமனையும் குறித்தன.

இவ்வுரைப்பாட்டால் பிரபஞ்சம் தான் ஒடுங்கிய சங்காரத் தின் வழியே மீளவும் தோற்றமுறும் என்பதும், இல்லது தோன்றாதாகலின் ஒடுங்கிமுன் உள்ளதாயிருந்த அதுவே மலத்தீர்வின் பொருட்டு மீளவும் தோன்றும் என்பதும் வலி யுறுத்தப்பட்டவாறு அறிக.

**வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாய்**
**அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால்**
**வித்தகமாம்**
**வேட்டுவனாம் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான்**
**கொடுத்துக்**
**கூட்டானோ மண்போல் குளிர்ந்து**

என்பது உரைப்பாட்டு. இது உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையான் என வந்த ஏதுவை விளக்கி மேற் கோளை வலியுறுத்துகிறது.

கண்ணழிவு:- மண் குளிர்ந்து வித்து உண்டாக மூலம் முளைத்தவாறுபோல் அத்தன் தாள் தாரகமாய் நிற்றலாம். வித்தகம் ஆம் வேட்டுவன் ஆம் அப்புழுவினுக்கு வேண்டு உருவை தான் கொடுத்து வாழ்விப்பது போல வித்தகமாம் வேட்டுவன் உயிர்கட்கு அவற்றின் வினையால் வேண்டு உருவை தான் கொடுத்து கூட்டானோ எ. து.

பொழிப்புரை:- நிலம் குளிர்ந்த வழி அதன்கண் விதை ஒன்று சேர முளை ஒன்று தோன்றினாற்போலப் பிரபஞ்சத் தோற்றத்திற்குமுதல்வனருள் ஆதாரமாய் நிற்பதொன்றாம். விசித்திரமான வேட்டுவளியன் கூட்டில் தன்போல் ஆக்கத்தக்கதொரு கூட்டுப்புழுவினுக்கு அது வேண்டும் உருவினைக்கொடுத்து வாழ்விப்பது போலப்பேராற்றலுடைய முதல்வனும் உயிர்கட்கு அவற்றது வினைக்கு ஈடான உடம்பு களைக் கொடுத்து வாழ்விப்பானல்லனோ எ. று.

ஓகாரம் எதிர்மறை ஆகலின் வாழ்விப்பன் என்றதாம்.

விதை முளைத்தற்கு மண் ஆதாரமாய் நிற்க மண்ணினது ஈரம் உபகாரப்பட்டாற்போலப் பிரபஞ்சத் தோற்றத்திற்கு முதல்வன் ஆதாரமாய் நிற்க முதல்வனது அருள் உபகாரப்படுவது என்றான். மண் குளிர்ந்தவழி மண்ணில் உள்ள விதை முளைத்தெழுந்தாற்போல் முதல்வனருள் கூடியவழி முன்னர் ஒடுங்கி உள்ளதாய் இருந்த பிரபஞ்சமும் மீளத் தோற்றமுறும் என்பதாம்.

ஆகவே உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை இல்லை என்ற ஏது இங்கு வலியுறுத்தப்பட்டதாம்.

வேட்டுவளியன் என்றது குளவியை. அது கூட்டில் தன்போல் ஆகத்தக்கதொரு கூட்டுப்புழுவினையே குளவியாக்கினாற்போல முதல்வனும் வினைவயப்பட்ட உயிர்கட்கே அவை வேண்டும் உடம்புகளைக்கொடுப்பன் என்றதாம். பிரபஞ்சத்தின் தோற்றம் கூறுவான் அதன் அங்கமாகிய உயிர்களின் தோற்றமும் உடன் கூறினான், அவை உறுப்பும் உறுப்புடையதுமாய் ஒன்றி நிற்றலின். உயிர்களின் புனருற்பவம் அடுத்துவரும் சூத்திரத்தால் மேலும் விரிவாகக்கூறுவான் ஆசிரியன் என்றும் அறிக. விதை முளைத்தலும் புழுக் குளவியாதலும் ஆகிய உவமைகள் முறையே பிரபஞ்சம் தோன்றுதற்கும் உயிர்கள் தோன்றுதற்குமாகக் கொள்க.

உண்டாக எனற்பாலது உண்டா எனக்குறைந்து நின்றது. உண்டாதல் ஈண்டுச் சேர்தல் என்னும் பொருட்டாம். முளைத்தவாறு என்றபாலது முளைத்தவா என ஈறு தொக்கது. முளைத்தவா போல் எனக்கொண்டு கூட்டுக.

சூத்திரத்துள் அவன் அவள் என்றதற்கேற்ப அவ்விருபாலாரும் அடங்க ஈண்டு அவர் வினையால் என்றான் ஆயினும் அவர் என்பது இங்குத்திணையைச்சுட்டாது உயிர்ப்பன்மையையே சுட்டி நின்றதெனக் கொள்க.

வித்தகம் என்பதற்கு விசித்திரமும் சதுரப்பாடும் என் இருவகைப்பொருளும் கொண்டு வேட்டுவளியற்கும் முதல்வற்கும் ஏற்றி உரைக்க.

கூட்டுதல் இங்கு வாழ்வித்தல் என்னும் பொருள் தந்தது. உயிர் நீங்கினாரை வாழ்வு முடிந்தார் என்பவாகலின் உயிர் கூடலை வாழ்வு கூடலாகக்கொள்க.

அத்தன்தாள் என்பது அத்தனும் அவனது தாளும் என உம்மைத்தொகை. இறைவன் தாளை அருளாகவும் அருட் சத்தியாகவும் கூறும் மரபும் உண்டாம் ஆகலின் அவ்வாறும் உரைத்துக்கொள்க. அத்தாள் உலகின் பஞ்ச கிருத்தியங் கட்கும் முதலாய் விளங்குவது என்பர் பெரியோர்.

போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றிஎல் லாவுயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றிஎல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றிஎல் லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்யஆட் கொண்டருளும்
பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய்.

எனவரும் திருவாதவூரர்தம் அருள்மொழிகளை இங்கு நினைவு கூர்க.

**நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தின்**
**தாக்காது நின்றுளத்தில் கண்டிறைவன் ஆக்காதே**
**கண்ட நனவுணர்வில் கண்ட கனவுணரக்**
**கண்டவனின் இற்றின்றாம் கட்டு.**

என்பது உரைப்பாட்டு. இதுபுறனடை கூறுகின்றது. முதல்வன் செய்வோனாய் இருந்தும் செய்வினைப்பயன் அவற்கு இல்லை என்பதோர் ஒழிபு உணர்த்தலின் இது புறனடை ஆயிற்று.

கண்ணழிவு:- கண்ட கனவை கண்விழித்துக்கண்ட நனவு உணர்வில் உணரக்கண்டவனின் இறைவன் அன்றே காலத் தின் தாக்காது நின்று உள்ளத்தில் கண்டவாறே நோக்காது நோக்கி நொடியாது நொடித்து ஆக்காது ஆக்கியும் அவற்குக் கட்டு இன்று இன்றாம் எ. து.

பொழிப்புரை:. கனவு கண்ட ஒருவன் தான் கண்ட கனவு நிகழ்ச்சிகளைக் கண்விழித்துக்கண்ட நனவுக்காலத்து அறிவில் தெளிய அறிந்தபோதும் அக்கனவில் உண்டான உள்ள நெகிழ்ச்சியும் மெய்ப்பாடும் நனவில் அவற்குச்சிறிதும் இல்லையானாற்போல இறைவன் அநாதியில் காலங்கடந்து நின்று இன்னவை எல்லாம் இன்னவாறு ஆகுக என்று தன் உள்ளத்தில் நினைத்தவாறே உலகினைக்காக்காமல் காத்தும் அழிக்காமல் அழித்தும் ஆக்காமல் ஆக்கியும் வந்தானாயினும் அவ்வினையால் வரும் வினைப்பயன் அவற்குக்சிறிதும் இன்றாம் எ. று.

நோக்காது நோக்கி என்றதால் நொடியாது நொடித்து எனவும், ஆக்காது ஆக்கி எனவும் வாங்கி உரைக்கப்பட்டது. நொடித்தல்-அழித்தல்

பிரபஞ்சம் தோன்றி நின்று ஒடுங்கிப்பின் தோன்றலாகிய செயல்கள் மாயாமலத்தால் அதன் வழியிலே நிகழ இறைவனது சங்கற்பம் அந்நிகழ்ச்சிக்கு உபகாரமாய் மட்டுமே நின்றது என்றதால் அது வினையல்லா வினையாதலோடு அவ்வினையால் வரும் வினைப்பயனும் அவற்கு இல்லையாயிற்று. காலம் கடந்து நின்ற முதல்வன் அநாதியில் உலகு உயிர்களிடத்துத்தனக்கிருந்த பேரருளுடைமை காரணமாக இன்னவை எல்லாம்இன்னவாறு ஆகுகஎன்று தன்உள்ளத்தே வரித்துக்கொண்ட அச்சங்கற்பமானது அரசியல் நடாத்துவோர் அது முட்டின்றி நடக்க முதற்கண் அமைத்துக்கொள்ளப்பட்ட ஒரு அரசியல் அடிப்படைச்சட்டம் போன்றதென உணர்க. உலகு உயிர்களின் தோற்றத்திற்கும் நிலைபேற்றிற்கும் ஒடுக்கத்திற்கும் முதல்வன்து சங்கற்பம் உபகாரமாய் மட்டுமே நின்றதாகலான் அவ்வுலக கிருத்தியங்களால் அவற்குக் கட்டுச் சிறிதும் இன்றாம் என்றான் ஆசிரியன்.

கட்டு-பாசம் அல்லது வினைப்பயன்.

இனிக்காலம் என்ற ஒன்று தோன்றற்கு முன்னிருந்து மூத்தவனாகிய முதல்வன் காலம் கடந்தோன் ஆகலானும், அங்கு அவன் வரித்துக்கொண்ட சங்கற்பமும் காலம் கடந்

தது ஆகலானும், அச்சங்கற்பத்தால் நிகழும் உலக கிருத்தியங்கள் வினையெனப் படாவாகலானும் அவ்வினையல்லா வினையால் விளையும் பயனும் அவற்கு இல்லையாயிற்று என்றலும் ஒன்று. என்னை, ''வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது, நினையுங்காலைக் காலமொடு தோன்றும்''.என்பது விதியாகலான் காலத்தோடுதோன்றாத வினையே முதல்வனது சங்கற்பவினை ஆகலான் என்க.

நோக்கல் நொடித்தல் ஆக்கல் என்பன முறை பிறழக் கூறியன என்று கருதற்க. சூத்திரத்துள் ''தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்''. என நிலைபேற்றின்கண்இருந்து வரும் பிரபஞ்சத்தையே எடுத்துக்கொண்டு விவகரித்தான் ஆகலின் அதனை ஈண்டும் நினைவுறுத்தற்காகவே அவ்வாறு கூறினான். வடநூலார் இதனை ஞாபகம் என்பர்.

துயிலும்போது புலி ஒன்று துரத்துவதாகக்கனவு கண்டு அஃஞ்சியோடிய ஒருவன் நனவில் தான் கண்ட கனவினைத் தெளிய அறிந்தபோதும் கனவில் நிகழ்ந்த அந்தப்பந்த விகாரங்கள் நனவில் நிகழாவாகலான் முதல்வற்குக்கட்டு இன்றாதற்கு அஃது உவமை ஆயிற்று.

அஞ்சுதல் உள்ள நெகிழ்ச்சியும் ஓடுதல் மெய்ப்பாடும் ஆம் ஆகலின் அஞ்சலும் ஓடலும் ஆகிய அவை பந்த விகாரங்கள் ஆயின.

கண்டு என்பதனைக்கண்டவாறு எனத்திரித்து உரைக்க. கண்டு கூறினான் என்பதனைக் கண்டவாறு கூறினான் எனவும் கூறுப ஆகலின்.

உணரக்கண்டவனின்-இன் உவமவுருபு. அன்று அன்று அற்றன்று என்று ஆயினாற்போல இன்று இன்று இற்றின்று என்று ஆயிற்று. சிறிதும் இன்று என்பது அதன் பொருள்.

இம்மூன்று பாட்டானும் இல்லதற்குத்தோற்றம் இன்மையின் ஒடுங்கி முன் உள்ளதாயிருந்த பிரபஞ்சமே மீளத் தோன்றும் என்பதும், செய்வோர் இன்றிச்செய்வினை இன்மையின் உள்ளது தோன்றுங்காலும் அதுதானே தோன்றா

தாய் முதல்வன் ஒருவன் தோற்றுவிக்கவே தோன்றும் என்பதும், முதல்வன் செய்யும் அவ்வுலக கிருத்தியங்களால்அவற்கு வினைப்பயன் சிறிதும் இன்றாம் என்பதும் உணர்த்தப் பட்டன.

## மூன்றாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனிச்சங்காரமே முதல் என்றது சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வு இன்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்தரமின்றி நிற்றலான்.*

மேற்கோளும் ஏதுவுமாய் வந்த இது ஆசிரியன் உரைத்தது. சங்காரக் கடவுள் ஒருவனே உலகிற்கு முதற் கடவுளாம் என்பது உணர்த்துகின்றது இது.

பிரபஞ்சம் அறிவினால் சுட்டி அறியப்படுதலின் அது அசத்து ஆதலோடு பிறிதொன்றால் ஆட்படும் தன்மையும் உடையதாம். சங்காரகாரணனாய் உள்ளமுதல்வன் அவ்வாறு சுட்டவும் அறியவும் படான் ஆகலான் அவனே சத்து ஆதலோடு மற்று அனைத்தையும் ஆளும் தன்மையும்உடையனாம். ஆகவே அசத்து என்றுமே சத்தின்முன் நில்லாதாய் அதன்வழி நிற்பதே ஆகலான் பிரபஞ்சத்திற்குச் சங்காரக் கடவுளே முதல்வனாம் என மேற்கொள்ளப்பட்டது.

இனிச் சுட்டுணர்வு உடைய உடம்பும் ஒருவாற்றால் சுட்டுணர்வு இன்றி நிற்கும் உயிரின் வழியல்லது சுதந்தரம் இன்றியே நிற்றலால் அதற்கு அது முதல் எனக் கருதப் பட்டுப் பிரபஞ்சம் சங்காரத்தில் ஒடுங்கும்போது சேரஒடுங்கித் தோன்றும்போது சேரத்தோன்றும் என்பதோர் இறைச்சிப் பொருளும் கொள்ளப்படும். படவே மேற்கோளில் பிரபஞ்சம் என்றது சடமாகிய உலகையும் அவ்வுலகில் உள்ள உயிர்களையும், அவற்றை ஆக்கியும் காத்தும் வருவர் என்று உபசாரமாய்க் கூறப்பட்ட அயன் அரி முதலான அனைத்து உயிர்வருக்கங்களையும் குறிப்பதோடு மகா சங்காரத்தில் அவை அனைத்துமே அங்கு ஒடுங்கும் எனவும் கொள்ளலாம்.

**ஒன்றலா ஒன்றால் உளதாகி நின்றவா**
**றொன்றலா ஒன்றிலவை ஈறாதல் ஒன்றலா**
**ஈறே முதலதனின் ஈறலா ஒன்றுபல**
**வாறே தொழும்பாகும் அங்கு.**

என்பது உரைப்பாட்டு. இது சங்காரமே முதல் எனவந்த மேற்கோளைச் சம்பிரதாய மரபால் வலியுறுத்துகின்றது.

கண்ணழிவு:- அவை ஒன்று அல்லா ஒன்றால் உளதாகி நின்றவாறு ஒன்று அல்லா ஒன்றில் ஈறு ஆதலால் ஒன்று அல்லா ஈறே முதல், அங்கு அதனின் ஈறு அல்லா ஒன்று பலவாறே தொழும்பு ஆகும் எ. து.

பொழிப்புரை:- சேதனம் அசேதனம் என்று இருவகைப்பட்ட அப்பிரபஞ்சம் அறிவாலும் அளவையாலும் இது ஒருபொருள் என்று சுட்டியறியப்படாத முதல்வன் ஒருவனாலே தோன்றி நின்ற வழியானே முடிவில் அவ்வொருவனிடத்தே சென்று ஒடுங்கவும்ஒடுங்கலால் அவ்வாறு அதனை ஒடுக்கற்குக்காரண னாய் இருந்த அச்சங்காரக் கடவுள் ஒருவனே உலகிற்கு முதற்கடவுள் ஆவான். அவனிடத்தே அவ்னைத்தவிர்ந்த அப்பிரபஞ்சம் அனைத்துமே பல்வகையானும் தொழும்பு உடையதாம் எ. று.

அவை என்றது பிரபஞ்சத்தை. அது சேதனமும் அசேதன மும் ஆதல்பற்றி அவை எனப்பட்டது. நிலைபேற்றின்கண் இருந்து வரும் பிரபஞ்சம் இடையறவு இன்றி ஒடுக்கத்திற்கு வருதலின் நின்றவாறு ஈறாம் என்றான். எனவே அது உள தாகி நிற்புழியும் இடையறவு இன்மை பெற்றாம்.

ஆதலால் எனற்பாலது செய்யுளாதலின் ஆதல் எனக் குறைந்து நின்றது.

தோற்றம் நிலைபேற்றிலும் நிலைபேறு ஒடுக்கத்திலும் சுதந்தரம் இழக்குமாதலின் அவ்வாறு சுதந்தரம் இழக்காத ஈறே முதல் என்றான்.

ஈறலா ஒன்று என்றது பிரபஞ்சத்தை. அது அரி அயன் முதலான ஆன்மவருக்கம் அனைத்தையும் உள்ளிட்டசேதனம்

அசேதனமாகிய பிரபஞ்சத்தை எனவுணர்க. சடமாகிய பிரபஞ்சம் முதல்வற்கு உடைமை என்ற அளவில் தொழும்பு அடையது ஆகலானும், ஆன்மவருக்கத்துள் சகலராவார் பெத்தம் முத்தி இரண்டினும் வேறு வேறு வகைத் தொழும்பு உடையர் ஆகலானும், அரி அயன் முதலானோரை உள்ளிட்ட விஞ்ஞானாகலர் பிரளயாகலர் ஆகிய அனைத்து உயிர்வருக்கத்தாரும். தத்தமது நிலைகட்கு ஏற்பப் பல வேறு வகைத் தொழும்பு உடையர் ஆகலானும் ஈறலா ஒன்று பலவாறே தொழும்பாகும் அங்கு என்றான். அங்கு அச்சங்காரத்தில்.

இதனால் சங்காரமே முதல் என வந்த மேற்கோள் வலியுறுத்தப்பட்டவாறு அறிக.

இனி ஈறே முதல் என்பதற்குச் சங்காரமே அனைத்திற்கும் பிறப்பிடமாம் எனப்பொருள் கொண்டு அதனால்அதுவே முதற்கடவுளும் ஆம் என்று உரைப்பினும் அமையும்.

இவ்வதிகரணங்கள் மூன்றானும் முறையே பிரபஞ்சம் தோன்றி நின்று ஒடுங்கும் என்பதும், ஒடுங்கின் சங்காரத்திலிருந்தே மீளவும் தோன்றும் என்பதும், அதனால் சங்காரமே உலகிற்கு முதல் என்பதும் வலியுறுத்தப்பட்டன.

முதற்சூத்திரம் முற்றியது.

## இரண்டாம் சூத்திரம்

**அவையே தானே யாயிரு வினையின்**
**போக்கு வரவு புரிய ஆணையின்**
**நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.**

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோ எனின் புனர் உற்பவம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமென வந்த இவை ஆசிரியன் கூறியவை.

தோன்றி நின்ற உலகம் ஒடுங்கிப் பின் மீளத்தோன்றும் என்பது முன் சூத்திரத்தால் கூறப்பட்டதாகலின் இது ஆன்மாகட்கும் மறு பிறப்பு உண்டு என்கின்றது.

புனர் உற்பவமாவது ஆன்மாக்கள் இருவினைப்பயன் காரணமாக இறந்து பிறந்து வரும் நிலைமை. போக்கு வரவு என்பதும் அது.

கண்ணழிவு:- அவையே தானேயாய், ஆணையின் இரு வினையின் போக்கு வரவு புரிய, நீக்கம் இன்றி நிற்கும் அன்று ஏ. எ. து.

அவையே அவன்தானேயாய்ப் பிரிவின்றியிருந்து, அவன் ஆணையினால் இருவினைப்பயனைத் துய்க்கின்ற வழியாலே மேலும் அவ்வினையினைப் புரியவும், துய்த்து எஞ்சிய அவ் வினை காரணமாகப் போக்கு வரவு புரியவும், அவன் தன் ஆணையோடும் உலகு உயிர்களோடும் நீக்கம் இன்றிநிற்கும் அன்று ஏ. எ. து.

பொழிப்புரை:- மேல் ஈறலா ஒன்று என முதல்வனின் வேறாய்க் கருதப்பட்ட அவ்வான்மாக்கள் தாமே முதல்வன் தானேயாய்ப் பிரிவின்றியிருந்தே, அவனது அருளாணையி னால் இருவினைப் பயனைத்துய்க்கின்ற வழியாலே மேலும் அவ்வினைகளை ஈட்டிவரவும், துய்த்து எஞ்சிய அவ்வினை காரணமாக உலகில் இறந்தும் பிறந்தும் வரவும், அவன் அவ்வாணையோடும் உலகு உயிர்களோடும் பிரிவின்றிக் கலந்தே நிற்பன் எ. று.

மேலைச் சூத்திரத்து இறுதிவெண்பாவில் ஈறலா ஒன்று என முதல்வனின் வேறாய்க் கருதப்பட்ட அவ்வான்மாக் களையே இங்கு அவை என்று சுட்டினான். சூத்திரஇயைபும் இதனால் விளங்குவதாம்.

அவை என்பது ஆன்மாக்களையும் தான்என்பது முதல் வனையும் உணர்த்தின, ஆன்மாக்கள் பலவாகலானும், முதல்வன் ஒருவனாகலானும் என்க.

ஆன்மாக்கள் இருவினைப் பயன்களைப் புசித்தற்கும் புசித்து எஞ்சிய அவ்வினை காரணமாக இறந்து பிறந்து வருதற்கும் முதல்வனது அருளாணை இன்றியமையாததாக லின் அவன் அவ்வாணையோடும் உலகு உயிர்களோடும் பிரி வின்றிக் கலந்து நிற்பன என்றதாம். கலத்தல் பிரிவின்றிக் வியாபகமாய் இருத்தல்.

ஆணை என்பது முதல்வனது அருட்கட்டளை. சங்கற்பம் என்பதும் அது. அது ஒரு அரசியல் அடிப்படைச்சட்டம் போன்றது என முன்னரும் உரைக்கப்பட்டது.

அவையேயாய் தானேயாய் எனவும், அவை தானேயாய் எனவும் இருபொருள்படக் கூறியவதனால் முதல்வன் உலகு உயிர்கட்கு வேறாயும் உடனாயும் நின்றமை புலனாம். இதனால் பொருள் மூன்று என்பார் கூற்று வலியுறுவதோடு ஒன்று என்பார் கூற்று வலியழிவதாம் எனவும் கருதுக.

இறந்தும் பிறந்தும் வருதற்கு உயிர்கள் பங்கில் வினை காரணமாக முதல்வன் பங்கில் ஆணை காரணமாயிற்று. முன்னதிற் பின்னது வலியுடைத்தாகலின் அவனது ஆணை இன்றேல் மற்றது நடவாது என்பதும் பெற்றாம்.

நீக்கம் இன்றி நிற்றலாவது உடலெங்கும் உயிர் வியா பித்து நின்றாற்போல உலகெங்கும் முதல்வன் வியாபித்து நிற்றல் என்பதாம். அவ்வாறு நிற்றற்குஅவனதுஅருட்குணம் உபகாரமாய் நிற்கும் என அறிக.

இச்சூத்திரத்துள் அவையே தானேயாய் என்பது ஒரு அதிகரணம். இருவினையின் ஆணையின் என்பது ஒரு அதி கரணம். போக்கு வரவு புரிய என்பது ஒரு அதிகரணம். நீக்கம் இன்றி நிற்கும் என்பது ஒரு அதிகரணம் ஆக நான்கு அதிகரணத்தது இச்சூத்திரம் என்பது.

## முதலாம் அதிகரணம்

*ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் தானேயாய் நிற்கும் என்றது அத்துவிதம் என்ற சொல்லானே ஏகம் என்னின் ஏகம் என்று சுட்டுவது உண்மையின் அத்துவிதம் என்ற சொல்லே அந்நிய நாத்தியை உணர்த்துமாயிட்டு.*

மேற்கோளும் ஏதுவுமாய் வந்த இது ஆசிரியன் உரைத்தது. அத்துவிதம் என்ற சொல்லால் பொருள் ஒன்றெனக் கொண்டார்க்கு மறுமொழி கூறும் முகத்தால் பொருள் மூன்றே என வலியுறுத்துகின்றது இது.

வேதங்களில் ஆங்காங்கு வரும் அத்துவிதம் என்ற சொல்லுக்கு இரண்டு அல்லாதது-ஒன்று அல்லது ஏகம் எனப் பொருள் கொண்டால் ஏகம்தானே தன்னை ஏகம் என்று சொல்லிக் கொள்ளாது ஆகலானும், ஏகத்தை ஏகம் என்று சுட்டிக்கூறும் பிறிதொரு பொருளும் இருந்தது எனப்படும் ஆகலானும், அத்துவிதம் என்ற சொல் தானும் ஏகத்திற்கு அந்நியமாய் ஒரு பொருள் ஆதியில் இருந்தது என முன்னர் உடன்பட்டுப்பின்னர் அதனை மறுக்கும் ஆகலானும் இவ்வுலகில் உள்ள ஆன்மாக்கள் பலவும் முதல்வன்தானேயாம் படிப் பிரிவின்றிக் கலந்து அக்கலப்பினால் பொருள்ஒன்றேஎன்னும் படி நிற்கும் என மேற்கொள்ளப்பட்டது என்பதாம்.

ஈண்டிவ்வான்மாக்கள் என உடம்பொடு புணர்த்திக் கூறியவதனால் ஆன்மாக்களோடு உலகும் கொள்ளப்படும். படவே உலகு உயிர் இறை என்னும் முப்பொருட்கொள்கை உடையதே சைவ சித்தாந்தநெறி என்பது போதரும்.

ஆன்மாக்கள் பலவும் என்றது விஞ்ஞானாகலர், பிரளயாகலர் சகலர் என்ற ஆன்ம வருக்கத்து மூவகைப்பிரிவுகளையும் கருதி என்க.

அவை முதல்வன் தானேயாய் நிற்கும் என்றது அவை தம்மில் முதல்வன் வியாபகமாய்க் கலந்து நிற்பன்என்றதாம்.

அந்நிய நாத்தி என்பது தனக்கு அந்நியமாய்ப்பிறிதொரு பொருளும் இருந்தது என முதலில் உடன்பட்டுப் பின்னர்

அதனை மறுத்து இல்லை என்பது. அதாவது அத்துவிதம் என்பது இரண்டாயும் இரண்டற்றதாயும் இருந்தது என்ற பொருளைத் தருவதாம் என்பது.

ஆயிட்டு என்பது ஆகலான் என்னும்பொருள்தருவதொரு வழக்குச் சொல்லாகலாம் போலும். யாரானும் ஒரு சாராரிடத்து அப்பொருளில் அச்சொல் வழக்கத்தில் இருந்திருக்கலாம் அகலின் திசைச்சொல் என்று அதனைக் கொள்ளலும் ஆம் என்பது.

**கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டுள்ளம்**
**இட்டதொரு பேரழைக்க என்னென்றாங் கொட்டி**
**அவன்உளம் ஆகில்லான் உளம் அவனா மாட்டா**
**தவன்உளமாய் அல்லனுமாம் அங்கு.**

கண்ணழிவு:- உள்ளம் கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டு இட்டதொரு பேரான் அழைக்க என் என்றாங்கு ஒட்டி அவன் உளம் ஆகில்லான் உளம் அவனாகமாட்டாது அவன் உளமாய் அல்லனும் ஆம் அங்கு எ. து.

பொழிப்புரை:- உயிரானது என்பு தோல் நரம்பு இறைச்சி முதலாயினவற்றால் கட்டப்பட்ட உடம்பினையும் மெய் வாய் கண் மூக்குச் செவி ஆகிய கருவிகளையும் கூடி நின்று, அவ்வுடம்பிற்கு இட்ட பெயரைச் சொல்லி ஒருவன் அழைக்குங்கால் உயிரே ஏன் என்று முன்வந்து விடையிறுக்கும். அவ்வாறு உயிர் உடம்போடு பிரிவின்றிக் கலந்து ஒட்டி நின்றாற்போல் முதல்வனும் உயிர்களோடு பிரிவின்றிக் கலந்து ஒட்டியே நின்றான் ஆயினும் முதல்வன் உயிராக மாட்டான், உயிரும் முதல்வனாக மாட்டாது. என்றாலும் உயிர் உலகுகளின் ஆக்கம் கருதி அவன் உயிராயும் உலகாயும் அங்கு ஒன்றியே நிற்பன் எ. று.

உளமாயும் அல்லனாயும் என்றதால் உயிராயும் உயிரல்லாத உலகாயும் என்று உரைக்கப்பட்டது. உயிரல்லாத உடம்பு என உரைப்பின் அதுவும் உலகாய் அடங்கும் எனவே அறிக. அங்கு என்றது அவ்வியாபக நிலைக்கண் என்றதாம்.

உறுப்பு என்பது உறுப்பினை உடைய உடம்பிற்கு ஆகி வந்தது, ஆகுபெயர்.

இதனால் உடம்போடு ஒட்டிய உயிரைப்போலஉயிரோடு ஒட்டிய முதல்வன் ஒருவனும் இருந்தான் என்பது உணர்த்தப் பட்டது. படவே அந்தக் கட்டமைப்பில் பிரபஞ்சச் சேர்க்கை யால் ஆனதும் மாயா இயந்திர தனுவானதுமாகிய உடம்பும் உயிரும் இறையும் எனப்பொருள் மூன்று என்பதும் இங்குத் தோற்றுவாய் செய்துகொள்ளப்பட்டது. அந்த மூன்றினை அடுத்துவரும் உரைப்பாட்டு வரையறுத்துக்கூறும்.

**ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்**
**ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண் ஒன்றின்றால்**
**அக்கரங்கள் இன்றாம் அகரவுயிர் இன்றேல்**
**இக்கிரமத் தென்னும் இருக்கு.**

என்பது உரைப்பாட்டு. இது ஏகம் என்ற சொல்லுக்கு உண்மைத்தாற்பரியம் கூறும் முகத்தால் பொருள் ஒன்று அன்று மூன்றே என வரையறுக்கின்றது.

கண்ணழிவு:- ஒன்று என்றது ஒன்றே காண், ஒன்றே பதி, பசுவாம் ஒன்று என்ற நீ, பாசத்தோடு உளைகாண். ஆகலின் ஒன்று இன்று. அகரவுயிர் இன்றேல் அக்கரங் கள் இன்றாம், இக்கிரமத்து இருக்கு என்னும் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, வேதங்கள் பரம்பொருளை ஏகம் என்ற சொல்லால் ஒன்று என்றதற்கு உண்மையான தாற்பரியம் பரம் பொருள் ஒன்று என்பதேயாம், இரண்டு மூன்று என்பதில்லை என்றதாம். அந்த ஒன்றே பதி எனப் படுவது. அதனை ஒன்றெனச்சுட்டி உணர்ந்த நீ பசு எனப் படுவாய். ஏன்என்றால் பாசத்தோடு இருக்கின்றாய் ஆகலின், ஆகவே பதி பசு பாசம் என ஆதியில் நிச்சயிக்கப்பட்டபொருள் மூன்று என்பதேயன்றி ஒன்று எனல் ஆகாது என்பதே. முயற் சியின்றி இயல்பாக நாதமாத்திரையால் பிறக்கும்அகரமாகிய உயிரெழுத்து ஒன்று இல்லையாயின் ஏனை உயிரும் மெய்யு மாகிய எழுத்துக்களும் இல்லையாம். அதுபோலப் பதிப் பொருள் ஒன்று இல்லையாயின் ஏனைப்பசுவாகிய உயிரும் பாசமாகிய உலகும் இல்லையாம் ஆகலின் அம்முறைபற்றி இருக்கு முதலிய வேதங்கள் முதல்வனை அவ்வாறு ஏகம் என்ற சொல்லால் சொல்லி வைத்தன எ. று.

எனவே பதி பசு பாசம் எனப்பொருள் மூன்று என்பதே யன்றி ஒன்று எனல் ஆகாது என்பதாம்.

ஒன்றன்று எனற்பாலது ஒன்றின்று எனத்திரிந்துநின்றது இன்மையும் ஒரோவழி அன்மை செப்புமாகலின்.

அக்கரங்கள் இன்றாம் அகரவுயிர் இஃறேல் என்னும் உவமைக்கேற்பப் பொருட்கண் வருவித்து உரைக்கப்பட்டது. அது தலைமை பற்றி வந்த உவமை.

அகர வுயிர்க்குத் தலைமை அது வாய் அங்காத்த அள வில் நாதமாத்திரையாய் இயல்பிற் பிறத்தலானும், ஏனை உயிரொலிகளினூடே கலந்து நிற்றலானும், மெய்யொலி களை உயிர்ப்பிக்க உதவலானும் கொள்ளப்படும். அதுபோல முதல்வற்குத் தலைமை அவன் உலகு உயிர் அனைத்திற்கும் இயல்பாய் மூத்து நிற்றலானும், அனைத்து உயிர்களிலும் சிவனே சீவன் என்னும்படிக் கலந்து விளங்கலானும், சடப் பொருளாகிய உலகு தழைக்க நின்று உதவலானும்கொள்ளப் படும். அவன் இன்றேல் அவை இல்லை என்னும் தலைமை பற்றி வந்த இன்றியமையாமை கருதியே அக்கரங்கள் இன் றாம் அகரவுயிர் இன்றேல் என உவமப் பொருள்மேல் வைத் துக் கூறினான். அக்கருத்தே பற்றி அவன் ஒருவனே மற் றெல்லாம் என்ற பொருளில் வேதங்கள் ஏகம் என்று சொல்லி வைத்தனவேயன்றி அவனோடியைந்த பொருள் வேறு உள வெனக் கோடற்கு அச்சொல் தடையாய் இருந்ததின்று எனவும் அறிக.

**பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்**
**எண்ணும் சுவையும்போல் எங்குமாம்**

அண்ணல்தாள்

**அத்துவிதம் ஆதல் அருமறைகள் ஒன்றென்னா**
**தத்துவிதம் என்றறையும் ஆங்கு.**

என்பது உரைப்பாட்டு. முன்னது ஏகம் என்ற சொற்குத்தாற் பரியம் கூறியது. இது அத்துவிதம் என்ற சொற்குத்தாற்பரி யம் கூறுகின்றது.

கண்ணழிவு:- எங்கும் ஆம் அண்ணலும் தாளும் பண்ணையும் ஓசையும் போலவும் பழம் அதுவும் எண்ணும் சுவையும் போலவும் அத்துவிதம் ஆதலால் அருமறைகள் அவனை ஒன்றே என்னாது அத்துவிதம் என்றும் ஆங்கு அறையும் எ. து.

பொழிப்புரை:- உலகு உயிர் எங்கணுமாய் வியாபியா நின்ற அண்ணலும் அவனது அருளும் பண்ணும் அதன் ஓசையும் போலவும், பழமும் அதன் சுவையும் போலவும் இரண்டுமாய் இரண்டற்றதுமாய்க் கருதப்படும் காரணத் தாலே ஓதற்கு அரிய வேதங்கள் அவனை ஒன்று என்னும் பொருளில் ஏகம் என்றே சொல்லி யொழியாது இரண்டுமாய் இரண்டற்றதுமாம் என்னும் பொருளில் அத்துவிதம் என்றும் ஆங்குச் சொல்லா நின்றன எ. று.

எனவே வேதங்கள் முதல்வனை ஏகம் என்றும் அத்து விதம் என்றும் இருவழியானும் உணர்த்தியது கொண்டு ஏகம் என்பதற்குப் பொருள் பரம்பொருள் ஒருவனே என்று கருதுக எனவும், அத்துவிதம் என்பதற்குப்பொருள் முதல்வனும் அவனதருளும் எனக்குணிகுணவகையால் இரண்டுமாய்ப் பொருள்வகையால் இரண்டற்றதுமாம் என்று கருதுகஎனவும் அறிவுறுத்தியவாறாம் என்பது.

பண்ணும் ஓசையும் உறுப்பியும் உறுப்புமாய் ஒன்றி நிற்றற்கும், பழமும் சுவையும் பண்பியும் பண்புமாய் ஒன்றி நிற்றற்குமாகக் கொள்க. டண் முதல்வனது அருவநிலை யினைச் சுட்டற்கும், பழம் அவனது உருவநிலையினைச் சுட்டற்கும், வந்தனவெனக்கொள்க.

**"அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்**
**சகளமாய் வந்ததென் றுந்தீபற**
**தானாகத் தந்ததென் றுந்தீபற".**

எனத்திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனாரும்,

**"அருவாகி நின்றானை யார் அறிவார் தானே**
**உருவாகித் தோன்றானேல் உற்று"**

என இந்நூலாசிரியனும் கூறியுள்ளதைக் கருதுக.

பண் குறிஞ்சிப்பண் முதலாயின பலவுமாம். ஓசை குரல் முதலாயின ஏழுமாம். அவற்றை இக்காலத்தார் சரிகமபதநி என்ற அடையாள எழுத்தால் குறித்தனர். பண்ணையும் என் புழி ஐகாரம் சாரியை. பழம் அது என்புழி அது பகுதிப் பொருள் விகுதி. பழம் மா பலா வாழை முதலியன பலவுமாம். சுவை கைப்பு முதலாயின ஆறுமாம். ஆதலால் எனற்பாலது ஆதல் எனக் குறைந்து நின்றது. ஒன்று என்புழியும் என்று என்புழியும் முறையே தேற்றேகாரமும் எச்சவும்மையும் தொக்கு நின்றன.

இதனால் அத்துவிதம் என்ற சொற்கு உண்மைத் தாற்பரியம் கூறப்பட்டது.

**அரக்கொடு சேர்த்தி அணைத்தவக் கல்போல்**
**உருக்கி உடங்கியைந்து நின்று பிரிப்பின்றித்**
**தானே உலகாம் தமியேன் உளம்புகுதல்**
**யானே உலகென்பன் இன்று.**

என்பது உரைப்பாட்டு. இது முதல்வன் உலகோடு ஒட்டி நின்றதற்குத் திட்டாந்தம் கூறுகின்றது. புறனடை எனினும் அமையும். என்னை, மேல் அவன் உளமாய் அல்லனும் ஆம் என்றான். உளமாய் ஒட்டி நின்றதற்குக் "கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டுள்ளம் இட்டதொரு பேரழைக்க என்னென் றாங்கு ஒட்டி". என்ற உரைப்பாட்டால் திட்டாந்தம் ஆண்டே கூறி உலகாய் ஒட்டி நின்றதற்கு அது கூறாது எஞ்ச நிற்றலின் அது ஈண்டுக் கூறப்படுகின்றது ஆகலான் என்பது.

கண்ணழிவு:- உருக்கி அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கல்போல் பிரிப்பு இன்றி உடங்கு இயைந்து நின்றுதானே உலகாம். தமியேன் உளம் புகுதலால் இன்று யானே உலகு என்பன் எ. து.

பொழிப்புரை:- அரக்கை உருக்கி அதனோடு சேர்த்துப் பிடித்த கற்பொடியாகிய அந்தச் சாணைக்கல் போல முதல்வனும் உலகோடு ஒருங்கு இயைந்து பிரிப்பின்றி ஒட்டி நின்று தானே உலகாயும் நிற்பனாம். அவ்வாறு நின்ற உலக முதல்வன் இந்த முத்திக் காலத்தில் பாசக்கட்டுகளின் நீங்கித் தனி

யாக நின்ற எனதகத்தும் அவனே தானே ஆகிய அந்நெறி யால் புகுந்து ஒன்றென நின்றான் ஆதலால் இன்று யானே உலகமாயினேன் என்று நானும் சொல்லிக்கொள்வேன். போலும் எ. று.

என்பன் என்றதால் அவ்வாறு சொல்லிக்கோடல் மாத் திரையே அன்றி அது உண்மை ஆகாது என்பதாம். உண்மை யில் உலகாயினோன் அம்முதல்வன் ஒருவனே என்பது கருத் தாகக் கொள்க. முத்தான்மாக்கள் முத்தி நிலையிலும் முதல் வற்கு ஆளாம் என்றே ஆசிரியன் ஆங்காங்குக் கூறியது கொண்டு இவ்வாறு உரைக்கப்பட்டது.

ஏகான்மவாதிகளுட் சிலர் யானே பிரமம் என்றும், யானேஇன்று உலகாயினேன் என்றும் கூறிக்கொள்வரன்றே, அவர் அங்ஙனம் கூறுவது சித்தாந்த நெறிக்கு ஒவ்வாதாக லின் அதை மறுத்து அன்னார் மனம் புண்பட உரைத்தல் மெய்யுணர்ந்தார்க்குத் தக்கதன்றாம் எனக்கருதியே ஆசிரி யன் அக்குறையினைத் தன்மேல் வைத்து நயம்படக் கூறிச் சென்றான் என்றே நாம் இங்கு உணர்தல் தகும்.

யானே உலகென்பன் இன்று என்றது உபமன்னிய முனி வன்பால் சிவதீக்கை பெற்றுத் தன்னையும் தலைவனையும் உணர்ந்து சிவோகம் பாவனை கைவரப்பெற்ற கண்ணன் அருச்சுனற்குக் கீதைநூல் உபதேசித்த பொழுது யானே உலகெலாம் ஆயினேன் என்று கூறியதைக்கருத்திற்கொண்டு கூறியதாகலாம் என்க.

அரக்கொடு சேர்த்திஅணைத்த அக்கல் என்றது சாணைக் கல். அது அரக்கும் கற்பொடியும் சேர்ந்து ஒன்றானது. அரக்கு முதல்வற்கும், கற்பொடி உலகிற்கும் உவமையாகக் கருதுக, முன்னது பற்றுவதும் பின்னது பற்றப்படுவதுமாய் இருத்தலின். இன்று என்றது இம்முத்திக்காலத்து என்றதாம் அதாவது பாசக்கட்டுகளின் நீங்கித் தன்னையும் தலைவனை யும் உணர்ந்து அவனேதானேயாகிய அந்நெறியால் ஏகனாகி இறைபணி நின்ற எல்லைக்கண் என்பதாம்.

இவ்வதிகரணத்துள் வந்த உரைப்பாட்டுக்கள் நான்கனுள் முதற்பாட்டும் இறுதிப்பாட்டும் முதல்வன் உயிராயும் உலகாயும் ஒட்டி நின்ற இயல்பினை விளக்க வந்தன எனவும் இடை நின்ற இரண்டும் முறையே ஏகம் என்ற சொல்லுக்கும் அத்துவிதம் என்ற சொல்லுக்கும் உண்மைத்தாற்பரியம் கூற வந்தன எனவும் அறிக.

இவை நான்குமே மேற்கோளை வலியுறுத்துதற்காக வந்தன வென்றே உணர்க.

## இரண்டாம் அதிகரணம்

*இனி இவ்வான்மாக்கட்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என்றது, ஒரு நகரியைக்காப்பான் பாடி காவல் இட்டாங்கு அவை அவனது ஆக்கினை ஆகலான்.*

மேற்கோளும் ஏதுவுமாய் வந்த இது ஆசிரியன் உரைத்தது.

ஒரு நாட்டைக்காக்கும் பேரரசன் ஒருவன் அந்நாட்டகத்துச் சிற்றூர் பேரூர் ஆகிய அனைத்து ஊர்களிலும் ஊர்க்காவல் தொழில்களை அவ்வவ்வூர்த்தலைவர்பால்வைத்து நடத்துமாயினும் அவர்தம் தலைமை அனைத்தும் அப்பேரரசனது ஆணைக்கு உட்பட்டே நடக்கும். அதுபோல ஆன்மாக்கள் தாம் தாம் ஈட்டிய வினைகொண்டு அவ்வினைக்கு ஈடான பயன்களைத் தாமே நுகருமாயினும் அந்நுகர்ச்சி அனைத்தும் முதல்வனது ஆணைக்கு உட்பட்டே நடக்கும் ஆகலின் இங்கு இவ்வான்மாக்கட்கு இருவினை நுகர்ச்சி முதல்வன் ஆணையாலே வரும் என மேற்கொண்டான் ஆசிரியன் என்பது.

நகரை உடையது நகரி ஆகலின் நகரி என்றது இங்கு நாட்டைக்குறித்தது. பாடி என்பது சிற்றூர் பேரூர் ஆகிய ஊர்களைக் குறிக்கும். பாடி காவல் என்பது ஊர்க்காவல் தொழில். ஊராட்சி முறை என்பதும் அது. ''கோடி காவனைக் கூறாத நாளெலாம் பாடி காவலில் பட்டுக் கழியுமே''. என்புழிப் பாடிகாவல் என்பது அப்பொருட்டாயினமை கண்டுதெளிக. '' நாமார்க்கும் குடியல்லோம் '' என்றதும் அப்பெரியார் ஊர்க்காவலை மதியாது உரைத்த வீற்றுரை எனவே உணர்க.

இதற்கு இவ்வாறு உரையாது வேறுவேறாய் உரைத்துச் சொற்குணம் வாளாபோயினாரும் உளர்.

ஊர்க்காவல் தொழிலாவது ஊராட்சி முறை. பண்டை நாளில் இவ்வூராட்சி முறைகள் அனைத்தும் நாடு காக்கும் பேரரசன் ஒருவனது ஆணைக்கு உட்பட்டே நடந்து வந்தன என்பதும், ஆட்சிக்கு உரிய ஊர்த்தலைவர்களை ஊர்மக்கள் குடவோலை முறையில் தேர்ந்தெடுத்தனர் என்பதும் பண்டைக் கல்வெட்டுக்களால் அறியலாம்.

ஒரு பெரு நாட்டில் உள்ள பல்லாயிரக்கணக்கான ஊர்களில் ஊர்க்காவல்தொழில்கள் அந்தஅந்த ஊர்த்தலைவரால் நடக்குமாயினும் அவையெல்லாம் அந்நாடு காக்கும்பேரரசன் ஒருவனது ஆணை வழி நடப்பன என்று கருதுவதுபோல உலகில் கோடிக்கணக்கான உயிர்களின் வினை நுகர்ச்சியெல்லாம் உலக முதல்வனது அருளாணைவழி நடப்பனவாம் என்பதே மேற்கோளின் திரண்ட பொருளாம்.

ஆக்கினை, ஆணை, சங்கற்பம் என்பன எல்லாம் ஒரு பொருள் தரும் சொற்களாம்.

**உள்ளதே தோற்ற உயிர்அணையும் அவ்வுடலின்**
**உள்ளதாம் முற்செய்வினை உள்ளடைவே வள்ளலவன்**
**செய்பவர் செய்திப் பயன்விளைக்கும் செய்யேபோல்**
**செய்வன் செயலணையா சென்று.**

என்பது உரைப்பாட்டு. இது ஆன்மாக்களுக்கு இருவினை நுகர்ச்சி முதல்வன் ஆணையாலே வரும் என வந்த மேற்கோளை உதாரண மூலம் விளக்குகின்றது.

கண்ணழிவு:- உள்ளதே தோற்ற உயிர் அணையும் அவ்வுடலினுள் முன் செய்வினைஅடைவும் உள்ளதாம். செய்பவர் செய்திப்பயன் விளைக்கும் செய்யேபோல் வள்ளலவன் செய்வன். செயல் தானே சென்று செய்தானை அணையா எ. து.

பொழிப்புரை:- முற்பிறவியில் செய்யப்பட்டுப் பிற்பிறவியில் பயன் தரற்கு உள்ளதாகிய பழவினையே புதிய பிறவிக்கு

வேண்டுவதோர் உடம்பினைத் தோற்றுவிக்க உயிர் சென்று தங்கும் அவ்வுடம்பின்கண்ணே அப்பழவினையும் சென்று தங்குவதாம். உழவுத்தொழில் செய்வார்க்கு உழவின் பயனைக் காலத்தே விளைவித்துக்கொடுக்கும் விளைநிலம் போல வினைபுரியும் உயிர்கட்கு அவ்வினைப் பயனைக் காலத்தேகூட்டிவைப்பன்பேருபகாரியாகிய முதல்வன்ஆகலின் செய்தவினை தானே சென்று செய்தானைஅடையாது எ. று.

ஒருவனது பிறவிக்கு வேண்டுவதோர் உடம்பினைஅவன் தான் முன்செய்த பழவினையே தோற்றுவிக்கும் ஆதலால் உள்ளதே தோற்ற என்றான். தோற்ற என்பது பிறவினை. அதற்கு உடம்பு என்னும் செயப்படு பொருள் வருவித்து உரைக்கப்பட்டது. படவே அவ்வுடல் என்று பின்னர் வந்த சுட்டு அதனையே சுட்டிற்று. முன்செய்தவினை பின்வரும் உடம்பிற்கு ஏதுவானாற்போல அவ்வுடம்பிலிருந்து செய்யும் புது வினையும் அதன்பின் வரும் உடம்புக்கு ஏதுவாகலாம். ஆகவே வினையின் வந்ததும் வினைக்கு விளைவாயதுமே உடம்பென்று அறிக.

ஒருவன் ஒரு உடம்பிலிருந்து செய்த வினை அவன் அவ்வுடம்பை விட்டுச் செல்லுழியெல்லாம் செல்லுமாகலான்உயிர் அணையும் அவ்வுடலின்கண்ணே அப்பழவினையும் சென்று அடைவதாம் என்றான், கருவடைந்த உயிரின் ஒவ்வோரசைவிற்கும் அவ்வுயிர் முன்னர் ஈட்டிய பழவினையே ஏதுவாகலான் என்க. ஆகவே வினைக்குக் கொள் கலனாய் நிற்பதே உடம்புஎன்றவாறாம். "இடும்பைக்கேகொள்கலன்கொல்லோ குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு". என்றார் வள்ளுவரும்.

இனிப் பிறவிதோறும் செய்து போகட்டு வந்த வினைகள் எல்லாம் தாமே சென்று செய்தானை அடையா ஆகலான் அவற்றை அவ்வான்மாக்கட்குக்காலத்தே கூட்டிவைத்து நுகர்விக்கும் முதல்வனை வள்ளல் என்றான். பல்லாவுள் உய்த்துவிடினும் குழக்கன்று வல்லதாம்தாய்நாடிக்கோடலை.. பழவினையும் அன்னதகைத்து" என்வரும் பிறமதக் கோட்பாடு சைவ சித்தாந்த நெறிக்கு உடன்பாடன்றாம் ஆகலின் "செயல் அணையா சென்று" என்றான்.

உடலினுள் எனக்கொண்டு கூட்டிப்பொருள் உரைக்க. அடைவு-அடைதல். ஆண்டு எச்சவும்மை தொக்கது.

உழைப்பு உழவனுடையது ஆயினும் உழைப்பின் பயனைத்தரவல்லது விளைநிலம்ஆதல்போலச்செய்தானுக்குச் செய்வினைப்பயனை முதல்வனே கூட்டுவிப்பன் என்றான். அதனால் விளைநிலம் இங்கு முதல்வற்கு உவமை ஆயிற்று.

**அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர்**
**தாம் சென்றங்**
**கவ்வினையைக் காந்த பசாசம்போல்**
**அவ்வினையைப்**
**பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்**
**ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு.**

என்பது உரைப்பாட்டு. இது மேலதற்கு ஒரு புறனடை கூறுகின்றது. செய்வினை தானே சென்று செய்தானை அடையாது என்பது ஒப்பமுடிந்ததாயினும் வினை செய்தவன் அவ் வினைப்பயனை அறிந்து எடுத்து நுகர்தல் கூடுமன்றே, அங்குக் கருத்தா பிறன் ஒருவன் வேண்டாவன்றே என்று ஐயுற்ற மாணாக்கற்கு ஐயம் அகற்றி அதுவும்கூடுவதன்றாம் என்பதோரொழிபு உணர்த்தலின் இது புறனடை ஆயிற்று.

கண்ணழிவு:- அவ்வினையைச்செய்வதனில் அவ் வினைஞர் தாம் சென்று அங்கு அவ்வினையைக் காந்தம் பசாசம் போல் பேராமல் ஊட்டும் பிரானின் நுகர்வர். நுகரா ரேல் அங்கு அறிந்து அணைப்பார் ஆர் தாம் எ. து.

பொழிப்புரை:- புதிய வினைகளைச் செய்வதற்கு அமைந்த உடம்புகளில் புதிய வினைகளைப் புரியும் ஆன்மாக் கள் சென்று தங்கியிருந்து காந்தத்தையும் இரும்பையும் நேரொக்கக்காட்டி அவை ஒன்றை ஒன்று பற்றுமாறு செய்யும் கருத்தன் ஒருவனைப்போல அந்தப் பழவினைப் பயன்களைப் பிறழாமல் காட்டி ஊட்டவல்ல முதல்வன் ஒருவனாலே நுகர்ந்து வரும். அவ்வாறு முதல்வனால் அவைநுகராவாயின் தான் செய்தவினையைத் தானே தேர்ந்து எடுத்து நுகரவல்ல ஆன்மாத்தான் யாதோ எ. று.

இது சொற்பொருட்பின் வருநிலையணி.

காந்தமும் இரும்பும் தொலைவில் வேறு வேறிடத்தில் இருந்தபொழுது அவை ஒன்றை ஒன்று பற்றுவதில்லை. அவைபற்றுதற்கு அவற்றை நெருங்கக்கொணர்ந்து நேரொக்கக்காட்டும் ஒரு கருத்தன் உதவியைவேண்டிநிற்கும். அதுபோலப்பல வேறு காலங்களில் பல வேறு தேயங்களில் பல வேறு உடம்புகளில் இருந்து வினைகளைச் செய்த ஆன்மாக்கள் தாம் செய்த வினைக்கீடான பயன்களைத்தாமே தேர்ந்தெடுத்து நுகர்தல் என்பது அவற்றுக்குக் கூடாவாகலின் அவற்றைப் பிறழாமல்கூட்டி நுகர்விக்கும் முதல்வன்ஒருவனது உதவி ஒருதலையாய்த் தேவைப்படும் என்பதாம்.

பற்றுவது காந்தமும் பற்றப்படுவது பசாசமும் ஆம் ஆகலின் காந்தத்தை ஆன்மாவுக்கும் பசாசத்தை வினைக்கும் உவமைகளாகக் கருதுக.

ஆர் தாம் என்றதன் குறிப்பு-சரியை கிரியை யோக ஞானங்களில் முதிர்ச்சி உடையராய்இருந்த சகலரிலேயன்றியும் பிரளயாகலரிலும் ஒருவரும் இல்லை என்றதாம். விஞ்ஞானாகலர்க்குக் கன்ம மலமும் மாயா மலமும் இல்லை என்பதால் அன்னாரை இங்குத் தவிர்க்க என்பதாம்.

செய்வதுஎன்பது செய்வதற்கு இடனாயிருந்தஉடம்பைச் சுட்டியது. வினைஞர், வினை புரியும்ஆன்மாக்கள். அணைப்பர் என்பது தன் வினையும் ஆம் ஆகலின் அவ்வாறு உரைக்கப் பட்டது. அணைதல் என்பது இங்கு அணைந்து நுகர்தல் என்னும் பொருட்டு. ஆங்கு என்பதற்குப்புதிய உடம்போடு கூடிநிற்கும் அவ்விடத்து என்று உரைத்துக்கொள்க.

அவ்வினை என்று வந்த சுட்டுக்கள் நான்கனுள் முன்னவை இரண்டும் புதுவினைகளையும் பின்னவை இரண்டும் பழவினைகளையும் குறித்தனவாகக் கொள்க.

இதனால் வினைசெய்தானும் தான் செய்த வினைக்கு ஈடான பயனை முதல்வன் உதவியின்றித் தானே அறிந்தெடுத்து நுகரவல்லனல்லன் என்பது உணர்த்தப்பட்டது. அங்ஙனம் அவன் நுகரமாட்டாமைக்கு ஏது அடுத்து வரும் உரைப்பாட்டாற் கூறுவான்.

**நெல்லிற் குமியும் நிகழ்செம் பினிற்களிம்பும்
சொல்லின் புதிதன்று தொன்மையே வல்லி
மலகன்மம் அன்றுளவாம் வள்ளலால் பொன்வாள்
அலர்சோகம் செய்கைமலத் தாம்**

என்பது உரைப்பாட்டு. இதுவும் புறனடை கூறுகின்றது. வினைசெய்தான் அவ்வினைப்பயனைத்தானேஅறிந்தெடுத்து நுகரமாட்டாமைக்குக் காரணம் இன்னது என்பதோ ரொழிபு உணர்த்தலின் இது புறனடையாயிற்று.

கண்ணழிவு:- நெல்லிற்கு உமியும் செம்பினில் நிகழ் களிம்பும் சொல்லின் புதிதுஅன்று, தொன்மையே.வல்லி மலம் கன்மம் அன்றே உளவாம். பொன்வாள் அலரின்கண் சோகம் செய்கை போல வள்ளலால் மலத்தும் அது ஆம் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, நெல்லின் கண் உள்ள உமியும், செம்பின்கண் உள்ள களிம்பும் ஆராய்ந்து சொல்லுமிடத்துப் புதியவாய் இடையே தோன்றினவல்ல, நெல்லும் செம்பும் தோன்றுங்கால் உடன்தோன்றியவையே. அதுபோல மாயாமலகன்மங்களும் ஆன்மாக்கட்கு அநாதியே உள்ளன. ஆகலான் அவ்வான்மாக்கள் தாம்செய்த வினையின் பயனைத் தாமே அறிந்து எடுத்து நுகரவல்லன அல்லவாம். கதிரவன் ஒளியானது தாமரை மலர்களை நாள்தோறும் அலர்த்தியும் குவித்தும் வந்து முடிவில் ஒரு நாள் அவை முற்றவும் கருகி உதிரும்படிச் செய்து விடுவது போலப் பேருபகாரியாகிய முதல்வனாலே ஆன்மாக்களுடைய மலங்களிடத்தும் அது நிகழ்வதாம் எ. று.

மலக் குற்றங்களது உண்மை கூறுவான் அவை நீங்கு மாறும் உடன் கூறினான் என்க.

கதிரவன் தன்ஒளிக்கதிர்களால் தாமரை மலர்களை நாள் தோறும் மலர்த்தியும் குவித்தும் வந்து முடிவில் ஒரு நாள் அவை முற்றவும் கருகி உதிரச் செய்வது போலப்பேருபகாரி யாகிய முதல்வனும் ஆன்மாக்களின் மலக்குற்றங்களைக் காலந்தோறும் பெருக்கியும் குறைத்தும் வந்து முடிவில் ஒரு நாள் அவை முற்றவும் தேய்ந்து ஒழியும்படிச் செய்வன் என்ற

தாம். அதற்காகவே அந்தப் பேரருளாளன் ஆன்மாக்கட்கு மாயா தனு விளக்கைக் கொடுத்துள்ளான் என்பதையும் நாம் இங்கு உணர்தல் தகும்.

நிகழ் என்னும் அடையினை நெல்லுக்கும் கூட்டி உரைக்க. செம்பில் நிகழ் களிம்பு எனவும் நெல்லில் நிகழ் உமி எனவும் கொண்டு கூட்டுக. நெல்லிற்கு என்பது உருபு மயக்கம். அதனைக் கிழங்கு மணற்கீன்றமுளை என்புழிப் போலக் கொள்க.

புதிது அன்று என்பதனைத் தனித்தனிக் கூட்டி உரைக்க.

வல்லி என்பது இங்கு மாயாமலத்தைக் குறித்தது.

இன்று இந்நூல் மும்மை மலர்க்கு என நூல் இறுதியில் ஆசிரியன் கூறுவான் ஆகலின் அநாதியே மும்மலங்களையும் உடைய சகலரையே நினைந்து வல்லி மலகன்மம் அன்று உளவாம் என்று கூறினான் ஆயினும் ஒரு மலமும் இருமலமும் உடைய ஆன்மவருக்கத்தாரும் உளர்,அவர்க்கும் அம்மல நீக்கம் முதல்வன் அருளாலே நிகழ்வதாம் எனவும் கூட்டி உணர்க.

நெல்லுமி நெல் முளைத்தற்கு ஏதுவாகலானும், உமி நீங்கின் நெல் முளையா தாகலானும், கன்மங்கள் பிறவி தோன்றற்கு ஏதுவாகலானும், கன்மம் கெடின் பிறவியும் கெடும் ஆகலானும் நெல்லுமியைக் கன்மத்திற்கு உவமை யாகக் கருதுக.

களிம்பு செம்பினது ஒளியை மறைத்து நிற்பதாகலான் உயிர் அறிவை மறைத்து நிற்கும் ஆணவத்திற்கு அதனை உவமையாகக் கருதுக.

மாயை அவ்விரண்டும் போலன்றி உயிருக்கு விளக்கமே செய்யுமாயினும் அகப்பற்றும் புறப்பற்றும் அதனால் வருதலால் அதுவும் உயிருக்குக் குற்றமாம் என்றான். என்றாலும் அம்மாயா மலத்தின் துணை கொண்டே ஆன்மாக்கள் தம்மையும் தலைவனையும் உணர்ந்து பின் தம்மோடு நெடுங்கால

மாகப் பழகி வந்த அம்மும் மலக்குற்றங்களை முற்றவும் கெடுத்துக்கொள்ளவேண்டும் என்பதே அம்முதல்வனது சங்கற்பமாம் எனவும் உணரல் வேண்டும்.

இனி மாயையின் காரியம் தனுகரண புவனபோகம் முதலாயின. அதனால் உண்டாகும் சேட்டைகள் அகப்பற்றும் புறப்பற்றுமாம்.

ஆணவத்தின் காரியம் அறிவு மறைவது. அதனால் உண்டாகும் சேட்டைகள் மோகம் மதம் முதலாயின.

கன்மத்தின் காரியம் நல்வினை தீவினை புரிதலும் இன்பத்துன்பம் நுகர்தலும் முதலாயின, அதனால் விளையும் சேட்டைகள் வினையின் வந்ததும் வினைக்கு விளைவாயது மான உடம்போடு கூடிப் பிறந்தும் இறந்தும் வருதலாம். இவற்றின் விரிவுகளை மேலும் வல்லார் வாய்க்கேட்டு உணர்க.

இம்மூன்று பாட்டுக்களானும் செய்வினை தானேசென்று செய்தானை அடையாது எனவும், செய்தானும் தான் செய்த வினையைத்தானே அறிந்தெடுத்து நுகரவல்லனல்லன் எனவும், அங்ஙனம் அவன் நுகரமாட்டாமைக்குக் காரணம் அவனுக்கு அமைந்த மும்மலக்குற்றங்களேயாம் எனவும் கூறி ஆன்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையாலே வரும் என மேற்கொண்ட மேற்கோளை ஆசிரியன் வலியுறுத்திய வாறு காண்க.

''செய்கைமலத் தாம்'' என்புழி ஐகாரம்குறுக்கமாதலின் கூவிளங்காய்ச் சீராகக் கொண்டு அமைதி காண்க.

## மூன்றாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வரும் என்றது தோற்றமும் ஈறும் உள்ளதற்கல்லது உளதாதலின்மையான்.*

மேற்கோளும் ஏதுவுமாய் வந்த இது ஆசிரியன் உரைத்தது.

இங்கு ஏதுவின்கண் தோற்றமும் ஈறும் உள்ளதற்கல்லது உளதாதல் இன்மையான் என அல்லதில் வாய்பாட்டாற் கூறியவதனால் உள்ளதற்குத் தோற்றமும் ஈறும் உண்டு என

வும் இல்லதற்கு அவை இல்லை எனவும் கொள்ளக்கிடந்த தாகலின் இது புனர் உற்பவம் கூறியதாயிற்று.

இனித்தோன்றி உள்ளதாயிருந்த பிரபஞ்சம்ஒடுங்கி உள்ள தாயிருந்து பின் தோன்றும் என முதற்சூத்திரத்தால் அறியப் பட்டமையின் இங்கு உருவுடன் தோன்றி உள்ளனவாயிருந்த ஆன்மாக்களும் உருவழிந்து ஒடுங்கி உள்ளதாயிருந்து பின் உருமாறித் தோன்றும் என மேற்கொண்டான் ஆசிரியன்.

இதனால் ஆன்மா என்பது பிரபஞ்சம் போன்ற உள் பொருளாம் அன்றி முயற்கோடு போன்ற இல்பொருளன்றாம் என்பதும் உணர்த்தப்பட்டதாம். அதன் பிரகாசம் அடுத்து வரும் சூத்திரத்தால் உணர்த்தப்படும்.

மேற்கோளில் இறந்து பிறந்து வரும் என்னாது மாறிப் பிறந்து வரும் என ஆசிரியன் கூறியது உருமாற்றம் கொள் ளற்கே என்பதும் இங்கு உணரக்கிடந்ததாம்.

இங்கு மாறிப் பிறந்துவரும் என்பதற்கு இறந்து பிறந்து வரும் என உரைத்துச் சொற்குணம் வாளா போயினாரும் உளர்.

உருமாறிப் பிறத்தல் என்பதும் அச்சுமாறிப் பிறத்தல் என்பதும் ஒரு பொருளன. அச்சு என்பது உடம்பைக் குறிக் கும்.

**கண்ட நனவைக் கனவுணர்வின் தான் மறந்து**
**விண்படர்ந் தத்தூடு வினையினால் கண்செவிகெட்**
**டுள்ளதே தோற்ற உளம் அணுவாய்ச் சென்றுமனம்**
**தள்ள விழும்கருவில் தான்.**

என்பது உரைப்பாட்டு. இது ஆன்மாக்கள் உருமாறிப்பிறந்து வரும் என மேற்கொண்ட மேற்கோளைச்சம்பிரதாய மரபால் விளக்குகின்றது.

கண்ணழிவு:- உளம் வினையினால் கண் செவி கெட்டு அத்தூடு விண்படர்ந்து கண்ட நனவை கனவு உணர்வில் தான் மறந்தாற்போல மறந்து உள்ளது தோற்றத்தோன்றிய கருவில் மனம் தள்ள அணுவாய்ச் சென்று விழும் எ. து.

பொழிப்புரை:- ஆன்மாவானது தன்வினைப்பயன் காரணமாகக் கண்ணும் செவியும் முதலான உறுப்புக்களை யுடைய தூலவுடம்பு கெட்டவழி அதற்குக்காரணமாயிருந்த சூக்குமவுடம்போடு துறக்க நிரயங்களிற் சென்று இன்பத் துன்பங்களை நுகர்ந்து பின்னர் நனவில் கண்டவற்றைக் கனவில் மறந்தாற்போல அனைத்தையும் மறந்து முற்பிறப் பில் தன்னால் ஈட்டப்பட்டுப் பயன்தரற்கு உள்ளதாய்இருந்த பழவினையேதோற்றுவிக்கத் தோன்றிய கருவில்சூக்குமமாய்ச் சென்று தங்கிப் பிறக்கும் எ. று.

இது சம்பிரதாய மரபால் கூறியது. அது, ''எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர் செப்பினர் அப்படிச்செப்பு தல் மரபே''. என்பதனால் அறிக.

கண் செவி என்பன சினைப்பெயர் முதற் பொருட்கு ஆகிவந்தன, ஆகுபெயர். அவை உடம்பைக்குறித் தன. கெட்டக்கால் எனற்பாலது கெட்டு எனத்திரிந்து நின் றது. காரியமாகிய தூலவுடம்பு கெட்டவழிக்காரணமாகிய சூக்குமவுடம்பு ஆன்மாவுக்கு நிற்பது ஆகலான் அத்தூடு என்ற சுட்டு அச்சூக்குமவுடம்பையே சுட்டியது. அத்தூடு- அதனோடு. அதனை இருளோடு வந்தானை இருளூடு வந்தான் என்றாற்போலக்கொள்க. ஊடு என்பது ஏழாம் வேற்றுமைப் பொருள் படுவதோர் இடைச்சொல் மூன்றன் பொருளில் வந்து மயங்கிற்று எனக் கொள்ளினும் அமையும்.

கனவு உணர்வின் என்புழி இன் உவமவுருபு.அனைத்தை யும் மறத்தலாவது கண் செவி கெட்டதும், விண்படர்ந்ததும் ஆண்டு அனுபவித்ததும் ஆகிய அனைத்தையும் மறத்தலாம். மறத்தலும் கருவில் வீழ்தலும் ஏக காலத்தில் நிகழ்வன வாதல் பற்றி மறந்து வீழும் என்றான் ஆயினும் வீழ்ந்தபின் மறத்தல் என்பதுவே கருத்தாகக் கொள்க.

விண்படர்ந்து என்றதால் இனம் பற்றி நிரயமும் உரை யில் கொள்ளப்பட்டது.

தோற்றத் தோன்றுவது கருவாகலான் தோன்றிய என் பது வருவித்து உரைக்கப்பட்டது.இனித்தோற்ற என்பதற்குத் தோற்றுவிக்கப்பட்ட என உரைப்பினும் அமையும்.

ஈற்றில் வந்த தான் அசை. அது கட்டுரைச் சுவைபட நின்றது.

தூலவுடம்பு கெட்ட வழி உயிரானது சூக்குமவுடம்போடு சேறலும், சென்று துறக்க நிரயங்களில் இன்பத்துன்பங்கள் நுகர்தலும், நுகர்ந்து மீளவும் உலகிற்கு வந்து ஒரு கருவில் வீழ்தலுமாகிய செய்திகள் மறை நூல்களானும்மெய்கண்டான் உரைத்த சம்பிரதாய உரைகளானுமே தெளியப்படுவனவா மன்றி ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் சோதிக்கின் ஆகாதென்பதாம்.

''துறக்கப்படாத வுடலைத் துறந்துவெந்தூதுவரோ
டிறப்பன் இறந்தால் இருவிசும் பேறுவன் ஏறிவந்து
பிறப்பன் பிறந்தால் பிறையணிவார் சடைப்
பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோ என்றென் உள்ளம் கிடந்து
மறுகிடுமே''.

என்பது மறை நூலால் அறியப்படும் செய்தி, இது திருநாவுக்கரசர் அருளிய திருவிருத்தம்.

இதனால் ஆன்மாக்கள் உருமாறிப்பிறந்து வரும் என மேற்கொண்ட மேற்கோள் வலியுறுத்தப்பட்டவாறறிக.

**அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு**
**பரகாயம் போய்வரும்அப் பண்பும் பரவின்**
**குடாகாய ஆகாயக் கூத்தாட்டாம் என்ப**
**தடாதுள்ளம் போமா றது.**

என்பது உரைப்பாட்டு. இது மேலதற்கு ஒரு புறனடை கூறு கின்றது. உயிர் உடம்பை விட்டுப்போகின்றவாற்றிற்குப்பிறர் கூறும் உவமைகளை உடன்படாது ஆசிரியன் தான் வேறு கூறுகின்றதோர் ஒழிபு உணர்த்தலின் இது புறனடை ஆயிற்று.

கண்ணழிவு:- உள்ளம் போமாற்றிற்கு உவமை பரவின் குடாகாய ஆகாயமும் கூத்தாட்டும் உவமை ஆம் என்பது அடாது. அரவுதன் தோல் உரிவும், அக்கனவும், வேறு பர காயம் போய்வரும் அப்பண்பும் ஆகிய அது ஆம் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, வாழ்நாள் முடிந்தவழி உயிர் உடம்பை விட்டுப் போகின்றவாற்றிற்கு உவமை கூறுங்கால் குடத்தில்இருந்த ஆகாயம் குடம் உடைந்த வழிப் பரத்தில் இருந்த ஆகாயத்தோடு கலக்கும் என்னும்குடாகாய ஆகாய உவமையும், எவனானும் ஒரு சாத்தன் யாதானும் ஒரு உன்மத்த வேடம் புனைந்து வந்து அரங்கில் நடித்து அது முடிந்தவழி வேடங்கலைத்துப் பழைய சாத்தனேயாய் நிற்பன் என்னும் கூத்தாட்டு உவமையும் உவமைகளாம் என்பது பொருந்தாது. பாம்பு தன் மேல் தோலை உரித்துப் போகட்டு உள்ளிருந்த தோலோடு செல்வதாகிய அதுவும், புருடன் கனவில் தூலவுடம்பைப் படுக்கையில் கழித்துச் சூக்குமவுடம்போடு வெளிப்போந்து வேறு வேறு இடங்கட்குச் சென்று இன்பத் துன்பம் நுகர்தலாகிய அதுவும், யோகி தன் தூலவுடம்பை விட்டு நீங்கிச் சூக்குமவுடம்போடு சென்று பிறிதொரு தூலவுடம்பில் நுழைந்து வரும் மரபாகியஅதுவும் உவமைகளாம் எ. று.

உயிர் உடம்பை விட்டுப் போகின்றவாற்றிற்கு வேதாந்தி களும் ஏகான்ம வாதிகளும் கூறிவரும் குடாகாய ஆகாய உவமையினையும் கூத்தாட்டு உவமையினையும் கேட்டு அறிந்திருந்தான் மாணாக்கன் ஆகலின் இங்குச் சித்தாந்த நெறிப்படிக் கூறப்பட்ட புனர் உற்பவம் ஆன்மாக்கட்கு உண்டோ இன்றோ என்று ஐயுற்ற அவனைத் தெருட்டும் முகத்தால் ஆசிரியன் இவ்வாறு கூறினான் என உணர்க.

எனவே உடம்பை விட்டு நீங்கிப் போகின்ற உயிர்க்குச் சூக்கும வுடம்பென ஒன்று உண்டு என்பதும், துரக்க கிரயங் களில் அதற்கு இன்பத்துன்பப் புசிப்பு உண்டு என்பதும், புசித்தபின் பூமிக்கு வந்து ஒரு கருவில் விழுந்து உருமாறிப் பிறக்கும் என்பதும் ஆசிரியன் கூறிய உவமைகளால் தெளி வாதல் கூடும் என்பதாம்.

உள்ளம் போமாற்றிற்கு அவையே உவமைகள்ாம் என்ற தால் பாம்பு தன் மேல் தோலை உரித்துப் போகட்டு உள் ளிருந்த தோலோடு செல்லுதல் போல உயிர் தன் மரண காலத்தில் தூல வுடம்பைப் படுக்கையில் கழித்துச்சூக்கும உடம்போடு செல்லும் எனவும், கனவுக்காலத்து உயிரானது

தன் தூல வுடம்பைப் படுக்கையில் விட்டுச்சூக்கும வுடம்போடு வேறு வேறிடங்கட்குச் சென்று இன்பத்துன்பம் நுகர்ந்தாற் போல மரணகாலத்து உயிரும் தன் தூல வுடம்பை மரணப் படுக்கையில் விட்டுக்கழித்துச் சூக்கும வுடம்போடு துறக்க நிரயங்கட்குச் சென்று இன்பத்துன்பம் நுகரும் எனவும், யோகி தன் தூல வுடம்பை விட்டு நீங்கிச் சூக்கிமவுடம்போடு சென்று வேறு ஒரு தூல வுடம்பில் புகுந்து வருதல் போல் மரிக்கும் உயிரும் தான் வாழ்ந்து வந்த தூல வுடம்பைக் கழித்துச் சூக்கும வுடம்போடு சென்று வேறு ஒரு தூல வுடம் பாகிய கருவில் நுழைந்து பிறந்து வரும் எனவும் உவமை களை இவ்வாறு பொருத்திக் காண்க. காணவே உவமைகள் மூன்றும் ஒரு பொருட்கன்றி வேறு வேறு பொருள்குறித்தற்கு வந்தனவாதல் தெளியப்படும் என்பதாம்.

குடாகாய ஆகாய உவமை கூறுவார்க்கும், கூத்தாட்டு உவமை கூறுவார்க்கும் புனர் உற்பவம் உடன்பாடன்றாம் ஆதலின் அவர் கூறுவது அடாது என்றான்.

குடம் ஒன்று நிலை பெறுங்காறும் குடத்திற்குள் இருந்த ஆகாயம் குடாகாயம் எனப்பட்டுக்குடம் உடைந்தவழி அது பரத்தில் உள்ள ஆகாயத்தோடு கலந்து பராகாயம் ஆனாற் போல உடம்பு ஒன்று நிலைபெறுங்காறும் அதனுள் இருந்த ஆன்மாச்சீவான்மா எனப்பட்டுடம்புஅழிந்தவழி அதுபரமார்த் தத்தில் உள்ள பிரம்மத்தோடு கலந்து பரமான்மாவாகிவிடும் எனவும், கூத்தாடுகின்ற தொழிலை உடைய சாத்தன் ஒருவன் கூத்தாட்டத்தில் யாதானும் ஒரு உன்மத்த வேடம் புனைந்து வந்து அரங்கில் நடித்து ஆட்டம் முடிந்தவுடன் வேடத்தைக் கலைத்துப் பழைய சாத்தனேயாய் நின்றாற் போலப் பரமார்த்தத்தில் உள்ள பிரமம்என்னும் ஒருபொருளே உலகாயும் உயிராயும் பரிணமித்துத் தோன்றி முடிவில் அப் பொய்த்தோற்றம் கலைந்து பிரமம் என்னும் அவ்வொரு பொருளேயாய் நிற்கும் எனவும் கூறப்படும் ஏகான்மவாதக் கொள்கைகள் பதி பசு பாசம் எனப் பொருள் மூன்றே என்று வரையறுத்துக்கொண்ட சைவ சித்தாந்த நெறிக்குச்சிறிதும் உடன்பாடன்றாம் என்பது உணர்த்தி, உயிர்கள் பிரமத்தின் வேறே என்றும்,பாசத்தடையால் அவற்றுக்குப்புனர் உற்பவம்

உண்டு என்றும், அந்நெறியால் அவை உருமாறிப் பிறந்தே வரும் என்றும் ஆசிரியன் தான் கூறிய உவமைகள் மூன்றனாலும் முடித்து உணர்த்தினான் என அறிக.

கனவு என்றது கனவிற்காணும் நிகழ்ச்சியை. ஆகாயம் என்பது வடசொல்லாதலின் குடாகாயம் என்பது வடமொழிப் புணர்ச்சி - தீர்க்க சந்தி. உள்ளம் இங்கு உயிரைக்குறித்தது. போமாறு என்புழி நான்கனுருபு தொக்கது. போமாற்றுக்கு எனவிரிக்க. அது என்பது மேல் வந்த உவமைகள் மூன்றனையும் சுட்டியதாகலின் அவற்றோடு அது என்பதனைத் தனித் தனிக் கூட்டியுரைக்க. அங்ஙனம் உரைக்குமாறு:- அரவு தன் தோல் உரிவாகிய அதுஉள்ளம் போமாற்றுக்கு உவமையாம், அக்கனவாகிய அது உள்ளம் போமாற்றுக்கு உவமையாம், பரகாயம் போய்வரும் அப்பண்பாகிய அது உள்ளம் போமாற்றுக்கு உவமையாம் என்பது.

குடாகாய ஆகாயக் கூத்தாட்டு என்பது உம்மைத் தொகை. குடாகாய ஆகாயமும், கூத்தாட்டும் என விரியும்.

மேலை வெண்பாவிற்கூறிய கனவு என்று சுட்டற்கு அக்கனவு என்றான்.

**நான்காம் அதிகரணம்**

*மேற்கோள்:- இனி நீக்கமின்றி நிற்குமன்றே என்றது அவன் ஏகானேகமின்றிச் சருவ வியாபியாய் நிற்றலின்.*

மேற்கோளும் ஏதுவுமாய் வந்த இது ஆசிரியன் உரைத்தது.

அவன் என்பது முதல்வனைக் குறித்து வந்த சுட்டுப் பெயர். அது உலகறி சுட்டாகலான் இயற்பெயரின் பின் வாராது தனித்து வந்தது. ஏகம் அனேகம் ஏகானேகம். ஏகம் என்பதற்கு ஒன்று என்பது பொருள். அனேகம் என்பதற்கு ஒன்றல்லாதது, இரண்டு அல்லது பல என்பது பொருள், ஒன்றல்லன பல என்பது தமிழ் வழக்காதலின். சருவம் என்பதற்குப் பூரணம் என்பது பொருள். உலகெங்கும் என்றும் சொல்லலாம். வியாபி-வியாபித்து நிற்பவன், இரண்டறக் கலந்து நிற்பவன்.

முதல்வன் ஒன்றுமல்லனாய்ப் பலவுமல்லனாய்ச் சருவ வியாபகனாயிருந்த காரணத்தால் அவன் உலகெங்கணும் பிரிவின்றிக் கலந்து ஒன்றெனும்படி நிற்பன் என்று மேற்கொள்ளப்பட்டது. ஒன்றுமல்லன் பலவுமல்லன் என்றதால் அவன் ஒன்றில் பலவாயிருந்தான் என்பது பெறப்படும். அதாவது ஒன்றில் இரண்டாய் இருந்தான் என்பது பொருள். அதாவது பொருள் வகையால் அவன் ஒன்றாயும் குணி குண வகையால் அவன் இரண்டாயும் இருந்தான் என்பதாம். பண்ணும் அதன் ஓசையும் போலவும், பழமும் அதன் சுவையும்போலவும் அவனும் அவனருளும் என ஒன்றில் இரண்டாய் இருந்த காரணத்தாலேதான் உலகில் சருவ வியாபியாய் அவனால் இருக்க முடிந்தது. சருவ வியாபியாய்இருந்த காரணத்தாலே தான் உலகெங்கணும் நீக்கமின்றிக் கலந்து நிற்கவும் முடிந்தது. இதை ஒரு உதாரணத்தின் மூலம் விளங்கிக்கொள்ளலாம்.

ஒரு குடத்து நீரில் தங்கக்கட்டி ஒன்றை இட்டுப்பார்ப்போம். அக்கட்டி நீருக்குள் மூழ்கி விடுகிறது. என்றாலும் அது நீரோடு நீக்கமின்றிக்கலந்தது என்றுசொல்ல முடியாது. கட்டியைச் சூழ்ந்து நீர் இருந்தாலும் கட்டி இருந்த இடத்தில் நீர் இல்லை. அதனால் அங்கு நீக்கம் தெரிகிறது. நீர் வேறு கட்டி வேறாக நம்மால் காணவும் முடிகிறது. நீர் முழுவதும் வியாபிக்கும் தன்மை அங்கு அந்தத்தங்கக்கட்டிக்கு இல்லை. அதனால் கட்டி இங்கு நீரோடு நீக்கமின்றிக் கலந்ததாகாது என்பதாம்.

அதே நீரில் இப்பொழுது உப்புக்கட்டி ஒன்றை இட்டுப் பார்ப்போம். அது உடனே நீரில் கரைந்து நீரோடு ஒன்றாகி விடுகிறது. உப்பு இப்பொழுது நீருக்கு வேறாக இல்லை. நீர் வேறு உப்பு வேறு என்றில்லாமல் நீரும் உப்பும் இரண்டறக் கலந்து ஒன்றென்னும்படி இருக்கிறது. நீரை வாயில் இட்டுச் சோதித்துப்பார்த்தால் நீரில் கலந்துள்ள உப்புத் தென்படும். தங்கக்கட்டிக்கு இல்லாத ஒரு குணம் உப்புக்கட்டிக்கு இருந்தது என்பது இப்பொழுது நமக்குப் புரிகிறது. நீரில் நெகிழ்ந்து கரையும் குணந்தான் அது. உப்பு நீர் முழுவதும் கலந்து நீரோடு நீக்கமின்றி நின்றதற்கு அக்குணமே உப

காரப்பட்டது எனலாம். அதுதான் வியாபகம் என்பது. அதாவது உப்பு வியாபகப் பொருளாய் இருந்து அதாவது நீரில் நெகிழ்ந்து கரையும் குணம் உடையதாய் இருந்து நீருடன் இரண்டறக்கலந்து நீக்கமின்றியிருந்தது என்பதாம்.

இங்குக் கூறப்பட்ட உப்பைப்போல முதல்வனும் சருவ வியாபியாய் இருந்து உலகு உயிர்களோடுஇரண்டறக்கலந்து நீக்கமின்றியிருந்தான் என்று ஆசிரியன் கூறினான். உப்பு நீருடன் கலந்து நீக்கமின்றியிருந்ததற்கு நீரில் நெகிழ்ந்து கரையும் குணம் அதற்கு உபகாரப்பட்டாற்போல முதல்வற்கு அவனது அருட்குணம் உபகாரப்படுவதாம். அதுவே அவனது வியாபகத்தன்மைக்குக் காரணமாய் நின்றதெனவும், அதனால் அவன் உலகோடும் உயிர்களோடும் பிரிவின்றிக்கலந்து நின்றான் எனவும் நாம் இங்கு உணர்தல்வேண்டும்.

முதல்வன் உலகிற் சருவவியாபியாய் இருந்தான் என்பதை நாம் எவ்வாறு அறிவது? உப்புக் கரைந்த நீரை வாயிலிட்டுச் சோதித்தபொழுது அதனிற்கலந்திருந்த உப்புத் தென்பட்டது. அதுபோல உலகத்துப்பொருள் ஒவ்வொன்றையும் நுனித்து நோக்கும்போது அதனிற்கலந்திருந்த இறையருட்குணம் தென்படும். இதனை அறியப் பார்வையில்போதுமான தெளிவு வேண்டும். ''அருட் கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் நிற்பனாம் ஏய்ந்து'' என்ற இவ்வாசிரியது மெய் கண்ட அனுபவத்தைப் புரிந்து கொள்ளவேண்டும். இந்த அருட்கண்ணைப்பெற்றுவிட்டால் அண்டசராசரங்கள் அனைத்துமே அவனது அருளில் மிதப்பதுதெரியும். நாவரசர் ஐயாற்றில் கண்ட கயிலைக்காட்சி இதற்கு ஒரு சான்று ஆகலாம்.

**எங்குமுளன் என்றளவை ஒன்றன் றிரண்டென்னின்**
**எங்கும் உளனன் றெவற்றெவனும் அங்கண்**
**அவைஅவ னன் றில்லை பொன்னொளிபோல் ஈசன்**
**அவை உடைமை ஆளாம்நாம் அங்கு.**

என்பது உரைப்பாட்டு. இது முதல்வன் நீக்கமின்றி நிற்கும் என வந்த மேற்கோளை உவமை வாயிலாக முடித்து உணர்த்துகிறது.

கண்ணழிவு: எங்கும் உளன் என்ற அளவையான்ஒன்று அன்று. இரண்டு என்னின் எங்கும் உளன் அன்று, ஆகலான் அங்ஙண் எவற்றினும் எவனினும் ஈசன் பொன் ஒளிபோல் வன். அங்கண் அவை அவனன்றி இல்லை. அங்கு அவை உடைமையாம். நாம் ஆளாம் எ. து.

பொழிப்புரை:- முதல்வன் உலகில் எங்கும் உளன் என்னும் ஒரு அளவை கொண்டு நோக்கின் அவன் ஏகன் ஆகான். அவனை அனேகன் என்று கொண்டாலோ அவன் எங்கும் இருக்கமாட்டான் ஆகலின் அவன் ஏகானேகம் இரண்டுமின்றி ஒரு வியாபகப்பொருளாம். அழகிய இடத்தை யுடைய உலகில் எல்லாப் பொருளிடத்தும் எல்லா உயிரிடத்தும் ஈசன் கதிரவனிடத்து ஒளிபோலக்கலந்திருக்கின்றான். ஆனாலும் அவை எல்லாம் அங்கு அவனுக்கு உடைமையாம். நாம் எல்லாம் அவனுக்கு ஆளாம் எ. று.

அவை உடைமை நாம் ஆளாம் என்றது பொன்னொளி போல் ஈசன் என்ற உவமையால் போந்த ஒரு குறையினை அகற்றுவதற்கு வந்தன எனக்கருதுக. இங்கு என் சொல்லிய வாறோ எனின் ஞாயிற்றினிடத்து ஒளியானது அந்த ஞாயிறு எங்கும் நீக்கமின்றி நின்றாற்போலமுதல்வன் உலகெங்கணும் நீக்கமின்றி நின்றான் என்றான். உவமைக்கண் ஞாயிறும் அதன் ஒளியும் உடையதும் உடைமையும் ஆனாற் போலப் பொருட்கண்ணும் உலகு உடையதும் முதல்வன் உடைமை யும் ஆம் எனப்பட்டுச் சருவ சுதந்தரனாகிய முதல்வனது தலைமைப்பாட்டிற்கு ஒரு இழுக்கு நேர்ந்ததாமன்றே. அங்ஙனம் அது நேராமைப்பொருட்டு அங்கு அவை அவற்கு உடைமையாம் எனவும், நாம் ஆளாம் எனவும் விதித்து ஒப்பு உயர்வற்ற அவனது தலைமையினைக்காத்தவாறாம் எனக் கொள்க. கொள்ளவே பொன்னொளிபோல் ஈசன் என்ற உவமை உலகில் அவன் சருவ வியாபியாய் இருந்தான்என்ற மாத்திரைக்கே எனக்கருதுக.

எங்கும் என்புழி வந்த உம்மை எஞ்சாமைப்பொருட்டாக லின் சேதனம் அசேதனம் ஆகிய உலகெங்கும் என உரையிற் கொள்க. அளவையான் என மூன்றனுருபு விரிக்க. எவனும்

என்புழி வந்த முற்றும்மையை எவற்று என்பதனோடும் கூட்டுக. எவற்றினும் எவனினும் என ஈரிடத்தும் ஏழனுருபு கள் விரித்துரைக்க. எவன் என்பது இங்குப்பால் உணர்த்தாது உயிர்ப்பொருள் என்னும் பொதுமை சுட்டி நின்றது எனக் கொள்க. பொன்னொளி போல் ஈசன் என்புழிப்போல் என் பதனோடு அன் விகுதி கூட்டிப்பயனிலை ஆக்குக, அங்கு அது விகுதி தொக்கு நின்றது. அங்கண் என்பது அழகிய இடத்தை உடையது என உலகைச் சுட்டியது. அதை முன்னும் பின்னும் கூட்டி அங்கண் எவற்றெவனும் என்றும், அங்கண் அவை என்றும் பொருள் உரைக்க, அது இடை நிலைத் தீவகம். ஆளாம் என்புழி வந்த ஆம் என்பதனை உடைமைக்கும் கூட்டுக.

எவற்றெவனும் பொன்னொளிபோல்ஈசன்என்றதானும், அவை உடைமை நாம் ஆளாம் என்றதானும் உலகு உயிர் இறை என்னும் முப்பொருட்கொள்கையே ஈண்டும் வலியுற்ற வாறு காண்க.

ஆன்மாக்கட்குப் புனர் உற்பவம் கூற வந்த இச்சூத்திரத் தால் இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் தானே என்னும் படிப்பிரிவின்றி நிற்கும் எனவும், அவன் ஆணையாலே இரு வினைப்பயன்களைத் துய்த்துவரும் எனவும், அத்துய்த்தல் காரணமாக மேலும் புதிய வினைகளைப் புரிந்து உருமாறிப் பிறந்து வரும் எனவும், அவை அவ்வாறு வருதற்பொருட்டு அவன் அவ்வாணையோடும் உலகு உயிர்களோடும் நீக்க மின்றிக் கலந்தே நிற்பன் எனவும் கூறி முதல்வனது சருவ வியாபகத் தன்மையை முடித்து உணர்த்தினான் ஆசிரியன் என்க.

இரண்டாம் சூத்திரம் முற்றியது.

## மூன்றாம் சூத்திரம்

**உளதில தென்றலின் எனதுடல் என்றலின்**
**ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்**
**உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்**
**மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா.**

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோ எனின் ஆன்மப் பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று.*

இங்குச் சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமாய் வந்த இவை ஆசிரியன் கூறியவை.

உடம்பினுள் இருந்த ஆன்மா உடம்பு போலக் காட்சிப் பொருள் அன்றாம் ஆயினும் ஆன்மா என்பதோர் பொருள் உண்டு என்று உணர்த்துகிறது இச்சூத்திரம் என்பது.

*உளது என்றது ஆன்மா உளது என்று எங்கும் ஒட்டிப் பொருள் உரைக்கற்பாற்று.*

இதுவும் ஆசிரியன் உரைத்ததே.

சூத்திரத்தின் முதற்கண் வந்த உளதுஎன்னும் பயனிலையோடு இறுதிக்கண் வந்த ஆன்மா என்னும் எழுவாயினைக் கூட்டிஆன்மா உளது என மேற்கொண்டு அம்மேற்கோளைச் சூத்திரத்தில் உள்ள ஏதுக்கள் ஏழனோடும் கூட்டுக என்று விதித்தான் இங்கு ஆசிரியன் என்பது.

இவ்வாறு விதித்ததற்குப்பயன் ஆன்மா உளது என வந்த மேற்கோள் ஒன்றே ஆயினும் அதனை வலியுறுத்தற் பொருட்டு வந்த ஏதுக்கள் ஏழாம் ஆகலின் ஏழு அதிகரணங் களைக்கொண்டது இச்சூத்திரம் என்பது அறிவித்தற்காம் எனக்கருதுக.

கண்ணழிவு:- இலது என்றலின் ஆன்மா உளது, எனது உடல் என்றலின் ஆன்மா உளது, ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது, ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது, கண் படில் உண்டி வினை இன்மையின் ஆன்மா உளது, உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது, மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது எ. து.

சூத்திரத்தை இவ்வாறு கண்ணழித்துக்கொண்டதால் அதிகரணங்கள் ஏழாயினவாறு கண்டு கொள்க.

ஒவ்வொரு அதிகரணத்தின் கண்ணும் அவற்றுக்கு விளக்கம் ஆசிரியனே உரைக்கும் ஆகலின் பொழிப்புரை இங்குத் தேவை இன்றாம் என்பது.

## முதலாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி இலது என்றலின் ஆன்மா உளது என்றது, எவற்றினையும் அன்று அன்று என விட்டு ஆன்மா இலது என்று நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளும் பொழிப்புரையுமாய்வந்த இவை ஆசிரியன் உரைத்தவை.

உடம்பின்கண்ணவாகிய கண் செவி முதலான உறுப்புக்கள் அனைத்தையும் ஒவ்வொன்றாக எடுத்து ஆராய்ந்து, இதுவன்று ஆன்மா இதுவன்று ஆன்மா என்று அனைத்தையும் கழித்து ஒதுக்கி முடிவில் ஆன்மா என்பதொரு பொருளே உடம்பினுள் இல்லை என்று ஒருவன் சொல்லுமன்றே, அவ்வாறு சொல்லி நின்றஉணர்வு வடிவான ஒன்று உண்டன்றே, அதுவே அவ்வான்மாவாம் என மேற்கொண்டான் இங்கு ஆசிரியன் என்பது.

உடம்பின்கண் ஆன்மாவைத் தேடி அறிய முற்பட்ட ஒருவன் ஆன்மா என்பது கையும் அன்று, காலும் அன்று, மெய்யும் அன்று, வாயும்அன்று, கண்ணும்அன்று, மூக்கும் அன்று, செவியும் அன்று, என்று அனைத்தையும் கழித்து ஒதுக்கி விட்டு, உடம்பினுள் ஆன்மா என்பதே இல்லை என்று முடித்துக் கூறுவன் அன்றே, அவ்வாறு கூறி நிற்பதுஎதுவோ அதுவே அவ்வான்மாவாம். என்று இங்கு மேற்கொள்ளப் பட்டது என்பதாம். எனவே ஆன்மா என்பது உடம்பினுள் உறுப்பு வடிவாயன்றி உணர்வு வடிவாய் இருந்தது என்பது இங்கு உணர்த்தப்பட்டதாம்.

அன்றன் றெனநின் றனைத்தும்
விட் டஞ்செழுத்தாய்
நின்றொன் றுளததுவே நீஅனைத்தும் நின்றின்று
தர்ப்பணம்போல் காட்டலால் சார்மாயை நீஅல்லை
தற்பரமும் அல்லை தனி

என்பது உரைப்பாட்டு. இது இலது என்றலின் ஆன்மாஉளது என மேற்கொண்ட மேற்கோளைச் சம்பிரதாய மரபானும் உவமை வாயிலானும் வலியுறுத்துகின்றது.

கண்ணழிவு:- நின்ற அனைத்தையும் அன்று அன்று என விட்டக்கால் அஞ்செழுத்தாய் நின்ற ஒன்று உளது, அதுவே நீ, அனைத்தோடும் நின்ற இன்றும் அவை தர்ப் பணம்போல் காட்டலால் சார்மாயை நீ அல்லை, தற்பரமும் அல்லை, தனி எ. து.

பொழிப்புரை:- மாணவகா, நீ சார்ந்து நின்ற உடம்பு கருவி கரணங்கள் ஆகிய அனைத்தையும் ஒவ்வொன்றாக எடுத்து ஆராய்ந்து இதுவன்று ஆன்மா, இதுவன்று ஆன்மா, என ஒவ்வொன்றாகக் கழித்து ஒதுக்கியக்கால் அங்குத் திருவைந்தெழுத்தில் ஒரெழுத்தாய் நின்ற ஒரு பொருள்எஞ்சி நிற்பதாம். அதுவே ஆன்மாவாகிய நீ ஆவாய். நீ அந்த உடம்போடும் கருவி கரணங்களோடும் சார்ந்து நின்ற இப் பெத்தகாலத்திலும் உடம்பு கண்ணாடிபோல உன்னை வேறாகப் பிரித்துக்காட்டும் ஆதலால் நீ சார்ந்திருந்த உடம் பும் நீ அல்லையாம். நின்னைச் சார்ந்திருந்த தற்பரவத்து வாகிய முதல்வனும் நீ அல்லையாம். ஆகவே அவ்விரண்டி னும் வேறாய் நின்ற நீ தனி ஒரு பொருளே காண் எ. று.

நின்றனைத்தும், நின்றொன்று, நின்றின்றுஎன்புழியெல் லாம் செய்யுள் ஆகலின் நிலைமொழியீற்று அகரங்கள் தொக்கன. அவை எல்லாம் பெயரெச்ச விகுதிகள்.

இரண்டாவதாக வந்த அனைத்தும் என்பதனோடு ஓடு உருபு கூட்டி அனைத்தோடும் என்று உரைக்க.

விட்டக்கால் எனற்பாலது விட்டு எனத்திரிந்து நின்றது.

இன்று என்புழி எச்சவும்மை தொக்கது. இன்றும்-இந்தப் பெத்தகாலத்தும். உடம்பு உயிர் இறை என்றிவ்வாறு அமைந்த கட்டமைப்பில் இடை நின்ற உயிர் இறையை மறந்து உடம்பைச் சார்ந்து நிற்கும் காலம் பெத்தகாலம் எனவும், உடம்பை மறந்து இறையைச் சார்ந்து நிற்கும் காலம் முத்திக்காலம் எனவும் அறிக.

மாயை என்பது இங்கு மாயாகாரியமான உடம்பைக் குறித்தது.

அல்லை என்பது அன்மை என்னும் பண்படியாக வந்த முன்னிலை ஒருமைக் குறிப்பு முற்று.

ஆன்மாவை அஞ்செழுத்தாய் நின்ற ஒன்று என்றான், அதுதான் அஞ்செழுத்தில் ஓரெழுத்தாய் நிற்றலின். இங்குக் குறிக்கப்பட்டதிருவைந்தெழுத்தின் வடிவம்சிவாயநமஎன்பது. இது கிடக்கை வடிவம். உச்சரிப்புவடிவம் நமசிவாய என்பது. சிவாயநம என்பதில் முதற்கண் நின்ற சி என்னும் எழுத்து சிவனைக்குறிப்பதாம். வா என்பது சிவனருளைக் குறிப்ப தாம். அவ்வருளை அணைய நின்ற ய என்னும் எழுத்து ஆன்மாவைக் குறிப்பதாம். ஆன்மாவை அணைந்து நின்ற நம என்னும் இரண்டெழுத்துக்களும் ஆணவம் கன்பம் மாயை ஆகிய மும்மலங்களையும் குறிப்பனவாம். முதல்வனுக்குத் தலைமை கற்பித்துப் பதி பசு பாசம் என்ற வரிசையிற் கிடந்ததாகலின் சிவாயநம என்பதைக் கிடக்கை வடிவம்எனக் கொள்ளலாம். சிவாயநம என்பதற்குப்பொருள் சிவனுக்கு வணக்கம் என்பதேயாயினும் அதனை இவ்வாறெல்லாம் விரித்துரைக்கும் சாத்திர நூல்கள் என அறிக,

மறை நூல்களினும் சாத்திர நூல்களினும் இத்திருமந்தி ரத்தின் வடிவம் நமசிவாய என்றே பெருவழக்காகக் காணப் படுகிறது. அதனால் இதனை உச்சரிப்பு வடிவம் என்று கொள்வதில் தவறில்லை எனலாம். வணக்கம் சிவனுக்கு என்பதே இதற்கும் பொருளாம்.

கிடக்கை முறையில் அமைந்த சிவாயநம என்பதில் ஆன்மாவைக் குறிப்பதான ய என்னும் எழுத்து, மும்மலங்

களையும் குறிப்பவரன நம என்னும் எழுத்துக்களைஒருபக்கம் சார்ந்து நிற்றலையும், சிவனையும் சிவனருளையும் குறிக்கும் சி வா என்னும் எழுத்துக்கள் ஆன்ம எழுத்தை மற்றொரு பக்கம் சாரநிற்றலையும் கூர்ந்து நோக்கித்தெளியலாம். இது எதைக்காட்டுகிறது? ஆன்மாவானது இந்தப்பெத்தகாலத்தில் மாயாகாரியமாகிய உடம்பையும் மலகன்மங்களையும்சார்ந்து நிற்கின்றதெனவும், முற்செய் தவத்தால் அச்சார்புகள் ஒழிகின்ற என்றானும் ஒருநாள் சிவனருள் தன்னைச் சாரநிற்கின்றதெனவும் அறியலாமன்றே. இந்தக் கலப்பிலிருந்து ஆன்மாவைஇப்பொழுது பிரித்தறியவேண்டின் அதுதன்னைச் சார்ந்து நின்ற மாயாமலகன்மங்களை இதுவன்று ஆன்மா என ஒவ்வொன்றாகக் கழித்து அறியவேண்டும். அங்ஙனம் அறிந்த பின்னும் தன்னைச் சார நிற்பதான சிவனையும் சிவனருளையும் தவிர்த்தே தன்னைத் தனியாக அறிய வேண்டும். இதைத்தான் உரைப்பாட்டில் ''சார்மாயை நீ அல்லை, தற்பரமும் அல்லை, தனி'' என்று ஆசிரியன் விளக்கினான். ஆன்மாத்தான் சார்ந்து நின்ற உடம்பும் தான் அன்று எனவும், தன்னைச் சாரநின்ற தற்பரவத்துவும் தான் அன்று எனவும் அறிவதே ஆன்மப்பிரகாசமாம் என இங்கு விளக்கப்பட்டது.

ஆன்மாவை அஞ்செழுத்தாய் நின்ற ஒன்று என ஆசிரியன் குறிப்பிட்டதால் இதற்கு விளக்கம் இவ்வாறெல்லாம் தரப்பட்டன.

இனித் தர்ப்பணம் என்பது கண்ணாடி. கண்ணாடியைக் காணும் ஒருவற்கு அக்கண்ணாடி தன்னையும் தன்னுள்இயங்கும் உருவ நிழலையும் வேறு பிரித்துக்காட்டல்போல உடம்பைக் காணும் புருடற்கு அவ்வுடம்பு தன்னையும் தன்னுள் இயங்கும் உயிரையும் வேறு பிரித்து காட்டுவதாகலின் தர்ப்பணம் போல் காட்டலால் சார்மாயை நீ அல்லை'' என்றான். மாயை என்பது இங்கு மாயாமலத்தின் காரியமாகிய உடம்பைக் குறித்தது.

இனி இங்கு உடம்பின் வேறாய்ப் பிரித்தறியப்பட்ட ஆன்மாத்தானும் தனியொரு பொருளாய் இருந்ததில்லை என்றே நாம் உணர்தல் வேண்டும். அந்தஆன்மாவைச்சார்ந்

திருந்த பிறிதொன்றும் உண்டால், அதுவே தற்பரவத்து வாகிய பரம்பொருள் என்று அறிதல் வேண்டும். ஆன்மாத் தான் சார்ந்திருந்த உடம்பைத் தன்னின் வேறாய்ப்பிரித்து அறிந்தாற்போலத் தன்னைச்சார்ந்திருந்த தற்பரவத்துவை யும் தன்னின் வேறாய்ப் பிரித்தறிதல் வேண்டும். அந்த ஒரு அனுபவம் ஆன்மாவுக்கு முத்திக் காலத்திலே இயைவதொன் றாம். அந்நிலையில் ஆன்மாத்தன்னைஅத்தற்பரவத்துவாகிய ப்ரம் பொருளின் வேறாய்ப்பிரித்தறியும் ஆகலின் ''தற்பர மும் அல்லை, தனி'' என்று முடித்துணர்த்தினான் ஆசிரியன் என்க.

இங்கு ஆன்மா இலது என்ற கூற்றாலே அது உளது என்று ஆசிரியன் வலியுறுத்தியவாறு காண்க.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி எனது உடல் என்றலின் ஆன்மா உளது என்றது, என்பதி என்மனை என்றாற்போல என் கை என் கால் என நிற்பது உளதாகலின் அதுவே ஆன்மா வாம் என்றது.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளும் பொழிப்புரையும் ஆசிரி யன் உரைத்தவை.

இது எனது ஊர், இது எனது வீடு என்று பிறிதின் கிழமைப் பொருள்படச் சொல்லும் பொழுது ஊரும் வீடும் எனக்கு வேறாயினாற்போலவே எனதுகை, எனதுகால் என்று தற்கிழமைப் பொருள்படச் சொல்லும் பொழுதும் கையும் காலும் ஆகிய உடம்பு எனக்கு வேறாகவே இருந்தது என்று கருதப்படும் ஆகலின் இது எனது எனது உடல் என்று சொல்லி நிற்கும் உணர்வு வடிவான ஒன்றுஎதுவோ அதுவே அவ்வான்மாவாம் என மேற்கொண்டான் ஆசிரியன்.

பதி என்பது வாழும் ஊரையும், மனை என்பது இல்லத்தை யும் குறிக்கும்.

பிறிதின் கிழமையாவது தனக்கு வேறாய் உள்ள ஒரு பொருளோடு தனக்கு உள்ள உரிமை. தற்கிழமையாவதுதன்

னோடு ஒன்றாய் இருந்த ஒரு பொருளோடு தனக்கு உள்ள உரிமை. இவ்விருவகை உரிமைப் பொருள்களுமே உரியவனுக்கு வேறானவை என்றே நாம் இங்கு உணர்தல் வேண்டும்.

**எனதென்ற மாட்டில் எனதலா தென்னா**
**துனதலா துன்கைகால் ஆக்கை எனதென்றும்**
**என்னறிவ தென்றும் உரைத்துநீ நிற்றிகாண்**
**உன்னிலவை வேறாம் உணர்.**

என்பது உரைப்பாட்டு.இது. எனது உடல் என்றலின்ஆன்மா உளது என மேற்கொண்ட மேற்கோளைச் சம்பிரதாயமரபால் விளக்குகின்றது.

கண்ணழிவு:- எனது என்ற மட்டில் எனது அலாது என்னாது உனது அலாத உன் கை கால் ஆக்கையை எனது என்றும், அறிவை என் அறிவு அது என்றும் நீ உரைத்து நிற்றி காண். உன்னில் அவை வேறாம், உணர் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, யாதானும் ஒரு பொருளை இது எனது என்று நீ சொல்லும் அளவிலே அப்பொருள் உனக்கு வேறானதே என்று கருதாமல் உடனாய்க்கருதிமயங்கல்போல உனக்கு வேறான உன் கை கால் உடம்பு ஆகியவற்றையும் உடனாகவே கருதி உனது என்றும், உனக்கு வேறான அறிவை உனது அறிவு என்றும் மயங்கக் கூறி நின்றாய்காண். நினைத்துப்பார்க்கில் அவையெல்லாம் உனக்கு வேறானவையே. இதனை நீ தெளிய உணர்வாய் எ. று.

உணரவே, உனது உடல் அறிவுகட்கு வேறாய்க்கருதப்பட்டது எதுவோ அது ஆன்மாவாம் என்றதாம்.

எனது என்றமட்டில் என்பதே சொல்வழக்காம். செய்யுளின்பம் நோக்கி மட்டில் என்பது மாட்டில் என நீண்டு ஒலித்தது. எனது அலாது என்புழி அன்மை இங்கு வேறு என்னும் பொருட்டாய் நின்றது. என்னாமை எனற்பாலது என்னாது எனத்திரிந்து நின்றது. என்னாமைபோல என அங்கு உவமைஉருபு விரித்து உரைக்க.உனதுஅலாத என்புழி

ஈற்றகரம் தொக்கது. கை காலாக்கை என்பது உம்மைத் தொகை. அறிவு அது-அது பகுதிப் பொருள் விகுதி. உன்னில் என்பது நினைக்கின் எனவும், நின்னில் எனவும் இருபொருள் பயந்தவாறு காண்க.

அறிவு, மனம் முதலிய அந்தக்கரணங்களின்தொழிலாய்க் கருதப்படலால் அந்தக்கரணம் ஆன்மாவின் வேறு ஆயினாற் போல அறிவும் வேறு ஆம் என்பதே ஆசிரியன் துணிபாம் எனக்கருதுக. அந்தக்கரணம் ஆன்மாவின வேறாம் என்பது அடுத்து வரும் சூத்திரத்தால் ஆசிரியன் உணர்த்துவான் என அறிக.

இதனால் எனதுடல் என்றலின் ஆன்மாஉளது எனவந்த மேற்கோள் வலியுறுத்தப்பட்டவாறு அறிக.

**மூன்றாம் அதிகரணம்**

*இனி ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் என்றது ஐம்புலன் அறிதலின், ஒடுக்கம் அறிதலின் என்று உணரற்பாற்று.*

இவ்வாறு கண்ணழித்து உரைத்தது ஆசிரியன் என உணர்க.

சூத்திரத்துள் ஐம்புலனொடுக்கம் அறிதலின் என்று வந்துள்ள சூத்திரப்பகுதியை ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது என்றும், ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது என்றும் கண்ணழித்து, இரண்டு அதிகரணங்களாகப் பகுத்து உணர்க என்று ஆசிரியன் இங்கு அறிவுறுத்தான் எனக் கொள்க.

*மேற்கோள்:- இனி ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது என்றது ஐம்புலனாகிய சத்தப்பரிச ரூபரச கந்தங் களை இந்திரியங்கள் ஒன்றுஅறிந்ததை ஒன்று அறியாமை யின் இவ்வைந்தினானும் ஐம்புலனும் அறிவது உள்தாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.*

இங்கு ஏதுவுடன் கூடிய மேற்கோளும் பொழிப்புரையு மாய் வந்த இவை ஆசிரியன் உரைத்தவை.

செவி முதலிய ஐந்தும் பொறிகள் எனப்படும். சத்தம் முதலிய ஐந்தும் புலன்கள் அல்லது புலன் உணர்வுகள் எனப் படும். செவிசத்தத்தை மட்டும் அறிவது. பரிசம்முதலிய மற்ற வற்றை அறியாது.செவி அறிந்த சத்தத்தை மெய்முதலியபிற பொறிகளும் அறிவதில்லை. இப்படியாகப்பொறிகளில் ஒன்று அறிந்ததைப் பிறிது ஒன்று அறியாது ஆகலானும், அவை ஐந்தினையும் தனித்தனியாக அறிந்து பயன்கொள்ள நிற்பது வேறு ஒன்று உண்டாம் ஆகலானும் அதுவே அவ்வான்மா வாம் என மேற்கொண்டான் ஆசிரியன் என்பது.

செவி சத்தத்தை அறியும் என்றும், கண் உருவத்தை அறியும் என்றும் இவ்வாறு சொல்வதும் உபசாரமேயன்றி உண்மையாகாது. செவி கருவியாக ஆன்மா சத்தத்தை அறியும் என்றும், கண் கருவியாக ஆன்மா உருவத்தை அறியும் என்றும் இவ்வாறு சொல்வதே உண்மை ஆகும். அஃதனால்தான் செவி முதலிய ஐந்தையும் புறக்கருவிகள் என்று சொல்லிவைத்தனர். இவை புறக்கருவிகள் எனவே அகக்கருவிகளும் உண்டு எனக்கொள்க. அவை மனம் புத்தி அகங்காரம் சித்தம் எனப்படும் அந்தக் கரணங்கள் நான்கு மாம்.

**ஒன்றறிந்த தொன்றறியா தாகி உடல்மன்னி**
**அன்றும் புலனாய அஞ்செழுத்தை ஒன்றறிதல்**
**உள்ளதே ஆகி அதுநீ தனித்தனிகண்**
**டுள்ளலவை ஒன்றல்லை ஓர்.**

என்பது உரைப்பாட்டு. இது ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது எனவந்த மேற்கோளைச் சம்பிரதாய மரபால் விளக்கு கின்றது.

கண்ணழிவு:- அஞ்சும் உடல் மன்னி புலன் ஆய அஞ்செழுத்தை ஒன்று அறிந்ததை ஒன்று அறியாதாகி-ஆக லானும், ஒன்றி அறிதல் உடையது ஒன்று உள்ளது ஆகி-ஆகலானும் அவ்வாறு அறியும் அதுவே நீ, அஞ்செழுத்தை யும் நீ தனித்தனி கண்டு உள்ளலால் அவற்றுள் நீ ஒன்று அல்லை, ஓர் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, செவி தோல் கண் வாய் மூக்கு ஆகிய ஐந்து பொறிகளும் உடம்பில் தாமதுவாய்ப்

பொருந்திநின்று தத்தமது புலன் உணர்வுகளாகிய ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந் தினையும் அறியுங்கால் அவற்றைத்தம்மில் ஒன்று அறிந் ததைப் பிறிதொன்று அறியாது ஆகலானும், அவ்வைந்தினை யும் அப்பொறிகள் ஐந்தினோடும் ஒன்றி நின்று அறிந்து பயன்கொள்ளும் பிறிதொரு பொருளும் அங்கு உண்டெனப் படும் ஆகலானும் அவ்வாறு பயன்கொள்ளும் அதுவே அவ் வான்மாவாகிய நீ ஆவாய். நீ அந்நுமர்வுகள் ஐந்தினையும் தனித்தனி அறிந்தும் நுகர்ந்தும்பயன்கொள்ளலால்அவ்வாறு பயன்கொள்ள மாட்டாத அப்பொறிகளுள் நீ ஒன்று ஆகாய், வேறு ஆகுவை. இதனை நீ ஆராய்ந்து தெளிவாய் எ. று.

அஞ்சும் எனற்பாலது எதுகை நோக்கி அன்றும் எனத் திரிந்து நின்றது. அஞ்சு என்பது ஐந்து என்பதன் போலி ஐந்தாவன. செவி தோல் கண் வாய் மூக்கு ஆகிய பொறிகள் ஐந்துமாம் என்பது, அவை உடல்மன்னுதலாவது உடம்பில் அவை தாமதுவாய்ப் பொருந்தி நிற்றல் என்பதாம். புலனாய அஞ்செழுத்து என்றது அப்பொறிகட்கு உணர்வாகிய ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தினையுமாம். அவை எழுத்துப் போறலின் எழுத்து எனப் பட்டன. என்னை, சொற்களுக்கு முதலாய் எழுந்த ஒலி வடிவம் எழுத்து ஆனாற்போலத் தன்மாத்திரைகள்பூதங்கட்கு முதலாய் எழுந்தனவாகலான் என்க. ஒளி வடிவாய் எழுந்தது எழுத்தாம் ஆகலின் எழுத்து என்பதும் ஒரு காரணக்குறியாம் என அறிக. எழுதப்படுவது எழுத்து என்பரால் எனின் அற்றன்று. வரி வடிவத்தைக் குறித்தற்கு அது ஒரோவழி சாலுமாயினும் ஒலி வடிவத்தைக் குறித்தற்குச்சாலாதாகலின் அது பொருந்தாது என்க. அன்றியும் வரி வடிவம் வழக்கில் வருதற்கு முன் தொட்டே ஒலி வடிவம் வழக்கில் இருந்தது ஆகலானும், அதனையும் எழுத்தென்றே சான்றோர் வழங்கி னர் ஆகலானும் எழுதப்படுவது எழுத்து என்றல் அறியாதார் கூறும் கூற்றாம் என்று ஒழிக. ஆகவே ஒலி வடிவாய் எழுந் தது எழுத்தாம் எனவும், வரி வடிவாய் எழுந்தது எழுத்தாம் எனவும் கோடலே வலியுடைத்தாம் என்பது.

இனிப் பூதங்கட்கு முதலாய் எழுந்த சத்தம் பரிசம் உருபம் இரசம் கந்தம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தினின்றே வெளி வளி தீ நீர் நிலம் என்னும் பூதங்கள்ஐந்தும் தோன்றின என்பது ஆகமங்களின் துணிபாம். ''சுவையொளி ஊறோசை நாற்றமென்றைந்தின் வகைதெரிவான் கட்டே உலகு'' எனவரும் திருக்குறட்குப் பரிமேலழகர் உரைத்த உரை கொண்டும் இதனைத்தெளியலாம் என்பது. அவ்வுரை யாவது,'' அவற்றின் கூறுபாடாவன, ''பூதங்கட்கு முதலாகிய அவை தாம் ஐந்தும், அவற்றின் கட்டோன்றிய அப் பூதங்கள் ஐந்தும், அவற்றின் கூறாகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும் கன்மேந் திரியங்கள் ஐந்தும் ஆக இருபதுமாம்''. என்பது.

நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை என்னும் தன்மாத்திரைகள் ஐந்தின் வழியாகத் தோன்றிய காரணத்தாலன்றோ நிலம் நீர் தீ வளி வெளியாகிய அப்பூதங்களிடத்தும் அக் குணங்கள் உளவாயின என்பதும், அப்பூதபரிணாமத்தால் உண்டான உடம்பின் கண்ணும் அக்குணங்களை நுகர்தற்காம் ஞானேந்திரியங்கள் ஐந்தும் உளவாயின என்பதும் அறியப்படுகின்றன என்பது.

இனி ஒன்று அறிதல் என்பது ஒன்றி அறிதல் என்பதாம். ஆண்டு வினையெச்சத்திறுகியாகிய இகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது.

ஆகலான் எனற்பாலன ஈரிடத்தும் ஆகி எனத்திரிந்து நின்றன.

உள்ளல் என்பதற்கு உள்ளலான் என உருபு விரித்து உரைக்க. உள்ளல், உள்ளுதல், அறிதல், அறிந்து நுகர்தல் எனப்பொருள் காண்க.

அவை என்பது இங்கு அதிகாரத்தால் ஞானேந்திரியங்களைத் குறித்து நின்றது. அவை ஒன்று அல்லை-அவற்றுள் நீ ஒன்று அல்லை என உருபும் எழுவாயும்விரித்து உரைக்க.

ஞானேந்திரியங்கட்கு வேறாய் ஆன்மா உண்டு என இங்கு உணர்த்தியதால் இனம் பற்றிக் கன்மேந்திரியங்கட்கு வேறாயும் அது உண்டென் உணர்த்தினானாகக் கொள்க.

இதற்கு இவ்வாறு ஆசிரியன் கருத்துக்கேற்ப உரையாது மனம் போனவாறெல்லாம் உரைத்து அவற்குக் குறை நேர் வித்தாரும் உளர். அவற்றை அவர் உரையிற் காண்க.

ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் புறக்கரணங்களாகவே அகக்கரணங்களாகிய அந்தக் கரணங்கட்கு வேறாயும் ஆன்மா உண்டு என்பது அடுத்துவரும் சூத்திரத்தால் ஆசிரியன் கூறுவான் என்பது.

இதனால் ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது எனவந்த மேற்கோள் வலியுறுத்தப்பட்டவாறு அறிக.

## நான்காம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது என்றது நனவின் கண் கனவு கண்டாம் என்றும், கண்டிலம்என்றும் நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான் மாவாம் என்றது.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளும் பொழிப்புரையும் ஆசிரியன் உரைத்தவை.

மேல் இரண்டு அதிகரணங்களால் உடம்பு வேறு ஆன்மா வேறு என்றும், பொறிகள் வேறு ஆன்மா வேறு என்றும் உணர்த்தியதுகொண்டு துயிலுங்காலத்து ஆன்மா ஒடுங்கிய நிலையில் உடம்பும் பொறிகளும் செயல் ஒழிந்து நிற்பன போல ஆன்மாவும் செயலொழிந்து நிற்பதால் அவற்றிடை வேற்றுமை யாதோ என்று ஐயுற்ற மாணாக்கற்கு ஐயம் அகற்றும் முகத்தால் ஆன்மா அங்ஙனம் ஒடுங்கிய நிலையிலும் கனவு காண்டலானும், கனவில் சூக்கும உடம்போடும் ஒரு வகை மங்கிய உணர்வோடும் செயல் புரியா நிற்றலானும், நனவில் அக்கனவு நிகழ்ச்சிகளைக் கூட்டி நினைந்து அறியும் ஆகலானும் அவ்வுடம்பும் பொறிகளுமாகிய அவற்றோடு அதற்கு வேற்றுமை உண்டு என்பதோடு அதுகொண்ட அச் சூக்கும உடம்பினும் வேறாய் அது இருந்தது என மேற் கொண்டது இவ்வதிகரணம் என்பது.

ஒடுக்கம் அறிதல் என்பது ஒடுக்கக்காலத்து நிகழ்ச்சிகளை அறிதல் என்பதாம். எனவே உடம்பும் பொறிகளுமாகிய அவற்றை மறந்து ஆன்மா ஒடுங்கிய நிலையிலும் கனவு காண்பதால் அங்கும் அதற்கு ஒரு உடம்பும் செயலும் உண்டு எனவும், அவற்றை நனவில் அது நினைந்து அறிதலின் அறியும் அதுவே அவ்வான்மாவாம் எனவும், அதனால் அச் சூக்கும உடம்பினும் வேறானதே ஆன்மா எனவும் மேற் கொண்டது இம்மேற்கோள் என அறிக.

எனவே ஒடுக்கத்திலும் ஆன்மா ஒடுங்கவில்லை என்பது பெற்றாம்.

**அவ்வுடலின் நின்றுயிர்ப்ப ஐம்பொறிகள்**
**தாம் கிடப்பச்**
**செவ்விதின் அவ்வுடலில் சென்றொடுங்கி**
**அவ்வுடலின்**
**வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை**
**மாறலுடல் நீ அல்லை மற்று.**

என்பது உரைப்பாட்டு. இது ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது எனவந்த மேற்கோளைச் சம்பிரதாய மரபால் விளக்கு கின்றது.

கண்ணழிவு:- அவ்வுடலில் உயிர்ப்பு நிற்ப ஐம்பொறி கள் தாம் கிடப்ப ஆன்மாவாகிய நீ செவ்விதின் அவ்வுடலில் சென்று ஒடுங்கி அவ்வுடலின்-அவ்வுடல்போல் வேறு ஒன்று கொண்டு விளையாடி மீண்டு அதனை மாறல்-மாறலை உடல் உள்தல்-உள்ளுதலால் நீ மற்று அவ்வுடம்பும் அல்லையாம் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, துயிலுங்காலத்தில் மேற் கூறிப்போந்த அவ்வுடம்பின்கண்ணே உயிர்ப்புத்தொழில் ஒன்று மட்டும் நிகழா நிற்கவும், ஐம்பொறிகளும் விடய நுகர்ச்சியின்றிச்செயலொழிந்து கிடக்கவும் ஆன்மாவாகிய நீ முறையாகச்சென்று அவ்வுடம்பின் ஒருபகுதியில் ஒடுங்குவையானாலும் ஆண்டும் நீ ஒரோவழிச் செய லொழிந்து கிடத்தலின்றித் தூலவுடம்பு போலப் பிறிதொரு

உடம்பாகிய சூக்கும உடம்பைக்கொண்டு வெளிப்போந்து பற்பல விளையாடல்களைச் செய்து மீண்டு துயில் நீங்கிய காலத்தில் சூக்கும உடம்பினை விட்டுத் தூல உடம்புக்கு மாறிய செயலை எல்லாம் நனவில் நினைத்துப் பார்க்கின்ற படியாலே அச்சூக்கும உடம்பும் நீ ஆகாய் எ. று.

அவ்வுடல்போல் வேறு ஒன்று கொண்டு விளையாடி என்றதாலும், துயில்மாறிய காலத்தில் அவற்றைநினைத்துப் பார்க்கின்றாய் என்றதாலும் அச்சூக்கும உடம்பும் நீ ஆகாய் என்றதாம்.

அவ்வுடல் என்ற சுட்டு மேற்கூறிப்போந்த உடம்பைச் சுட்டியது.

நின்று உயிர்ப்ப என்பதனை உயிர்ப்பு நிற்ப என மாறிக் கூட்டுக.

கிடத்தல்-செயலொழிந்து கிடத்தல். அவ்வுடலின்-இன் உவம உருபு. வேறுஒன்று என்றது சூக்கும உடம்பினையாம், கனவில் அது கொள்வது அதுவே ஆகலான். அதனை மாறல் என்பது சூக்கும உடம்பினை விட்டுத் தூலவுடம்புக்கு மாறிய செயலை என்பதாம்.

செல்தல்-சேறல் என்று ஆனாற்போல உள்தல்-ஊடல் என்றாகிச் செய்யுளாதலின் உடல் எனக்குறுக்கல் விகாரம் பெற்றது. இவ்வாறு உரையாது உடல் என்பதற்குச் சூக்கும உடம்பு எனப்பொருள் கொண்டு உரைப்பின் மாறல் என்பது நின்று வற்றும் என அறிக. அன்றியும் ''நனவின்கண் கனவு கண்டாம் என்றும் கண்டிலம் என்றும் நினைந்து நிற்பது உள தாகலின்'' என்ற ஆசிரியன் உரைக்கு மாறு கோளாம் என்பதும் உணர்க.

இதனால் ஆன்மாத் தனது ஒடுக்கத்தைத் தான் அறிந்த வாற்றால் கனவிற்கொண்ட சூக்கும உடம்பினும் அது வேறாய் நின்றது என்பது வலியுறுத்தப்பட்டது.

## ஐந்தாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனிக் கண்படில் உண்டி வினை இன்மையின் ஆன்மா உளது என்றது, ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பம் சீவனம் பிரகிருதிக்கு இன்மையின், ஒடுங்காதவிடத்து இன்பத்துன்பம் சீவியா நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளும் பொழிப்புரையும் ஆசிரியன் உரைத்தவை.

உறக்கத்திலேயாக, விழிப்பிலேயாக, இன்பத்துன்பங்களை நுகர்ந்து நின்றது உயிரே அன்றி உடம்பு அன்று என்பது இங்கு வலியுறுத்தப்படுகின்றது. உறங்கும் காலத்தில் உயிர் உடம்பை மறந்து அவ்வுடம்பினுள் எங்கோ சென்று ஒடுங்குகிறது. அப்பொழுது உடம்புக்கு இன்பத்துன்ப நுகர்ச்சி தேவைப்படுவதில்லை. அதாவது அப்பொழுது கண் ஒன்றைக் காண விரும்பாது. காது ஒன்றைக்கேட்க விரும்பாது. மற்றைப் பொறிகளும் அவ்வாறே என்பதுதான். அந்த நிலைமை உடம்பிற்கு உண்டாகக்காரணம் உயிர் உடம்பை மறந்திருந்ததுதான். உயிர் ஒடுங்காமல் உடம்போடு கூடி நின்ற காலத்தில் அதாவது நனவுக் காலத்தில் உடம்பிற்கு அத்தேவைகள் வேண்டியிருந்தன என்றால் அவை உயிரின் பொருட்டே அன்றி உடம்பின்பொருட்டு அல்ல என்றேஉணர வேண்டும். வேண்டவே எந்த நிலையிலும் இன்பத்துன்பங்களை நுகர்ந்து நின்றது எதுவோ அதுவே அவ்வான்மாவாம் என மேற்கொண்டான் ஆசிரியன் என்பது.

உண்டி என்றது பொறிகள் வாயிலாக நுகரப்படும் விடயங்களை. அவை இன்பத்துன்பங்களாம். வினை என்றது புசிப்பினை, எனவே உண்டி வினை என்பதற்குப் பொருள் இன்பத்துன்பப்புசிப்பு என்பதேயாம். இன்பத்துன்பம் சீவனம் என்று ஆசிரியன் பொருள் விரித்து உரைத்ததையும் இங்குக் கருதி உணர்க.

உயிர் நுகரும் இன்பத்துன்பங்களை உடம்பும் ஒரோவழி அறியுமாயினும் நுகருமாற்றல் உயிருக்கேயன்றி உடம்புக்கு எத்துணையும் இன்று ஆகலான் உடம்பு வேறு உயிர் வேறே

எனவும், அங்ஙனம் உடம்பின் வேறாய் நின்ற அதுவே அவ் வான்மாவாம் எனவும் உணர்க என்றதாம்.

பிரகிருதி என்பது பிரபஞ்சத்தைச்சுட்டிப்பின் அதனால் ஆன உடம்பிற்கு ஆகிவந்தது, ஆகு பெயர்.

**கண்டறியும் இவ்வுடலே காட்டொடுங்கக் காணாதே**
**உண்டி வினையின்றி உயிர்த்தலால் கண்டறியும்**
**உள்ளம்வே றுண்டாய் ஒடுங்கா துடல்நண்ணில்**
**உள்ளதாம் உண்டிவினை ஊன்**

என்பது உரைப்பாட்டு. இது கண்படில் உண்டிவினை இன்மை யின் ஆன்மா உளது எனவந்த மேற்கோளைச் சம்பிரதாய மர பால் விளக்குகின்றது.

கண்ணழிவு:- கண்டு அறியும் இவ்வுடல் காட்டு ஒடுங் கக்காணாது உண்டி வினை இன்றி உயிர்த்தலானும், ஒடுங் காது உடல் நண்ணில் ஊனிடத்து உண்டி வினை உள்ளது ஆகலானும் கண்டு அறியும் உள்ளம் வேறு உண்டாய்அதுவே அவ்வான்மாவாம் எ. து.

பொழிப்புரை:- விடயங்களைப் பொறிகளின்உதவியால் கண்டறியும் இவ்வுடம்பானது அதற்குக் காட்டாய் இருந்த உயிர் ஒடுங்கிய காலத்தில் அவ்வாறு அறியமாட்டாதாகி இன்பத்துன்பப் புசிப்புமின்றி உயிர்ப்பு ஒன்று மட்டுமே உடை யத்தாயிருந்தது ஆகலானும், உயிர் ஒடுங்காமல் உடம்பைச் சார்ந்திருந்த காலத்தில் உடம்பினிடத்து அவ்வின்பத்துன்பப் புசிப்பு இருந்தது ஆகலானும் விடயங்களைக் கண்டறியக் கூடியதும் இன்பத்துன்பப் புசிப்பு உடையதுமான ஒன்று அவ்வாறு அறியவும் புசிக்கவும் மாட்டாத உடம்பின் வேறாய் இருந்ததெனவே கருதப்பட்டு, அதுவே அவ்வான்மாவாம் எ. று.

எனவே பொறிகளின் உதவி தனக்கிருந்தும் உயிர் கூடிய வழியல்லது உடம்பிற்கு இன்பத்துன்பப் புசிப்பு இல்லை என்ற தால் அப்புசிப்பினை நல்கும் தலைமைப் பொருள் ஒன்று அவ் வுடம்பிற்கு வேறாய் இருந்தது எனவே கருதப்பட்டு அதுவே அவ்வான்மாவாம் என்று உணர்த்தியவாறாயிற்று.

கண்ணின் சிறப்புக்கருதிக் கண்டறியும் எனக் கண்மேல் வைத்துக் கூறினானேனும் செவி முதலிய பிறபொறிகளும் கொள்ளப்படும். படவே கேட்டறியும் உடல் என்றும், உண்டறியும் உடல் என்றும், உயிர்த்தறியும் உடல் என்றும், உற்றறியும் உடல் என்றும் உரைத்துக்கொள்க.

இவ்வுடல் என்ற சுட்டுக் கண்டறியும் நிலையில் இருந்த உடலைச் சுட்டியதாகக் கருதுக, உயிர் ஒடுங்கிய பொழுது கண்டறியா நிலைமை ஒன்றும் அதற்கு உண்டாமாகலின். கண்டறியும் உடல் என்றதூஉம் உபசார வழக்காமன்றி உண்மை ஆகாது எனவே கருதுக. என்னை, உயிரின் சார்பு இன்றேல் அதற்கு அது கூடாதாகலின் என்க.

உடல் நண்ணுதலாவது உயிர் உடம்பைத்தானதுவாய்ச் சார்ந்திருத்தல் என்பதாம். ஊன் என்பது ஆகுபெயராய் உடம்பிற்கு ஆகியது. ஊனில் என ஆண்டு ஏழனுருபு விரிக்க.

உள்ளது ஆகலான் என ஒரு சொல் வருவித்து உரைக்க.

ஆம் என்பதற்கு அதுவே அவ்வான்மாவாம் என முடித்து உரைக்க.

இது காறும் சார்மாயை நீ அல்லை என்பதைப்பலவேறு உத்திகளைக்கொண்டு உணர்த்தி வந்த ஆசிரியன் அடுத்து வரும் அதிகரணம் ஒன்றினால் தற்பரமும் அல்லை என்றதை யும் வலியுறுத்துவான் என அறிக.

## ஆறாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது என்றது, அவன் அறிந்தாங்கு அறிவன் என்று அறி விக்க அறிந்து உபதேசியாய் நிற்பது உளதாகலின்அதுவே அவ்வான்மாவாம் என்றது.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளும் பொழிப்புரையும் ஆசிரி யன் உரைத்தவை.

அவன் அறிந்தாங்கு அறிவன் என்னும் தொடர் முதல் வனை உணர்த்தியது என அறிக. அறிந்தாங்கு அறிதல் என்

பதனை அறிவித்தாங்கு அறிதல் என்பதற்கு மறுதலையாகக் கொள்க. கொள்ளவேதானே அறிதல் என்றபொருள் கிடைப்ப தாம்.

முதல்வன் அனைத்தையும் தானே அறியும்பேரறிவாளன் என்று ஞானாசிரியன் அறிவிக்க அறிந்து என்றும் உபதேசி யாயே நிற்பது ஒன்று உள்ளதாகலின் அதுவே அவ்வான்மா வாம் என மேற்கொள்ளப்பட்டது என்பதாம்.

மாயாதனு விளக்கா மற்றுள்ளம் காணும் என்றதால் ஆன்மா பெத்த காலத்தும் உபதேசியே, முத்திக் காலத்தில் முதல்வன் உணர்த்த உணர்வதால் அங்கும் அது உபதேசியே ஆகலான் ஆன்மா என்றும் உபதேசியே என்று உணர்க.

பெத்தகாலத்தில் உடம்பின் தூண்டலால் உலகை அறிந்து உலக இன்பத்தைத் துய்த்து வரும் எனவும், முத்திக் காலத்தில் முதல்வன் தூண்டலால் முதல்வனை அறிந்து வீட்டின்பத்தைத் துய்த்துவரும் எனவும் அறிக.

உடம்பு உயிர் இறை என்ற இந்தக்கட்டமைப்பில் உயிர் உடம்பைச் சார்ந்திருந்த காலம் மாறி இறையைச் சாரவரும் காலமறிந்து அவ்விறையே ஞானாசிரியனாய் வெளிப்போந்து ஆன்மாவை உணர்த்துவனாம். ஆன்மாத்தான் அது காறும் சார்ந்திருந்த உடம்பை வேறு பிரித்துத் தன்னைஉணர்ந்தாற் போலவே இதுபொழுது தன்னைச் சார்ந்திருந்த முதல்வனை யும் வேறு பிரித்துத் தன்னை உணரும் என்பதாம். ஆகவே, ''சார்மாயை நீ அல்லை, தற்பரமும் அல்லை, தனி'' என்று ஆசிரியன் அங்கு அறிவுறுத்திய உயர்ந்தஅனுபவத்தைஇங்கு நாம் உணர்தல் கூடுவதாம் என அறிக.

அதி தீவிர மனப்பக்குவமுடையார்க்கே முதல்வன் உள் நின்று உணர்த்துவன். அல்லார்க்கு அவன்ஞானாசிரியனாய் வெளிப்போந்தே உணர்த்துவன் என்பதறிக. அது எவ்வாறா யினும் உணர்த்த உணர்வதுவே ஆன்மாவாம்என்று உணர்க.

**அறிந்தும் அறிவதே யாயும் அறியா**
**தறிந்ததையும் விட்டங் கடங்கி அறிந்த**
**தெதுவறிவும் அன்றாகும் மெய்கண்டான் ஒன்றின்**
**அதுவதுதான் என்னும் அகம்.**

என்பது உரைப்பாட்டு. இது உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது எனவந்த மேற்கோளைச் சம்பிரதாய மரபால் விளக்கு கின்றது.

கண்ணழிவு:- அகம் அங்கு அடங்கி அறிந்தும், அறிவ தேயாயும், அறியாதும், அறிந்ததையும் விட்டும் அறிந்தது எது என்னில் அறிவும் அன்றாகும். மெய்கண்டான் ஒன்றின் அது அதுதான் என்னும் எ. து.

பொழிப்புரை:- ஆன்மாவானது உடம்பிற்கு ஆட்பட்டு அடங்கி நின்று, அந்நிலையில் தனக்கு அந்நியமாய்உள்ள பரம்பொருளை அறிய முயன்று யாதானும் ஓராற்றான் ஓரளவு அறிந்து வைத்தும், அறிந்தது நிரம்பாமையால் மேலு: அறிய முயன்றும், பலகால் முயன்றும் அதற்குமேல் ஒரு சிறிதும் அறியமாட்டாது ஓய்ந்தும், அரை குறையாய் அறிந்து வைத்ததையும் காலப்போக்கில் மறந்தொழிந்தும் முடிவில் அது அறிந்ததுதான் யாதோ வென்னில் அதுகாறும் அதுதான் அறிந்து வந்த அவ்வனைத்துமே அவனை அறிந்த அறிவன்றாயே முடியும், மெய்ப்பொருளைக் கண்டவனாகிய ஞானாசிரியன் ஒருவன் அவ்வான்மாவின் பரிபக்குவ நிலை யில் எதிர்ப்பட்ட மாத்திரத்தே அவனது அருள் நோக்கம் பெற்றுப் பசுபோதம் கழன்று பதி ஞானம் மேலிட்ட நிலையில் அப்பதியை அறிய முயன்று அதனோடுதான் அதுவாய் ஒன்றி நின்று அதனை அதுவென்றே உள்ளவாறு அறியும் எ, று.

எனவே ஞானாசிரியன் உணர்த்த உணர்ந்த அந்த ஒன்றே ஆன்மாவாம்என்பதும்,உணரப்பட்ட பதிப்பொருளின்வேறாய் நின்ற அந்த ஒன்றே ஆன்மாவாம் என்பதும் இதனாற் பெற்றாம் என்பது.

இன்னும் இதனானே பிரமம் என்பதொரு பொருளே உண்மை எனவும், உலகும் உயிரும் பொய்யே எனவும் கூறும் ஒருபொருட் கொள்கையுடையார் கூற்றும் இங்கு வலியழிவதாம் என்பதும் பெறுதும்.

அகம் என்பது உள்ளம். அது அதனையுடைய ஆன்மா விற்கு இங்கு ஆகி வந்தது.

அடங்குதல் உடம்பிற்கு ஆட்பட்டு அடங்கி நிற்றல்.

பொருளியைபிற்கு ஏற்றவாறு இங்கு வேண்டிய சில சொற்கள் பெய்து உரைக்கப்பட்டன.

அறியாது என்புழியும் விட்டு என்புழியும்எண்ணும்மைகள் தொக்கன.

அறிந்தது எது என்னில் என ஒரு சொல் வருவித்து உரைக்க,

அறிவு,அவனை அறிந்த அறிவு அதாவது மெய்யறிவு.

ஒன்றுதல்-நேர்படுதல்.அதுதான் என்புழித்தான் என்பது தேற்றம் குறித்து நின்றது. என்னும்-என்றறியும்.

இதனால் உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது என வந்த மேற்கோள் வலியுறுத்தப்பட்டவாறு அறிக.

## ஏழாம் அதிகரணம்

*மேற்கோள்: இனிமாயா வியந்திர தனுவினுள் ஆன்மா உளது என்றது, அவைதாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

இது காறும் ஆன்மாவானது தான் சார்ந்திருந்த மாயா காரியமாகிய உடம்பும் அன்று, தன்னைச் சார்ந்திருந்த தற்பரவத்துவாகிய பரம்பொருளும் அன்று, தான் தனியொரு பொருளாகவே இருந்தது என்று அதன் தனித்தன்மையைப் பல வேறு உத்திகளைக் கொண்டு உணர்த்தி வந்த ஆசிரியன் இவ்வதிகரணத்தால் அவை அனைத்தையும் ஒருங்கு கூட்டி முடித்து உணர்த்துகின்றான் என அறிக.

மாயா வியந்திர தனு என்பது மாயாமலத்தால்விளைந்த ஒரு இயந்திரம் போல்வதான உடம்பு என்பதாம். அவை என்றது உடம்பும் பொறிகளுமாகிய அக்கூட்டத்தை என அறிக.

உடலும் உடலுறுப்புக்கள் பலவும் ஆகிய அவை எல்லாம் தனித்தனி வேறு வேறு பெயர்களைப் பெற்று நின்றனவாதலால் ஆன்மா அவற்றுள் ஒன்று ஆகாது என்பதே. மாயையால் விளைந்த இயந்திரம் போன்றதான உடம்பில் அது தனியாகவே இருந்தது என்பதே இங்கு மேற்கொண்ட மேற்கோளாகும்,

மாயா என்றது மாயா மலத்தினை. உடம்பும் உடம்பு பற்றிவரும் அறிவு அனைத்துமே மாயாமலத்தின் காரியங்களாம் என்றே நாம் இங்கு உணர்தல் வேண்டும்.

**கலையாதி மண்ணந்தம் காணிலவை மாயை**
**நிலையாவாம் தீபமே போல் அலையாமல்**
**ஞானத்தை முன் உணர்ந்து நாடில் அதுதனுவாய்த்**
**தானத்தின் வேறாகும் தான்.**

என்பது உரைப்பாட்டு. இது மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா உளது என வந்த மேற்கோளைச் சம்பிரதாயமரபால் விளக்குகின்றது.

கண்ணழிவு:- கலை ஆதி மண் அந்தம் காணில் அவை மாயை. நிலையாவாம். தீபம் போல அலையும் மனத்தை அலையாமல் வைத்து ஞானத்தை முன் உணர்ந்து நாடில் அது தனுவாய் தான் அத்தின் வேறு ஆகும் தான் எ, து.

பொழிப்புரை:- கலை முதலாக மண் இறுதியாக உள்ள தத்துவங்கள் இருபத்தொன்பதனையும் ஆராய்ந்து பார்க்கில் அவ் எல்லாம் மாயா காரியங்களே ஆதலின் நிலைப்பன அல்லவாம். காற்றினால் அலைகின்ற தீபத்தைப் போலப் பொறிகளால் அலைகின்ற மனத்தினை அலையாதவாறு நிறுத்தி ஞான வடிவாய் விளங்கும் சிவபரம் பொருளை முதற்கண் தேடி உணர்ந்து பிறகு கலை முதலாயுள்ள அவற்றை விசாரித்துப்பார்க்கின் அவையெல்லாம் உடம்பும் உடம்பைப் பற்றிய அறிவுமாய்த் தோன்றவே ஆன்மாவாகிய அது தான் சார்ந்துள்ள உடம்பின் வேறாயும் தன்னைச் சார்ந்துள்ள பரம்பொருளின் வேறாயும் தோன்றும் எ. று.

கலை ஆதிமண் அந்தம் காணில் அவை மாயை என்ற தால் காணும் புருடனும் காணப்பட்ட மாயையும் என அவ் விரண்டும் கூட்டித் தத்துவங்கள்முப்பத்தொன்றாகக்கொள்க. கொள்ளவே நிலையாவாம் என்றது அவற்றுக்கும் பொருந் தும் எனவே அறிக.இவற்றை ஆன்மதத்துவம் என்பர்.இவை தவிர நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை எனவரும் சிவ தத்துவம் ஐந்தும் உண்டு. அவற்றையும் கூட்டித் தத்துவங்கள் முப்பத்தாறு என்று முடிப்பது சைவ சிந்தாந்த மரபு.சிவ தத்துவம்ஐந்தினையும் ஈண்டைக்கு வேண்டாவென விட்டுவைக்க.

இனிக் கலையாதி மண்ணந்தம் வரையான தத்துவங்கள் இருபத்தொன்பதாவன வருமாறு: கலை-வித்தை-அராகம் காலம் நியதி என்னும் அவைதாம் ஐந்தும், மனம் புத்திஅகங் காரம் சித்தம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கும், வாய் கால் கை எருவாய் கருவாய் என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்தும், செவி தோல் கண் வாய் மூக்கு என்னும் ஞானேந் திரியங்கள் ஐந்தும், ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும், வெளி வளி தீ நீர் நிலம் என்னும் பூதங்கள் ஐந்தும் ஆக இருபத்தொன்பதாம் என்பது.

இனிக் கலையாதி மண்ணந்தம் வரையான தத்துவங் களைக் காண்டலாவது, ஆன்மாவைச் சார்ந்துள்ள மும்மலக் கூட்டத்துள் ஒன்றாகிய மாயாமலத்தின் விளைவுகளே இவை அனைத்துமாம் என்று விசாரித்து அறிதல் என்பதாம்.

அங்ஙனம் அறியுமாறு:- இருள்மலம் என்னும் ஆணவ மலச்சார்பினால் அறியாமை இருளில் மூழ்கிக்கிடந்த ஆன்மா விற்கு அறிவொளி ஊட்டும் கருவியாய் இருப்பது கலை. வேதாகமம் முதலிய அனைத்து நூல்களும் இதனுள் அடங்குவனவாம். அன்றியும் உயிருக்கு அறிவினை ஊட்டும் உலகத்துப்பொருள்களாகிய மரம் செடிகொடி முதலானஅவை யுங்கூடப்புத்தகங்களாம் என்பதால் அவற்றையும் இங்குக் கலை என்னும் தத்துவத்தின் வகையாக அடக்கலாம்.என்னை, அவற்றைக் காணும் அறிவுடையான் ஒருவனுக்கு அவையும் ஓராற்றால் அறிவை நல்கலான் என்க. ஒரு மரத்தை ஒருவன்

காண்கின்றான் என்று வைந்துக்கொள்வோம். ''இது முதலில் ஒரு விதையிலிருந்து தோன்றியது. அவ்வாறு அது தோன்று தற்கு மண்ணினது ஈரம் உபகாரப்பட்டிருக்க வேண்டும். நாள் செல்லச்செல்ல அது மெல்ல மெல்ல வளர்ந்து பெரிதாயிற்று. உரிய காலத்தில் அது பூத்துக் காய்த்துக் கனிந்து விதைகளை உதிர்த்தது. அந்த விதைகளிலிருந்து அந்த இனத்துப் பல மரங்களும் முளைத்து வளர்வனவாயின. தாவரங்களின் இன விருத்தி இவ்வாறே நிகழ்ந்து வருகிறது'' என்று அவ்வாறான அறிவினையெல்லாம் புத்தகம் போல அந்தமரம் அவற்கு ஊட்டுமன்றே. அதனால் அறிவினை ஊட்டும் உலகத்துப் பொருள்களும் இங்குக் கலையென்னும் தத்துவத்தின் வகையுள் அடங்கலாம்.

இனிக் கலையினால் ஆன்மாப் பெறுகின்ற அறிவே வித்தை எனப்படும். பெற்ற அறிவினால் உள்ளத்தில் எழுகின்ற இச்சை அல்லது வெறுப்பு அராகம் எனப்படும். இச்சை வழியானும் வெறுப்பு வழியானும்உள்ளத்தில் நிகழும்முயற்சி அல்லது தூண்டுதல் ஊழ் எனப்படும் நியதியாகும். அதற்குக் காலம் இன்றியமையாது தேவைப்படும் ஆகலான் ஆகூழ் நிகழும் காலமாயின் முயற்சி தோன்றும். போகூழ் நிகழும் காலமாயின் அது தோன்றாது என்பதாம். ஆகவே இம்முறையால் அவை கலை வித்தை அராகம் காலம் நியதி என்ற வரிசையில் வைத்துச் சொல்லப்படுகின்றன. இவை ஐந்தும் ஆன்மாவிற்குச் சட்டை போறலின் இவற்றைப்பஞ்சகஞ்சுகம் என்பர். கஞ்சுகம் மெய்க்கு அணியும் சட்டை.

இனி ஆன்மாவின் சிதறல்களாய்க் கருதப்படுகின்ற மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்பவை அந்தக் கரணங்கள் எனப் படுவன. அவை அகத்தேயுள்ள கருவிகளாதலின் அப்பெயர் பெற்றன. அந்தக் கரணம் என்பது மாளிகையின் அந்தப்புரம் போல்வதோர் சொல்வழக்காகலாம். பொறிவழியாகவோ கலையறிவின் வாயிலாகவோ யாதானும் ஒரு விடயத்தை முதற் கண் பற்றுவது மனம். பற்றியதொன்றை இன்னதென்று நிச்சயிப்பது புத்தி. நிச்சயித்த ஒன்றோடுஒன்றுதற்கு எழுவது அகங்காரம். பல முறை ஒன்றி எழுந்து அதன் உண்மைத் தன்மையை உணர்ந்து தெளிவது சித்தம். இக் கருத்தை,

அந்தக் கரணம் அடைவே உரைப்பக்கேள்
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் சித்தமிவை
பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்தங்
குற்றதுசிந் திக்கும் உணர்''

என வரும் உண்மை விளக்கச் செய்யுளாலும் உணரக்கூடும். பற்றுதல் நிச்சயித்தல் ஒன்றற்கு எழுதல் உள்ளது சிந்தித்துத் தெளிதல் ஆகிய இத்தொழில் வேறுபாட்டால் மனம் என்ற ஒன்றையே சாத்திர நூல்கள் இந்நான்காகப் பகுத்துக்கூறின போலும். ஆனால் பொது மறை கண்ட வள்ளுவன் மனம் என்ற ஒன்றையே நூல் முழுதும் வைத்துப் போற்றினான்.

இனி ஆன்மாவின் சிதறல்களாய்க் கருதப்பட்ட உட் கரணங்களைப் போன்று உடம்பின் சிதறல்களாய்க் கருதப் படும் புறக்கரணங்களும் இருந்தன. அவற்றை ஞானேந் திரியங்கள் என்றும், கன்மேந்திரியங்கள் என்றும் பெயரிட்டுக் கூறுவது மரபு. அவை முறையே அறிவுப் பொறிகளும் தொழிற்பொறிகளுமாம். செவி தோல் கண் வாய் மூக்கு என்பன அறிவுப் பொறிகள். வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என்பன தொழிற்பொறிகள். இவற்றை வாய் கால் கை எருவாய் கருவாய் எனவும் தமிழ்ப்படுத்திக்காணலாம். இவ்விருவகைக் கரணங்களாலும் முறையே ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் ஆகிய விடய நுகர்ச்சியும், பேசுதல் நடத்தல் தொழில் புரிதல் மலங்கழித்தல், சிறுநீர் கழித்தல் ஆகிய தொழிற்பாடும் நிகழ்வனவாம். இப்புறக்கருவிகள் பத்தினை யும் அவயவம் என்க்கொண்டால் இவற்றையுடைய உடம்பு அவயவி எனப்படுவதாம்.

இனி இவ்வுடம்பிற்கும் வெளி வளி தீ நீர் நிலம் ஆகிய பருப்பொருள் ஐந்தினுக்கும் அவற்றுக்கும் முதலாகிய ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் ஆகிய தன்மாத்திரைகள் ஐந் தினுக்கும் நெருக்கமான தொடர்பு உண்டென்று அறிய லாம். அந்த ஒரு காரணத்தாலே பஞ்ச பூதங்களின் சேர்க்கை யால் ஆனது இவ்வுடம்பு என்று சாத்திர நூல்கள் கூறா நிற் கும். ஓசை முதலாகிய தன்மாத்திரைகள் ஐந்தினிடமிருந்து முறையே வான் முதலாகிய பூதங்கள் ஐந்தும் தோன்றின என்றும், பூதங்கள் ஐந்தினிடமிருந்து உடம்பு தோன்றியது

என்றும் கூறும் மரபும் இருந்து வருகிறது. அதனால்தான் வான் முதலாகிய பூதங்களிடத்து முறையே ஓசை முதலாகிய குணங்கள் நிலவுகின்றன என்றும், உடம்பினிடத்தும் அக் குணங்களை அறிந்து நுகர்தற்காம் உணர்வுப் பொறிகள் அமைந்துள்ளன என்றும் அறிய வேண்டியுள்ளது. இவ் வுணர்வுப் பொறிகளையும் தொழிற் பொறிகளையும் கொண்டே ஆன்மாக்கள் இவ்வுலகைப் புசித்து வருகின்றன எனலாம்.

இனி உள்ளம் என்பது ஆன்மாவின் மறுபடைப்பாம் எனக்கொள்ளலாம். அதாவது ஆன்மாவின் பிரதிநிதி என்பதாம். சாத்திர நூல்கள் இதற்குப் புருடன் என்று ஒரு பெயரிட்டு அழைக்கும். உள்ளம் என்ற சொல்லால் குறிக் கப்படும் ஒன்றையே புருட தத்துவமாகக் கோடல் வலியுடைத் தாம் என்பது. இந்நூலில் ஆன்மாவைக் குறிக்கும்இடங்களில் எல்லாம் உள்ளம் என்ற சொல்லை ஆசிரியன் வழங்கியிருத் தலைக் கூர்ந்து நோக்கின் இக்கருத்து வலியுறுவதாம் என அறியலாம். ஆன்மாவின் மறுபடைப்பாகிய உள்ளம் என்பது உடம்பைச் சார்ந்து நின்று உலக் முகப்பட்டு அவ்வுலகை உண்ண முற்படும்போது அது புருடன் என்று அழைக்கப்படு கிறது. மாயாகாரியமாகிய உடம்பையும் உடம்பைப்பற்றி வரும் அறிவுகளையும், ஆன்மாச் சார்ந்து நிற்கும் கால எல்லைவரை இப்புருட தத்துவத்திற்கு இடனுண்டு எனலாம். உடம்பை வேறு பிரித்து ஆன்மாத் தன்னைத்தான் தரிசித்த லாகிய ஆன்ம தரிசனத்தின்போதும் இப்புருட தத்துவம் உண்டு எனலாம். ஆன்மாப் பரம் பொருளோடு தானது வாய்ச் சார்ந்து நின்று ஏகனாகி இறைபணி நிற்கும் எல்லைக் கண் மாயாகாரியமாகிய உடம்பும் உடம்பு பற்றிவரும் அறிவு களும் ஆன்மாவை விட்டு விலகுவதேயாம். என்னை, ஏகனாகி இறைபணி நிற்கும் நிலை தத்துவம் கடந்த நிலை ஆகலான் என்க. ஆண்டும் ஒரோவழி ஆன்மாவைப்புருடன்என்றுவைத்து ஆசிரியன் கூறுவான் எனில் அதனை உபசார வழக்காய்க் கொள்ள வேண்டும் என்பதே.

இனி மாயை என்றது மும்மலங்களுள் ஒன்றாகிய மாயா மலத்தினை எனலாம். ஆன்மாப் பெத்த நிலை கடந்து முத்தி

நிலையினைத் தலைப்பட்டுப்பதியுணர்வால்பதியைத் தரிசித்து நிற்குங்கால் மாயாமலம் கெட்டொழியும் ஆகலான் அதன் விளைவுகளாயிருந்த கலையாதி மண்ணந்தம் வரையான தத்துவங்கள் அனைத்துமே அங்கு இல்லையாம்.அவற்றோடு புருட தத்துவமும் அங்கு இல்லையாய் ஒழியும். அதாவது உடம்பின் வசப்பட்டு உலக முகப்பட்டு அவ்வுலகை உண்டு கொண்டிருந்த உள்ளமும் அதுபொழுது இல்லையாய்ப்போம் என்றபடியாம். ''நானார் என்னுள்ளமார் ஞானங்களார் என்னை யார் அறிவார்''. எனவரும் திருவாதவூரரின் சிவானுபவப் பாடலை இங்கு நினைவு கூர்தல் தக்கதாம். இவ்வாறெல்லாம் விசாரித்து அறிதலே கலையாதி மண்ணந் தம் காண்டல் என்பதாம்.

இனிச் செய்யுளில் மாயை என்றது மாயா காரியத்திற்கு ஆகி வந்தது. அங்கு ஆகலான் என்று ஒரு சொல் வருவிக்க. தீபம் போல் அலைகின்ற மனத்தை அலையாவாறு நிறுத்தி என உரைக்க. ஞானத்தை உணர்தலாவது ஞான வடிவாய் விளங்கும் பரம்பொருளைத் தரிசித்தல் என்பதாம். தனுவாக எனற்பாலது தனுவாய் எனத் திரிந்து நின்றது. தான்அத்தின் வேறாகும் தான் என்புழித்தான் முன்னையது எழுவாய், பின்னையது அசைநிலை.

அத்தின் வேறாகும் என்பதற்கு இரட்டுறமொழிதலால் பொருள் உரைத்துக்கொள்க. அதாவது அவ்வுடம்பின் வேறாம் என்றும், அப்பரம் பொருளின் வேறாம் என்றும் உரைத்துக்கொள்க என்றபடியாம். அதனின் எனற்பாலது அத்தின் எனத் திரிந்து நின்றது.

இனி நிலையாவாம் தீபமே போல என்பதற்குத்தீபம்போல் அவை அனைத்தும் நிலையாவாம் என உரைப்பினும் அமையும். நெய் இருக்குந் துணையும் எரிந்து ஒளிதந்து அது வற்றியவுடன் ஒரு கணமும் நில்லாது அணைந்து போகும் தீபத்தைப் போல உடம்பும் உடம்பு பற்றி வரும் அறிவுகளும் ஊழ் உள்ள துணையும் உலகில் நின்று ஆன்மாவை வழி நடத்தி ஊழ் வற்றியவுடன் ஒரு கணமும் நில்லாது மறைந்து போம் என உவமைப் பொருத்தமும் காண்க என்பதாம்.

''மாயா தனு விளக்கா மற்றுள்ளம் காணும்'' எனஇவ்வாசிரியனும்'',''விடிவாமளவும் விளக்கன்னய மாயைவடிவாதி கன்மத்து வந்து'' எனத்திருவருட் பயன் நூலுடையாரும் கூறியுள்ளதை இங்கு நினைவில் இருத்துக என்பது.

உடல் உயிர் இறை என்ற கட்டமைப்பில் உடலின் வேறாயும் இறையின் வேறாயும் ஆன்மா என்பதொரு பொருள் உண்டென உணர்த்தி வந்த ஆசிரியன்இனிஉயிரின் சிதறல்களாய்க் கருதப்படுகின்ற மனம் புத்தி அகங்காரம் சித்தம் ஆகிய அந்தக் கரணங்களின் வேறாயும் அது இருந்தது என்று உணர்த்த வருவது அடுத்த சூத்திரம் என அறிக. அதனால் அது புறனடைச் சூத்திரமாயிற்று என்க.

**நான்காம் சூத்திரம்**

**அந்தக் கரணம் அவற்றினொன் றன்றவை**
**சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா**
**தமைச்சர சேய்ப்பநின் றைந்தவத் தைத்தே**

என்பது சூத்திரம் என் நுதலிற்றோ எனின் இதுவுமது.

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமென இவை ஆசிரியன் கூறியவை.

இந்தச் சூத்திரமும் ஆன்மப் பிரகாசமே உணர்த்துகிறது. மேலைச்சூத்திரம் உடம்பு பொறிகள் முதலியவற்றின்வேறாய் ஆன்மா உண்டு என்றது, இது அந்தக்கரணங்களின் வேறாய் ஆன்மா உண்டு என்கின்றது. அதனால் ஆசிரியன் இதுவுமது என்று மாட்டெறிந்தான்.

கண்ணழிவு:- ஆன்மா அந்தக்கரணம் ஆகியஅவற்றின் ஒன்று அன்று. அவற்றோடு என்றும் சந்தித்தது, சகச மலத்தால் உணராது ஆகலின் அமைச்சு அரசு ஏய்ப்ப நின்றுஐந்து அவத்தைத்து எ. து.

பொழிப்புரை:- மேலைச் சூத்திரத்தால் அத்தின் வேறாய் உண்டெனக் கருதப்பட்ட ஆன்மாவானது, மனம் புத்தி ஆங்காரம் சித்தம் ஆகிய அந்தக் கரணங்களின் ஒன்று அன்று. அவற்றினும் வேறானதே. ஆயினும் அவற்றோடு

எப்பொழுதும் கூடியே நின்றதாம். ஆணவ மலத்தால் அது தானே அறியாது ஆதலின் அரச காரியங்களில் அமைச்சரும் அரசனும் போல விடய நுகர்ச்சியில் அந்தக் கரணங்களுடன் ஆன்மாக் கூடியே நின்றதாயினும், சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளையும் உடையதாயிருந்த காரணத்தால், அவற்றின் வேறாயும் அது இருந்தது எ. று.

ஒன்றன்று, ஆயினும் என ஒரு சொல்வருவிக்க. உணராது என்புழியும் ஆகலான் என ஒரு சொல் வருவிக்க. மலத்தால் என மூன்றனுருபு விரித்துரைக்க.

அரச காரியங்கள் புரிவதில் அமைச்சரும் அரசனும் ஒன்றானாலும் அமைச்சர் அமைச்சரே, அரசன் அரசனே ஆனாற் போல விடய நுகர்ச்சியில் அந்தக் கரணங்களும் ஆன்மாவும் ஒன்றேயானாலும் அந்தக் கரணங்கள் வேறு, ஆன்மா வேறு என்றே கருதுக என்றதாம்.

சாக்கிரம் முதலிய நான்கு அவத்தைகளில் ஆன்மாவுக்கு அந்தக் கரணங்களின் உறவு ஓரளவு இருந்த போதிலும் துரியாதீதம் எனப்படும் ஐந்தாம் அவத்தைக்கண் ஆன்மா அந்தக் கரணங்களின் உறவினை அறவே முறித்துக்கொண்டு தனியே சென்று மூலாதாரத்தில் ஒடுங்கும் என்பதால் அங்கு அந்தக் கரணங்களின் வேறாயும் அது இருந்தது என்பதை உணரலாம் என்பான், ''ஐந்து அவத்தைத்து'' என்றொரு அடையாளமும் காட்டினான்.

மேலைச் சூத்திரம் ஆன்மா உடம்பு முதலிய புறக்கரணங்களின் வேறாம்என்று உணர்த்திற்று, இது அகக்கரணங்களின் வேறாம் என்று உணர்த்தினமையின் இச்சூத்திரம் வேறாயிற்று.

இச்சூத்திரத்துள், அந்தக் கரணம் அற்றின் ஒன்றன்று, அவை சந்தித்தது ஆன்மா என்பது ஒரு அதிகரணம். சகச மலத்து உணராது என்பது ஒரு அதிகரணம். அமைச்சரசு ஏய்ப்ப நின்று ஐந்து அவத்தைத்து என்பது ஒரு அதிகரணம் ஆக மூன்று அதிகரணத்தது இச்சூத்திரம் என்பது.

## முதலாம் அதிகரணம்

*மேற்கோள்:- ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக் கரணங்களாய் உள்ள மனோ புத்தி அகங்கார சித்தங் களில் ஒன்றன்று என்றது, அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.*

மேற்கோளும் ஏதுவுமாய் வந்த இது ஆசிரியன் உரைத்தது.

மனம் புத்தி ஆங்காரம் சித்தம் என்பன அந்தக்காரணங் கள். என்று சொல்லப்படுவன. ஆன்மாவின் விடயநுகர்ச்சிக்கு அவற்றின் உதவி மிகவும் தேவைப்படும். விடய நுகர்ச்சிக்குக் கண் முதலிய பிற பொறிகளும் உதவுவன என்றாலும் அவை ஆன்மாவுக்கு ஒன்று விட்ட உறவு உடையவை. அந்தக் கரணங்கள் மட்டுமே ஆன்மாவுக்கு நெருக்கமான உறவு கொண்டவை. ஏனென்றால் கண் முதலிய பொறிகள் உடம்பி லிருந்து சிதறியவை, மனம் முதலான அந்தக் கரணங்கள் உயிரிலிருந்து சிதறியவை என்பதால்தான். இந்த ஒரு காரணம் பற்றியே ஆன்மா அந்தக்கரணங்களோடு எந்நேர மும் கூடியே நின்றது என ஆசிரியன் கூறினான். இப்படி ஒரு நெருங்கிய உறவு ஆன்மாவுக்கும் அந்தக் கரணங்களுக்கும் இருந்தபோதிலும் ஆன்மா அந்தக்கரணங்களின் வேறானதே என்று ஆசிரியன் இங்கு மேற்கொண்டான். அதற்கு அவன் கூறும் காரணம் மிகவும் நுட்பமானது. அந்தக் கரணங்கள் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய்க் கழிவன. ஆன்மா என்றுமே பிரகாசமாய் நிற்பது என்பதுதான் ஆசிரியன்கூறும் அந்தக்காரணம். பிரகாசமாய் நிற்பது என்பது தோற்றமுற்று நிற்பது. அப்பிரகாசமாய் நிற்பது என்பது தோற்றமின்றிக் கழிவது என்பதாம். ஆகவே தோன்றி நின்று கழியும் அந்தக் கரணங்கள் வேறு, தோற்றமும் இறுதியும் இல்லாத ஆன்மா வேறு ஆகலின் ஆன்மா அந்தக் கரணங்களின் ஒன்று ஆகாது என ஆசிரியன் மேற்கொண்டான். இக்கருத்துப் பின்வரும் உரைப்பாட்டுக்களால் மேலும் வலியுறுத்தப்படும் என அறிக.

**மனமாதி யாலுணர்தல் மன்னு புலன்கள்**
**மனமாதி மன்புலனின் அல்ல மனமேல்**
**உதித்தொன்றை உள்ளம் உணர்தல் அதனின்**
**உதிக்கும் கடல்திரையை ஒத்து**

என்பது உரைப்பாட்டு. இது ஆன்மா அந்தக் கரணங்களில் ஒன்று ஆகாது என வந்த மேற்கோளைச் சம்பிரதாய மரபால் விளக்குகின்றது.

கண்ணழிவு:- மன்னு புலன்கள்-பொறிகள் சுவை முதலியவற்றை மனம் ஆதியால் உணர்தல்-உணர்தலால் மன மாதி மன் புலனின்-பொறியின் அல்ல. அதுபோலக் கடல்-கடலில் உதிக்கும் திரையை ஒத்து மனம் தன்மேல் உதித்த ஒன்றை உள்ளம்-உள்ளத்தால் உணர்தலால் அது அதனின் அல்ல எ. து.

பொழிப்புரை:- புலன் உணர்வுகளையுடைய பொறிகள் தம்மிடம் வந்து பொருந்தும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் ஆகிய விடயங்களை மனம் முதலிய அந்தக் கரணங்களின் உதவியால் உணர்தலால் அந்தக் கரணங்கள் பொறிகளின் வேறாயின. அதுபோலக் கடலில் உதிக்கும் அலைகளைப் போன்று மனம் தன்னிடம் வந்து உதிக்கும் எண்ணங்களாகிய விடயங்களை ஆன்மாவின் உதவியால் உணர்தலால் ஆன்மா அம்மனத்தின் வேறானதே எ. று.

இது எடுத்துக்காட்டுவமை அணி.

கடலில் நீரலைகள் ஒன்றுபின் ஒன்றாக வந்து கரையில் மோதித் தெறிப்பன போல உலகில் விடய அலைகள் ஒன்று பின் ஒன்றாக வந்து பொறிகளிலும் மனத்திலும் பட்டுத் தெறிப்பனவாம். பொறிகள் தம்மீது பட்டுத் தெறிக்கும் விடயங்களை மனத்தின் உதவியால் உணர்கின்றன. மனம் தன்மீது பட்டுத்தெறிக்கும் எண்ணங்களை ஆன்மாவின் உதவியால் அறிகின்றது. இவ்வாறு நோக்கும்போது பொறிகள் வேறு, மனம் வேறு என்று அறிந்தாற்போல மனம் வேறு, ஆன்மா வேறு என்று அறியலாமன்றே. அறியவே ஆன்மா மனம் முதலிய அந்தக் கரணங்களின் வேறானதே எனவந்த மேற்கோள் இங்கு வளியுறுத்தப்பட்டதாம் என அறிக.

இனி மனம் என்பது ஒன்றே ஆயினும் தொழில் வேறு பாட்டால் அது நான்காகப்பகுத்துச்சொல்லப்படும். ஆதலால் மனமாதி என்றது மனம் புத்தி ஆங்காரம் சித்தம் ஆகிய நான் கையும் என்று உணர்க. அரசன் நிலையில் உள்ள ஆன்மா அமைச்சர் நிலையில் உள்ள அந்தக் கரணங்களைத் தொழிற் படுத்தும். அமைச்சர் நிலையில் உள்ள அந்தக் கரணங்கள் தங்கீழ் ஆளுகைக்குட்பட்ட பொறிகளைத் தொழிற்படுத்தும். ஆதலால் ஆன்மாவே அவ்வனைத்தினும் தலையாயது என்ன லாம். ''ஐம்பொறியை ஆண்டங்கு அரசாய் உளம் நிற்கும்''. எனவும், ''அமைச்சு அரசு ஏய்ப்ப''. ஆன்மா அந்தக்கரணங் களோடு ஒன்றாய் நிற்கும் எனவும் ஆசிரியன் கூறியுள்ளதை இங்கு நினைவில் இருத்துக என்பதாம்.

இனி, ஆன்மாவின் ஆளுகைக்கு மெய் வாய் முதலிய ஐம் பொறிகள் மட்டும் போதாவோ, மனம் முதலிய அந்தக் கரணங்களும் தேவைதானோ என்றதோர் வினா எழலாம். தேவைதான் என்பதே அதற்கு விடையாம்.

இங்கு விடயங்கள் என்பன கண்ணாற்கண்டறிவதும் காதாற் கேட்டறிவதும் மூக்கால் மோந்தறிவதும் வாயால் சுவைத்தறிவதும் மெய்யால் தொட்டறிவதுமாகிய அவை மட்டுமே அல்ல. கண்ணுக்கும் காதுக்கும் எட்டாத தொலை வில் நிகழும் விடயங்களும் உள்ளன. தொன்மைக் காலத்தில் தூர தேசங்களில் நிகழ்ந்து முடிந்த விடயங்களும் உள்ளன. எதிர்காலத்தில் இங்கும் அங்கும் எங்கும் நிகழவுள்ள பற்பல விடயங்களும் உள்ளன. அவற்றை எல்லாம் அறிந்து புசிக்க ஆன்மாவுக்கு மெய்வாய் முதலிய புறக்கருவிகள் மட்டும்போத வில்லை. அவற்றினும் மிக நுண்ணியவான மனம் முதலிய உட்கரணங்களும் ஆன்மாவுக்கு இன்றியமையாது தேவைப் பட்டன. தொலைவில் நிகழும் அல்லது நிகழ்ந்து முடிந்த விடயங்களையும், தொன்மைக்காலத்தில் நிகழ்ந்து முடிந்த விடயங்களையும்,எதிர்காலத்தில் இனிநிகழவுள்ளவிடயங்களை யும் எண்ண அலைகளாக மாற்றி உணரும்திறன்பொறிகட்கு இல்லை, மனத்திற்கு மட்டுந்தான் உண்டு. கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் இந்திரிய விடயங்களின் தொகையைவிட மனத்தால் எண்ணி அறியும் விடயங்கள் மிகப்பலவாம். மேலும் வேதாகமங்கள் முதலிய கலைகளை

எல்லாம் கற்றுணரும் விடயங்கள் மனத்ாலன்றிப் பொறிகளால் உணரக்கூடியனவல்ல. ஆகையால் உலகைப்பற்றிய செய்தி அனைத்தையும் அறிந்து உலகை முற்றுமாய்ப் புசித்தற்கு ஆன்மாவுக்கு ஐம்பொறிகளின் உதவி மட்டும் போதவில்லை, மனம் முதலிய அந்தக் கரணங்களின் உதவியும் இன்றியமையாது தேவைப்பட்டது என்றே நாம் உணர வேண்டும்.

பொறிகள் மனத்தால் உணரும் என்றதால் உணரும் பொறிகளும் உணர்தற்குக் காரணமாயிருந்த மனமும் ஒன்றாகாவாய் வேறாயின. அவ்வாறே மனமும் உள்ளத்தால் உணரும் என்றதால் உணரும் மனமும் உணர்தற்குக் காரணமாயிருந்த உள்ளமும் ஒன்றாகாவாய் வேறாயின என்றதாம். உள்ளம்-ஆன்மா.

மன்னு புலன்கள் என்பது புலன் உணர்வுகளையுடைய பொறிகட்கு ஆகிவந்தது, ஆகுபெயர். மன் புலன் என்பது மது. இங்கு மன்னுதல் என்றது இடையில் தோன்றினவல்லவாய் உடம்பு தோன்றுங்கால் உடன் தோன்றி அஃதழியுங்கால் உடன் அழிவது என்ற பொருளைத் தந்தது.

உள்ளம் உணர்தல் என்றது உள்ளத்தால் உணர்தல் என்றதாம். உள்ளம்-புருடன். அது ஆகுபெயராய் ஆன்மாவிற்கு ஆகிவந்தது. இச்சொல்லை இப்பொருளில் ஆசிரியன் நூலில் பலவிடத்தும் வழங்கியிருத்தலைக்கூர்ந்து நோக்கித் தெளிக.

உதித்த ஒன்றை என்புழிப் பெயரெச்சத்திறுதி அகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கு உதித்தொன்றை என நின்றது. ஒன்று-விடயம். அது இங்கு எண் குறியாது பால் பகாஅஃறிணைப் பெயராய் நின்றது.

உவமைக்கண் வந்த அல்ல என்னும் பயனிலையைப் பொருட்கண்ணும் கூட்டி அதனின் அல்ல என்று உரைக்க. அன்மை இங்கு வேறு என்னும் பொருள் குறித்து நின்றது. உள்ளம் அந்த மனத்தின் வேறாம் என்பது பொருள்.

மனத்தின் வேறாம் என்றதால் புத்தி ஆங்காரம் சித்தம் ஆகிய அவற்றினும் வேறாம் என்பது பெறுதும், பெறவே ஆன்மா அந்தக்கரணங்களின் வேறாம் என்ற மேற்கோள் சாதிக்கப்பட்டவாறறிக.

அந்தக்கரணங்களோடு ஆன்மா இயைந்து நிற்கும் இவ் வியைபு, அது உடம்போடும் பொறிகளோடும் இயைந்து நிற்கும் இயைபு போலாது வேறுபடுதலின், மேலும் இதனைப் பல்வேறு உத்திகளைக்கொண்டும் ஆசிரியன் உணர்த்துவான் என அறிக.

**சிந்தித்தாய்ச் சித்தம் தெளியாதாய் ஆங்காரம்**
**புந்தியாய் ஆய்ந்து மனமாகிப் பந்தித்து**
**வெவ்வேறு தானே துணிந்துள்ளம் இவ்வேறாம்**
**அவ்வேறாம் போதுபோல் ஆங்கு**

என்பது உரைப்பாட்டு. இது ஆன்மா ஒன்று தானே மனமாயும் புத்தியாயும் ஆங்காரமாயும் சித்தமாயும் துண்டம் பட்டு நின்று விடயங்களைப்பாகுபடுத்தி அறிவதால் காலம் போல அது அவற்றின் வேறானதே என்று உணர்த்துகின்றது.

கண்ணழிவு:- உள்ளம் ஒன்றுதானே மனமாகிப் பந்தித்தும் புந்தியாய் ஆய்ந்தும் ஆங்காரமாய்த் தெளியாதும் சித்தமாய்ச் சிந்தித்தும் இவ்வாறு வெவ்வேறு-வேறுவேறாய் துணிந்து-துண்டம்பட்டு நிற்றலால் ஆங்கு அக்காலக் கூறுகளின் வேறாகும்போது போல் ஈங்கு இவ்வான்மக்கூறுகளின் வேறாம் என்பது.

பொழிப்புரை:- உள்ளுகின்ற உணர்வுடைய ஆன்மா ஒன்று தானே விடயங்களை மனமாய் நின்று பற்றியும், புந்தியாய் நின்று ஆராய்ந்தும், ஆங்காரமாய் எழுந்து தெளியாதும், சித்தமாய் நின்று சிந்தித்துத்தெளிந்தும்இவ்வாறு வேறு வேறாகத் துணிந்து-துண்டம்பட்டு நிற்றலான் அது, காலை மாலை பகல் இரவு நாள் வாரம் பக்கம் திங்கள் இருதுஆண்டு என்று ஆண்டுக்கூறுபடுக்கப்படும் காலக்கூறுகளாகிய அவற்றின் வேறாய்க் கருதப்படும் காலதத்துவம் போல மனம்புத்தி ஆங்காரம் சித்தம் என ஈண்டுக்கூறுபடுக்க்ப்பட்ட ஆன்மக்கூறுகளாகிய இவற்றின் வேறாகவே கருதப்படும் எ. று.

மனம் புத்தி ஆங்காரம் சித்தம் என்பன ஓர் காரணம் குறித்து ஈண்டு முறைபிறழக் கூறப்பட்டன. அது அடுத்து வரும் உரைப்பாட்டால் விளங்குவதாம்.

சித்தமாய்ச் சிந்தித்து எனவும், ஆங்காரமாய்த் தெளியாது எனவும் மாறிக்கூட்டுக. ஆங்காரமாய்த் தெளியாது என்றதால் அதற்கும் மேலான சித்தத்தால் தெளிதல் பெற்றாம். வெவ்வேறு துணிதல் என்பது வேறு வேறாகத் துண்டம்படுதல் என்பதாம். துணிதல்-துண்டிக்கப்படுதல். எனவே மனம் முதலிய அந்தக் கரணங்கள் நான்கும் ஆன்மாவின் சிதறல்களாம் என்பது இதனாற்பெற்றாம். துணிதல்-துணிதலான் எனவிரிக்க.

அவ் இவ் என்பன வகரவீற்று அஃறிணைப் பன்மைச் சுட்டும் பெயர்கள், ஐந்தனுருபும் சாரியையும் தொக்கு வந்தன. அவற்றின் இவற்றின் என விரிக்க. ''வகரக்கிளவி நான்மொழியீற்றது''.என்பது தொல்காப்பிய விதி. அவ் இவ் உவ் தெவ் என்பனவே அந்நான் மொழிகள்.

அவ் என்பது காலை மாலை முதலிய காலக்கூறுகளைச் சுட்டியதாகக் கருதுக, போதுக்கு வேறாய் நிற்பன அவையாகலின். போது பொழுது காலம் என்பனவெல்லாம் ஒரு பொருட்கிளவிகள்.

இவ் என்பது மனம் முதலான ஆன்மக் கூறுகளைச் சுட்டியது.

ஆங்கு என்பது அவ்விடத்து என்னும் பொருளதாம். அதாவது ஞாயிற்றின் இயக்கத்தால் காலம் என்னும் முதற்பொருள் ஒன்று தானே காலை மாலை என்றிவ்வாறு பல சிறு கூறுகளாகப் பகுத்து உணரப்படுகின்ற அவ்விடத்து என்றவாறாம்.

உவமைக்கண் வந்த ஆங்கு என்னும் சொல்லுக் கேற்பப் பொருட்கண்ணும் ஈங்கு என ஒரு சொல் வருவித்து உரைக்கப்பட்டது.

ஆன்மா என்னும் முதற்பொருள் ஒன்று தானே புருட தத்துவமாய் நின்று விடயங்களைப் பற்றுதல் நிமித்தம் மன

மாகியும், அவற்றை ஆய்தல் நிமித்தம் புத்தியாகியும்; தெளியாமல் பலகால் எழுதல் நிமித்தம் ஆங்காரமாகியும், தெளிவு பிறக்கும் வகை சிந்தித்தல் நிமித்தம் சித்தமாகியும் இவ்வாறு வெவ்வேறு உருக்கொண்டு நிற்றலான் ஆன்மாவே அந்தக்கரணங்களாம் என்றல் ஒருபுடை ஒக்குமாயினும் ஆன்மாவின் கூறுகள் அல்லது சிதறல்கள் எனப்பட்ட அந்தக்கரணங்கள் நான்கும் காலத்தின் சிதறல்களைப் போலத் தோற்றமுற்றுத் தோன்றிய காரணத்தால் ஆன்மாப்போல நித்தப் பொருளாகாது அநித்தப் பொருளே ஆயின. என்னை, தோற்றமுற்றுத் தோன்றிய பொருள்கள் அனைத்தும் ஒரு காலத்து நசிக்கும் என்பது சித்தாந்தம் ஆகலான் என்க. எனவே நித்தப் பொருளாகிய ஆன்மா அநித்தப் பொருள்களாகிய அந்தக்கரணங்களின் வேறான ஒன்று என்பது தெளிவாம். இதனை வலியுறுத்தவே காலம் என்ற முதற்பொருளை ஆன்மாவுக்கு உவமை கூறினான் ஆசிரியன் எனவுணர்க. காலம் என்பது அகண்டமாய் நித்தமாய்த் தோற்றக் கேடுகளற்ற வோரதிசயப் பொருளாம். அதனைத் தனித்தறியவியலாது என்பதே. ஞாயிறு முதலியவற்றின் இயக்கத்தால் காலம்என்னும் முதற்பொருளினின்று காலை என்றும், மாலை என்றும், பகல் என்றும், இரவு என்றும், திங்கள் என்றும், இருது என்றும், ஆண்டு என்றும் இவ்வாறு காலக்கூறுகள் தோன்றுவவாயின. இந்தக்காலக் கூறுகளை ஊன்றி நோக்கின் அவற்றுக்குத் தோற்றமும் இறுதியும் உண்டு என்பது புலனாம். ஆதலின் அவை எல்லாம் ஒரு பொழுது பிரகாசமாய் நின்று மறுபொழுது அப்பிரகாசமாய்க்கழியும் அநித்தப் பொருள்களாயின., அதாவது தோன்றி நின்று அழியும் அசத்துப்பொருள்களாயின. காலம் என்னும் முதற்பொருள் ஒன்று என்றுதோன்றியது; என்றுமுடிவது என்றுயாராலும்கணித்துச் சொல்லற்கரிதாகலின் அது ஒன்றே தோற்றக்கேடுகளின்றி என்றும் நின்று பிரகாசிக்கின்ற நித்தப்பொருளாம் என்பது தேற்றம். எனவே காலத்தின் சிதறல்களாயுள்ள காலக்கூறுகளினின்று காலம் வேறாயினாற்போல ஆன்மாவின் சிதறல்களாயுள்ள ஆன்மக்கூறுகளாகிய அந்தக்கரணங்களின்று ஆன்மா வேறாயிற்று என்பதே ஆசிரியன் மெய்கண்டான் துணிபாம் எனக்கருதுக. காலை மாலை முதலிய காலக்கூறுகளில் முதற்பொருளாகிய காலம் பிரிப்பின்றி இயைந்து

நின்றாற்போலவே மனம் புத்தி முதலாகிய ஆன்மக்கூறு களிலும் ஆன்மாப்பிரிப்பின்றி இயைந்து நிற்பதாம் என்பதை ''அவை சந்தித்தது ஆன்மா''. என்னும் சூத்திரத்தொடரால் அழகாக விவரித்துள்ளதையும் கூர்ந்து நோக்கித்தெளிக. இந்தச்சந்திப்பு ஆன்மாவுக்கு உடம்போடியைந்த சந்திப்புப் போலாது எந்த நேரத்திலும் பிரிவின்றி இயைந்த சந்திப்பாம் என்பதையும் நுணுகி உணர்க என்பதாம்.

அந்தக் கரணங்களோடு ஆன்மாவுக்கு உள்ள இந்த அழகிய உறவை மேலும் விளக்கவே ஆசிரியன் பின்வரும் பாக்களையும் கூறுவானாயிற்று.

**அகார உகாரம் அகங்காரம் புத்தி**
**மகாரம் மனம்சித்தம் விந்துப் பகாதிவற்றை**
**நாதம் உளவடிவாம் நாடின் பிரணவமாம்**
**போதம் கடல்திரையே போன்று.**

என்பது உரைப்பாட்டு. இது மேலதற்கு ஒரு புறனடை கூறு கின்றது. அந்தக்கரணங்களோடு பிரிப்பின்றிக் கூடிநிற்கும் ஆன்மாவின் சொரூபம் இனைத்து என்று உணர்த்தும் முகத் தால் ஆன்மபோதம் கடல்திரைபோன்று உதிக்கும் என்ப தொரு ஒழிபு உணர்த்தலின் இது புறனடை ஆயிற்று.

கண்ணழிவு:- அகாரம் உகாரம் முறையே அகங்காரம் புத்தி ஆம். மகாரம் மனம் ஆம். விந்து சித்தம் ஆம். நாதம் உளவடிவு ஆம். இவற்றைப்பகாது நாடின் பிரணவம் ஆம் ஆகலான் போதம் கடல் திரை போன்று ஆம் எ. து.

பொழிப்புரை:- அகரமாகிய எழுத்தினது ஒலி வடிவம் அகங்காரமாம். உகரமாகிய எழுத்தினது ஒலி வடிவம் புத்தி யாம். மகரமாகிய மெய்யொலி வடிவம் மனமாம். அம்மூன்று ஒலியாலுமான ஓம் என்னும் சொல்லொலி வடிவமே சித்த மாம். அச்சொல்லூடுருவி நின்ற நாதமாத்திரையாகிய இயற்கையொலி வடிவே உள்ளம் எனப்படும் ஆன்மாவாம். அந்தக்கரணங்கள் நான்கனோடும் பிரிவின்றிக் கூடிநிற்கும் ஆன்மாவைப் பகுக்காது நோக்கின் அது ஓம் என்னும் பிரணவத்து நாதவிந்து வடிவாகவே உள்ளதென்

றும், அதனால் ஆன்மபோதம் கடலின்கண் உதித்துக் கரையைச்சார வருகின்ற கடல் அலைகளே போன்று ஒன்று பின் ஒன்றாய் உதித்து வரும் என்றும் ஆம் எ. று.

அகாரம் உகாரம் அகங்காரம் புத்தி என்பது நிரல்நிரை. விந்துவும் நாதமும் பொதுவில் ஒளியும் ஒலியுமேயாம் என்ப வாகலின் அவை இங்கு ஓம் என்னும் சொல்லையும் சொல்லூ டியைந்த ஒலியையும் உணர்த்தினவாகக் கொள்க.

இவற்றைப் பகாது நாடின் பிரணவமாம் எனக்கொண்டு கூட்டுக. பிரணவமாம் என்பதற்கும் பிரணவத்து விந்து நாத வடிவுகளாம் என உரைக்க. உரைக்கவே ஆன்மாவின் சொரூ பம் இனைத்தென்று உணர்த்தினானாயிற்று.

ஆம் என்பதைப் பலவிடத்தும் கூட்டி உரைக்க.

எழுத்தும் சொல்லுமாகிய விந்து வடிவான அந்தக் கரணங்கள் நான்கும் தோற்றக் கேடுகளையுடைய சடப் பொருளாம் எனவும், அவ்வெழுத்தொலியூடும் சொல்செயலி யூடும் உருவி நின்ற நாதமாத்திரை வடிவான ஆன்மா ஒன்றுமே சித்துப்பொருளாம் எனவும் இதனால் ஆசிரியன் உணர்த்தினானாகக் கொள்க. கொள்ளவே நாதமாத்திரை யாசிய ஒலி எழுத்தொலியையும் சொல்லொலியையும்விட்டு நீங்காதாற்போலஆன்மாவும்அந்தக்கரணங்களைவிட்டுநீங்கா தெனவும் அவ்வாறு ஆயினும் எழுத்தும் சொல்லுமாகிய அவற்றின் ஒலி வேறு, அவற்றூடு ஒரு தன்மைத்தாய் விரவி நின்ற நாதமாத்திரையாகிய ஒலி வேறு என்று பிரித்தறிந் தாற்போல அந்தக்கரணங்கள் வேறு, ஆன்மா வேறு என்று பிரித்தறியலாம் எனவும் குறிப்பித்தானாயிற்று. மேலுந் தெளிய விரும்பின் இதனை வல்லார் வாய்க்கேட்டுத்தெளிக என்பதாம்.

இனி அகாரம் அகங்காரம் என்றும், உகாரம் புத்தி என்றும், மகாரம் மனம் என்றும், இம்மூன்று எழுத்தாலும் ஆன ஓம் என்னும் சொல்லே சித்தம் என்றும், அவ்வெழுத் தொலியூடும் சொல்லொலியூடும் ஒரு தன்மைத்தாய் விரவி நின்ற நாதமாத்திரையாகிய இயற்கை ஒலியே ஆன்மா

என்றும் இவ்வாறு கூறிய முறைமையான் ஆன்மாவினின்று முதற்கண் சிதறியதே சித்தம் என்றும், அச்சித்தத்தின்சிதறல் களே மனம் புத்தி ஆங்காரங்கள் என்றும் உணர்கவென்றா னாம் என்பது. அவ்வாறு ஆதலின் அன்றே, ''சிந்தித்தாய்ச் சித்தம்''. என சித்தத்தையே முதற்கண் வைத்து ஆசிரியன் மேலே கூறியதாம் எனவும் உணர்க. அல்லதூஉம், பின்னர் அவத்தைகளைக் கூறுமிடத்து ஆன்மாத்தனித்துசென்று மூலாதாரத்தில் ஒடுங்கற்கு முன்னான ஒரு நிலையில் அது சித்தம் ஒன்றையே பற்றி நிற்கும் எனக்கூறுவதும் இதனை வலியுறுத்தற்காமெனவே உணர்க என்பது.

**எண்ணிலவ் வோங்காரத் தீசர் சதாசிவமாம்**
**நண்ணிய விந்துவொடு நாதத்துக் கண்ணின்**
**பகரயன் மாலோடு பரமனதி தெய்வம்**
**அகரவுக ரம்மகரத் தாம்.**

என்பது உரைப்பாட்டு. இதுவும் மேலதற்கு ஒரு புறனடையே கூறுகின்றது. மேல் ஆன்ம போதம் கடல்திரை போன்று எழும் என்றான், எழுதற்குக் காரணம் ஆண்டுக்கூறாது ஈண்டுக் கூறலின் இது புறனடையாயிற்று.

கண்ணழிவு:- அவ் வோங்காரத்து நண்ணிய விந்து வொடு நாதத்து அதிதெய்வம் எண்ணில் ஈசர்சதாசிவம் ஆம். அகரம் உகரம் மகரத்து அதிதெய்வம் கண்ணில் பகர் அயன் மாலோடு பரமன் ஆம் எ. து.

பொழிப்புரை:- மேலே கூறப்பட்ட பிரணவமாகிய ஓம் என்னும் சொல்லிடத்துப்பொருந்தியவிந்துவையும் நாதத்தை யும் அதிட்டித்து நிற்கும் தெய்வங்கள் யாவர் எனக்கருதின், அவர் சதாசிவரும் ஈசரும் ஆவர். அகரத்தையும் உகரத்தை யும் மகரத்தையும் அதிட்டித்து நிற்கும் தெய்வங்களைக் கருதின், அவர் வேதா கமங்களுட் கூறப்பட்ட அயனும் மாலும் உருத்திரனும் ஆவர் எ. று.

முன்னர் வந்ததனை எதிர்நிரல் நிரையாகவும், பின்னர் வந்ததனை நிரல் நிரையாகவும் வைத்துப்பொருள் உரைக்க. அவ்வாறு உரைக்கவே அகாரம் உகாரம் மகாரம் ஆகிய

மூன்று எழுத்தும், அவ்வெழுத்தாலான ஓம் என்னும் சொல்லும், அவ்வெழுத்தொலியிலும் சொல்லொலியிலும் நாதமாத்திரையாய்க் கலந்து விளங்கும் ஒலியும் ஆகிய இவ்வைந்திற்கும் அதிதெய்வங்கள் முறையே அயன்மால் உருத்திரன் சதாசிவன் சிவன் ஆகிய ஐவரும் ஆவர் என்றவாறாம். அந்தக் கரணங்கள் நான்கனோடும் கூடிய ஆன்மாவின் சொரூபம் இவ்வாறு தெய்வ சம்பந்தம் உடைய காரணத்தாலும், அத் தெய்வங்களின் தூண்டலாலும் ஆன்ம போதம் கடல் திரை போன்று ஒன்றுபின் ஒன்றாய்த் தோன்றும் எனவும்அறிவித்தவாறாம் எனக்கொள்க.

''அவை சந்தித்தது ஆன்மா, என்று சூத்திரம் செய்ததால் அந்தக்கரணங்களையும் ஆன்மாவையும் இணைத்தே ஆன்மாவின் சொரூபத்தை ஆசிரியன் இங்கு இவ்வாறு கூறி முடித்தான் எனவுணர்க. தெய்வங்களால் அதிட்டிக்கப்பெற்று ஓம் எனும் பிரணவ வடிவாய் ஆன்மா விளங்கும் இயல்பினை மேலும் அறியவிரும்பின் ஞானாசிரியன் பாற்கேட்டுத்தெளிக என்பதாம்.

புறக்கருவிகளாகிய ஐம்பொறிகளால் ஆன்மா நிகழ் காலத்தில் அண்மையில் நிகழும் விடயங்களை மட்டுமேஅறிய முடிந்தது. இறந்த கால எதிர்கால விடயங்களையும், கால தேச வர்த்தமானங்கள் கடந்த விடயங்களையும் ஆன்மா உணர்ந்து கொள்ளற்கு அப்புறக் கருவிகள் மட்டும் போதவில்லை ஆகலின் அவற்றினும் மிக நுண்ணியவான மனம் முதலிய அகக்கருவிகளும் தேவைப்பட்டன. அவை உடம்பின் கூறுகளாய் அமைந்தன அல்ல என்பதும் உயிரின் கூறுகளாய் அமைந்தனவென்பதும் முன்னரே தெளிவாக விளக்கப்பட்டன. உயிர் மேன்மேலும் விளக்கம் பெறவும், தன்னைச்சகச மலத்தினின்று விடுவித்துக்கொள்ளவும் முடிவில் தன்னையும் தன் தலைவனையும் ஒருவாறு உணர்ந்து அவன்பால் நெருங்கவும் உபகாரமாய் நிற்பன இவ்வகக் கருவிகளேயாம் எனலாம்.

ஒற்றின்றிவரின் சீரும் தளையும் சிதையும் ஆகலின் ''அகரவுக ரம்மகரத்தாம்'' என்றான். ஆண்டு மகரவொற்று ஒற்றில் வழி ஒற்றாய் வந்தது.

இவை நான்கு பாட்டானும் ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்றாகாது என வந்த மேற்கோளைச் சம்பிரதாய மரபாலும் உவமை முகத்தாலும் வலியுறுத்தி, அது அவற்றோடு பிரிவின்றிக்கூடி நிற்கும் என்பதைத்தெளிவுறுத்தும்முகத்தால் அது தெய்வங்களால் அதிட்டிக்கப்பெற்ற ஓங்காரப் பிரணவப் பொருளாய் விளங்குவதாம் எனவும் கூறி, அதனால் ஆன்மாவின்கண் ஆன்மபோதம் கடல் திரைபோல் தொடர்ந்து எழுவதாம் எனவும் கூறி முடித்தான் ஆசிரியன் எனவுணர்க.

## இரண்டாம் அதிகரணம்

*இனி இவ்வான்மாச் சகச மலத்தினால் உணர்வின்று ஏன்றது, அதுதான் திரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்.*

ஏதுவுடன் கூடியமேற்கோள் இதுஆசிரியன் உரைத்தது.

சகசமலம் என்பது ஆணவமலம், அதனை இருள்மலம் என்றும், மூலமலம் என்றும்கூறுவதுண்டு. திரோதகம் என்பது மறைப்பது என்றபொருளைத்தருவது, வடசொல். மறைத்துக் கொடு நிற்பது என மீளவும் கூறியது மறைப்பின் மிகுதி குறித்தற்கு என்க.

இருள் மலமானது செம்பிற் களிம்பு போல அநாதியே ஆன்மாவோடு உடன்தோன்றி அதன் அறிவு விளங்க வொட்டாமல் தடைசெய்து ஆன்மாவை முழுவதுமாய் மறைத்து நிற்பதால் ஆன்மா எதனையும் தானே அறியும் திறன் உடையதன்றாய் இருந்தது என மேற்கொள்ளப்பட்டது.

தானே அறியும் திறன் உடையதன்றாம் எனவே அந்தக் கரணங்களோடு கூடி அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அவற்றின் உதவியால் அறியும் என்பது. இவ்வாறு உரையாக்கால் சூத்திரத்துள் அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று என்றது நின்றுவற்றுவதாம் என அறிக.

**மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணாதேல்**
**ஆயாதாம் ஒன்றை அதுவதுவாய் வீயாத**
**வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றாம் காட்டம் பால்**
**தன்னனமலம் அன்றணைதல் தான்.**

என்பது உரைப்பாட்டு. இது சகச மலத்தினால் ஆன்மா உணர்வின்று எனவந்த மேற்கோளை உவமை முகத்தால் விளக்குகின்றது.

கண்ணழிவு:- உள்ளம் மாயா தனுவினை விளக்காகக் கொண்டு காணவிருந்தது மற்றுக்காணாதேல் ஒன்றையும் அது ஆயாதாம் என்பதே. வீயாத வன்னிதனைத் தன்னுள் மறைத்து அதுவதுவாய் ஒன்றாம் காட்டம்போல் மலம் ஆன்மாத்தன்னை அன்றே அணைதல் என்பதுதான்அதற்குக் காரணமாம் எ. து.

பொழிப்புரை:— மாயாமலத்தின் காரியமாகிய உடம்பினை விளக்காகக்கொண்டு விடயங்களை அறியவிருந்த ஆன்மா அவ்வாறு அறியாதாயின், அது தானாக ஒன்றையும் அறியாது என்பதுதான். அங்ஙனம் அது அறியாமைக்குக் காரணம் யாதோ என்னில் அழியாத நெருப்பினைத் தனக்குள்ளாக வைத்து அது தானாய்த்தோன்றும்படி மறைத்துத் தான் ஒன்றேயாகத் தோற்றமளிக்கும் காட்டு மரத்தைப் போல ஆணவமலம் ஆன்மாவினைத் தொன்மைக் காலந் தொட்டே முழுவதுமாய் மறைத்து நின்றது காரணமாம் எ. று.

மலமறைப்பால் ஆன்மாத் தானாக ஒன்றையும்அறியாது என்றதால், மாயாமலத்தின் காரியமாகிய உடம்பும் மனம் முதலிய அந்தக்கரணங்களுமாகிய அவற்றின் உதவிகொண்டு ஓராற்றான் அறியும் என்பது உணர்த்தினானாயிற்று. அது சூத்திரத்துள் வந்த "அமைச்சர சேய்ப்ப நின்று". என்பதனாலும் பெறுதும் என்பது.

இன்னும் இதனானே, ஆன்மா விடயங்களை அறியும் வண்ணம் அதற்குக்காட்டாய் நின்று உபகாரப்படுவது மாயா மலத்தின் செய்கையாம் எனவும், அஃதவ்வாறு அறியாவண்ணம் தடுப்பது இருள்மலத்தின் செய்கையாம் எனவும், இம் முரண்பாட்டைத் தவிர்த்து இருள்வழி நடப்பார்க்கு ஊன்று கோல்போல் உதவுவது அந்தக் கரணங்களின் செய்கையாம் எனவும் அறிக.

மலம் இருளும் மாயை விளக்குமாதல் பற்றியே "முரண் தரவந்த முழுமலம் மாயை". என்றார் ஞானாமிர்த நூலுடை யாரும் என அறிக.

மற்று வினைமாற்றின்கண் வந்தது, காணவிருந்தது மற்றுக்காணாதேல் என வினையை மாற்றலின்.

இனி இந்த இருள்மலத்தின் தன்மையாதென ஆராய் வோம். அது செம்பிற்களிம்புபோல உயிரின்கண் அநாதியே உடன் தோன்றிய ஒரு குற்றமாம் எனப்பரம்பரையாகக்கூறப் பட்டுவருதலின், அது ஒரு உயிர்க்குணமேயன்றித் தனியொரு பொருள் ஆகாது என்பது தேற்றமாம். செம்பு திரவியமே யன்றிக் களிம்பு திரவியமாகாது. அது செம்பினிடத்து இயற்கையாக அமைந்துகிடந்த ஒரு குணமேயாம். அதனால் தான் செம்பிலிருந்து அதனைத் தனியாகப் பிரித்தெடுக்க முடிவதில்லை. அதைப்போன்றதே மலவிருளும். சைதன்னிய மாயுள்ள ஆன்மாவின் அறிவொளியை மறைத்துநிற்கும் இருட்குணமே அது. உலகிருள் ஒளியால் துரத்தப்படுவது. மலவிருளோ ஆன்மவொளியைத் துரத்துவது, அதாவதுமங்கச் செய்வது. உயிரின் குற்றம் எனப்படுவதால் அதனைத்திரவி யம் என்றல் சாலாது. ஒன்று எனலுமாகாது. எங்கெல்லாம் உயிர் உண்டோ அங்கெல்லாம் அந்த உயிர்க்குற்றமும் உண்டு. உயிர்களின் பன்மை கருதி உயிர்க்குற்றங்களையும் பன்மை கோடல் ஒருவாற்றால் பொருந்துவதாம். இதனை ஏகம் என்றும் எண்ணிறந்த சத்திகளை உடையது என்றும் கூறுவது பொருந்தாது. பொருளெனக் கொள்ளினன்றோ பொருட்கு ஒரு குணமோ தொழிலோ கூறல்பொருந்துவது, குணம் எனக்கொண்டபின் குணத்திற்குக்குணமும் தொழிலும் கூறல் எங்ஙனம் பொருந்துவதாம்? இன்னும் இது குறித்து முரண்படவரும் செய்திகளை எல்லாம் ஆய்ந்துதெளிக. அல் லதூஉம், இதனையும் ஒரு பொருளெனக்கொள்ளின் பதி பசு பாசம் எனப்பொருள் மூன்றெனவே வரையறுத்துக்கொண்ட வரையறையும் பொய்த்துப்போகலாமன்றே. ஒன்றேயாகிய பரம்பொருளைப் பதி எனவும், பலவேயாகிய ஆன்மாக்களைப் பசுவெனவும், கலையாதி மண்ணந்தம்வரை கண்ட மாயா காரியமாகிய தத்துவங்கள் முப்பத்தொன்றனையும் பாசம்

என்வும் கோடலே முப்பொருள் வரையறையாம். ஒழிந்தமல கன்மங்களை உயிர்களின் பண்பும் தொழிலுமாகக் கோடலே ஸைவ சித்தாந்த மரபாயிருந்தது. ஆணவமலத்தினை ஒரு பொருளெனக்கொண்டால் அதனை அந்த மும்பொருளில் எதன்பால் அடக்குவது? பதியில் அடங்குமா, பசுவில் அடங் குமா, பாசத்தில் அடங்குமா? இக்கேள்விக்கு விடை காண்பரிது. ஆதலின் இருள் மலத்தினை உயிரின் குணமாக் கொண்டொழிதலே வலியுடைத்தாம் என்று கருதுக.

போத காரியம் மறைத்து நின்றது புகல்மலங்காண்
ஓதலாம் குணமுமாக உயிரினுள் விரவலாலே''

எனவரும் சித்தியார் பாடலையும் ஈண்டு நினைவு கூர்க. ஆசிரியன் மெய்கண்டான் இச்சகச மலத்தைப்பற்றிக் கூறும் பொழுது இவ்வான்மாச் சகச மலத்தினால் உணர்வின்று எனவும், அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக்கொடு நிற்பது என்றும் அளவோடு கூறிய திறத்தினையும் ஆய்ந்து போற்றுக.

இனி ''வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்றாம் காட்டம்போல்'' என்றது, காட்டம்போல்வது மலவிருள்என் றும், காட்டத்துள் மறைப்புண்டிருந்த வன்னிபோல்வது ஆன்மாஎன்றும்,அதனால்ஆன்மாச் சைதன்னியப்பொருளாம் என்றும் உணர்தற்காம் என அறிக. இங்குக்காட்டத்தால் மறைப்புண்டிருந்த வன்னி மலத்தால் மறைப்புண்டிருந்த ஆன்மாவிற்கு உவமையாக வந்தது.

தனு-உடம்பு. தனுவினை என இரண்டனுருபு கொடுத்து விரிக்க. ஆய்தல் இங்கு 'அறிதல்' என்னும் பொருட்டு. ஒன்றையும் என உம்மை விரிக்க. அதுவதுவாய் மறைத்து எனக்கூட்டுக. கூட்டி, அது தானாம்படி மறைத்து என உரைக்க. அதாவது வன்னி காட்டமாய்த் தோன்றும்படி மறைத்தல் என்பதாம். 'தன்னைமலம் என்புழி ஐகாரம் குறுக்கமாதலின் கூவிளங்காய்ச் சீராகித் தளைதட்டின்றாம் எனக் கருதுக.

இனி ஆன்மாச் சைதன்னியமே ஆயினும் சகச மலத்தால் முழுவதுமாய் மறைப்புண்டு மலத்தின் சொரூபமே தனக்குச் சொரூபமாக்கொண்டு நிற்றலால் அது ஐந்து அவத்தை கட்கும் உள்ளாவதாம் என்பதை அடுத்து வரும் அதிகரணத் தால் ஆசிரியன் விளக்குவான் என்பதறிக.

## மூன்றாம் அதிகரணம்

*மேற்கோள் :- இனி இவ்வான்மாச் சாக்கிரம் சொப் பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்தி தனாய் நிற்கும் என்றது, அதுதான் மல சொரூபத்தில் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலின்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோள் இது ஆசிரியன் உரைத்தது

ஆன்மாச் சைதன்னிய சொரூபி என்பது மேலே முடிக்கப் பட்டது. அதாவது அறிவு உருவாய்த் திகழ்வது ஆன்மா என்பது மேலே கூறப்பட்டது என்பதாம். அங்ஙனமாயினும் ஞானதிரோதகமாயுள்ள மூல மலத்தால் அது முழுவதுமாய் மறைக்கப்பட்டுச் சைதன்னியம் குன்றி அசைதன்னியம் எனப்படும் அறியாமை இருள் வடிவே தனக்கு வடிவாக் கொண்டு நிற்றலால் அது நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படக்கம் என்னும் ஐந்து அவத்தைகட்கும் உள்ளாகி நாள்தோறும் துன்புறாநின்றது என ஆசிரியன் இங்கு மேற் கொண்டான் என்பது.

அரூப சொரூபியாய் நிற்றல்-தன் சொரூபம் இழந்து நிற்றல், அதாவது மலவிருளால் முழுவதுமாய் மறைக்கப் பட்டு அறிவொளி குன்றி அறியாமை இருள் மேலோங்க நிற்றல் என்பதாம். ஒளிக்கும் இருளுக்கும் ஒஃறே இடம் என்பவாகலின் அவற்றுள் ஒன்று ஒளிக்க ஒன்று நிற்கும் என் பது கொண்டு இவ்வாறு உரைக்கப்பட்டது.

சொரூபி-தன் வடிவு உடையது. அரூப சொரூபி - தன் வடிவு இல்லாதது-பிறிதொன்றன் வடிவு தனக்கு வடிவாகக் கொண்டு நிற்பது. நெருப்புத் தன் வடிவம் மறைத்துக்காட்ட மாய்த் தோன்றுவது போல்வது என்பதாம்.

ஒன் றணையா மூலத் துயிரணையும் நாபியினில்
சென் றணையும் சித்தம் இதயத்து மன் றவே
யையைந்தாம் நன்னுதலில் கண்டத்து வாக்க
மெய்யாதி விட்டகன் று வேறு.

என்பது உரைப்பாட்டு. இது ஆன்மாப் பஞ்சாவத்திதனாய் நிற்கும் எனவந்த மேற்கோளைச் சம்பிரதாயமரபால் விளக்கு கின்றது.

கண்ணழிவு:- ஆன்மா மூலத்து ஒன்றையும்அணையாது. நாபியினில் உயிர்ப்புஒன்றனைமட்டும் அணையும். இதயத்துச் சென்று சித்தத்தை அணையும். நன்னுதலில் மன்ற ஏய் வாக்காதி மெய்யாதி ஐயைந்து ஆம். அவற்றை அங்கு விட்டு அகன்று கண்டத்தில் வேறு வாக்காதி மெய்யாதி ஐயைந்து ஆம் எ. து.

பொழிப்புரை:- உயிர்ப்படங்கல் என்னும் ஐந்தாம் அவத்தையுள், ஆன்மா நாபிக்குங் கீழான மூலாதாரத்தில் அகப்புறக்கருவிகளுள் யாதொன்றனையும் சாரார்து தனித் திருந்தே அவத்தையுறும். பேருறக்கம் என்னும் நான்காம் அவத்தையுள், அது நாபியிற்சென்று உயிர்ப்பு ஒன்றனை மட்டும் சார்ந்து அவத்தையுறும். உறக்கம் எனப்படும் மூன்றாம் அவத்தையுள், அது இதயத்தில் சென்று உயிர்ப் போடு சூக்குமமாகிய சித்தம் ஒன்றையும் கூடி நின்று அவத்தையுறும். நனவு என்னும் முதலாம் அவத்தையுள், அது நன்னுதற் கண்ணே அங்கு நிச்சயமாய் உண்டெனப் பொருந் திய வாக்காதி மெய்யாதி தத்துவங்கள் இருபத்தைந்தனை யும் உயிர்ப்போடு சார்ந்து நின்று அவத்தையுறும். கனவு என்னும் இரண்டாம் அவத்தையுள், அது சூக்குமவுடம்போடு நின்றே செயல்படும்என்பதால்தூலமாகியஅவ்விருபத்தைந்து தத்துவங்களையும் நன்னுதற்கண்ணே விட்டுக் கீழிறங்கிக் கண்டத்தானத்தில் உயிர்ப்போடு சூக்குமாய் உள்ள வேறு வாக்காதி மெய்யாதி இருபத்தைந்து தத்துவங்களையும் சார்ந்து நின்று அவத்தையுறும் எ. று.

ஆன்மா என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது.

ஒன்று என்புழி இரண்டனுருபும் முற்றும்மையும் தொக்கன. அணையாது எனற்பால்து அணையா என ஈறு கெட்டது. நாபியில் உயிர்ப்பு மட்டுமே சாரும் என்றதால்அதற்குங் கீழான மூலாதாரத்தில் அவ்வுயிர்ப்புமின்றித் தனித்திருந்தே அவத்தையுறும் என்பதாயிற்று. இன்னும் இதனாளே, நாபிக்குமேல் உள்ள தானங்களில் உயிர்ப்பு ஒன்றையும் கூட்டி உரைக்க வேண்டுவதாயிற்று. உயிர்-உயிர்ப்பு உயிர்ப்பு என்றதால் வாயுக்கள் பத்தினையும் வேண்டுமேற் கூட்டி உரைர்த்துக்கொள்க. அவை இல்லையென்றாலும் உரை நசித்துவிடாது. வாயுக்கள் பத்தாவன பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் நாகன் கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்பன.

சித்தம் என்றது இங்குச் சூக்குமமாகிய சித்தத்தினை என்றறிக. என்னை, இதயத்திற்கும் மேலானகண்டத்தானத்தில் கனவு அவத்தைக்கண் சூக்குமங்களையே கொண்டதால் கண்டத்திற்குக் கீழான இதயத்தில் தூலத்திற்கு இடனின்றாம் என அறிக. இதயத்தில் நிகழும் உறக்க அவத்தைக் கண்ணும் ஒரோவழி மங்கிய நிலையில் கனவு காண்டல் கூடுமாகலின் ஆண்டு அந்தக் கரணங்களுள் மூன்றனை ஒழித்து ஆன்மாவுக்கு மிகவும் அணுக்கமாயுள்ள சித்தம் ஒன்றையே கூறினான், மனம் புத்தி ஆங்காரம் என்னும் மூன்றும் சித்தத்தின் சிதறல்களாம் ஆதலானும், அவையின்றியும் சித்தம் ஒன்றே நின்று முற்றுவிக்கும் ஆதலானும் என்க.

இனி மூலாதாரத்திலிருந்து ஏறுவரிசையில் சொல்லிக் கொண்டு சென்றவன் கண்டத்து நன்னுதலின் என்னாது, நன்னுதலில் கண்டத்து என முறை பிறழக் கூறியதற்கும் ஒரு காரணம் உண்டென அறிக. அது நனவு அவத்தை நிகழும் இலாடத்தானத்தில் தூலதத்துவங்கள் இருபத்தைந்தனையும் கனவுஅவத்தை நிகழும் கண்டத்தானத்தில் சூக்கும தத்துவங்கள் இருபத்தைந்தனையும் வேறு வேறாய்க்கொள்க என்று அறிவுறுத்தற்காம் என்பது. என்னை, தூலத்திலிருந்தே சூக்குமத்திற்குவர வேண்டுமாகலின். தூலவுணர்வையே இங்குச் சூக்குமம் என்றது என வுணர்க. அதாவது நனவில் நேரில் கண்ணாற்காண்பதொருமரம் தூலம்எனவும்,

கனவில் உணர்விற் காண்பதொருமரம் சூக்குமம் எனவும் உணர்க; முன்னது உருவும், பின்னது உணர்வில் பதிந்த அவ்வுருவின் நிழலும் ஆகலான் என்க.

இனி வாக்காதி மெய்யாதி இருபத்தைந்தாவன: வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் எனக்கன்மேந்திரியங்கள் ஐந்தும், மெய்வாய் கண் மூக்குச் செவியாகியஞானேந்திரியங் கள் ஐந்தும், நிலம் நீர் தீ வளி வெளி எனப்பூதங்கள் ஐந்தும், நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும், மனம் புத்தி ஆங்காரம் சித்தம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கும், புருடன் ஒன்றுமாக இருபத்தைந்தாம் என்பது. நனவில் இவற்றின் தூலங்களையும், கனவில் இவற்றின் சூக்குமங்களையும் ஆன்மாச் சார்ந்து நின்று அவத்தையுறும் எனக்கொள்க.

இதற்கு இவ்வாறு உரையாது வேறாயும் உரைப்பர் சிலர். சாதன சாத்திய முறையில்ஆய்ந்து கொள்வனகொள்க என்பதாம்.

மூலாதாரத்தினின்று ஏறு வரிசையில் இவ்வாறு கூறியது கொண்டே இறங்கு வரிசையிலும் மாற்றம் ஏதுமின்றி இவையே தத்துவங்களாம் எனக்கொள்க. அவை வருமாறு: நனவில் உயிர்ப்போடு தூலதத்துவங்கள் இருபத்தைந்தும், கனவில் உயிர்ப்போடு சூக்கும தத்துவங்கள் இருபத்தைந்தும் உறக்கத்தில் உயிர்ப்போடு சூக்கும சித்தம் என ஒன்றும், பேருறக்கத்தில் தத்துவம் யாதொன்றுமின்றிஉயிர்ப்பு ஒன்றே மட்டும் கொள்ளப்படும். உயிர்ப்படங்கல் என்னும் ஐந்தாம் அவத்தையில் ஆன்மா உயிர்ப்புமின்றித் தனித்துச்சென்று மூலாதாரத்தில் ஒடுங்கும் என அறிக. அந்நிலையில் ஆன்மா வுக்கு அறிவும் செயலும் அறவே இன்றாம் எனவும்உணர்க. அங்குத்தான் ஆன்மாச் சகச மலத்தால் முழுவதுமாய் மறைப் புண்டு தனக்குரிய சைதன்னிய சொரூபம் இழந்து அரூப சொரூபம் எனப்படும் இருள்மலத்தின் சொரூபமே தனக்குச் சொரூபமாகக் கொண்டு கிடக்குமென அறிக. ஆன்மாச் சகச மலத்தால் உணர்வின்று என் ஆசிரியன் சுட்டிய இடமும்

அதுவாம் என உணர்க. அந்நிலைக்கண் ஆன்மாவுக்கு உயிர்ப்பும் இல்லையாகலின் வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்றாம் காட்டம்போல் என மேல் வந்த உவமையினை மலத்தால் மறைப்புண்டு கிடந்த ஆன்மாவுக்குப் பொருத்திக்காணும் இடமும் அதுவாம் என்று தெளிக.

இனி, ஆன்மா இலாடத்தானத்தில் நின்றே வேறுமொரு ஐந்தவத்தைகளை அடைதலும் உண்டு என்பதை ஆசிரியன் அடுத்துவரும் உரைப்பாட்டால் உணர்த்துவான் என அறிக.

**இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்**
**இலாடத்தே ஐந்தவத்தை எய்தும் இலாடத்தே**
**அவ்வவ இந்திரியத் தத்துறைகள் கண்டடைவே**
**அவ்வவற்றின் நீங்கலது ஆங்கு.**

என்பது உரைப்பாட்டு. இது மேலதற்கு ஒரு புறனடை கூறுகின்றது. மேற்கூறப்பட்ட ஐந்தவத்தைகளேயன்றி, வேறுமொரு ஐந்து அவத்தைகளையும் ஆன்மா எய்தும் என்பதோரொழிபு உணர்த்தலின் இது புறனடையாயிற்று.

கண்ணழிவு:- இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம் இலாடத்தே வேறு ஐந்து அவத்தைகளையும்எய்தும். இலாடத்தே அவ்வவ இந்திரியத்து அவ்வத் துறைகளைக் கண்டு அடைவே அவ்வவற்றின் நீங்கலது ஆங்கு எ. து.

பொழிப்புரை:- இலாடத்தானத்தே சாக்கிராவத்தையை அடைந்திருந்த ஆன்மாவானது ஆண்டுத்தானம் மாறாமல் நின்றே சாக்கிர சாக்கிரம் முதலிய வேறுமொரு ஐந்தவத்தைகளை அடைதலும் உண்டாம். அவ்வாறு அடையுங்கால், அவ்வத் தானத்திற்குஉரிய கருவிகளைச் சார்ந்து அந்த அந்த அவத்தைகளை அடைந்து பின் அந்த அந்த அவத்தைகளினின்று மீள்வதாகிய அவ்வியல்பின்னையும் உடையதாம் எ. று.

இது சொற்பொருட்பின்வருநிலையணி.

அவ்வவத்தைகளாவன: சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சாக்கிர சுழுத்தி, சாக்கிர துரியம், சாக்கிர துரியாதீதம் என்பன. இவற்றை முறையே நனவில் நனவு, நனவிற் கனவு, நனவில் உறக்கம், நனவில் பேருறக்கம் நனவில் உயிர்ப்படக்கம் எனத்தமிழ்ப் படுத்திக்கொள்க.

எவனானும் ஒருவன் நனவு அவத்தையில் இருந்த பொழுது, யாதானும் ஒரு அரிய பொருளை மெய்ம்மறந்து நழுவவிட்டுத் திடுக்கிட்டு மூர்ச்சை யுறுதல் சாக்கிராதீதமாம். மூர்ச்சை தெளியவந்தும் அப்பொருளை நழுவ விட்ட இடம் இன்னது என்று அறியாது சில கணம் மயங்கிநிற்றல் சாக்கிர துரியமாம். பிறகு அம்மயக்கம் தெளிந்து பொருளை நழுவ விட்ட இடம் அதுவோ இதுவோ என்று ஐயுற்று நிற்றல் சாக்கிர சுழுத்தியாம். பின்னர் நழுவ விட்டது அவ்விடமன்று இவ்விடமே எனத்துணிந்து நிற்றல் சாக்கிர சொப்பனமாம். அவ்வாறு துணிந்த பின்றை விரைந்து சென்று நழுவ விட்ட பொருளைக் கண்டெடுத்தல் சாக்கிர சாக்கிரமாம். அவ் வைந்து அவத்தைகட்கும் இவ்வாறு விளக்கம் உரைப்பர் விருத்தி உரைத்த பாண்டிப்பெருமாள் அவர்கள். இவற்றை அனுபவத்தானும் ஆய்ந்து கொள்க.

ஒரு திணைக்கு உரிய கரு முதற்பொருள்கள் வேறு திணைக்கண் வந்து மயங்கித் திணைமயக்கமாதல் போல அவத்தை ஒன்று பிறிதொன்றில் வந்து மயங்கலால் இவை அவத்தை மயக்கமாம் போலும் என்க.

இலாடம்-நெற்றி. இந்திரியம்என்பது மேலை வெண்பாவில் உணர்த்தப்பட்ட தத்துவங்கள் அல்லது கருவிகளைக் குறித்து நின்றது. துறைகள்-அவத்தைகள். நீங்கலதுஎன்பது குறிப்பு வினைமுற்று. நீங்கலாகிய தன்மையுடையது என்பதாம். ஆண்டு நீங்கல் என்பது தொழில் குறியாது பண்பு குறித்து நின்றதெனக்கொள்க. நீங்கல்-நீங்கலாகிய தன்மை. ஆங்கு-அசை.

இங்கு இதுகாறும் கூறியவாற்றால் மெய் முதலிய பொறிகளின் வேறாயும் மனம் முதலிய கரணங்களின் வேறாயும் உள்ளதெனக்கருதப்பட்ட ஆன்மாவானது, சகச மலத்தால் உணர்வின்றிப் பஞ்சாவத்திதனாய்ச்செயலற்றுக்கிடந்த அந்நிலைக்கண்ணே, அதற்கு அதனின் வேறாய் இருந்த முதற்பொருளின் உபகாரம் இன்றிமையாது தேவைப்பட்டதாகலின் அங்கு அதற்கு அதனை இடையறாது புரிந்துவரும் முதல்வனது உபகாரத்தை உணர்த்த வருவது அடுத்த சூத்திரம் என்பதறிக.

நான்காம் சூத்திரம் முற்றிற்று.

## ஐந்தாம் சூத்திரம்

**விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்**
**களந்தறிந் தறியா ஆங்கவை போலத்**
**தாம்தம் உணர்வின் தமியருள்**
**காந்தம் கண்ட பசாசத் தவையே.**

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோவெனின் இவ்வான்மாக் களுக்குத்தமது முதல் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.*

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமாய் வந்தஇவை ஆசிரியன் கூறியவை.

சகச மலத்தால் உணர்வின்றி ஐந்தவத்தைகட்கும் ஆளாகிச் செயலற்றுக்கிடந்த ஆன்மாக்களுக்கு முதல்வன் இடையறாது புரிந்து வரும் பேருபகாரச்செயலை உணர்த்து கின்றது இச்சூத்திரம் என்பது.

சூத்திரத்தொடர்பும் இதனால் விளங்குவதாம்.

கண்ணழிவு:- மெய் வாய் கண் மூக்கு மேல் விளம்பிய உள்ளத்தால் விடயங்களை அளந்து அறிந்தும் அறிதற்குக் காரணமாயிருந்த உள்ளத்தை அவை அறியா. ஆங்கு அவை போலக்காந்தம் கண்ட பசாசத்தைப்போன்ற அவைதாமும்– அவ்வான்மாக்கள்தாமும் தம் உணர்வின் தமி அருளால் விடயங்களை அளந்து அறிந்தும் அறிதற்குக் காரணமா யிருந்த தமியை அறியா எ. து.

பொழிப்புரை:- மேலைச்சூத்திரங்களால் உடம்பின் வேறாயும் அந்தக்கரணங்களின் வேறாயும் உண்டென உணரப்பட்ட ஆன்மாவின் உதவியாலே மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய ஐம்பொறிகளும் தத்தம்க்கு உரிய விட யங்களை அளந்து அறிந்தனவாயினும் அறியக்காரணமா யிருந்த ஆன்மாவை அவை அறியமாட்டா. அங்கு அவை போலவே ஆன்மாக்கள் தாமும் தம் உணர்வின் கண்ணே நின்று உணர்த்தும் முதல்வனது அருளாலே காந்தம் கண்ட இரும்பு போலக்கவரப்பட்டு விடயங்களை அறியுமாயினும் அறியக்காரணமாயிருந்த முதல்வனை அவை அறியமாட்டா வாம் எ. று.

எனவே இது பெத்த கால்த்து நிலைமை என்றவாறாம். முத்திக்காலமாயின் அவை அவனை உணரும் என்பதாம்.

ஆன்மாக்கள் அறியாவாயினும் தமியருள் அவற்றைப் புறக்கணியாது அவற்றுக்கு இடையறாது உபகாரப்பட்டு நிற்கும் என்பதுவே கருத்தாகக்கொள்க. அங்ஙனம் கொள் ளாக்கால் சூத்திரம் நுதலிய பொருள் முற்றாதென அறிக.

அளந்து அறிதலாவது இது குழந்தை தொடுவது என் றும், இது குளம்பு தீண்டுவது என்றும், இது கைப்புச் சுவை என்றும், இது கார்ப்புச் சுவை என்றும் பகுத்தறிதலாம். பிறவும் அன்ன.

பொறிகள் அறியும் என்றானாயினும் அறிதல் என்பதை அவற்றுக்கு உபசாரமாகக்கொள்க.

பொறிகள் ஆன்மாவால் உணரும் அதுபோல ஆன்மாக் கள் முதல்வனால் உணரும் என்பதே சூத்திரத்தின் திரண்ட பொருளாம் எனக்கருதுக.

உள்ளத்தால் என மூன்றனுருபு விரிக்க. மெய் வாய் கண் மூக்கோடு செவியும் கூட்டி உரைக்க. பொறிகள் அறியும் விடயங்களாவன, உற்றும் உண்டும் கண்டும் உயிர்த்தும் கேட்டும் அறிகின்ற ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை என்னும் தன்மாத்திரைகள் ஐந்துமாம். அறிந்தும் என ஆண்டுஉம்மை விரிக்க. பசாசத்தவை-பசாசத்தைப் போன்றவைஎனக்குறிப்பு வினைப் பெயராகக்கொள்க.

காந்தம் கண்ட பசாசம் காந்தத்தால் கவரப்படுதல் போலத்தமி அருள்பெற்ற ஆன்மாக்கள் உணர்வு கூடப்பெறு வன என்றவாறாம்.

தமி என்பது தம்மை உடையது என்ற பொருள் தருவ தாம். தாம் என்ற சொல்லாற் குறிக்கப்படும் ஆன்மாக்களை ஆளாகவுடையவன் என்பதாம்.

உவமைக்கண் வந்தன பொருட்கண்ணும் சென்றியைந் தன.

ஆன்மாவால் விடயங்களை உணரும் பொறிகள் ஆன் மாவை உணராதாற்போல முதல்வன் அருளால் உணர்வு பெறும் ஆன்மாக்களும் முதல்வனை உணர்வதில்லை. இது பெத்தகாலத்து நிலைமை. முத்திக்காலமாயின் அவற்றின் நிலைமை வேறாம் எனவும் உணர்க.

இவ்வுவமையால் பொறிகள் உணர்ந்த விடயங்களை ஆன்மா உணர்ந்து துய்த்தாற்போல ஆன்மா உணர்ந்த விடயங்களை முதல்வனும் உணர்ந்து துய்ப்பன் என்பது பெறுதுமன்றே. அதுவே முறைமையாம் எனினும் உடல் உயிர் இறை என்ற கட்டமைப்பில் இடை நின்ற உயிர் இறையை மறந்து உடலைச் சார்ந்து நிற்கும் காலம் பெத்த காலம் எனப்படுவதால் இக்காலத்தில் ஆன்மாத்துய்க்கும் விடயங்களில் முதல்வன் பங்கு கொள்வதில்லை என்பதுவே கருத்தாகக்கொள்க. ஆன்மா உடம்பை மறந்து இறையைச் சார்ந்து நிற்கும் காலம் முத்திக் காலம் எனப்படுவதால் அக் காலத்தில் ஆன்மா என் செயலாவது யாதொன்றும் இல்லை, எல்லாம் இறைசெயலே என்றெண்ணிச் செயல் புரிவதால் அங்கு ஆன்மாவின் விடய நுகர்ச்சியில் முதல்வனும் பங்கு கொள்வன் என்பது சாத்திர நூல்கள் ஒப்ப முடிந்த உண்மை யாம் என உணர்க. இச்செய்தி இங்கு இரண்டாம் அதி கரணத்து உரைப்பாட்டு ஒன்றானும் ஆசிரியன் உணர்த்து வான் என்பதறிக.

இச்சூத்திரத்துள், விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண் மூக்கு அளந்து அறிந்து அறியா என்பது ஒரு அதிகரணம். ஆங்கு அவை போலத்தாம் தம் உணர்வின்தமியருள் காந்தம் கண்ட பசாசத்தவை என்பது ஒரு அதிகரணம் ஆக இரண்டு அதிகரணத்தது இச்சூத்திரம் என்பது.

## முதலாம் அதிகரணம்

*மேற்கோள்:- கண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரும் என்றது. அவற்றினான் ஆன்மா ஒற்றித்துக் காணினல்லது அவை ஒன்றையும் விடயியாவாகல்லான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

ஈண்டு ஐயுணர்வுகள் என்றது அவ்வுணர்வுகளையுடைய ஐம்பொறிகளை எனக்கொள்க. ஆன்மாப் பொறிகளை மறந்திருந்தபோது பொறிகள் விடயங்களை உணர்வதில்லை. அப்பொறிகளோடு ஒன்றி நின்று காணும்போது மட்டுமே கண் ஒன்றைக்காணும், காது ஒன்றைக்கேட்கும், பிற பொறிகளும் அன்னவாம். எனவே ஆன்மாவின் உதவியில்லாமல் பொறிகள் தாமாக எதையும் உணர்வதில்லை ஆதலால் அவை விடயங்களை உணருங்கால் ஆன்மாவால் உணரும் என மேற்கொண்டான் ஆசிரியன் என்க.

உணர்வுகள் என்பது உணர்வுகளையுடைய பொறிகட்கு ஆகிவந்தது, ஆகுபெயர்.

**ஐம்பொறியை ஆண்டங் கரசாய் உளம்நிற்ப**
**ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம் ஐம்பொறியின்**
**காணாதேற் காணாது காணுமுளம் காணாதேல்**
**காணாகண் கேளா செவி.**

என்பது உரைப்பாட்டு. இது ஐம்பொறிகள் ஆன்மாவால் உணரும் எனவந்த மேற்கோளைச் சம்பிரதாய மரபால் விளக்குகின்றது.

கண்ணழிவு:- உளம் ஐம் பொறியை ஆண்டு அங்கு இலாடத்தானத்தே அரசாய் நிற்பவும் ஐம்பொறிகள் உள்ளத்தை அறியாவாம். காணும் உளம் ஐம்பொறியின் காணாதேல் கண்ணும் காணாது, செவியும் கேளாது, ஒழிந்தவும் அன்ன எ. து.

பொழிப்புரை:- ஆன்மாவானது மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய ஐம்பொறிகளையும் ஏவல்கொண்டுதான் அவற்றுக்குக் கத்தாவாய் இலாடத்தானத்தே நிற்குங் காலத்தேயும் அப்பொறிகள் தமது கத்தாவாகிய ஆன்மாவைஅறிவதில்லை. அறிகின்ற அவ்வான்மாத்தானும்அப்பொறிகளோடு ஒன்றி நின்றறியாதாயின் அதுதானும் விடயங்களை அறிய மாட்டாது. அஃதவ்வாறு ஒன்றி நில்லாதாயின் கண்ணும் ஒன்றைக் காணாது, காதும் ஒன்றைக்கேளாது, ஒழிந்த பொறிகளும் அவை போலவாம் எ. று.

ஆன்மாவாலன்றிப் பொறிகள் தாமாக ஒன்றையும் அறியாவென முடித்துணர்த்தியதால் அவை ஆன்மாவால் உணரும் என வந்த மேற்கோள் வலியுறுத்தப்பட்டவாறு அறிக.

ஐம்பொறியை ஆண்டங்கரசாய் உளம் நிற்கும் என்றதால் போக நுகர்ச்சிக்கு உரியது ஆன்மா ஒன்றுமே என்பதூஉம், காணும் உள்ளம் ஐம் பொறியால் காணாதேல் காணாது என்றதால் பொறிகளையின்றி ஆன்மாச் சீவியாது என்பதூஉம், காணும் உள்ளம் அவ்வாறு காணாதேல் கண்ணும் காணாது, செவியும் கேளாது என்பதால் ஆன்மாவையின்றி உடம்பும் சீவியாது என்பதூஉம் உணர்த்தினானாயிற்று.

இதனால் ஆன்மா உடம்போடு ஒற்றித்து நிற்றலின் இன்றியமையாமையும் பெறப்பட்டது.

கண் செவி என்பன பால் பகா அஃறிணைப் பெயர்கள். காணும் உளம் என்பது இடைநிலைத்தீவகம்.

இனி ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணர்ந்தாற்போல ஆன்மாவும் தமது முதலாலே உணரும் என்பது அடுத்த அதிகரணத்தாற் கூறுவான் ஆசிரியன் என்பது.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி இதுவும் தமது முதலாலே உணரும் என்றது, இவ்வான்மாத்தன்னாலே உணரும் இந்திரியங்கள் போலத்தானும் தன்னை உணராது நிற்றலின்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

ஆன்மாவால் விடயங்களை உணர்ந்த இந்திரியங்கள் உணரக்காரணமாயிருந்த ஆன்மாவை உணராதாற்போல ஆன்மாவும்தான் உணரக்காரணமாயிருந்த தன் முதல்வனை உணராது நிற்றலாலே அதுவும் தன் முதல்வனாலேஉணரும் என மேற்கொள்ளப்பட்டது என்பதாம்.

தானும் தன்னை உணராது நிற்றலின் என்றது, இது பெத்தவியலாம் என்பது குறிப்பித்தற்காமென வுணர்க. முத்தி இயல் ஆயின் அது தானும் தன்னை உணரும் என்றதாம்.

தன்னை என்பது தன்னையும் தன் தலைவனையும் என இருபொருள் பயந்தவாறுங் காண்க. பொருட்கண் வந்தன உவமைக்கண்ணும் சென்றியையும் ஆகலான் பொறிகள் தம்மையும் தமக்குக்காட்டாயிருந்த ஆன்மாவையும் உணரா வெனவும் கொள்க.

**மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்த**
**தென்னும் மறையின் இயல்மறந்தாய்**
**சொன்ன சிவன்**
**கண்ணா உளம்வினையால் கண்டறிந்து நிற்குங்காண்**
**எண்ணான் சிவனசத்தை இன்று.**

என்பது உரைப்பாட்டு. இது, பொறிகள் சடமாகலான் அவை தாம் தமக்குக் காட்டாய் நின்ற ஆன்மாவால் உணரும் என்பது ஒப்ப முடிந்ததாயினும் ஆன்மாப் பொறிகள் போலன்றிச் சித்துப்பொருளாகலின் அது தன் முதலின் உதவியின்றியே உணரல் கூடுமன்றே என்றையுற்றமாணாக்கற்கு ஐயமகற்றுமுகத்தான் இதுவும் தமது முதலாலே உணரும் எனவந்த மேற்கோளை மறை வசனங்களாலும் சம்பிரதாய மரபாலும் விளக்குகின்றது.

கண்ணழிவு:- மன்னு சிவன் சந்நிதியில் மற்று உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய், சொன்ன சிவன் கண்ணா உளம் வினையால் கண்டு அறிந்து நிற்கும் காண். சிவன் அசத்தை இன்று எண்ணான் எ. து.

பொழிப்புரை:- சிற்சத்தியோடு மன்னிய சிவனது சந்நிதி மாத்திரையானே உலகம் விரைந்து செயல்படா நின்றது என்று கூறும் வேத வசனங்களின் பொருளை அறிய மறந்த மாணாக்கனே, உலகு உயிர் அனைத்திலும் பொன்னொளி போல் சருவ வியாபியாயுள்ளான் என்று ஆகமங்களில் சொல்லப்பட்ட அச்சிவனையே காட்டாக்கொண்டு ஆன்மாத்தனது

வினைக்கீடான இன்பத்துன்பமாம் விடயங்களைத் தேர்ந் தெடுத்து நுகர்ந்து வரும். சாதன சாத்திய முறையானும் சம்பிரதாய மரபானும் நீ இதனைத் தெளிவாயாக. இப் பெத்தகாலத்து ஆன்மா நுகரக்கூடிய இன்பத் துன்பமாம் அசத்தினை அவ்வான்மாவுக்குக் காட்டாகியே நின்ற சிவன் இன்று புசியான் எ. று:

இன்று எண்ணான் எனவே, அன்று முத்திக்காலத்தில் எண்ணுவன் என்றவாறாம். அது வீட்டியலில் வரும் பதினொன்றாம் சூத்திரத்து முதலாம் அதிகரணத்தால் ஆசிரியன் உணர்த்துவான் என அறிக. அல்லதூஉம் அடுத்து வரும் உரைப்பாட்டாலும் அது தெளியலாம் என்பது.

இனி மன்னு சிவன் என்றது உலகம் செயல்படுதற் பொருட்டு அவன் சிற்சத்தியோடு மன்னினான் என்ற பொருளையும், சொன்ன சிவன் என்றது வினைப்பயன் நுகரும் உயிர்கட்கெல்லாம் அவன் காட்டாகி நின்ற காரணத் தால் உலகு உயிர் அனைத்தினும் அவன் பொன் னொளி போல் சருவ வியாபியாயிருந்தான் என்று ஆகமங் களுட் சொல்லப்பட்டான் என்ற பொருளையும்,சிவன்என்றது அவன் அவ்வாறு சருவவியாபியாய்இருந்தானாயினும்பெத்த காலத்து ஆன்மாக்களின் இன்பத்துன்பப்புசிப்பில் அவன் அச் சீவன்களுக்கு வேறாய்ச் சிவன் எனவே நிற்பன் என்பதோர் பொருளையும் வேறு வேறு பயந்து கூறியது கூறலாகாமை உணர்க என்பதாம்.

சந்நிதி என்றது திருட்டி, பார்வை, நோக்கு, அருள் நோக்கம் என்ற பொருளைத்தந்தது.

ஈண்டு உலகம் என்றது, ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சத்தை.

சிவன் சந்நிதி மாத்திரையால் விரைந்து செயல்பட்டது உலகம் என்ற பொருள் தந்தமையால் மற்று வினைமாற்றின் கண் வந்ததெனக்கொள்க. சேட்டித்தது என இறந்த காலத் தாற் கூறியதும் விரைவுப் பொருள் குறித்தற்காம் என்க.

என்னை, ''வாராக் காலத்தும் நிகழும் காலத்தும், ஓராங்கு வருஉம் வினைச்சொற்கிளவி, இறந்த காலத்துக்குறிப்பொடு கிளத்தல், விரைந்த பொருள என்மனார்புலவர்''. என்பது ஓத்தாகலின். எனவே விரைவின் மிகுதி குறித்தவாறாயிற்று. இன்று என்றது இப்பெத்த காலத்தில் என்றதாம்.

ஐயுற்ற மாணாக்கனைத் தெருட்ட வேண்டிற்றாகலான் ''மறையின் இயல் மறந்தாய்''. என்றும், ''உளம் வினையால் கண்டறிந்து நிற்கும் காண்''. என்றும் அன்னோனை ஆசிரியன் முன்னிலைப்படுத்திக் கூறினான் எனவுணர்க.

இவ்வுரைப்பாட்டில் வரும் செய்திகள் மூன்றனுள் முன்னது ஆகம அளவை என்றும், ஏனையவை சம்பிரதாய மரபென்றும் அறிக.

மலத்தால் மறைப்புண்டு அவத்தைக்குள்ளாகித் தானே உணரும் திறனுமின்றி மூலாதாரத்தில் செயலற்றுக்கிடந்த ஆன்மாவுக்கு மீளவும் உயிர்ப்பும்பிறவும் நிகழ்தற்பொருட்டுத் தமது முதல் உபகாரம் இன்றியமையாதும் இடையறாதும் தேவைப்பட்டதென்பதே ஆகமங்களின் துணிபும் ஆசிரியன் கருத்துமாம் என அறிக. இதனால் மேற்கோட் கருத்து முற்றவும் வலியுறுத்தப்பட்டவாறு அறிக.

**வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது**
**வெய்யோனை ஆகாத மீன்போல வெய்யோனின்**
**கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனைக்**
**கண்டுடனாய் மன்னுதலைக் காண்.**

என்பது உரைப்பாட்டு. இது மேலதற்கு ஒரு புறனடை கூறுகின்றது. பெத்தகாலத்து ஆன்மாக்கள் புசிக்கும் இன்பத் துன்பமாம் அசத்தினை அவற்றோடு வியாபகனாய் ஒன்றி நின்ற முதல்வன் இன்று புசியான் எனவே அன்று முத்திக் காலத்தில் புசிப்பன் என்பதோர் ஒழிபினை உணர்த்த வருதலின் இது புறனடையாயிற்று.

கண்ணழிவு:- வெய்யோனை ஆகாத மீன் வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காதாற்போல ஆன்மாவும் கண்டு

கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனை மெய்யோனிற் கண்டு அவனோடு உடனாய் மன்னுதலை நீ அன்று காண்பாய் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, இராக் காலத்தே வெய்யோனுக்கு வேறாய் நின்று இருளைத்தனித்து உண்டுதிரிந்த விண்மீன்கள் பகற்காலத்தே அவ்வெய்யோனதுபேரொளியில் மூழ்கித் தனித்துத் தோன்றாவாய் அவனோடு ஒருங்கு நின்று இருளைப் பகிர்ந்து உண்டு வருமாப்போலப் பெத்த காலத்தில் முதல்வற்கு வேறாய் நின்று விடயங்களைத் தனித்துப் புசித்து வந்த ஆன்மாக்கள் முத்திக் காலத்தில் கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றுமறியும் ஐம்புல விடயங்களை அம்மெய்யோனாகிய முதல்வனால் அறிந்தும் அவனோடு ஒருங்கு நின்றுபுசித்தும்வருதலை நீ அப்பொழுது உணர்வாய் எ.

இரவில் இருளினைத்தனித்தே உண்ட விண்மீன்கள் பகலில் அதனை வெய்யோனொடு பகிர்ந்து உண்ணுமது போலப் பெத்த காலத்தில் ஐம்புல விடயங்களைத்தனித்தே புசித்து வந்த ஆன்மாக்கள் முத்திக்காலத்தில் அவற்றை முதல்வனோடு பகிர்ந்தே புசிக்கும் என்பதொரு பொருள் இதனாற்பெற்றாம் ஆகலின் ஆன்மாக்கள் புசிக்கும் இன்பத் துன்பப் புசிப்பினைச் சிவன் இன்று-இப்பெத்த காலத்தில் புசியான் ஆயினும் அன்று-அம்முத்திக்காலத்தில் புசிப்பான் என்பது பெறப்பட்டு, உணர்த்தும் வகையில் அவ்விரு நிலையினும் அவனது உபகாரம் ஒரு பெற்றித்தாம் என்பதும், வேறுபாட்டிற்கு ஆன்மாக்களின் பெத்த முத்தியாகிய அவ்விரு நிலைகளே காரணமாம் என்பதும் இங்கு விளங்கியவாறறிக.

இரவும் பகலும் பெத்தம் முத்திகட்கு முறையே உவமைகளாயின.

சாத்திர நூலாதலின் இவ்வுரைப்பாட்டிற்கு இவ்வாறு சில சொற்கள் வருவித்து உரைக்க வேண்டிற்று எனவுணர்க. அவ்வாறு உரையாக்கால் ஆசிரியனது மெய்யுணர்திறன் நூல் கற்பார்க்கு விளங்காமற் போகலாம் என்க.

வெய்யோன்-கதிரவன். மீன்-விண்மீன்கள். அதுபால்பகா அஃறிணைப்பெயர். ஒன்றே பதி எனற்கேற்ப வேய்யோன் ஒன்றாதலும், பசுக்கள் பலவாம் என்பதற்கேற்பவிண்மீன்கள் பலவாதலுமறிந்து உவமைநலம் போற்றுக. விளங்காமை-ஒன்றென நின்றமை. ஆகாமை-வேறென நின்றமை.

செய்யுளில் மோனை நயம் குறித்து மெய்யோன் எனற்பாலது வெய்யோன் எனத்திரிந்து நின்றது. ''மெய்யவனிற் கண்டு'' எனவும் ஒரு பாடம் உண்டு.

கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியும் ஐம்புலன் என்றது திருக்குறள் தொடர் ஆசிரியனால் எடுத்தாளப்பட்டது.

ஆன்மாக்கள் முத்திக்காலத்தில் உடனாய் மன்னுதலைப் பதினொன்றாம் சூத்திரத்து முதலாம் அதிகரணத்துள் கண்டு தெளிக.

இனி ஆன்மாக்களிடத்துச் சருவ வியாபியாய் நின்று அவற்றை உணர்த்துதற்கு அவனருளேகாரணமாம் என்பதை அடுத்த உரைப்பாட்டால் ஆசிரியன் உணர்த்துவான்.

**அருளுண்டாம் ஈசற் கதுசத்தி யன்றே**
**அருளும் அவனன்றி இல்லை அருளின்**
**றவனன்றே இல்லை அருட்கண்ணார் கண்ணுக்**
**கிரவிபோல் நிற்பனாம் ஏய்ந்து.**

என்பது உரைப்பாட்டு. இதுவும் மேலதற்கு ஒரு புறனடையே கூறுகின்றது. சிவன் சந்நிதியில் உலகம் சேட்டிக்கும் என்று மேலே கூறினான். அதற்கு அவனருள் காரணமாம்என்பதோரொழிபு ஈண்டு உணர்த்தலின் இது புறனடை ஆயிற்று.

கண்ணழிவு:- ஈசற்கு அருள் உண்டாம். அது சத்தி அன்றே. அவனன்றி அருளும் இல்லை. அருள் இன்றி அவனும் இல்லை. அருட்கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் ஏய்ந்து நிற்பனாம்-நிற்பது புல்னாம் எ. து.

பொழிப்புரை:- நீரில் உப்புப்போல நெகிழ்ந்து கரையும் அருட்குணம்ஈசன்ஒருவனுக்கேஇயல்பாக அமைந்துள்ளதாம்.

அது உலக முகப்பட்டுத் தொழிற் படுங்கால் அதுவே அவற்குச்சத்தி எனலுமாம். அவனையன்றி அருளும் இல்லை. அருளையின்றி அவனும் இல்லையாம். அவ்வருளையே கண்ணாகக்கொண்டு அவனைக்காணவல்ல ஞானிகளின் கண்ணுக்கு அவன் கதிரவனிடத்தொளிபோல உலகிற் சருவ வியாபியாயுள்ளான் என்பது புலனாம் எ. று.

அவனன்றி அருள் இல்லை, அருளின்றி அவன் இல்லை என்றதால் உலகில் அவன் சருவ வியாபியாயிருந்ததற்கு ஒரு ஏதுக்கூறியவாறாயிற்று.

இரவிபோல்என்றது இரவியிடத்தொளிபோல்என்றதாம். அதுவும் அவனது சருவ வியாபகத்தன்மைக்கு ஒரு உவமை ஆயிற்று.

அருட்கண்ணார் கண்ணுக்கு அவன் இரவிபோல் நிற்பது புலனாம் என்றதால் இருட்கண்ணார் கண்ணுக்கு அவன் இருளாயே நிற்பனாம் எனினும் உணர்த்துதற்கண் அவன் இருசாரார் மாட்டும் ஒருபடித்தாய் நிகழ்வன் என்றே கருதுக.

அவன் அன்றே இல்லை என்புழி அன்றும் ஏயும் அசை நிலைகள்.

நிற்பனாம் என்பதற்கு நிற்பது புலனாம் எனவுரைத்துக் கொள்க.

இச்சூத்திரத்தால் சகச மலத்தால் உணர்வின்றிக்கிடந்த ஆன்மாக்களை உணர்த்துதற்கண் முதல்வனருள் உபகாரப் பட்டமை கூறப்பட்டது.

பிறப்பியல் முற்றிற்று.

## சிவஞான போதம் - பொதுவியல்

பொதுவியலாவது, பிறப்பியலுக்கும் வீட்டியலுக்கும் பொதுவாய்வரும் செய்திகளைக்கூறுவது. அவை பதி பசு பாசம் எனப்பட்ட முப்பொருள் பற்றிய செய்திகளாம். அவற்றைச் சத்து அசத்து என்னும் அளவைகளைக்கொண்டு வரை செய்துணர்த்துவது இங்கு ஆசிரியன் நோக்கமாயிருந்தது. சைவ சித்தாந்தத்திற்கு அவை கருப்பொருளாய் அமைதலின் அவைபற்றிக்கூறும் இயல் அவ்விரண்டிற்கும் பொதுவாய் இடைவைக்கப்பட்டது.

### ஆறாம் சூத்திரம்

**உணருரு அகத்தெனின் உணரா தின்மையின்**
**இருதிறன் அல்லது சிவசத் தாமென**
**இரண்டு வகையின் இசைக்குமன் உலகே.**

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோவெனின் சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த்துதல் நுதலிற்று.*

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமென இவை ஆசிரியன் கூறியவை.

இச்சூத்திரம் பதி பசு பாசம் எனப்பட்டமுப்பொருள்களில் சத்து எது, அசத்து எது என அளவைகளால் வரையறுத்து உணர்த்துகின்றது. மேல் பிறப்பியலில் வந்த சூத்திரங்கள் ஐந்தானும் பதி பசு பாசங்களின் இயல்பு ஒருவாறு உணரப் பட்டதாயினும் அவற்றுட் சத்தும் அசத்தும் வரையறுத்து உணர்த்துகின்றான் இங்கு ஆசிரியன் என்பது.

கண்ணழிவு:- உணர் உரு எனின் அசத்து ஆம். உணராது எனின்இன்மையாம். ஆகலின்இவ்விருதிறனானும் அல்லது வேறு இரண்டு வகையானும் உள்ளதொன்றே சிவசத்தாம் என உலகு இசைக்கும் மன் எ. து.

பொழிப்புரை:- ஒன்று, அறிவினால் சுட்டிஅறியப்பட்ட பொருளாம் எனின் அது அசத்தாம். அவ்வாறு சுட்டி அறிய வாராதாயின் அது இல்லாத ஒன்றாம்,அதாவது சூனியமாம்.

ஆகலின் அவ்விருவகையானுமன்றி வேறு இருவகை யானும் உள்ளதொன்றே சிவமாகிய சத்துப்பொருளாம்என்று உலகு ஒருதலையாய்க் கூறாநிற்கும் எ. று.

உலகு என்றது இங்கு உயர்ந்தோரை. அவர் அளவை நூல் துறை போயினார் என வுணர்க.

அவ்விருவகை என்றது அறியவந்ததும், அறிய வாரா ததுமான அவற்றையாம். வேறு இருவகை என்றது அறிய வாராததும், அறிய வந்ததுமான அவற்றையாம். அவ்வாறு உள்ளதெனப்பட்ட ஒன்றே சிவமாகிய சத்துப் பொருளாம் என்று உயர்ந்தோர் கூறுவர் என்றதாம்.

இங்கு என் சொல்லியவாறோ எனின் சிவமாகிய சத்துப் பொருள் பிரபஞ்சம் போலச் சுட்டியறிய வந்ததும் அன்று. முயற்கோடு போலச்சுட்டியறிய வாராததும் அன்று. ஆனால் ஒருவகை ஆன்ம அறிவால் அறிய வாராததும், ஒருவகை மெய்யறிவால் அறிய வந்ததுமாய் உள்ளது என்பதாம்.

இச்சூத்திரத்தால் ஆசிரியன் முப்பொருள்களுள் பாசம் எனப்பட்ட உலகம் அறிவினால் சுட்டியறியப்படுதலின் அது அசத்தாம் எனவும், பதியெனப்பட்ட முதற்பொருள் ஆன்ம அறிவால் சுட்டியறியப்படாததாயினும் இறையறிவால் அறி யப்படுதலின் அது சத்தாம் எனவும் வரையறுத்தானாயிற்று. பசுவெனப்பட்ட உயிரின் இலக்கணம் அடுத்துவரும் புற னடைச் சூத்திரத்தால் வரையறுப்பான் என அறிக.

சத்து அசத்து என்பன முறையே நிலைபேறுடையது நிலை பேறில்லாதது என்ற பொருளை உடையன. மெய்ப் பொருள் பொய்ப்பொருள் எனவும் அவற்றை வழங்கலாம்.

சிவசத்து என்பது சிவமாகிய மெய்ப்பொருள் என்பதாம். அது பிரபஞ்சம் போலத்தோன்றி நின்று அழிதல் மாலைத் தன்றி என்றும் உள்ள பொருளாமாகலின் அதனைச் செம் பொருள் எனவும் கூறுப.

சிவம் என்னும் செம்பொருள் சுட்டுணர்வுடைய பிரபஞ்சம் போல்வதான உள்பொருளுமாகாதாய்ச்சுட்டுணர்வின்றி நின்ற முயற்கோடு போல்வதான இல்பொருளுமாகாதாய்ச் சுட்டுணர்வின்றி நின்ற மெய்ப்பொருளாம் என அறிக.

எனவே சுட்டுணர்வுடைய ஒன்று பிரபஞ்சம் போல்வதான அசத்தெனவும், சுட்டுணர்வின்றி நின்ற ஒன்று முயற்கோடு போல்வதான அசத்தெனவும் அறியலாம். சுட்டுணர்வின்றி நின்ற ஏனையொன்றே மெய்ப்பொருளாகிய சத்தென அறியப்பட்டது.

இச்சூத்திரத்துள் ஆசிரியன் கையாண்ட அளவைகள் இரண்டு எனவே கருதுக. ஒன்று, அறிவினால் சுட்டி அறியப்படுவது என்பது ஓரளவை. அதன்கண் பிரபஞ்சம் போல்வதான அசத்தெல்லாம் அடங்குவன. மற்றொன்று, அறிவினால் சுட்டி அறியப்படாதது என்பது ஓரளவை. அதன்கண் முயற்கோடு போல்வதான அசத்தெல்லாம் அடங்குவன. இவற்றை முறையே அறிவறிந்த மெய்எனவும் அறிவறியாப் பொய் எனவும் கொள்ளலாம். கொள்ளவே அறிவறியாமெய் என மூன்றாவதோரளவையும் உண்டால், அதுவே சிவசத்தாகியமெய்ப்பொருளை அறிதற்குக்கருவியாய் இருந்தது என்றுஅறிய வேண்டியுள்ளது. இதனை அளவை என்றுகொள்வதைவிட அனுபவம் என்று கொள்வதே வலியுடைத்தாம் எனக்கருதுக. என்னை, அளவையாதொன்றானும் அறியவொண்ணாத அந்த ஒன்றே பதிப்பொருளாம் ஆகலின் என்க. எனவே அறிவினால் அறிய வாராதது என்பதொரு வழக்கினைக்கொண்டு சிவமாகிய சத்துப்பொருளை முயற்கோடு போல்வதான சூனியம் என்று கருதற்க எனவும், மெய்யுணர்வால் அது ஒருதலையாய் உணரப்படும் சத்துப்பொருள் எனவே கருதுக எனவும் இங்கு ஆசிரியன் குறிப்பித்தானாயிற்று.

இனி அறிவினாற் சுட்டி அறிதலாவது, ஒரு குடத்தைக் கண்டானொருவன் ''இஃதோர் குடம்'' என்று சுட்டியறிதலாம். அங்ஙனம் அறியப்பட்ட குடம் ஒரு காலத்தொருவனால் தோற்றுவிக்கத்தோன்றியது என்றும், ஒரு கால

எல்லைவரை நிலைத்து நிற்பது என்றும், பிறிதோர் காலத்து நில்லாது அழிந்து போவது என்றும், கண்கூடாக அறியப் படுதலின் அது அசத்தெனப்பட்டதாம். ஒருவன் ஒருத்தி ஒன்று எனச் சுட்டியறியப்பட்ட பிரபஞ்சமும் தோன்றி நின்று அழியும் அசத்தே என்பது மெய்கண்டான் துணிபாம் என்க.

இத்சூத்திரத்துள், உணர் உரு அசத்தெனின் உணரா தின்மையின் என்பது ஒரு அதிகரணம். இரு திறனல்லது சிவசத்தாம் என இரண்டு வகையின் இசைக்குமன் உலகு என்பது ஒரு அதிகரணம் ஆக இரண்டு அதிகரணத்தது இச் சூத்திரம் என்பது.

## முதலாம் அதிகரணம்

*மேற்கோள் :- கண்டு அறிவினால் அறியப்பட்ட சுட்டு அசத்து என்றது. அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

இங்கு அறிவினால் சுட்டி அறியப்பட்டபொருள் எல்லாம் தோன்றி நின்று தோன்றாதொழிதலின் அசத்தாம் என்று மேற்கொள்ளப்பட்டது.

பிரகாசம் அப்பிரகாசம் என்பன முறையே தோற்றம் தோற்றமின்மைகளைக் குறித்து நின்றன. தோன்றி நின்று அழிதல் என்பதே அவை குறித்த பொருளாம் என்க.

அசத்தறியாய் கேள்நீ அறிவறிந்த எல்லாம்
அசத்தாகும் மெய்கண்டான் ஆயின் அசத்தலாய்
நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரினவை இன்றாமா றொப்பு.

என்பது உரைப்பாட்டு. இது அறிவினால் அறியப்பட்ட சுட்டு அசத்து எனவந்த மேற்கோளை உவமை முகத்தால் விளக்கு கிறது.

கண்ணழிவு:- அசத்தலாய், அசத்தறியாய், நீகேள், அறிவு அறிந்த எல்லாம் மெய்கண்டான் ஆயின் அசத்து

ஆகும்: அவை இன்றாமாற்றுக்கு ஒப்பு ஒரின் நீரில் எழுத்தும் நிகழ் கனவும் பேய்த்தேரும் ஆம் எ. து.

பொழிப்புரை:- அசத்துமல்லாது சத்துமல்லாத ஆன்ம வருக்கத்தைச்சார்ந்த மாணாக்கனே, நிலைபேறுடையது போலக்காணப்படும் பிரபஞ்சம் சத்தாதலேயன்றி அசத்தாதல் யாங்ஙனம் என்று வினாவி அசத்தின் இல்க்கணமும்அறியாது மயங்கினை. அதனைத் தெளியக் கேட்டறிவாயாக. அறிவினால் சுட்டி அறியப்பட்ட பொருளெல்லாம் மெய்ப்பொருளை உணர்ந்தோன் ஒருவன் தன்னறிவில் வைத்து ஆராயின் அவை அறிவின்கண் ஒரு பொழுது நின்று மறுபொழுது நில்லாதொழியும் அசத்துப் பொருள்களாயே முடிவன. அங்ஙனம் அவை நின்று நிலையாவாற்றுக்கு உவமைகளை ஆராய்ந்துகாணின் அவை எழுதுங்காலே மறைந்து வருவதாகிய நீர்மேலெழுத்தும், உறக்கம் நீங்கின் ஒன்றுமே இல்லையாய் ஒழிகின்ற கனவு நிகழ்ச்சியும், நிரூபிக்கில் இல்லாத் ஒன்றாயே முடிகின்ற கானல் நீரும் என இவையாம் எ. று.

நீர்மேல் எழுத்தும், கனவு நிகழ்ச்சியும் கானல் நீரும் காண்பரது அறிவின்கண் ஒரு பொழுது பிரகாசமாய்த் தோன்றி நின்று மறுபொழுது அப்பிரகாசமாய்க் கழிந்தொழியும் பொதுத் தன்மைகளால் அவை பிரபஞ்சம் முதலியன போன்ற அசத்துப் பொருள்க்கு உவமைகளாயின.

தோன்றுங்காலே நில்லாதொழியும் அசத்துக்களுக்கு நீர்மேலெழுத்தும், தோன்றிச் சில போதிருந்து பின் நிலையாதொழியும் அசத்துக்களுக்குக் கனவு நிகழ்ச்சியும், பொயயாகத் தோற்றமளித்து நிரூபிக்கின் இல்லையாய் ஒழிகின்ற அசத்துக்களுக்குக் கானல் நீரும் உவமைகளாயின.

பிரபஞ்சம் தோன்றி நின்று அழியும் அசத்தே என்பதனை "ஓதாரோ ஒன்று ஒன்றில் தோன்றி உளதாய் இறக்கண்டும் அன்று என்றும் உண்டென்ன ஆய்ந்து" என்புழி உரைத்தது கொண்டு தெளிக.

முப்பொருள்களுள் பசு வருக்கத்தை சார்ந்த மாணாக்களை அசத்தலாய் என்று விளித்தால் அவன் சத்தோ

என்னின் சத்தும் அல்லனாம் ஆகலின் அவ்வாறு உரைக்கப் பட்டது. ஆண்டு அங்ஙனம் உரையாக்கால் உரைப்பொருள் முற்றாதெனவும் அறிக.

அசத்துமல்லாதவன் சத்துமல்லாதவன் என்றதால்அவன் அசத்தைச் சார்ந்து அசத்தாயும், சத்தைச் சார்ந்து சத்தாயும் விளங்கும் ஈரியல்பும் உடையன் என்றபடியாம். அதனை அடுத்துவரும் சூத்திரத்தால் ஆசிரியன் உணர்த்துவான் என அறிக.

இனி அறிவினால் அறிந்தன்வெல்லாம் அசத்தான பின், அறிவினால் அறிய வாராதன வெல்லாம் சூனியமானபின் சத்தாகிய பதிப்பொருளை அறிதற்கு அளவைதான் யாதோ வென்று ஐயுற்ற மாணாக்கற்கு ஐயமகற்ற வருவது அடுத்த அதிகரணம்.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மானாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம் என்று உணரற்பாற்று, பிரகாசத்தினுக்குப்பிரகாசிக்க வேண்டுவது இன்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகா சம் இன்மையானும்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

பிரபஞ்சம் போலத்தோற்ற முற்று நின்ற ஒரு உள் பொருளுக்கு நிலையுந்தன்மை இல்லை ஆகலானும், முயற் கோடு போலத்தோற்றமில்லாத ஒரு இல்பொருளுக்கு நிலை யுந்தன்மையோடு தோற்றமும் இல்லை ஆகலானும் இவ் விரண்டுமே அசத்தாம் என முடிக்கப்படுமாகலான் தோற்ற மும் தோற்றமின்மையும் ஆகிய இவ்விரண்டு தன்மைகளு மின்றி மனம்வாக்குக்களுக்குஎட்டாத காரணத்தால் தோற்ற மின்மையும், மெய்யுணர்வுக்கு விடயமாகும் காரணத்தால் தோற்றமுண்மையும் ஆகிய இவ்விரண்டு தன்மைகளும் ஒருங்குடையதாயிருந்த அந்த ஒன்றே சத்தாயுள்ள சிவமாம் என்று உணரல் வேண்டும் என்றதாம்.

பிரபஞ்சம் பிரகாசம் உடையது. அதாவது கண்ணுக்கும் கருத்துக்கும் தோற்றம் அளிப்பதான ஒரு உள்பொருளாயுள் ளது. ஆனால் என்றும் நின்று பிரகாசித்தற்கு வேண்டிய தன்மை அதாவது நிலையுந்தன்மை அதற்குஇல்லை ஆகலான் அது அசத்தெனப்பட்டது. சத்தாயுள்ள சிவமோ பிரகாசம் இல்லாதது, அதாவது கண்ணுக்கும் கருத்துக்கும் தோற்றப் படாதது. ஆனால் என்றும் நின்று பிரகாசிக்கின்ற தன்மை அதாவது நிலையுந்தன்மை அதற்கு உண்டாகலின் அது சத் தாயிற்று.

முயற்கோடு அப்பிரகாசம் உடையது. அதாவது கண்ணுக்கும் கருத்துக்கும் தோற்றப்படாதது. அதனால் பிர காசம் என்பது அதாவது தோற்றம் என்பதே அற்கு இல்லை ஆகலான் சூனியப்பொருளாய் அதுவும் அசத்தெனவேகருதப் பட்டது. சத்தாயுள்ள சிவமோ முயற்கோடுபோல அப்பிரகாசம் உடையது. அதாவது கண்ணுக்கும் கருத்துக்கும் தோற்றப் படாததேயானாலும் மெய்யுணர்வுக்குத்தோற்றப்படுங் காரணத்தால் முயற்கோடு போலச் சூனியமாகாதாய்ச்சத்துப் பொருளேயாயிற்று.

ஆகவே உலகம் போலவும் முயற்கோடு போலவுமன்றி என்றும் நின்று நிலையும் தன்மையும், மெய்யுணர்வுக்கு விடயமாந்தன்மையும் உள்ளதாயிருந்த அந்த ஒன்றே சத் தாயுள்ள சிவம் என்றான் ஆசிரியன் என்க.

சத்தாயுள்ள சிவபரம்பொருள் இவ்வாறு மெய்யுணர்ந் தார்க்கு விடயமாம் என்பதை மெய்கண்டான் ஒருதலையாகக் கூறினமையின் அது குறித்து ஐயப்படற்கு இடனின்றாம் எனவே அறிக. அதனால் ஆசிரியன் மெய்கண்டான் மெய் கண்டானேயாம் என்பதையும் நாம் இங்கு மருட்கைக்கு இடனின்றி உணரல் வேண்டும் என்பதே.

பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவது இன்மை யான் என்றது, சத்தாயுள்ள சிவத்தை அசத்தாயுள்ள பிரபஞ் சத்தின் வேறாய்க்கருதுக என்றற்காம். அப்பிரகாசத்தினுக்கு பிரகாசம் இன்மையான் என்றது, சத்தாயுள்ள சிவத்தைமுயற் கோடு போன்ற சூனியத்தின் வேறாய்க் கருதுக என்றற்காம்.

இவ்வாறு கூறவே சிவம் என்னும் சத்துப்பொருள் பிரபஞ்சம் போலத் தோற்றப்படாததாயினும் என்றும் நின்று நிலையும் தன்மையால் அது சத்தாயிற்று எனவும், முயற்கோடு போலச் சூனியமாய்த் தோன்றினும் மெய்யுணர்ந்தார்க்கு விடயமாந் தன்மையால் சூனியமாகாதாய்ச்சத்தாயிற்று எனவும் அறிக என்றானாம் என்பது.

இன்னும் இதனானே அசத்து இருவகையது என்றும் அறிக என்றதாம். ஒன்று, பிரபஞ்சம் போன்ற உள் பொருளாகிய அசத்து என்பது. மற்றொன்று, முயற்கோடு போன்ற இல்பொருளாகிய அசத்து என்பது. சிவமாகிய சத்துப்பொருள் இவ்விரண்டினும் வேறான ஒன்றாம்என்பது. அது பிரபஞ்சம் போன்று உள்ளதுமாகாதாய், முயற்கோடு போன்று இல்லதுமாகாதாய் உள்ள ஒன்றாம் என்பது.

இதனால் என்றும் நின்று நிலையுதல் உடைய அந்த ஒன்றே சத்தெனவும், தோன்றி நின்று நிலையாததும் தோன்றாமே நிலையாததுமான அவை அனைத்தும் அசத் தெனவும் வரையறுத்தான் ஆசிரியன் என்க.

அஃவைகளால் சுட்டி அறிய வியலாமை பற்றிப்பதிப் பொருளை அதுவே என்று சுட்டியொழிந்தான். அது மகா வாக்கியப்பொருள் மொழியாம் என்று உணர்க.

பிரகாசிக்க வேண்டுவது-நிலையுந்தன்மை. பிரகாசம்-தோற்றுமுற்று நிற்றல். சொற்குணமறியாது இங்கெல்லாம் குழப்பமாகவே உரைத்துச் சென்றாரும் உளர்.

**எண்ணிய சத்தன் றசத்தன் றாம் என் றால்என்**
**கண்ணி உளதென்றல் மெய்கண்டாண் எண்ணி**
**அறிய இரண்டாம் அசத்தாதல் சத்தாம்**
**அறிவறியா மெய்சிவன்தாள் ஆம்.**

என்பது உரைப்பாட்டு. இது அறிவறிந்த ஒன்றும் அறிவறியா ஒன்றும் மேல் அசத்து எனப்பட்டமையால் அறிவறியாப் பிறி தொன்றும் உண்டால், அதுவே சத்தாயுள்ள சிவனருளாம் என்பது உணர்த்தி மேற்கோளை வலியுறுத்துகின்றது.

கண்ணழிவு:- எண்ணிய சத்து அன்று, அசத்து அன்றாம் என்றால் என் கண்ணி உளது என்றல் என்பையாயின் மெய்கண்டான் எண்ணி அறிய அசத்து இரண்டு ஆம் ஆதல்-ஆதலால் அறிவறியா மெய்யே சத்து ஆம் சிவன்தாளாம் எ. து.

பொழிப்புரை;- மாணவகா, பதிப்பொருளானது அறிவினால் சுட்டி அறியப்படுவதான பிரபஞ்சம் போன்ற உள் பொருளும் அன்று, அறிவினால் சுட்டி அறியவாராத முயற்கோடு போன்ற இல்பொருளும் அன்றாம் என்றால் அத்தகைய ஒன்றுண்டெனக்கோடல் யாது பிரமாணம் கருதியோ என்றாயாயின், மெய்ப்பொருளைக் கண்டவன் ஒருவன் தன் அறிவில் வைத்து ஆராய்ந்து அறியுங்கால் அசத்து"எனப்படுவதொன்றே உணர்வு வகையால் இரண்டு ஆவதாம். அவை அறிவறிந்த சுட்டாகிய பிரபஞ்சம் போல்வதான அசத்து என்பதொன்றும், அறிவறியாப் பொய்யாகிய முயற்கோடு போல்வதான அசத்து என்பதொன்றுமாக இரண்டாம். ஆகவே அவ்விரண்டுமன்றி அறிவறியா மெய்யென ஒன்றும் உண்டால், அதுவே சத்தாயுள்ள சிவனருளாம் எ. று.

எண்ணிய சத்து அன்று அசத்து அன்று என்றது பிரபஞ்சம் போன்ற உள் பொருளையும், முயற்கோடு போன்ற இல் பொருளையும் கருத்திற்கொண்டு மாணாக்கன் கூற்றாய் வந்தது எனக்கருதுக.

இங்கு அறிவறியா மெய் என்ற குறிப்பினால் அறிவறியாப் பொய் என ஒன்றும் இருந்தது, அதுவே முயற்கோடு போன்ற சூனியப்பொருளாம் என வுணர்க.

அறிவறிந்த சுட்டெல்லாம் அசத்து ஆம் என்பது மேலை அதிகரணத்து உரைப்பாட்டால் உணர்த்தப்பட்டதாகலின் இந்த உரைப்பாட்டால் அறிவறியாப்பொய் என ஒன்று அசத்து ஆம் என்பதும், அறிவறியா மெய் என ஒன்று சத்து ஆம் என்பதும் உணர்த்தப்பட்டன.

படவே இச்சூத்திரத்துள் இதுகாறும் ஆசிரியன் கையாண்ட அளவைகள் மூன்றென அறியலாம். அவை வருமாறு: ஒன்று-அறிவினால் அறியப்பட்ட சுட்டு அசத்தாம்

என்பது ஒரு அளவை. அதற்கு உதாரணம் பிரபஞ்சம் என்பது. இரண்டு-அறிவினால் அறிய வாராத பொய் அசத்தாம் என்பது ஒரு அளவை. அதற்கு உதாரணம் முயற்கோடு என்பது. மூன்று-அறிவினால் அறிய வாராத மெய் சத்தாம் என்பது ஒரு அளவை. அதற்கு உதாரணம் சிவனருள் என்பதாம். இங்குக் கூறப்பட்ட மூன்றாவது அளவையை அளவை என்றலினும் அனுபவம் என்றலே வலியுடைத்தாம் எனக் கருதுக.

என்றால் என்பதனைப் பின்னும் கூட்டி உரைக்க. ஆதலால் எனற்பாலது ஆதல் எனக்குறைந்து நின்றது, அறிவறியா மெய் சத்து ஆம் சிவன் தாளாம் எனக்கொண்டு கூட்டிப்பொருள் உரைக்க.

மேற்கோளின்கண் இவ்விரண்டு தன்மையுமின்றி என வந்த பகுதி மட்டும் இங்கு இந்த உரைப்பாட்டால் விளக்கப் பட்டது. பதிப்பொருள் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்கும் இயல்பு இனிவரும் நான்கு பாட்டுக்களானும் வலியுறுத்துவான் ஆசிரியன் எனவுணர்க.

**உணர்வ தசத்தா தல் ஒன் றுணரா தொன்றை**
**உணரும்நீ தானுணராய் ஆயின் உணர்உருவின்**
**தானிரண்டாம் மெய்கண்டான் தன்னால் உணர்தலால்**
**தானிரண்டாய்க் காணான் தமி.**

என்பது உரைப்பாட்டு. இது மேற்கோளை வலியுறுத்தும் முகத்தால் பதிப்பொருள் வாக்கு மனாதீதமாயும் கோசரமாயும் நிற்கும் இயல்பினை முறையே உருவவழிபாட்டிலும் மெய்கண்டான் அனுபவத்திலும் வைத்து உணர்த்துகின்றது.

கண்ணழிவு:— உணர்வது அசத்து ஆதல்-ஆதலால் ஒன்று-ஒன்றானும் உணராத ஒன்றை உணரும் நீதான்-தானும் உணராய். உணர்ந்தேன் என்பையாயின் உணர் உருவின் அதுதான் இரண்டாம்-வேறாம். மெய்கண்டான் தன்னால் உணர்தலால் தமியை தன்னின் இரண்டாய்க் காணான்-ஒன்றாய்க் காண்பன் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, ஆன்ம உணர்வால் உணரப் படும் பொருள் எல்லாம் அசத்தாம் ஆதலின்யாதொன்றானும் உணரவொண்ணாத சிவபரம்பொருளை யாதானும் ஒரு உருவ் வழிபாட்டில் வைத்து உணர முற்பட்ட நீதானும் அதனை உண்மையில் உணர்குவாயல்லை. உணர்ந்தேன் என்று நீ சாதிப்பையாயின் நீ உணர்ந்தது அந்தத்தியான உருவையேயன்றி மெய்ப்பொருளை அன்றாம். அது நீ உணர்ந்த அந்த உருவின் வேறாகவே இருந்ததாம். பெத்த நிலை கடந்து முத்தி நிலையில் நின்று மெய்ப்பொருளைக் கண்டவன் ஒருவன் அதனைத் தன் ஆன்ம உணர்வால் உண ராது மெய்யுணர்வால் உணர்வான் ஆதலால் அவன்அதனைத் தன்னின் வேறாய் உணரமாட்டான், தன் மெய்யறிவில் பிரி யாது நின்ற ஒன்றாகவே உணர்வன் எ. று.

எனவே, அங்ஙனம் அவன் உணர்ந்த அந்த ஒன்றே சத்தாயுள்ள சிவனருளாம் என்பது.

உருவ வழிபாட்டில் வைத்துச் சத்தினை உணர்தல் என்பது சத்தினை உணர்ந்ததாகாது எனவும், மெய்யுணர் வால் தான் அவன் என்ற வேற்றுமையின்றி ஏகனாய் நின்று உணர்வதொன்று மட்டுமே சத்தினை உணர்ந்ததாம் எனவும் ஆசிரியன் இங்கு உணர்த்திய வகையால் பதிப்பொருள் வாக்கு மனங்கட்கு அப்பாலாய் நின்று மெய்யுணர்வுக்கு மட்டுமே விடயமாம் இயல்பு வலியுறுத்தப்பட்டவாறறிக.

சத்தும் அசத்தும் வரை செய்து உணர்த்துகின்றவிடத்து மெய்யுணர்வார் உணர்வு நெறிக்கு உருவ வழிபாட்டு உணர்வு நெறியும் புறம்பாம் ஆகலின் ஆசிரியன் இவ்வாறு கூறினான் ஆயினும் பதியை உள்ளவாறு உணர்ந்து சீவன் முத்தராயினார்க்கு உருவ வழிபாடும் பொருந்துவதே என் பதைச் ‘‘செம்மலர் நோன்தாள் சேரலொட்டா, அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ, மாலற நேயம்மலிந்தவர்வேடமும் ஆலயந் தானும் அரன் எனத் தொழுமே’’. என வரும் பன்னிரண்டாம் சூத்திரத்தால் அறிக. பின்வரும் பாவக வழி பாட்டு உணர்வு நெறிக்கும் ஈதொக்கும்.

ஆதலால் எனற்பாலது ஆதல் எனக்குறைந்து நின்றது. ஒன்றானும் எனற்பாலது மூன்றனுருபும் முற்றும்மையும் தொக்கு ஒன்று என நின்றது. தமி-தம்மை உடையது. அதாவது தாம் என்ற பன்மைச் சொல்லாற்குறிக்கப்படும் ஆன்மாக்களை ஆளாகவுடைய முதல்வன் என்ற பொருள் தருவதாம். தமியை என ஆண்டு ஐயுருபு விரிக்க.

இனி, யோகநூலிற்கூறப்படும் பாவகவழிபாட்டு உணர்வு நெறியும் ஈண்டுக்கூறப்பட்ட உருவ வழிபாட்டு உணர்வு நெறியோடு ஒரு புடை ஒத்ததே ஆகலான் அதுவும் மெய்யுணர்வார் உணர்வு நெறிக்குப்புறம்பாம் என்பதை அடுத்து வரும் உரைப்பாட்டால் ஆசிரியன் உணர்த்துவான் என அறிக.

> **பாவகமேல் தான்சத்தாம் பாவனா தீதமெனின்**
> **பாவகமாம் அன்றென்னில் பாழதுவாம் பாவகத்தைப்**
> **பாவித்தல் தானென்னின் பாவகமாம் தன்னருளால்**
> **பாவிப் பதுபரமில் பாழ்.**

என்பது உரைப்பாட்டு. இதுவும் மேற்கோளை வலியுறுத்து கின்ற முகத்தால் பாவக வழிபாட்டு உணர்வு நெறியில் வைத்து உணர்த்துகின்றது.

கண்ணழிவு:- பாவகமேல் தான் அசத்து ஆம். பாவனா தீதம் எனில் பாவகமாம். அன்று என்னில் அது பாழ் ஆம். பாவகத்தைப் பாவித்தல் தான் என்னில் அதுவும் பாவகம் ஆம். தன் அருளால் பாவிப்பதுவே பரம் ஆம். அது பாழ் இல் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, சத்தாய் உள்ள பதிப் பொருளை யாதானும் ஒரு பாவக உருவில் வைத்து யான் உணர்ந்தேன் என்பையாயின் உணர் உரு அசத்து என்னும் அளவையால் நீ உணர்ந்தது அசத்தாய் முடிந்தது. அங்கு உணர்ந்தது பாவக உருவை அன்று, அதற்கு அதீதமாய்ப் பாவனைக்கு எட்டாத ஒன்றையே நான் உணர்ந்தேன் என்பையாயின் பாவனைக்கு எட்டாத ஒன்றை ஒரு வாற்றானும் அங்குஉணர முடியாதாகலின் நீ உணர்ந்தது பாவக உருவே எனப்பட்டு அதுவும்அசத்தாயேமுடிந்தது.அற்றன்று,அவ்வுரு

வில் பாவனைக்கு எட்டாத வேறு ஒன்றைத்தான் உணர்ந் தேன் என்று மீளவும் சாதிப்பையாயின் பாவனைக்கு எட்டாத ஒன்று சூனியமும் மற்றொன்று பதிப்பொருளும் ஆம்ஆகலின் அங்கு நீ உணர்ந்தது முயற்கோடு போல்வதோர் சூனியமே யன்றிச் சத்து ஆகாது என்பதே. இனிப் பாவக உருவினைப் பாவனைக்கெட்டாத் பதிப்பொருளாகவே பாவித்து உணர்ந் தேன் என்பையாயின் அங்கும் நீ உணர்ந்தது பாவக உருவே எனப்பட்டு அசத்தாயே முடிந்தது. ஆகலான் மெய்கண்டான் பதிப்பொருளை உணர்ந்தான் என்றால் அது நீ உணர்ந்த் வாறு அன்று. முற்செய் தவத்தாலும் இருவினை ஒப்பு உணர் வாலும் முதல்வனே குருவாய் வந்து உணர்த்த ஞானத்தி தினை உணர்ந்து,அவனே தான் ஆகிய நெறிக்கண் ஏகனாகி இறைபணி நின்று, அவனருளையே காட்டாகக்கொண்டு தான் அவன் என்னும் வேற்றுமை உணர்வின்றியிருந்த அம் மெய்யுணர்வால் உணர்ந்த அந்த ஒன்றே சத்தாயுள்ள சிவ பரம்பொருளாம். அது ஒரு வாற்றானும் சூனியமாதல் இல்லை எ. று.

வாக்கு மனங்கட்கு எட்டாத பதிப்பொருளை உருவ வழி பாட்டால் உணர்வ என்பது மெய்யுணர்வு ஆகாது என்ப தனை மேலை வெண்பாவால் உணர்த்திய ஆசிரியன் இந்த வெண்பாவால் பாவகவழிபாட்டால் உணர்வதும் மெய்யுணர் வாகாது என்று உணர்த்தினான்.

உருவ வழிபாடும் பாவக வழிபாடும் ஒருவாறு ஒத்ததே என்றாலும் முன்னதில் வழிபடுவான் கண்ணுக்கு முன்னால் நின்றது உருவமும், பின்னதில் அவன் மனத்திற்கு முன்னால் நின்றது உருவத்தின் நிழலுமாகிய வேற்றுமை கருதி இதனை வேறு கூறினான் ஆசிரியன் எனவுணர்க. இவ்விரு வகை யானுமன்றி மெய்யுணர்வால் உணரும்போது கண் மனம் புருடன் ஆகிய மாயாகாரிய தத்துவங்கள் அனைத்துமே புறம் பாய்க்கழியச் சிவனருள் வழிப்பட்ட ஒருவகை மெய்யுணர்வே ஆன்மாவில் முனைத்து நிற்கும் என்பதறிக. அதனைச் சொல் லால் உணர்த்தலும் உணர்தலும் அரிதாம். அனுபவம் ஒன்றால் மட்டுமே தெளியுலாம் என்பது.

சிவாலயத்துக் கருவறையின் கண்ணே விளங்கும் இலிங்கத்திருமேனியோடு முக்கண்ணும் நாற்றோளும் கறைமிடறும் கங்கை வெண்பிறைதங்கிய செஞ்சடையும் அப்பயவரதத்துடன் மான் மழுவேந்தும் திருக்கரங்களும் முதலிய அங்க அடையாளங்களோடு கூடிய திருமேனிமுதலியனவும்சத்துப்பொருள் என இங்கு வரையறுக்கப்பட்ட சிவபரம்பொருளுக்குத் திருமேனிகளாக வேதகாலந்தொட்டு அறிவுறுத்தப்பட்டு வந்தனவாகலானும், அவற்றுள் யாதானும் ஒன்றை உருவ வழிபாட்டின் கண்ணும் பாவக வழிபாட்டின் கண்ணும் வரித்துக் கொண்டு வழிபடல் மரபாயிருந்து வருகின்றதாகலானும், அவ்வழிபாட்டு உணர்வுகளால் ஈண்டுச் சத்தென வரை செய்யப்பட்ட பதிப்பொருள் எனைத்தானும் உணர்தற்கு இயலாது என்பதனைச் சித்தாந்தம் முடித்து உணர்த்தும்; அம்மரபினை ஒட்டியே மெய்கண்டானும் ஈண்டு அக்கோட்பாடுகளை ஏற்றவாற்றால் மறுத்துச்சிந்தாந்த மரபை நிலைநாட்டினான் எனவுணர்க.

பாவகவழிபாட்டுணர்வு என்பது ஒன்றேயாகவும்அதனைப் பல்லாற்றானும் விவகரித்து மறுத்தான் இந்த உரைப்பாட்டால் ஆசிரியன் என்க.

சத்தென வரையறுக்கப்பட்ட பதிப்பொருள் யாதொரு அளவையினாலும் உணர்தல் அருமை குறித்து அதனை யாதானும் ஒரு பாவக உருவில் வைத்து உணர்வதாம் எனின் அறிவறிந்த சுட்டெல்லாம் அசத்து என்னும் அளவையால் அது சத்தினை உணர்ந்ததாகாது என்பதூஉம், உணர்ந்தது பாவக உருவினை அன்று, அவ்வுருவில் பாவனாதீதம் எனப்பட்ட பதிப்பொருளைத்தான் உணர்ந்தது எனின் பாவனாதீதம் எனப்பட்ட ஒன்றை ஒருவாற்றானும் உணர்தற்கு இயலாதாகலின் அங்கு உணர்ந்ததும் பாவக உருவே எனப்பட்டு அதுவும் சத்தினை உணர்ந்தது ஆகாது என்பதூஉம், உணர்ந்தது பாவக உருவினையன்று, அவ்வுருவில் வேறு ஒன்றையே உணர்ந்ததாம் என மீளவும் சாதிக்கின் அங்கு உணர்ந்தது முயற்கோடுபோல்வதோர் சூனியமேயன்றி அதுவும் சத்தினை உணர்ந்ததாகாது என்பதூஉம், இவ்வாறன்றிப் பாவக உருவினைப் பாவனாதீதப் பதிப்பொருளாகப்பாவித்து உணர்ந்ததாம் என்னின் அதுவும் மேற்கூறிய

பாவகமே எனப்பட்டுச் சத்தினை உணர்ந்ததாகாது என்ப தூஉம் இதனால் முடித்து உணர்த்தப்பட்டதாம் என்க.

அறிவால் அறியப்பட்டனவெல்லாம் அசத்தும்,அறிவால் அறியவாராதன ஒன்று சூனியமும் மற்றொன்று பதிப்பொரு ளும் ஆமாகலின்,''அன்றென்னிற் பாழது வாம் என்றான்''. அறிவால்அறியவாராத மெய்ப்பொருள்ஒன்றும் உண்டெனக் கோடல் ஒருதலை என்பான் ''தன்னருளாற்பாவிப்பதுவே பரம், அது பாழ் இல்'' என்று முடித்துக் கூறினான் என்க.

யோக நூல்களில் கூறப்பட்ட பாவக வழிபாட்டு உணர்வு நெறிகள் இங்ஙனம் மறுக்கப்பட்ட காரணத்தால் யோகப் பயன் வேறு, ஞானப்பயன் வேறு எனவே நாம் இங்கு உணர் தல் தகும். அவை,முன்னது சாரூபம் எனவும் பின்னது சாயுச் சியம் எனவும் ஆகமங்கள் தெரிவிப்பன கொண்டு உணரலாம். அற்றாகலினன்றே பின்னர் எட்டாம்சூத்திரத்துள், ''ஈண்டிவ் வான்மாக்கட்கு முற்செய்தவத்தால் ஞானம் நிகழும் என்றது மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி அவை நன் னெறியாகிய ஞானத்தினைக்காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்''. என ஆசிரியன் மேற்கொண்டதாம் என்பது. எனவே சரியை கிரியை யோகம் ஆகிய தவங்களி னும் நன்னெறியாகிய ஞானநெறியே தலையாய தவம் என்பதையும் நாம் இங்கு உணர்தல் வேண்டும்.

பாவனாதீதம் என்பது வடநூல் முடிவு. பாவிப்பதுவே என்று வரற்பாலது ஏகாரம் தொக்கு வந்தது, அது தேற்றே காரம்.

தன் அருளால் பாவிப்பதுவே பரம் என்றதால் அருளும் பரமும் வேறு வேறன்று என்பதும், அருளை உணர்ந்தாலே பரத்தை உணர்ந்ததாம் என்பதும் பெறுதும். இன்னும் இதனானே அருளை முதற்கண் உணர்ந்து அவ்வருட்கு ஊற்றிடமான அருட்பிழம்பினை இதுவே அதுவாம் என்னும் பாவனையோடு உணர்தலே பரத்தை உணர்தலாம்என்பதும் பெறுதும். இதனைச் சொற்களால் சொல்லற்கரிதாம். அனு பவத்தால் உணர்ந்து கொள்க.

உருவினை உணர்ந்தது, உருவில் அதீதமான ஒன்றை உணர்ந்தது, உருவில் யாதோ ஒன்றை உணர்ந்தது, உருவையே அதீதமாகப் பாவித்து உணர்ந்தது எனவரும் நான்கு வகைக்கூற்றுக்களும் இங்கு மறுப்புண்டவாறறிக.

இனி வாக்குமனாதீதமாயுள்ள பதிப்பொருள் பெத்த காலத்தறிவால் ஒருவாற்றானும் அறியப்படாது என்பதனை உணர்த்த வருவது அடுத்த உரைப்பாட்டு.

**அறிய இரண்டல்லன் ஆங்கறிவு தன்னால்**
**அறியப் படானறிவின் உள்ளான் அறிவுக்குக்**
**காட்டாகி நின்றானைக் கண்அறியா மெய்யென்னக்**
**காட்டா தறிவறிந்து கண்டு.**

என்பது உரைப்பாட்டு. இது மேற்கோளை வலியுறுத்தும் முகத்தால் பதிப்பொருள் பெத்த காலத்தறிவால் எனைத் தானும் அறியப்படாது என்பது உணர்த்துகிறது.

கண்ணழிவு:- அறிவின்கண் உள்ளானை அறியஇரண்டு அல்லன் ஆகலான் ஆங்கு அறிவு தன்னால் அவன் அறியப் படான். கண் அறியா மெய் என்ன அறிவுக்குக் காட்டாகி நின்றானை அறிவு கண்டறிந்து காட்டாது எ. து.

பொழிப்புரை:- மாணவகா, அறிவின்கண் அறிவாய் இருந்த முதல்வனை நீ அறிய முற்படின் அவன் அறிவுக்கு வேறாய் நிற்பவனல்லன். ஆகலான் பெத்தகாலத்தறிவால் அவன் எனைத்தானும் அறியப்படுவானல்லனாம். மெய்யினுக்குக் காட்டாயிருந்த கண்ணினை அம்மெய் அறியாதாற்போல அறிவுக்குக் காட்டாயிருந்த முதல்வனை அவ்வறிவும் அறியாது, அறிந்து காட்டாது எ. து.

மங்கிய இருளில் காட்டு வழி நடந்து செல்கின்றுழிக் காலிற் பட்ட பரிசம் தாம்பினதா பரம்பினதா என்பதைக் கண்ணே அறிந்து காட்டுமாதலின் கண் காட்டாய் நின்றமை பெறப்படும்.

A. No. 25415



அறிவுக்குக் காட்டாய் நின்றான் முதல்வன் எனப் பொருட் கண் வந்தமையால் மெய்யினுக்குக் கண் காட்டாய் நின்றதென உவமைக்கண் வாங்கி உரைக்கப்பட்டது.

அறியும் தன்மை மெய்க்கு இன்மையான் அஃது ஈண்டு உவமையாதற்குச் சாலாது என்றுரைத்து வேறு வகையால் பொருள் செய்து இடர்ப்பட்டாரும் உளர். கண்டறியும் அறிவு கண்ணுக்கு இருந்தாற் போலத் தொட்டறியும் அறிவு மெய்க்கும் உண்டாம். ஆகலின் அவர் உரை வலியுடைத் தன்றாம் என விடுக்க.

கண்டறிந்து காட்டாது என்பதனை ஒரு சொல் நீர்மைத் தாகக்கொண்டு கண்டறியாது, காட்டாது எனப்பொருள் உரைக்க.

ஆங்கு என்பது பெத்த காலத்தை உணர்த்திற்று.

பெத்த காலத்தியல்பு இவ்வாறெனவே முத்திக்காலத் தியல்பு முற்றிலும் வேறாம் என வுணர்க. அது அடுத்துவரும் உரைப்பாட்டால் உணரப்படும்.

இதனால் பதிப்பொருள் வாக்கு மனாதீதமாய் நிற்கும் இயல்பு உணர்த்தப்பட்டது. அது கோசரமாம் இயல்பு இனி வரும் உரைப்பாட்டால் உணரலாம்.

**அதுவென்னும் ஒன்றன் றதுவன்றி வேறே**
**அதுவென் றறியறிவும் உண்டால் அதுவென்**
**றறிய இரண்டலலன் ஆங்கறிவுள் நிற்றல்**
**அறியுமறி வேசிவமும் ஆம்.**

என்பது உரைப்பாட்டு. இது மேற்கோளை முற்றவும் வலி யுறுத்தும் முகத்தால் பதிப்பொருள் முத்திக் காலத்தே கோசரமாம் இயல்பினை முடித்து உணர்த்துகின்றது.

கண்ணழிவு:- அது என்னும் ஒன்று அன்று. அதுவன்றி வேறே. அது என்று அறியும் அறிவும் ஆங்கு உண்டு. அது என்று அறிய ஆங்கு அவன் இரண்டு அல்லன். அறிவுள் நிற்றலால் அறியும் அறிவே சிவமும் ஆம் எ. து.

பொழிப்புரை :- மாணாக்கனே, பதிப்பொருள், அது ஒரு பொருளாம் என்று அறிவினால் சுட்டி அறியப்படும் பிரபஞ்சம் போன்ற அசத்தும் அன்று. அங்ஙனம் சுட்டி அறிய வாராத முயற்கோடு போன்ற சூனியமும் அன்றாய் அதனின் வேறாய் உள்ள ஒரு சத்துப்பொருளேகாண். சத்தாகிய பதிப் பொருளைப் பதிப்பொருளே என்று அறியும் மெய்யறிவும் மெய்கண்டான் ஒருவனுக்குஅம்முத்திக்காலத்தே உள்ளதாம். அப்பொழுது அவன் அதனை அது என்று சுட்டாது அறியுங் கால் அது அவன் அறிவுக்கு வேறாய் நின்றதுமன்று. அது அவன் அறிவுக்குள் அறிவாய்ப் பிரிவின்றியே நிற்றலால் அதனை அறியும் அவ்வறிவே சிவமாதலும் ஆம் எ. று.

அறியும் அறிவே சிவமும் ஆம் என்றதால் அப்பதிப் பொருள் ஓராற்றால் சுட்டாது உணரப்பட்டது என்பது பெற்றாம். இதனை உணர்ந்து கொள்ளற்கு முதிர்ந்த அனுபவம் வேண்டும்.

இதனால் பதிப்பொருளாகிய முதல்வன் பிரபஞ்சம் போன்ற அசத்தும் அல்லனாய், முயற்கோடு போன்ற சூனியமும் அல்லனாய், ஒரு வாற்றான் உணரப்படும் சத்தேயாவன் என்பதும், பெத்த காலத்தில் அவன் உணரப்படான் ஆயினும் முத்திக்காலத்தில் ஒருதலையாய் உணரப்படுவான் என்பதும், அவ்வாறு உணரும்போது அவன் அறிவிற் பிரிவின்றியே நிற்பன் என்றதால் மெய்கண்டான் அவனை அறிவுக்கு வேறாய் அறியான் என்பதும், அங்ஙனம் ஒன்றி நின்றறிந்த அறிவே சிவமும் ஆம் என்றதால் அம்மெய்யறிவிற்கு அவன் ஒருதலையாய்க் கோசரப்பட்டானாம் என்பதும் உணர்த்தினான் ஆசிரியன் எனக்கொள்க.

இவ்விரண்டு பாட்டானும் பதிப்பொருள் பெத்தகாலத்தில் வாக்குமனாதீதமாயும், முத்திக்காலத்தில் கோசரமாயும் நிற்கும் இயல்பு உணர்த்தப்பட்டு மேற்கோள் முற்றவும் வலியுறுத்தப்பட்டவாறு அறிக.

அது என முன்னர்வந்த சுட்டுக்கள் இரண்டனுள் முன்னது பிரபஞ்சம் போல்வதோரசத்தையும்,பின்னது முயற் கோடு போல்வதோரசத்தையும் சுட்டின, அவையிரண்டுமே

அசத்தெனப்படுதலின், பின்னர் வந்த சுட்டுக்கள் இரண்டும் சத்தாகிய பதிப்பொருளைச் சுட்டின.

மேலை வெண்பாவில் வந்த ஆங்கு என்பது பெத்த காலத்தையும், இந்த வெண்பாவில் வந்த ஆங்கு என்பது முத்திக்காலத்தையும் உணர்த்தின. ஆல்-அசை. நிற்றலால் எனற்பாலது நிற்றல் என நின்றது.

சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த்தப்புக்கஆசிரியன் இச்சூத்திரத்தால் பாசம் எனப்பட்ட பிரபஞ்சம் அசத்தெனவும் பதியெனப்பட்ட முதற்பொருள் சத்தெனவும் உணர்த்திப் பசு வெனப்பட்ட ஆன்மாக்களின் இயல்பு அடுத்துவரும் புறனடைச் சூத்திரத்தால் உணர்த்துவான் என அறிக.

ஆறாம் சூத்திரம் முற்றியது.

## ஏழாம் சூத்திரம்

**யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்**
**சத்தே அறியா தசத்தில் தறியா**
**திருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா.**

*என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின் மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.*

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமாய் வந்த இவை ஆசிரியன் உரைத்தவை.

மேல் சத்தும் அசத்தும் வரை செய்து உணர்த்திய வகையால் எஞ்சி நின்ற சத்தசத்தாகிய ஒழிபினை விளக்குகின்றது இச்சூத்திரம் என்பது. அதனால் இது புறனடை ஆயிற்று.

மேலைச்சூத்திரத்தால் பாசம் எனப்பட்ட பிரபஞ்சம் அசத்தாம் எனவும், பதி எனப்பட்ட முதற்பொருள் சத்தாம் எனவும் உணர்த்தினான். பசு எனப்பட்ட ஆன்மா சத்தசத்தாம் என்பது ஆண்டு உணர்த்தப்படாது எஞ்சி நின்றதாகலான் அந்த ஒழிபினை உணர்த்துகின்றது இச்சூத்திரம் என்பது.

கண்ணழிவு:- சத்து எதிர் யாவையும் சூனியம் ஆகலின் சத்து அசத்தை அறியாது. அசத்து இலது ஆகலின் அதுவும் சத்தை அறியாது. இருதிறன் அறிவு உள்ள அது இரண்டும் அல்லாத ஆன்மாவாம் எ. து.

பொழிப்புரை:- சத்தாகிய பதிப்பொருட்கு முன் அசத்தாகிய பிரபஞ்சம் முயற்கோடு போலச் சூனியமாய்த் தோற்றமளிக்கும் ஆதலின் சத்து அசத்தை என்றுமே அறியாது. அசத்தாகிய பிரபஞ்சமும் சத்தின்முன் சூனியமாய் இல்லாத ஒன்றே ஆகலின் அதுவும் சத்தினை அறியாது. அவ்விரண்டையும் அறிவதாகிய இருவகை அறிவினால் அவ்விரண்டையும் அறிந்து, அவ்விரண்டன்பாலும் சார்ந்துநிற்கும் இயல்பினதாயுள்ள அந்த ஒன்றே அவ்விரண்டுமல்லாத மூன்றாவதொன்றாகிய ஆன்மாவாம் எ. று.

எனவே அசத்தை அறிந்து சார்ந்து அசத்தாயும், சத்தை அறிந்து சார்ந்து சத்தாயும் விளங்கும் ஈரியல்பும்ஆன்மாவுக்கு உண்டென்பது இதனாற்பெற்றாம். அதனால் ஆன்மாச் சத்தும் ஆகாதாய் அசத்தும் ஆகாதாய்ச் சத்தசத்தாம் என் பதும் பெறப்பட்டது. சத்து அசத்து-சத்தசத் து-சதசத்து என்று ஆம்.

இரு திறன் அறிவு என்றது அசத்தையும் சத்தையும் அறியும் இருவகை அறிவு என்றதாம். அசத்தாலே அசத்தை அறிந்து அசத்தைச் சார்ந்து நிற்கும் நிலை பெத்த நிலை என்றும், சத்தாலே சத்தை அறிந்து சத்தைச்சார்ந்து நிற்கும் நிலை முத்தி நிலை என்றும் சாத்திரங்கள் கூறும். பிறப்பு நிலை, வீட்டு நிலை என்றும் அவற்றைக்கூறலாம். அவ்விரு நிலைகளிலும் ஆன்மாத்தானே அறியாதாய் அறிவிக்க அறியும் உபதேசியே என்றும் உணர்க.

இரண்டலா ஆன்மா என்றது மூன்றாவதொன்றாகிய ஆன்மா என்றவாறாம். எனவே அசத்து சத்து சத்தசத்து எனப்பொருள் மூன்றென்று வரையறுத்தவாறாயிற்று. இவற்றை முறையே உலகு இறை உயிர் எனவும், பாசம் பதி பசு எனவும் சொல்லிக்காண்க என்பதாம்.

சத்து அசத்து ஆகிய இரண்டு அளவைகளைக்கொண்டே மூன்று பொருள்கள் இங்கு நிச்சயிக்கப்பட்டன என்க.

இலது என்பதற்கு அறிவு இலது என்று உரைத்தாரும் உளர். சூனியமான ஒன்றுக்கு அறிவு உண்டா இல்லையா என்று ஆராய்வது முயற்கோடு குட்டையா நெட்டையாஎன்று ஆராய்தலை ஒக்கும் என்று ஒழிக. அல்லதூஉம் அவ்வுரை ஆசிரியன் கருத்துக்கு முரண்படும் என்பதைப் பின்வரும் உரைப்பாட்டாலும் தெளியலாம் என்பது.

சத்தே அறியாது என்புழி ஏகாரம் அசைநிலை. அசத்து இலது அறியாது என்புழி அசத்தும் என எச்சவும்மை விரித்து உரைக்க. இலது ஆகலின் என ஆண்டு ஒரு சொல் வருவித்து உரைக்க. அறிதல் என்பது இங்கு அறிந்து புசித்தல் என்னும் பொருளதாம்.

அசத்து என்பது இங்குச்சடமாகியஉலகினைக்குறித்தது. என்வே சத்தும் அசத்தைப் புசிக்காது, அசத்தும் சத்தைப்புசிக் காது. சத்தையும் அசத்தையும் புசிக்கும் மூன்றாவதொன்றும் உண்டு. அதுவே ஆன்மாவாம் என்பது சூத்திரக்கருத்தாம் என அறிக.

இச்சூத்திரத்துள், யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின் சத்தே அறியாது என்பது ஒரு அதிகரணம். இரு திறன் அறிவுளது இரண்டலா ஆன்மா என்பது ஒரு அதி கரணம் ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரம் என்பது.

**முதலாம் அதிகரணம்**

*மேற்கோள்:- ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகா சியர்து என்றது, மெய்யினிடத்துப்பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

இங்குச் சத்து என்றது சிவமாகிய பதிப்பொருளை. அசத்து என்றது பிரபஞ்சமாகிய பாசப்பொருளை. பிரகாசி யாது என்றது தோற்றமுறாது என்றதாம். அப்பிரகாசம்-தோற்றமின்மை.

மெய்யினிடத்துப்பொய் தோற்றப்படாதாகலான் சத்தா கிய பதிப்பொருட்கு முன்னால் அசத்தாகிய பிரபஞ்சம் தோற்றப்படாதெனை மேற்கொள்ளப்பட்டது. படவே சத்து அசத்தை அறியாது. அறிந்து புசிக்காது என்பதாம்.

மெய்யினிடத்துப்பொய் அப்பிரகாசமாய் நிற்றலை முயலிடத்துக்கோடு அப்பிரகாசமாய் நிற்றல் போலக்கருதி உணர்க. என்னை, முயல் மெய்யாக முயற்கோடு பொய்யாக லான் என்பது.

**அந்நியம் இலாமை அரற்கொன் றுணர்வின்றாம்**
**அந்நியம் இலான்அசத்தைக் காண்குவனேல் அந்நியமாய்க்**
**காணான் அவன்முன் கதிர்முன் இருள்போல**
**மாணா அசத்தின்மை மற்று.**

என்பது உரைப்பாட்டு. இது சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது என வந்த மேற்கோளை உவமை வாயிலாக வலியுறுத்துகின்றது.

கண்ணழிவு:- அந்நியம் இலாமையான் அரற்கு ஒன்றும் உணர்வின்றாம். அந்நியமிலான் வேறாய் நின்று அசத்தைக் காண்குவனேல் கதிர்முன் இருள் போல மாணா அசத்து அவன்முன் மற்று இன்மையான் அந்நியமாய்க் காணான் எ. து.

பொழிப்புரை:- சத்தாகிய முதல்வன் அசத்தாகிய பிரபஞ்சத்திற்கு வேறாய் நிற்றலின்றி உடனாய் நின்றபடியால் அப்பிரபஞ்சம் அவனறிவிற் சிறிதும்பட்ட தின்றாம். உடனாய் நின்றவன் பிரபஞ்சத்திற்கு வேறாயும் நின்று அதனைக் காண்பனே என்னில் கதிரவனுக்கு முன்னால்இருள்தோன்றா தாற்போல முதல்வற்கு முன்னால் பிரபஞ்சம் தோற்றப் படாதாகலான் அவன் அதனை வேறாய் உள்ளதொன்றாய்க் காணான், இல்லதொன்றாய்க்காண்பன் எ. று.

அந்நியமாய்க் காணான் என்றதால் வேறாய் உள்ள தொன்றாய்க்காணான் என்று உரைக்கப்பட்டது. உள்ள தொன்றாய்க் காணான் என்றதால் இல்லதொன்றாய்க்காண்பன் என்பது சொல்லெச்சம்.

இதற்கு இவ்வாறு உரையாக்கால் "யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின் சத்தே அறியாது", எனவந்த சூத்திரப் பொருள் முற்றாதென அறிக.

இது முதல்வன் பிரபஞ்சத்தோடு உடனாயும் வேறாயும் நின்ற இருநிலைகளிலும் வைத்து மேற்கோளைச்சாதித்த வாறாம் என உணர்க. உடனாய் நின்ற நிலைக்கண் பிரபஞ்சம் அவனறிவில் தோன்றாது எனவும், வேறாய் நின்ற நிலைக்கண் அது சூனியமாய்த் தோன்றும் எனவும் உணர்க என்பதாம்.

கதிரும் இருளும் ஒன்றை ஒன்று அறியாதாக அவ்விரண்டினும் வேறாய் நின்ற கண்ணொளி அவ்விரண்டையும்

அறிந்து துய்த்தாற் போலச் சத்தும் அசத்தும் ஒன்றை ஒன்று அறியாதாக அவ்விரண்டினும் வேறாய் நின்ற சத்தசத்தாகிய ஆன்மா அவ்விரண்டையும் அறிந்து துய்க்கும் என்பதோர் இறைச்சிப்பொருளும் ஈண்டுக்காண்க. என்னை, ''இறைச்சி தானே பொருட் புறத்ததுவே''. என்பது ஒத்தர்கலின்.

அந்நியம் இலாமையான் என ஆண்டு ஆன் உருபு விரித்து உரைக்க. ஒன்று என்பது சிறிது என்னும் பொருட்டு. ஆண்டும் உம்மை விரித்து உரைக்க. மாணா என்பது நிலை யாத என்னும் பொருளில் வந்தது. சத்தினை எதிர்ப்படாதிருக் குங்காறும் உள் பொருளாயிருந்த பிரபஞ்சம் அத்தனை எதிர்ப் பட்டமாத்திரத்தே கதிர் முன் இருள்போலச்சூனியமாம் என்ற தால் மற்று வினைமாற்றின்கண் வந்தது. அந்நியமிலான் அசத்தைக் காண்குவனேல் என்றதால் வேறாய் நின்று என ஒரு சொல் வருவித்து உரைக்கப்பட்டது.

இதனால் சத்தினிடத்து அசத்துப்பிரகாசியாது என்வந்த மேற்கோள் முற்றவும் சாதிக்கப்பட்டவாறு அறிக.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி அசத்தினுக்கு உணர்வின்று என்றது, அதுதான் நிருபிக்கில் இன்றாகலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

இங்கு அசத்து என்றது பிரபஞ்சத்தை. உணர்வு இன்று- உணரும் திறன் இன்று. அது என்பது மேல்வந்த அசத்தைச் சுட்டிய சுட்டு. இன்று ஆகலான்-சூனியம் ஆகலான்.

அசத்தாகிய பிரபஞ்சம் சத்தாகிய பதிப்பொருட்கு முன் சூனியமாம் என்பது மேலை அதிகரணத்தால் நிரூபிக்கப்பட்ட தாகலான் இருந்து பின் இல்லாமற்போன ஒன்றினுக்கு உணரும் திறனும் இன்றாம் என இங்கு மேற்கொள்ளப்பட் டது என்பதாம்.

**பேய்த்தேர்நீர் என்றுவரும் பேதைக்கு மற்றணைந்த**
**பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின் வாய்த்ததனைக்**
**கண்டுணர்வார் இல்வழியில் காணும் அசத்தின்மை**
**கண்டுணரா தில்லதெனக் காண்.**

என்பது உரைப்பாட்டு. இது அசத்தினுக்கு உணர்வின்று எனவந்த மேற்கோளை உவமை முகத்தால் நிரூபிக்கின்றது.

கண்ணழிவு:- பேய்த்தேரினை நீர் என்று கருதி வரும் பேதைக்கு மற்று அணைந்த பேய்த்தேர் அசத்தாகும் பெற்றி மையின் வாய்த்து அதனைக் கண்டுணர்வார் இல்வழியில் காணும் அசத்து உள்வழி இன்மையான் இல்லது கண்டுண ராது எனக்காண் எ. து.

பொழிப்புரை:- மாணாக்கனே, கானலை நீர் என்று கருதி உண்ணவரும் அறிவில்லாத ஒருவனுக்கு அதனை நெருங்கிய விடத்து அது பொய்யாகும் தன்மைபோல மெய் யுணர்வு வாய்க்கப்பெற்றுப்பிரபஞ்சத்தைப்பொய்யெனக் காணவல்ல ஞானிகள் எதிர்ப்படாதவரை உள்ளதாய்த் தோற்றமளித்து வந்த பிரபஞ்சம் அவர் எதிர்ப்பட்டமாத்தி ரத்தே இல்லாத ஒன்றாய்க்கழியுமாதலால் இல்லாத ஒன்று ஒன்றையும் உணர்தலின்றாம் என நீ அறிவாய் எ. று.

வாய்த்து என ஒரு சொல்லால் கூறினான், அதன்கண் அனைத்தும் அடங்கி நிற்றலின். அவையாவன, முன்னைப் பல பிறவிகளிலும் சரியை கிரியா யோகங்களாகிய தவங் களை முற்ற முடித்து அடுத்து வரும் ஒரு பிறவியில் தவம் செய்த நற்குடிக்கண் வந்து பிறத்தலும், இருவினையொப்பு உணர்வு வாய்க்கப்பெறுதலும், ஞான தேசிகனை எதிர்ப்பட்டு ஞானத்தை உணர்தலும், பாசங்களைதலும், ஏகனாகி இறை பணி நிற்றலும், மலபரிபாகமும் சத்திநிபாதமும் வாய்க்கப் பெற்றுத் தேகாந்தம் வரை மாலற நேயம் மலிந்தவர் வேட மும் ஆலயம்தானும் அரன் எனக்கண்டு தொழுது வரலும் ஆகிய அவையாம் என்பது. அன்னார் தேகாந்தத்தே சத்தா கிய முதல்வனை அணைந்து வீடு பெற்றுப்பிறவியறுத்தல் ஒருதலையாகலின் அவர்க்கு இப்பிரபஞ்சம் பொய்யாகவே தோன்றும் என்றதாம்.

கண்டுணர்வார் இல்வழிக்காணும் அசத்து என்றமையால் அவர் உள்வழி அது இன்றாம் என ஒருசொல் வருவித்து உரைக்கப்பட்டது. சாத்திரநூல் ஆகலானும், அதனைச் செய்வார்க்குச் சுருங்கச்சொல்லி விளங்க வைத்தல் மரபாய் இருந்து வந்த தாகலானும் நூல் கற்போர் வேண்டியவிடத்து வேண்டிய சொற்கள் பெய்து உரையினை முற்றுவித்துக் கோடல் மரபாம் என அறிக.

''அசத்து இலது அறியாது'' என்ற சூத்திரக்கூற்றைக் கண்ணழித்து மேற்கொண்டது இவ்வதிகரணம் என்பதால் இவ்வுரைப்பாட்டிற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது.

அசத்து இலது அறியாது என்று சூத்திரத்துட் கூறியதற் கேற்பவே ஈண்டும் இல்லது கண்டுணராது என்று உரை செய்தான் ஆசிரியன். இவ்வாறு ஆசிரியன் கருத்து உணராதார் இங்குப் பாடத்தினையும் பிறழவே கொண்டு உரையினையும் பிறழவே உரைத்தனர். அறிஞர் அவற்றை ஆய்ந்து கொள்வன கொள்க என்பதாம்.

மெய்ப்பொருளைக் கண்டவர்க்குப்பிரபஞ்சம்சூனியமாய்த் தோன்றும் என்றதால் மெய்ப்பொருட்கு அது அவ்வாறு தோன்றுதல் சொல்லாமே பெறுதும் என்பதாம்.

இனி இருவினைஒப்புணர்வு என்பது நல்வினைதீவினைப் பயன்களைத் துய்க்குங்காலத்து இன்பம் கண்டவழி உவத்தலும் துன்பம் கண்டவழி உவர்த்தலுமின்றி அவ்விரண்டையும் ஒப்பமதிக்கும் சமநிலை உணர்வாம் என்பது.

மலபரிபாகம் என்பது உயிரின் குற்றமாயிருந்து அதனைத்திரிய உணர்த்தியும் மயக்கியும் வந்த ஆணவ மலமானது ஞானப் பேரொளியால் தனது இருள்வலி குன்றி ஆன்மாவோடு உடனிருந்தே பரிபக்குவம் அடைகின்ற ஒரு அதிசய நிலைமை.

சத்திநிபாதம் என்பது அறிவுக்கு அறிவாய் விளங்கும் சிவபரம்பொருளின் பேரருள் ஒளி உயிரறிவில் நிலையாகப் பதிந்து இடையறாது தோற்றமளிக்கும் ஒரு உன்னதமான

அனுபவநிலை. இந்த அனுபவங்கள் எல்லாம் ஆன்மாவுக்கு, ''ஐம்புல வேடர் கூட்டத்தே அறியாது சென்று மயங்கினையே''. என்று தம் முதல் குருவுமாய்த்தவத்தினில்வந்து உணர்த்திய பிறகே உண்டாவனவாம். அந்நிலை எய்தினோர் மெய்கண்டுணர்ந்தோராகலின் அன்னார்க்கு இப்பிரபஞ்சம் சூனியப்பொருளாகவே தோன்றும் என்பது கொண்டு அந்தச்சூனியம் தன்னைச்சூனியமாக்கிய அந்த ஒன்றை ஒரு ஞான்றும் உணர்தலின்றாம் என முடித்துக்கூறி மேற்கோளை வலியுறுத்தினான் ஆசிரியன் என்க.

பேய்த்தேர் என்பது பாலைநிலத்து வெயிலின் மிகுதியால் தூரத்தே நீர் போலத்தோற்றமளிக்கும் ஒருவகைப் பொய்த்தோற்றம். அது காண்பாரை மயங்க வைத்தலின் பேய்த்தேர் எனப்பட்டது. வருதல்-உண்ணவருதல். அணைந்த பேய்த்தேர் என்றது அணைந்த விடத்துப்பேய்த்தேர் என்றதாம்.

மாணாக்கற்கு அறிவுறுத்தியதாகலான் காண் என்பது முன்னிலை ஏவலொருமை வினை மூற்று, ஆய்விகுதி குன்றி வந்தது.

இல்லது கண்டுணராது என்க. கண்டுணராது என்பதனை ஒரு சொல் நீர்மைத்தாகக்கொள்க. காணாது என்பதே அதற்குப்பொருளாம். இங்குக்காண்டல் என்பதற்குக்காந்தம் கண்ட இரும்பு என்புழிப்போலப் பொருள் கொள்க.

இதனால் சத்தின் முன் சூனியமாய் ஒழிந்த அசத்தினுக்கு அச்சத்தினைக்காணும் திறன் இன்றாம் என வந்த மேற்கோள் வலியுறுத்தப்பட்டவாறு அறிக.

## மூன்றாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி இருதிறன் அறிவுளதுஇரண்டலா ஆன்மா என்றது, இவ்விரண்டினையும் அறிவதாய் உபதேசியாய் நின்ற அறிவு இரண்டன்பாலும் உள்ளதாயுள்ள அதுவே அவ்வான்மாவாம் என்றது.*

இங்கு மேற்கோளும் விளக்கவுரையுமாய் வந்த இது ஆசிரியன் உரைத்தது. அவ்வான்மா என்ற சுட்டு முப்பொருள்களுள் இனிவரை செய்து உணர்த்தவிருந்த பசுவினைச் சுட்டற்காம் என அறிக.

அறிவிக்க அறியும் அறிவினால் அசத்து, சத்து ஆகிய அவ்விரண்டினையும் அறிவதாயும், அறிந்து அவ்விரண்டன்பாலும் சாரநிற்பதாயும் உள்ள அந்த ஒன்றே அவ்விரண்டு மல்லாத மூன்றாவதொன்றாகிய ஆன்மாவாம் என்று இங்கு ஆசிரியன் மேற்கொண்டான்.

உபதேசியாய் நின்ற அறிவு என்றது உயிரின் அறிவு எந்த நிலையிலும் உணர்த்த உணர்வதாமன்றித்தானாக எதனையும் உணர்வதின்றாம் என்பது அறிவித்தற்காம் எனக்கொள்க. எனவே அது பெத்த காலத்தில் மாயையால் உணர்த்தப்பட்டுப் பிரபஞ்சத்தை உணரும் எனவும், முத்திக் காலத்தில் முதல்வனால் உணர்த்தப்பட்டு முதல்வனை உணரும் எனவும் அறிக. ''மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணும்''. என மேல் பிறப்பியலில் கூறியதை இங்குநினைவு கூர்க. ''ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத் தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தும்''. எனப்பின்னர் வீட்டியலில் கூறுவதையும் பின்னர் அறியலாம் என்பது. அவ் விருவகை அறிவும் முறையே உலகறிவு என்றும் மெய்யறிவு என்றும் சொல்லப்படுவனவாம்.

அவ்விருவகை அறிவினாலும் அசத்தும் சத்துமாகிய உலகையும் இறையையும் அறிந்து அவ்விரண்டன்பாலும் சார்ந்து அசத்தாயும் சத்தாயும் விளங்கும் அவ்விருதன்மையும் ஆன்மாவுக்கு உண்டு ஆகலான் அது சத்துமாகாது, அசத்துமாகாது, சத்தசத்து ஆம் என்பதே இச்சூத்திரத்தால் ஆசிரியன் வரையறுத்ததென அறிக.

சத்தெனப்பட்ட பதிப்பொருளும், அசத்தெனப்பட்ட பாசப்பொருளும், சத்தசத்தெனப்பட்ட பசுப்பொருளும்ஆகிய முப்பொருள்களே இவ்விரு சூத்திரங்களாலும் வரையறுக்கப் பட்டன.

**அருவுருவம் தானறிதல் ஆயிழையாய் ஆன்மா**
**அருவுருவம் அன்றாகும் உண்மை அருவுருவாய்த்**
**தோன்றியுடன் நில்லாது தோன்றாது நில்லாது**
**தோன்றல் மலர்மணம்போல் தொக்கு.**

என்பது உரைப்பாட்டு. இது இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா எனவந்த மேற்கோளை வலியுறுத்தும் முகத்தால் ஆன்மாச் சத்தசத்தாம் என்கின்றது.

கண்ணழிவு:- ஆயிழையாய், ஆன்மாத்தான் அருவையும் உருவத்தையும் அறிதலானும், மலர் மணம் போல் அருவுருவாய்த் தொக்குத் தோன்றலானும், தோன்றி உடன் நில்லாது ஆகலானும், தோன்றாதும் நில்லாது ஆகலானும் அது அருவும் அன்றாம், உருவும் அன்றாம் எ. து.

பொழிப்புரை:- ஆராய்ந்த அணிகலன்களைஉடையாளே ஆன்மாவானது அறிவிக்கஅறியும் இருவகை அறிவினால் அருவாகிய சத்தினையும் உருவாகிய அசத்தினையும் அறிதலானும், மலரும் மணமும் போல உடலும், உயிருமாய் ஒன்றுகூடிப் பிறத்தலானும், பிறந்து நிலையுங்கால் ஒருங்கு நிலையாமையானும், நிலையுங்காலத்துத்தான் ஈட்டிய வினைக்கு ஈடாக மீளவும் பிறவாதிராமையானும் அதுசத்தும் அன்றாய் அசத்தும் அன்றாய்ச் சத்தசத்தாம் எ. று.

அருவுருவம் தான் அறிதல் என அருவினைத்தலைமை பற்றி முன்னெடுத்து மொழிந்தானாயினும் உருவமாகிய அசத்தினை முன்னர் அறிந்து துய்த்து உழன்றதன் பின்னரே ஆன்மா அருவாகிய சத்தினை அறியும் எனக்கொள்க.

அருவுருவம் அன்றாகும் என்புழிஅன்றாகும் என்பதனை அருவிற்கும் உருவத்திற்கும் தனித்தனிக்கூட்டி உரைக்க. அருவும் அன்றாம் உருவமும் அன்றாம் என்வே அது அருவுருவாம் அதாவது சத்தசத்தாம் என்பது பெற்றாம். ஈண்டு அருவென்பது சத்தினையும், உருவென்பது அசத்தினையும் உணர்த்தினவாகக்கொள்க.

ஆயிழையாய் என்பது மகடூஉமுன்னிலை, என்னை, இறைவன் இறைவிக்கு ஞானம் உபதேசித்ததாக ஆகமங்

களும் கூறுகின்றமையான் மகளிரும் ஞானநூல் கேட்டற்கு உரியராம் எள்பது பெறப்படுமாகலான். இங்கு ஆயிழை சாதிபற்றி வந்த அடையெனக்கொள்க.

மலர் மணம் போல் உண்மை அரு உருவாய்த் தொக்குத் தோன்றல் எனக்கொண்டு கூட்டுக. அதுஎதிர் நிரல் நிறை. உண்மை அருவிற்கு வந்த அடையாகலான் அதன் மறுதலையாகிய இல்மை உருவிற்கும் கொள்ளப்படும். படவே மலரும் மணமும் போல நிலையாத உடம்பும் நிலைத்த உயிருமாய் ஒன்று கூடிப் பிறத்தல் என்பதோர் பொருள் கிடைப்பதாம். இங்கு மலர் உடம்புக்கும் மணம் உயிருக்கும் உவமைகளாய் வந்தன.

அருவுருவம் என்பன ஈரிடத்தும் உம்மைத்தொகைகள், அருவும் உருவும் என விரியும். அவ்வீரிடத்தும் அருவென்பது சத்தாகிய சிவத்தையும், உருவென்பது அசத்தாகிய பிரபஞ்சத்தையும் குறித்தன. அருவுருவாய் என்புழி அருவென்பது உயிரையும் உருவென்பது உடம்பையும் குறித்தன'

நில்லாமை எனற்பாலது இருவழியும் ஓசையின்பம் குறித்து நில்லாது எனத்திரிந்து நின்றது.

அறிதலான் எனவும், தோன்றலான் எனவும், நில்லாமையான் எனவும் ஆண்டெல்லாம் ஆன் உருபு விரித்துரைக்க.

**மயக்கம துற்றும் மருந்தில் தெளிந்தும்**
**பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசில் அசத்துமலை**
**நீஅறிந்து செய்வினைகள் நீஅன்றி வேறசத்துத்**
**தானறிந்து துய்யாமை தான்.**

என்பது உரைப்பாட்டு. இது மேலதற்கு ஒரு புறனடை கூறுகின்றது. மேற்கோளை வலியுறுத்தும் முகத்தால் சத்த சத்தாகிய ஆன்மாச் சத்தும் அசத்தும் ஆகாமைக்கு ஏதுக் கூறுகின்றதோரொழிபால் அது மூன்றாவதொன்றாம் என்று உணர்த்தினமையின் இது புறனடையாயிற்று.

**கண்ணழிவு:-** மயக்கமது உற்றும் மருந்தில் தெளிந்தும் பெயர்த்துணர்நீ சத்து ஆகாய் பேசில், நீ அறிந்து செய்

வினைகள் நீ அன்றி வேறு அசத்துத்தான் அறிந்து துய்யாமையான் அசத்தும் அலை-அல்லை எ. று.

பொழிப்புரை:- மாணவகா, பசி வந்தபோது மயங்கியும், பசிப்பிணி மருந்தால் மயக்கம் தெளிந்தும், ஒருபோது மறந்தும், மறதிக்குப்பின் திரும்ப வுணர்ந்தும் இவ்வாறு மாறி மாறி வருகின்ற நீ முற்றுணர்வு உடைமையால் என்றும் ஒரு தன்மைத்தாய் இராநின்ற சத்துப்பொருளாகமாட்டாய். மேலும் ஆராய்ந்து சொல்லுங்கால் நீ அறிந்து செய்த வினையின் பயன்களை நீயே அறிந்து புசிக்கின்றாய் அன்றி நின்னின் வேறாயுள்ள உடம்பு புசியாமையான் நீ அசத்தும் ஆகமாட்டாய் ஆகலான் அவ்விரண்டினும் வேறாயுள்ள சத்தசத்தே நீ எ. று.

ஆகலான் அவ்விரண்டினும் வேறாய் உள்ள சத்தசத்தே நீ என்பது சொல்லெச்சம்.

மயங்கித் தெளியும் காரணத்தாலும், மறந்து உணரும் காரணத்தாலும் ஆன்மாச்சத்து ஆகாது எனவும், உடம்பை ஒழிந்து ஆன்மா வினைப்பயன்களைத்தானே துய்க்கும் காரணத்தால் அது அசத்தும் ஆகாது எனவும் கூறி அதுசத்தசத்தாம் என்பதைக்குறிப்பித்தான் இங்கு ஆசிரியன் என்க.

பசிப்பிணி மருந்தாவன உணவும் நீரும் ஆம். பெயர்த்துணர் நீ என்றதால் மறத்தல் உரையிற்கொள்ளப்பட்டது.

வினைப்பயனாகிய இன்பத்துன்பப் புசிப்பில் உடம்பும் ஒருவாறு பங்கு கொள்ளினும் அப்புசிப்பிற்கு அது கருவியாய் மட்டுமே நின்றதாகலான் போகத்திற்கு முற்றும் உரியது உடம்பு அன்று ஆன்மா ஒன்றுமே என்பது கொண்டு, "நீ அறிந்து செய்வினைகள் நீ அன்றி வேறசத்துத்தானறிந்து துய்யாமைதான்". என்று ஆசிரியன் தேற்றமாகக் கூறினான். துய்யாமைதான் என்புழித்தான் என்பது தேற்றம் குறித்து நின்றது.

மயக்கமது - அது பகுதிப்பொருள் விகுதி. துய்யாமையான் என் ஆன் உருபு விரிக்க.

இதனால் ஆன்மா இரண்டல்லாமை வலியுறுத்தப்பட்டது. இனி அதற்கு இருதிறன் அறிவும் அநாதியே உண்டு என்பது அடுத்த உரைப்பாட்டாற் கூறுவான்.

**மெய்ஞ்ஞானம் தன்னில் விளையா தசத்தாதல்**
**அஞ்ஞானம் உள்ளம் அணைதலாம் மெய்ஞ்ஞானம்**
**தானே உளவன்றே தண்கடல்நீர் உப்புப்போல்**
**தானே உளம் உளவாய்த்தான்**

என்பது உரைப்பாட்டு. இது மேற்கோளை வலியுறுத்தும் முகத்தால் ஆன்மாவுக்கு இருதிறன் அறிவும் அநாதியே உண்டு என்கின்றது.

கண்ணழிவு:- உடம்பு அசத்து ஆதல்-ஆதலால் அது தன்னில்-தன்னால் மெய்ஞ்ஞானம் விளையாது. அஞ்ஞானம் உள்ளம் அணைதல் ஆம். தண்கடல்நீர் உப்புப்போல் உளம் உளவாய அன்றே மெய்ஞ்ஞானம் தானும் உள எ. து.

பொழிப்புரை:- உடம்பு அசத்து ஆதலால் அவ்வுடம்பு தன்னால் ஆன்மாவில் உண்மை ஞானம் விளையாது. பொய்யான உலக ஞானம் மட்டுமே அதனால் ஆன்மா அடைதல் கூடுவதாம். குளிர்ந்த கடலிடத்து நீர் உண்டான அன்றே நீரோடு உப்பும் உண்டானாற்போல ஆன்மா உண்டான வன்றே ஆன்மாவோடு சத்தினை அறியும் அறிவும் உளதாயிருந்தது எ. று.

மெய்ஞ்ஞானம் அன்றே உள என்றதால் அஞ்ஞானமும் அன்றே உளவாம் என்பது பெறப்பட்டது. மெய்ஞ்ஞானம்—சத்தினை அறியும் மெய்யறிவு. அஞ்ஞானம்—அசத்தினை அறியும் பொய்யறிவு. ஆன்மாவின்கண் அநாதியே அவ்விரு வகை அறிவுகளும் விதைக்கருவினைப்போன்று கருக்கொண்டிருந்த காரணத்தால் விளையுங்காலத்தில் மாயாகாரியமாகிய உடம்பாலும் ஞானதேசிகனாலும் அவை விளைவனவாம் என்பது கருத்து.

**அசத்தால் அசத்து விளைவதேயன்றிச் சத்து விளையாதாகலான் அசத்துத்தன்னில்மெய்ஞ்ஞானம் விளையாதுஎன்றான். தன்னில் என்பது வேற்றுமை மயக்கம். தன்னால் எனவிரித்து உரைத்துக்கொள்க.**

அசத்தாகிய உடம்பினால் அசத்தாகிய உலகறிவையே அடைதல் கூடுவதாமாகலின் அசத்துத்தன்னால் உள்ளம் அஞ்ஞானம் அணைதல் ஆம் என்றான்.

அசத்தேயாக சத்தேயாக உள்ளது ஒன்றே சிறக்கும் என்னும் தருக்க நூல் விதிப்படி அவ்விருவகை அறிவிற்கான கருக்களும் ஆன்மாவின்கண் அநாதியே அமைந்திருந்தன என்பான் சிறந்ததொன்றின் மேல் வைத்து "உளம் உளவாயவன்றே மெய்ஞ்ஞானம் தானும் உள" என்றான்.

"தண்கடல் நீர் உப்புப்போல்" என்ற உவமை ஆன்மாவின்கண் அநாதியே அறிவு இருந்தது என்பதைப் புலப்படுத்தற்கு வந்தது.

தானே என்புழி ஏகாரம்ஓசையின்பம்பயந்தது. ஆன்மாக்களின் பன்மையால் அறிவும் பலவாமாகலின் மெய்ஞ்ஞானம் தானே உள என்றான். குட்டை குளம் முதலிய சிலவற்றின் கண் உள்ள நீரைச்சில வென்றாற்போல அதனைக்கொள்க.

உளம் உளவாய் அன்றே எனக்கொண்டு கூட்டுக. அங்கு ஆய எனற்பாலது ஆய் எனப்பெயரெச்சத்திறுதியகரம் தொக்கது.

ஏ. தான், ஏ. தான் என்பன அசைகள்.

இம்மூன்று பாட்டுக்களானும் இரு திறனறிவு திரண்டலர் ஆன்மா எனவந்த மேற்கோள் முற்றவும் வலியுறுத்தப் பட்டவாறு காண்க.

ஏழாம் சூத்திரம் முற்றிற்று.

பொதுவியல் முற்றிற்று.

### வீட்டியல்

வீட்டியலாவது வீட்டினது இலக்கணம் கூறுவது. வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின் அதனை அடைவார் மேல் வைத்து உணர்த்துவான் இங்கு ஆசிரியன் என உணர்க. வீடு அடைதற்கு முதற்கண் வேண்டப்படுவது ஞானம் ஆகலின் அந்த ஞானத்தை உணரும் முறைமை கூறுகின்றது இந்த எட்டாம் சூத்திரம் என்பது.

### எட்டாம் சூத்திரம்

**ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்**
**டந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே.**

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோவெனின் ஞானத்தினை உணரும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று*

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமாய் வந்தஇவை ஆசிரியன் கூறியவை.

இருதிறன் அறிவு உள்ளதும் இரண்டு அல்லாததுமான ஆன்மா இதுகாறும் அசத்தாகிய உடம்பைச் சார்ந்து அசத்தாய் நின்ற நிலைமை ஒழிந்து இனிச் சத்தாகிய சிவத்தைச் சார்ந்து சத்தாய் விளங்குதற்கு முதற்கண் வேண்டப்படுவது ஞானமே ஆகலான் அதனை அவ்வான்மா உணரும் முறைமையினை உணர்த்துகின்றது இச்சூத்திரம் என்பது.

கண்ணழிவு:- ஐம்புலன் வேடரின் அயர்ந்து வளர்ந்தனை எனத் தம் முதல் தவத்தினில் உணர்த்தவும், குருவுமாய் வந்து உணர்த்தவும் விட்டு அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே எ. து.

பொழிப்புரை:- ஐந்து வகை உணர்வுகளுடைய ஐம்பொறிகளாகிய வேடர் கூட்டத்தில் அறியாது சென்று வளர்ந்தனையே என்று ஆன்மாக்களிடத்துப் பேரருளாளனாகிய முதல்வன் தானே அதுதான் முன்னர்ப் பல பிறவிகளிலும்

செய்துவந்த தவத்தின் பயனாலே அதன் அறிவுக்குள் அறிவாய் உள் நின்று உணர்த்தவும், பின்னர்க்குருவுமாய் வெளிப்பட்டு வந்து உணர்த்தவும் அதுகாறும் ஐயுணர்வுகளால் மயங்கித்தன்னையும் அறியாதிருந்த ஆன்மா இது பொழுது தன்னையும் தன்னுள் இருந்த தலைவனையும் உணர்ந்து தான் இந்நாள் பரியந்தம் பற்றியிருந்த உடம்பொடு வந்த அகப்புறப்பற்றுக்களை விட்டொழித்துஅந்நிலையில் தனக்கு அந்நியமின்றி நெருங்கி வந்து நிற்கும் அரன் கழலைச் சென்று பற்றும் எ. று.

எனவே ஆன்மா அங்ஙனம் அரன்கழலைச் சென்று பற்றிய நிலையே ஞானத்தினை உணர்ந்த முறைமையாம் என்பது.

ஐம்புலன் என்றது பொறிகள் ஐந்தின் வழியாக நிகழும் ஐந்தாகிய உணர்வுகளை. அவை, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தினையும் உணரும் உணர்வுகளாம். அவ்வுணர்வுகளுடைய பொறிகட்கு இங்கு ஆகி வந்ததால் ஆகுபெயர். பொறிகளை வேடராக உருவகித்தான், அவை தாம் ஆன்மாவைப்பற்றி நின்று அலக்கண் உறுத்தி வந்தன வாகலின்.

அயர்ந்தனை வளர்ந்து என்பதனை அயர்ந்து வளர்ந்தனை என விகுதி பிரித்துக்கூட்டுக.

தம் முதல் என்பது ஆன்மாக்கட்கு முதல்வன் என்னும் பொருள் தருவது ஆகலின் அடிமைகளை வழிநடத்திச்செல்லுதல் அவன் கடமை ஆயிற்று என்பதாம்.

விடுதல்-பற்று விடுதல். ஆன்மா உடம்பையும் உலகையும் பற்றியிருந்த காலமெல்லாம் அதற்கு அந்நியமாய் இருந்த அரன் அது அப்பற்றுக்களை விட்டொழித்த ஞான்றே நெருங்கி வந்து நிற்பன் ஆகலின் அந்நிலையில் ஆன்மாச் சிறிதும் தாமதியாது சென்று அரன் கழலைப்பற்றும் என்று கூறினான். "ஆராவியற்கை அவா நீப்பின் அந்நிலையே பேராவியற்கை தரும்" என்ற வள்ளுவன் தமிழ்மறை இங்கு கருதத்தக்கது.

சென்றது திரும்பாது ஆகலின் செலுமே என்று தேற்றேகாரத்தாற் கூறினான். இதனை ''மற்றீண்டு வாராநெறி'' எனத்தமிழ்மறை உணர்த்தும். செலும் என்பது தொகுத்தல் விகாரம்.

ஆன்மா ஐம்புல வேடரின் அயர்ந்து வளர்ந்த நிலை பெத்த நிலை எனவும், அரன்கழலைச்சென்று பற்றிய நிலை முத்தி நிலை எனவும் உணர்க. பிறப்பு நிலை வீட்டுநிலை எனினும் ஆம். அதனால் இச்சூத்திரம் தொடங்கி நூல்முடியவுள்ள ஐந்து சூத்திரங்களும் வீட்டியல் பற்றியன என உணரலாம்.

இனி நூல் முதல் ஐந்து சூத்திரங்களும் பிரபஞ்சத்தின் பிறப்பிறப்பும் ஆன்மாக்களின் பிறப்பிறப்பும் அவை தொடர்பாக வந்த பல பிற செய்திகளும் உணர்த்தி நின்றமையால் அவை ஐந்தும் பிறப்பியல் எனப்பட்டன.

பிறப்பியல் வீட்டியல் ஆகிய இரண்டுக்கும் இடைநின்ற இரண்டு சூத்திரங்களும் அதாவது ஆறாஞ்சூத்திரமும் ஏழாஞ் சூத்திரமும் சைவ சித்தாந்தத்துக்கருப்பொருள்களாகிய பதி பசு பாசம் எனப்பட்ட முப்பொருள் உண்மைகளைச்சத்து அசத்து என்னும் அளவைகளைக்கொண்டு வரைசெய்து உணர்த்தி நின்றனவாகலான் அவை இரண்டும் பொதுவியல் எனப்பட்டன.

எனவே பிறப்பியல் பொதுவியல் வீட்டியல் என மூன்று இயல்களாலும் முற்றுப்பெற்றதே சிவஞான போதம் எனவுணர்க. இதனை இவ்வாறு உணரமாட்டாதார்பன்னிரண்டு சூத்திரங்களையும் நான்கு கூறுகளாகப் பகுத்துக்கொண்டு மும்மூன்று சூத்திரங்கள் ஒவ்வோரியல் எனக்கொண்டு அவற்றுக்குப்பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் எனப்பெயரிட்டு இடர்ப்பட்டாரும் உளர். நூல் கற்போர் அவற்றை ஆய்ந்து நோக்கித்தெளிக என்பதாம்.

இனி இச்சூத்திரத்துள், தம்முதல் தவத்தினில் உணர்த்த என்பது ஒரு அதிகரணம். தம் முதல் குருவுமாய் உணர்த்த என்பது ஒரு அதிகரணம். ஐம்புல வேடரின் அயர்ந்து வளர்ந்

தது என்பது ஒரு அதிகரணம். விட்டு அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே என்பது ஒரு அதிகரணம் ஆக நான்கு அதிகரணத்தது இச்சூத்திரம் என்பது.

## முதலாம் அதிகரணம்

*மேற்கோள்:- ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தால் ஞானம் நிகழும் என்றது, மேல் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

இவ்வான்மாக்கள் என்றது தவம் செய்துவந்த ஆன்மாக் களைச்சுட்டியது. அத்தவம் சரியை கிரியை யோகம் ஆகிய தவங்களாம்.

முன்னைப்பல பிறவிகளிலும் ஆன்மாக்கள் சரியை கிரியை யோகம் ஆகிய தவங்களைச்செய்தவிடத்து அச்செய் தவம் அவற்றுக்கு அவ்வெல்லாவற்றினும் சிறந்த ஞான நெறியைக்காட்டி வீடு பேற்றைக் கொடுத்தே தீரும்ஆகலான் இங்குத் தவம் செய்த ஆன்மாக்களுக்கு முற்செய்தவத்தினால் முதல்வன் உள்நின்று உணர்த்த ஞானம் நிகழும் என மேற் கொள்ளப்பட்டது என்பதாம்.

தவத்தால் ஞானம் நிகழும் என்றானாயினும் முதல்வன் உள்நின்று உணர்த்தவே அது நிகழும் என்பதுவே கருத்தாகக் கொள்க. அது பின்னர்க்குருவுமாய் எனவந்த எச்சவும்மை யால் கொள்ளப்பட்டது. குருவுமாய் முன்நின்று உணர்த்தும் என்பதால் அதற்குமுன் அவன் உள்நின்று உணர்த்தினமை பெற்றாம்.

சரியை முதலியனவும் தவமே என்பது இங்கு ஆசிரியன் உரைத்தது கொண்டு தெளிக.

சரியையாவது இறைவனிடத்து உண்மை அன்பு உடை யராய் அவன் திருமேனிகொண்டு எழுந்தருளியிருந்த திருக் கோயில் அகத்தும் புறத்துமான் திருத்தொண்டுகளைச்செய்து

எனப்பொருள் மூன்றெனவே வரைசெய்து கொண்ட சைவ சித்தாந்தப் பெருநெறியின் வழி நின்று இவ்வான்ம வருக்கச் செய்தியை நாம் இங்கு ஒருவாறு ஊகித்தறிய வேண்டியிருந் தது. சைவசித்தாந்தத்துட் கூறப்படும் பதி என்னும் முதற் பொருள் ஒன்றைத்தவிர ஆகமங்களுள் விவரிக்கப்படுகின்ற ஏனைப்பிரமன் திருமால் முதலான கடவுளர் அனைவருமே பதிப்பொருட் கூற்றில் அடங்கார். எனவே ஏனைப்பசு வருக் கத்துள் வரும் மூவகையில் யாதானும் ஒன்றில் ஏற்றபெற்றி அடங்குவர்எனக்கோடலே சால்புடைத்தாம்என்பது. அங்ஙனம் இன்றேல் சைவ சித்தாந்தத்துக் கருப்பொருள் மூன்று என் னும் வரையறையும் பொருளற்றுப் போவதாம் எனவுணர்க. கச்சியப்ப சிவாச்சாரியார் அருளிய கந்த புராண நூலில் இக் கருத்து ஆங்காங்கு வலியுறுத்தப்பட்டிருத்தலைக் காணலாம். மெய்கண்டான் இந்நூல் கேட்டற்குரியார் இன்னார் என்று உணர்த்தவரும் வெண்பாவினையும் நாம் இங்கு நினைவு கூர்தல் தக்கது.

**சிவமென்னும் அந்ததர சிந்தைநேர் நோக்கப்**
**பவமின்றாம் கண்வா சகத்திற் சிவமுண்டாம்**
**ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கிங் கொண்குருவால்**
**இன்றிந்நூல் மும்மை மலர்க்கு.**

என்பது அவ்வெண்பா. இதன்பொருள் வருமாறு.

சிவம் என்னும் அந்தத்தை அணைந்து நின்ற மாணாக் கனே, ஒன்றும் இரண்டுமாகிய மலங்களைச் சிறிதளவே உடைய விஞ்ஞானாகலர் பிரளயாகலர் என்னும் இருவகைத் தூய ஆன்ம வருக்கத்தாருக்கு அவர் முதல்வனை எஞ்ஞான்றும் தம் சிந்தையுள்ளே பிறழாமற்கொண்டு செவ்விதின் நிற்ற லாலே பிறவி என்பது அன்னார்க்கு இன்றாம். அன்னார் முதல்வனது அருட்பார்வையாலும் அருள்மொழியாலுமே சிவமாந்தன்மை எய்தப்பெறுவர்ாம் ஆகலின் அன்னார்க்கு இந்நூல் வேண்டிற்றன்றாம். இவ்வுலகில் இக்கால எல்லை யில் எழுந்த இந்நூலானது ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும் உடைய சகலர் ஆயினார்க்கே ஞானகுர வன் மூலமாக உபதேச வாயிலாகக்கேட்டு உணர்ந்து கொள்ளற்கு உரியதொன்றாம் என்பது.

பாவகத்தை இடையறாது நினைந்து நினைந்து அதனோடு ஒன்றுவதே யோக வழிபாடாகும். இத்தவமுடையார் இறைவனுடைய உருவத்தை நினைந்து பழகிய உள்ளமுடையராகலின் அவர்க்குரிய மறுமைப்பயன் சாரூபம் எனப்படுவதாம். இறைவனுடைய திருவுருவத்தைப்பெற்று அவனோடு ஒருங்கிருந்து இன்பம் ஆர்ந்திருத்தல் சாரூபப் பயனாம். இந்நிலை எய்தினோர் பெருமிழலைக் குறும்பர் முதலாயினோர் ஆவர். இந்த யோக நெறியில் நின்றார்க்கு அப்பிறவியிலேயே ஞான நெறி கூடுவதும் உண்டாம். என்றாலும் யோக வழிபாட்டோடு நின்றவர் அடையும் பயன் வேறு, அதனோடு ஞான நெறியினையும் தலைப்பட்டார் அடையும் பயன் வேறு என்றே உணரவேண்டும். முன்னதற்குப்பயன் சாரூபம் என்றும், பின்னதற்குப்பயன் சாயுச்சியம் என்றும் ஆகமங்கள் வரையறுப்பது கொண்டு இதனைத்தெளியலாம். திருமூலர் சென்றநெறி யோகநெறியோடு ஒன்றிய ஞான நெறி என்பதே ஆன்றோர் துணிபு. அப்பெரியாரது அனுபவத்தோடு கூடிய அருள்வாக்குக்களினின்றும் அது துணியலாம்.

''பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே''

என்பது திருமூலர் அருளிய திருமந்திரப்பாடல். இதன்கண் யோகானுபவத்தோடு ஞானானுபவமும் செறிந்திருத்தலைக் காணலாம். ''நலம் சிறந்த ஞான யோகக் கிரியா சரியையெலாம், மலர்ந்த மொழித் திருமூல தேவர்''. எனச் சேக்கிழார் பெருமான் அப்பெரியாரைப் பரவுவது கொண்டு அவரை மெய்கண்டுணர்ந்த சிவஞானயோகி எனக்கோடலே சால்புடைத்தாம். அப்பெரியார் பெற்ற மறுமைப்பயனும் சாயுச்சியமே என்பது ''சென்னிமதி அணிந்தார்தம் திருவருளால் திருக்கயிலை, தன்னிலணைந் தொருக்காலும் பிரியாமைத் தாள்அடைந்தார்'' என்று சேக்கிழார் கூறுவது கொண்டு தெளியலாம் என்பது.

இங்கு இதுகாறும் கூறியவாற்றால் சரியை கிரியை யோகம் என்பன ஞான நெறியாகிய நன்னெறி அடைதற்குப்

படி முறைகளாம் என்பது அறியப்பட்டது. ஆகவேதான் ஆன்மாக்கட்கு முற்செய் தவத்தால் மட்டுமே ஞானம் நிகழும் என ஆசிரியன் மேற்கொண்டானாம் என்பது.

**தவம்செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து**
**பவம் செய்து பற்றறுப்பா ராகத் தவம்செய்த**
**நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்**
**கற்றார்சூழ் சொல்லுமாம் கண்டு.**

என்பது உரைப்பாட்டு. இது முற்செய் தவத்தால் ஞானம் நிகழும் எனவந்த மேற்கோளை ஆகம அளவையால் வலி யுறுத்துகிறது.

கண்ணழிவு:- தவம் செய்தார் என்றும்-என்றானும் தவ லோகம் சார்ந்து தவப்பயனைத்துய்த்துக்கழித்துப்பவம் செய்து பற்று அறுப்பாராகத்தவம் செய்த நற்சார்பில் வந்து உதித்து ஞானத்தை நண்ணுதலைக்கற்றார் சூழ் கண்டு சொல்லுமாம் எ. து.

பொழிப்புரை:- முன்னைப்பல பிறவிகளிலும் சரியை கிரியை யோகங்களாகிய தவங்களை முறையாக்ச்செய்தவர் அத்தவப்பயனை எவ்வாறேனும் துய்த்தே கழிக்க வேண்டு தலின் என்றானும் ஒரு நாள் தவலோகமாகிய புண்ணிய வுலகை அடைந்து அதனைத்துய்த்துக்கழித்து மீண்டும் மண்ணிலே வந்து பிறந்து தம் பழவினைப்பற்றை அறுத்துக் கொள்வான் வேண்டித்தவம் செய்த ஒரு நல்ல குடியிலே வந்து பிறந்து, முன்னைத்தவத்தாலும் நற்குடிச்சார்பாலும் ஞான நெறியினை நண்ணுவர். அங்ஙனம் அவர் நண்ணு தலை அறிவுக்காட்சியால் முக்காலமும் உணரவல்ல அறிஞர் கள் சூழ்ந்து உரைத்த ஆகமங்கள் ஒருபடித்தாய் உரையா நிற்கும் எ. று.

எனவே இது ஆகம அளவையால் வலியுறுத்தியதென அறிக.

தவம் செய்தார் என்றானும் ஒரு நாள் தவலோகம்சார்வர் என்றதால் சரியை கிரியை யோகங்களாகிய தவங்களைச் செய்தார்க்கு அத்தவப்பயனாகிய பதமுத்திகளைப்பெற்று

தற்குக் குருவாய் வந்து உணர்த்தலும் தவம்செய்த ஆன்மாக் கட்கு இன்றியமையாது தேவைப்பட்டன என்பதாம்.

செறியுமாம் முன் பின் வினைகள் என்பதற்கு முன் வினைகளால் பின்வினைகள் செறியுமாம் எனக்கொண்டு கூட்டிப் பொருள் உரைக்க.

அறிவிக்க அன்றி அறியா என்புழி அறியாமைக்குக் காரணம் வருவித்து உரைக்கப்பட்டது.

பழவினைகளைத் துய்த்துக்கழிக்கின்றவாற்றானே புதிய வினைகளும் செறிந்து புதிய பல பிறவிகளும் தொடர்தற்குச் சாத்தியம் உண்டாகலின் அவற்றைத்தடுத்தற்கு முதல்வனது உபதேசமொழி விரைவில் தேவைப்பட்டது என்பதாம்.

தகவிலார் கூறும் வெற்றுரைகளால் தாகம் அடங்கா தாகலான் அவற்றைக்கொள்ளாராகி உலக முதல்வனது பொருள் மொழிகளைக் காத்திருந்தேனும் கேட்டு உணர்வர் என்றான்.

தவநெறி நிற்றலாவது இருவினை ஒப்பு உணர்வினால் இன்பத்துன்பங்களை ஒப்பமதிக்கும் சமனிலை உணர்வு கடைப்பிடித்தலும், உற்ற நோய் நோன்று உயிர்க்கு உறு கண் செய்யாதிருத்தலும் முதலியனவாம்.

நெறியில் நின்று என ஒரு சொல் வருவிக்க. குறைவில் சகன் என்றது ஒன்றானும் குறைவில்லாத உலக முதல்வன் என்றதாம். எனவே அவனே பூரணன் என்றவாறாம். சூழ் என்பது அவன் சூழ்ந்து உரைத்த பொருள்மொழி என்பதாம். சூழ்தல் ஆராய்தல் என்பன ஒருபொருள் தரும் சொற்களாம்.

சகன் சூழ்கொள்வார்க்குக் கொள்பவத்தின் வீடாம் என்றதால் அவர்தாம் எடுத்த பிறவியொன்றிலே வீடும் பெற்றுப்பிறவியும் அறுத்துக்கொள்வர் என்றதாம்,

இனி முதல்வன் குருவாய் வந்துணர்த்துங்கால் பேரருளா ளன் ஆனதால் ஆன்மாக்களின் செவ்வி அறிந்து தாழாது வந்து உணர்த்துவன் என்கின்றது அடுத்த உரைப்பாட்டு.

என்பது உரைப்பாட்டு. இது மேலதற்கு ஒரு புறனடை கூறு கின்றது. தவமும் நற்குடிச்சார்பும் அமையினும் இருவினை யொப்பு உணர்வு வாய்த்த வழியே ஒருவன் ஞானத்தை மருவு வனாம் என்பதொரு ஒழிபு உணர்த்தலின் இது புறனடை ஆயிற்று.

கண்ணழிவு:- இசைத்து வருவினையில் இன்பம் பசித்து உண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும் ஆகலான், இறப் பில் தவத்தால் நற்குடியில் வந்து இசைத்த இருவினை ஒப் பில் ஒருவன் ஞானத்தை மருவுவனாம் எ. து.

பொழிப்புரை:- வேள்வி முதலிய காமிய வினைகளால் இசைந்து வருகின்ற துறக்க இன்பம் முதலாயினவெல்லாம் பசிவந்தபோது உண்டு பசியாறி மீண்டும் பசிக்கின்றானது பசியைப்போல ஆராவியற்கையவாதலால் அவற்றில் நாட் டம் கொள்ளாமல் அழிவில்லாத சரியை கிரியை முதலான தவங்களைச் செய்த காரணத்தால் நற்குடிக்கண் வந்து பிறந் தும், இருவினை ஒப்பு என்னும் சமநிலை உணர்வு வாய்த்த வழியே ஒருவன் ஞானத்தை நாடிச்சென்று அதை அடைகு வனாம் எ. று.

எனவே இறப்பில் தவத்தால் ஞானநெறியைத் தலைப் பட்டவதனால் வரும் இன்பம் வேள்வி முதலியவற்றால் வரும் துறக்க இன்பங்களைப்போல ஆரா வியற்கைத்தன்றிப்பேரா வியற்கைத்தாம் என்று உணர்த்தினான் ஆசிரியன் என வுணர்க. ''ஆரா வியற்கை அவாநீப்பின் அந்நிலையே, பேரா வியற்கை தரும்''. என்ற வள்ளுவன் தமிழ்மறை இங்குச் சிந்திக்கற்பாலது.

இதனால் இன்னதைச் செய்து இன்னதை அடைவேன் என்ற ஆசையோடு செய்யப்படும் வேள்வி முதலான காமிய வினைகளால் வரும் துறக்கவின்பம் முதலியனவெல்லாம் அழிதல் மாலையவாதலோடு ஆராவியற்கையும் உடைய வாகலின் ஞானம்மருவுதற்கு அவை வாயில்களாகா எனவும், சரியை முதலான இறப்பில் தவமே இறவா இன்பம் நல்க லோடு நற்குடிக்கண் வந்து பிறத்தற்கும், இருவினை ஒப்பு என்னும் சமநிலை உணர்வு வாய்க்கப்பெறுதற்கும், அவ்

வழியே சிவ ஞானத்தை மருவுவதற்கும் வாயில்களாம்எனவும் உணர்த்தினான் ஆசிரியன் என்க.

இருவினை ஒப்பு என்பது நல்வினை தீவினைப்பயன் களைத்துய்க்குங்கால் இன்பம் கண்ட வழி உவத்தலும், துன்பம் கண்டவழி உவர்த்தலுமின்றி அவ்விரண்டையும் ஒப்ப மதிக்கும் சமநிலை உணர்வாம் எனக்கருதுக. அது உலகியல் நீங்கினார் பெற்றியாகலின் உண்மை ஞானம் மருவுதற்கு அதுவே சிறந்த வாயிலாயிற்று என்பதாம்.

இசைந்து எனற்பாலது எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. இசைத்த என்பது மது.

வினையால் இசைந்து வரும் இன்பம் எனக்கொண்டு கூட்டுக. வினையில்-வினையால். அது வேற்றுமை மயக்கம்.

பசித்து உண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும் என்றதற் குப் பசிப்பானது பசியை ஒக்கும் என உரைக்க, பசியும் ஆரா வியற்கைத்து ஆதல் போல அவ்வின்பமும் ஆரா வியற்கைத் தாம் ஆகலின். அவ்வாறாதலினன்றே அப்பசியினையுடைய வயிற்றின்மேல் வைத்து, ''இடும்பை கூர் என் வயிறே, உன் னோடு வாழ்தலரிது''. என்று வெறுத்துப்பாடினார் புலவர் ஒருவரும் என்க.

உண்டு என்னும் செய்தெனெச்சம் பசிப்பான் என்னும் வினைப்பெயரின் வினையொடு முடிந்ததாகலின் தன்வினை கொண்டதாம்.

வேள்வி முதலிய கன்மங்களைச்செய்தவர்அவற்றுக்குரிய துறக்கவின்பங்கள் முதலாயின பெற்று நுகர்ந்து அவை வற்றியவுடன் மீண்டும் உலகிற்கு வந்து அந்தக்கன்மங் களையே மீண்டும் செய்து அந்த இன்பங்களையே மீண்டும் பெற்று நுகர்ந்து இவ்வாறு ஆராவியற்கையுடன் அலைந்து திரிவர் ஆகலான் ஞானப்பேற்றுக்கு அக்கன்மங்கள் அறவே விலக்கப்பட்டன என்று உணர்க. சரியை முதலான சிவ புண்ணியச்செயல்களே ஞானப்பேற்றுக்குச்சிறந்த வாயில்க ளாமெனவும் உணர்க.

இனி அவ்வான்மாக்கட்கு அவைதாம் முற்செய்தவத்தினால் உள்நின்று உணர்த்தி ஞானத்தில் நாட்டம் உண்டாகச் செய்த அவைதம் முதல்தானே அப்பிறவியில் குருவுமாய் வெளிப்பட்டு வந்து ஞானத்தினை முன்னின்றும் உணர்த்தும் என்பதனை விளக்க வருவது அடுத்த அதிகரணம்.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்தும் என்றது, அவன் அந்நியமின்றிச்சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

விஞ்ஞானாகலர் பிரளயாகலர் சகலர்என ஆன்மவருக்கத்தார் மூவகைப்படுவர். அம்மூவகை ஆன்மாக்களுக்கும் முதல்வன் வேறாய் நிற்றலின்றி அவற்றின் அறிவில் அறிவுருவாய் நிற்பன் ஆதலாலே அவ்வான்மாக்களின் படிநிலைகட்கு ஏற்ப அவற்றுக்குக் குருவாய் முன்வந்தும் ஞானத்தை உணர்த்துவன் என்று ஆசிரியன் இங்கு மேற்கொண்டான் என்பது.

குருவுமாய் என்ற உம்மையால் அவன் ஆன்மாக்களின் அறிவில் நின்றாங்கு நின்று உணர்த்தினமையும் பெற்றாம் என்பது.

இவ்வான்மாக்கள் என்றது மூவகை ஆன்மாக்களை.

**மெய்ஞ்ஞானம் தானே விளையும்விஞ் ஞானகலர்க்**<br>
**கஞ்ஞான அச்சகலர்க் கக்குருவாய் மெய்ஞ்ஞானம்**<br>
**பின்னுணர்த்தும் அந்தப் பிரளயா கலருக்கு**<br>
**முன்னுணர்த்தும் தான்குருவாய் முன்.**

என்பது உரைப்பாட்டு. இது மூவகை ஆன்மாக்களுக்கும் முதல்வன் குருவாய் வந்து ஞானத்தை உணர்த்தும் முறைமை கூறுகின்றது.

கண்ணழிவு:- விஞ்ஞானகலர்க்கு மெய்ஞ்ஞானம் தானே விளையும். அந்தப் பிரளயாகலருக்குமுதல்வன்தான்குருவாய்

வந்து முன் முன் உணர்த்தும். அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய் வந்து மெய்ஞ்ஞானம் பின் உணர்த்தும் எ. து.

பொழிப்புரை:- அவிச்சை என்னும் ஆணவமலம் சிறிதளவே உடைய விஞ்ஞானாகலருக்கு முதல்வன் உண்மை ஞானத்தை உள்நின்றுணர்த்தத்தானே விளைவதாம். ஆணவத்தோடு கன்ம மலமும் உடையராகிய பிரளயாகலருக்கு மெய்ஞ்ஞானத்தை முதல்வன்அன்னார் மாயாதனுக்கொண்டு பிறவிக்கு வாராமுன்னரே அவர் நினைந்த தேவ வடிவிற் குருவாய் வந்து அவர் முன்னின்று உணர்த்துவனாம். அவிச்சை பெரிதும் உடைய மும்மலமும் உடைய சகலருக்கு அவர் நினைந்த மானுட வடிவிற் குருவாய் வந்து மெய்ஞ் ஞானத்தை அவர் சரியை முதலான தவங்களைச்செய்ததன் பின்னரே உணர்த்துவனாம் எ. று.

ஆன்ம வருக்கத்தார் மூவகையினர் என்று ஆசிரியனே இங்கு எடுத்து மொழிந்ததால் அவரியல்பினை இங்கு நாம் ஒருவாறு அறிய வேண்டிற்றாம். அவை வருமாறு.

விஞ்ஞானாகலர் என்போர் ஆணவம் என்னும் அவிச்சை சிறிதளவேயுடையராய் உலகில் வந்து பிறவியில் அழுந்தாராய் அநாதியே உள்ள ஒருவகை ஆன்ம வருக்கத்தார்,

பிரளயாகலர் என்போர் அச்சிறிதளவு அவிச்சையோடு அறிவால் ஈட்டிய கன்மமலமும் சிறிதுஉடையராய்அநாதியே உள்ள மற்றொருவகை ஆன்ம சாதியினர். அவரும் பிறவி வாசனை அற்றவர் எனக்கோடலே வலியுடைத்தாம். என்னை, பிறவிக்கு வந்திருப்பரேல் மாயாமலமும் உடையர் எனப் பட்டுச்சகலர் வரிசையில் வந்து நிற்பராகலான் என்க.

இனிச்சகலர் என்போர் ஆணவம் கன்மம் மாயை எனப் படும் மும்மலங்களையும் மிகுதியும் உடையராய் அநாதி தொட்டுப்பிறந்தும் இறந்தும் வரும் வேறு ஒருவகை ஆன்ம வருக்கத்தார் ஆவர்.

இந்த அளவிற்குமேல் இச்செய்தியை ஆன்ம முனைப் போடு அணுகுதல் நன்றன்றாம் என்பதே. பதி பசு பாசம்

வருதலாம். அவை திருக்கோயில் வாயிலில் அலகிட்டு மெழுக்கிட்டுக்கோலம் புனைதலும், கோயிலுக்குள் வருவார்க்கு இடையூறாய் ஆங்காங்கு முளைத்துள்ள புற்பூண்டுகளைச் செதுக்கிக் களைதலும், மலர்ச்செடிகளை வைத்து மலர்வனம் பாதுகாத்தலும், அன்றாடம் மலர் பறித்து வந்து மாலை தொடுத்து இறைவற்குச் சாத்தக் கொடுத்தலும் முதலாயின வாம். இவையெல்லாம் சரியை வழிபாட்டில் நிற்பவர்தம் அறிவு நிலைக்கேற்ப நிகழும் அன்புப்பணிகளாம் ஆதலின் இறைவனால் இவை முழுவதுமாய் ஏற்றுக்கொள்ளப்பட்ட தவச்செயல்களேயாம். பெரிய புராணத்துள் வரும் சிவகாமியாண்டார் எறிபத்தர் முதலான திருத்தொண்டர் வரலாறுகளை நோக்கின் இவ்வுண்மை தெளியலாம். இவர்தம் பணி பெரிதும் திருக்கோயிலோடு நிற்பதால் இச்சரியையாளர்தம் மறுமைப்பயன் சாலோகம் எனப்படுவதாம். அது இறைவனுடைய உலகத்தில் சுதந்தரமுடையராயிருந்து இறையின்பம் ஆர்ந்திருத்தல் என்பதாம். இது ஒரு நாட்டின் குடியுரிமைப் பேறு போல்வதாம் எனவுணர்க.

இனிக்கிரியையாவது திருக்கோயிலின்கண்ணே விளங்கும் இறைவனுடைய திருமேனிக்கு நாளும் நீராட்டல் மலர் சூட்டல் மறை ஓதி வழிபடுதல் முதலான பூசனைச்செயல்களைச்செய்து வருதலாம். சரியையாளரினும் கிரியையாளர் அறிவு முதிர்ச்சி உடையராகலின் இவர்தம் பணிகள் இறைவற்கு மிகவும் நெருக்கமாக நின்று செய்யும் வழிபாட்டுப் பணிகளாம். அதனால் இவர்க்கு உரிய மறுமைப்பயன் சாமீபம் எனப்படுவதாம். இறைவனுடைய உலகத்தில்இறைவற்கு மிக நெருக்கமாய் நின்று இறையின்பத்தில் திளைத்திருத்தலே சாமீபம் எனப்படுவதாம். இத்தகைய கிரியை வழிபாட்டில் நின்று பேறு பெற்றோர் திருநீலநக்கர் முதலாயினோர் ஆவர்.

இனி யோக வழிபாடாவது கிரியை வழிபாட்டினும் மேலானது. இந்நிலை நின்றார்க்குத்தியானம் நிட்டை கூடல் ஆகிய கருமங்கள் உரியன. இறைவனுடைய திருமேனிகளுள் யாதானும் ஒன்றை வரித்துத்தம் உள்ளத்தில்கொண்டு வந்து அதையே இறைவனாகப் பாவித்துக்கொண்டு அப்

மெய்கண்டான் அளவோடு உரைத்த செய்தியை இங்குக் கருத்தில் இருத்துதல் நல்லது.

'இனி மெய்ஞ்ஞானம் தானே விளையும்விஞ்ஞானகலர்க்கு' என்றானாயினும் செய்விப்பார் செய்திப்பயன் விளைக்கும் செய் அவன் ஆதலால் அவன் விளைக்க விளையும் என்பதே கருத்தாகலின் அவன் அங்கு உள்நின்று உணர்த்தினமை பெற்றாம் என்பது. மும்மலங்களையும் உடைய சகலர் அவிச்சை பெரிதும் உடையராதல் பற்றி ''அஞ்ஞான அச்சகலர்'' என்று அவர்க்கே உரிய அடைமொழி கொடுத்துக்கூறினான். அச்சகலர் என்றது மேல் சரியை கிரியா யோகங்களாகிய தவங்களைச்செய்து வந்த அவர்களைச் சுட்டியது. அக்குரு என்றது அவர் நினைந்த மானுட வடிவிற்குரு என்றதாம். பின் உணர்த்தும் என்றது அவர் அத்தவங்களைச்செய்து நற்குடிக்கண் வந்து பிறந்து இருவினை ஒப்பு என்னும் சமநிலை உணர்வு வாய்த்த பின்னரே உணர்த்தும் என்பதாக அறிக. பிரளயாகலரைச்சகலர்க்குப்பின் வைத்துக்கூறியது, கன்ம வாசனையும் சிறிது உடையராகிய அப்பிரளயாகலர் என்போர் ஒரோவொருகால் மயங்கிப்பிறவிக்கு வந்து சகலர் வரிசையிலும் நிற்றல் கூடும் என்னும் கருத்தினாற்போலும் என்க. ஆலாலசுந்தரர் வரலாற்றை இங்கு நாம் அறிதல் தகும். இவர் இங்ஙனமாகவே விஞ்ஞானாகலர் என்போர் ஒருவாற்றானும் பிறவிக்கு வாரார் என்பதே மெய்கண்டான் துணிபாம் எனக்கருதுக. என்னை, பிறவிக்கு வித்தாகிய கன்மமலம் அவர்க்கு அறவே இன்றாமாகலின். பிரளயாகலருக்கு முன் முன் உணர்த்தும் என்றது கன்ம மலமும் சிறிது உடையர் என்ற காரணத்தால் அவர் பிறவிக்கு வரலும் கூடுமன்றே, அங்ஙனம் அவர் பிறவிக்கு வாராதமுன்னர் அவர் நினைந்த தேவ வடிவிற் குருவாய் வந்து அவர் முன்னின்று உணர்த்துதலைக்கருதியதாம். இதனானும் பெற்றாம் அன்னார் ஒரோவொருகால் மயங்கிப்பிறவிக்கு வரல் கூடும் என்பது.

இதனால் விஞ்ஞானாகலர்க்கு முதல்வன் உள்நின்று உணர்த்தவே ஞானம் விளையும் என்றும், ஏனையோர்க்கு அவன் குருவாய் முன்னின்று உணர்த்தவே அது விளையும் என்றும் கூறியவாறாம்.

இனிச்சைதன்னியம் எனப்பட்ட ஆன்மாக்கள் தாமாகவே ஞானத்தை உணரமாட்டாவோ,என்றையுற்ற மாணாக்கற்கு ஐயமகற்றி மேற்கோளை வலியுறுத்த வருவது அடுத்த உரைப்பாட்டு.

**அறிவிக்க அன்றி அறியா உளங்கள்**
**செறியுமாம் முன்பின் வினைகள் நெறியில்**
**குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடாம்**
**குறைவில் சகன்சூழ்கொள் வார்க்கு**

என்பது உரைப்பாட்டு. இது ஐயம் அகற்றுகின்றது. பக்குவப் பட்ட ஆன்மாக்கட்கு முதல்வனது உபதேசமொழி இன்றி யுமையாதது என்கின்றதுமாம்.

கண்ணழிவு:- உளங்கள் அறிவிக்க அன்றி அறியா ஆகலானும், முன்வினைகளால் பின் வினைகள் செறியுமாம் ஆகலானும்,நெறியில் நின்று குறையுடைய சொல் கொள்ளா ராகி குறைவில் சகன் சூழினைக் காத்திருந்தேனும் கொள் வார்க்குக் கொள்பவத்தின் கண்ணே வீடும் ஆம் எ. து.

பொழிப்புரை:- மாணாக்கனே, ஆணவ மலத்தால் மறைப்புண்ட ஆன்மாக்கள் அறிவிக்க அறியும் இயல்பினவே யன்றித்தாமாக ஒன்றையும் அறியா ஆகலானும், முன்னைப் பழவினைகளைப் புசிக்கின்ற வாற்றானே பின்னைப்பிறவிக் கான புதிய வினைகளும் கூடிவிடும் ஆகலானும் முதல்வன் விரைந்து வந்து அவற்றுக்கு உணர்த்த வேண்டிற்றாம் என்பது. முற்செய்தவத்தாலும் இருவினை ஒப்பு உணர்வா லும் ஞானத்தை உணர்ந்து வீடு பெற நிற்குமவர் தமக்குரிய தவநெறியில் தளராது நின்று தகவிலார் கூறும் வெற்றுரை களைக்கேளாராகி ஒன்றானும் குறைவில்லாத உலக முதல் வனது பொருள்மொழிகளைக்காத்திருந்தேனும் கேட்டு உணர்வர். அவ்வாறு உணரவல்லார்க்கு அவர்தாம் பெற்று நின்ற பிறவியிலேயே வீடுபேறும் உண்டாம் எ. று.

எனவே தாமாக ஒன்றையும் அறியவொண்ணாக்குறைவு பாட்டினைத்தவிர்க்க முதல்வன் உள்நின்று உணர்த்தலும், எடுத்த பிறவியொன்றிலே வீடு பேறு பெற்றும் பிறவியறுத்

இன்புறும் நாட்டம் இன்றாயினும் அடுத்துத்தாம் அடைய விருக்கும் ஞானநெறிக்கு அத்தவப்பயன் தடையாய்ப்பொன் விலங்கு போல்வதோர் தளையேயாம் ஆகலானும், அதனைத் துய்த்தே கழிக்க வேண்டிற்றாகலானும், ஞானநெறி அடை தற்கு முன்னால் என்றேனும் ஒருநாள் தவலோகமாகிய புண்ணியவுலகை அடைந்து அத்தவப்பயனைத்துய்த்துக் கழிப்பர் என்றவாறாம். அத்தகைய பத முத்திகளைப் பெற்றார்க்கும் அவர்தாம் முன்னைப்பல பிறவிகளிலும் ஈட்டிச்சேர்த்த பழவினைகள் எஞ்சியே நிற்குமாதலால் அவற்றையும் துய்த்துக்கழித்துப்பற்றறுப்பான் வேண்டிப் பவம் செய்வர் என்றான். அன்னார் இனி அடைய்விருப்பது ஞானநெறி ஒன்றே ஆகலான் அதனைத்தடையின்றி அடைய் நற்குடியில் வந்து பிறந்து ஞானத்தை நண்ணுவர் என்றான். அல்லகுடி ஞானத்திற்கு இடையூறு ஆகலின் தவம் செய்த நற்குடி என்று அதற்கு ஒரு அடையாளமும் குறித்தான். நற் குடிச்சார்பாலும், முன்னைத்தவப்பயனாலும், முதல்வன் உள் நின்று உணர்த்தும் உபகாரத்தாலும் அன்னார் ஞானம் அடைதல் ஒருதலை என்பான். ''ஞானத்தை நண்ணுதலைக் கற்றார் சூழ் கண்டு சொல்லும்'' என்று கூறி முடித்தான் ஆசிரியன் என்க.

சூழ்ச்சி என்பது சூழ் என விகுதி குறைந்து நின்றது. சூழ்ச்சி, சூழ்தல், ஆய்தல் என்பன ஒரு பொருட்கிளவிகள். கற்றாரது சூழ்ச்சி அவர் சூழ்ந்து உரைத்த நூலுக்கு ஆகிவந் தது. கற்றார்-ஆன்றவிந்தடங்கிய கொள்கைச்சான்றோரா கிய இருடிகள். அவர் தமது அறிவுக்காட்சியால் அனைத்தும் அறிவர் ஆகலான் அவர் சூழ்ந்து உரைத்த ஆகமங்களே ஈண்டு அளவைகளாதற்குச்சாலுமென்க.

இனி இதன் ஒழிபை ஆசிரியன் அடுத்துவரும் உரைப் பாட்டால் உரைப்பன் என அறிக.

**பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்**
**இசைத்து வருவினையில் இன்பம் இசைத்த**
**இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தா**
**மருவுவனாம் ஞானத்தை வந்து.**

**இல்லா முலைப்பாலும் ஏந்திழையார் கண்ணீரும்**
**நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல் இல்லா**
**அருவாகி நின்றானை ஆரறிவார் தானே**
**உருவாகித் தோன்றானேல் உற்று.**

என்பது உரைப்பாட்டு. இது முதல்வன் ஆன்மாக்களின் செவ்வி அறிந்து தாழாது வந்து உணர்த்துவன் என்கின்றது.

கண்ணழிவு:- நல்லாய் ஏந்திழையார்க்கு முன்இல்லாத முலைப்பாலும் கண்ணீரும் காலத்தே தோன்றி உளவாம். அதுபோல முதல்வன் ஆன்மாக்களின் செவ்வி அறிந்து தாழாது வந்து உணர்த்துவன். நீர் நிழல் போல் இல்லாஅரு வாகி நின்ற அவனை அவன்தான் உருவாகி உற்றுத் தோன்றானேல் அறிவார் யாரோதான் எ. து.

பொழிப்புரை:- நல்ல குணங்களை உடைய மாணாக் கனே, தாயாந்தன்மை எய்தி நின்ற சிறந்த அணிகலன் களையுடைய மகளிர்க்கு முன் இல்லாத முலைப்பாலும் கண்ணீரும் பிறந்து கவானின்கண் கிடந்தகுழவியின் அழுகை யொலி கேட்ட மாத்திரத்தானே உளவாம். அது போலத் தோற்றமுற்றுத் தோன்றுதல் இல்லாத அருவாகி நின்ற பேரருளாளனாகிய முதல்வன் தவம் செய்த ஆன்மாக்களின் செவ்வி அறிந்து காலம் நாழ்க்காது உருவாகித்தோன்றி வந்து உணர்த்துவான். நீரினது நிழல் போலப்புலப்படத் தோன்றாத அருவாய் நின்ற முதல்வன் அன்பர் வேண்டும் உருக்கொண்டு விரைய வந்து நல்கானேல் அவனை அறி பவர்தாம் யாரோ—ஒருவரும் அறியார் எ. று.

ஒருவரும் அறியார் என்பது சொல்லெச்சம்.

நல்லாய் என்பது மாணாக்கனை விளித்த விளி. மகடூஉ முன்னிலையுமாம். ஏந்திழையார்—சிறந்த அணிகலன்களை யுடைய மகளிர், இங்குத்தாயாந்தன்மை எய்திநின்றோரைக் குறித்தது. ஏந்திழையார்க்கு என நான்கனுருபு விரிக்க.

பிறந்து கவானின்கட் கிடந்த குழவியின் அழுகை ஒலி கேட்டமாத்திரத்தானே முன்னில்லாத முலைப்பாலும்

கண்ணீரும் தாயினிடத்து உளவாதல் போலப்புலப்படாது அருவாய் நின்ற பேரருளாளனாகிய முதல்வனும் ஆன்மாக்களின் செவ்வி அறிந்து அவற்றுக்கு அருள் விரைந்து உருவாகி வெளிப்பட்டுத்தோன்றுவன் என்றதாம்.

முலைப்பாலும் கண்ணீரும் தாயினது அன்பு வெளிப்பாட்டிற்கு அடையாளமானாற்போல முதல்வன் உருவாகித் தோன்றலும் அவனது அருள் வெளிப்பாட்டிற்கு அடையாளம் ஆயிற்றெனவுணர்க.

முலைப்பாலும் கண்ணீரும் குழவியினது வயிற்றுப்பசி தணியவும் அது தாயை அணையவும் காரணமானாற்போல முதல்வன் குருவாய் உருக்கொடு வந்த தோற்றமும் அவ்வான்மாக்களின் அறிவுப்பசி தணியவும் அவை முதல்வனை அணையவும் காரணமாயிற்று எனவுணர்க.

நீர் நிழல் புலப்படத்தோன்றாதாகலின் அது அருவாகி நின்ற முதல்வற்கு உவமையாயிற்று. நீர் நிழல் போல் இல்லா அருவாகி நின்றான் என்புழிஇன்மைஉண்மைக்கு மறுதலையாகிய இன்மை என்று கொள்ளற்க. புலப்படத்தோன்றும் தோற்றமின்மை என்றே கொள்க. கொள்ளவே நீருக்கும் நிழல் உண்டு என்பது பெறப்பட்டு அவ்வுவமையால் அருவம் என்பதும் முதல்வற்கே உரிய ஒருவகைத் தோற்றப்படாத உருவம் என்றே கொள்ளப்படுவதாம். நீர் நிழல் காண்டற்கு அரிதாதல் போல இறைவனது அருவமும் காண்டற்கரிதாம், அவ்வளவே. இக்கருத்துப்பற்றியன்றே அருவத்தையும் உருவமெனக்கொண்டு இறைவற்கு உருவம் அருவுருவம் என்றனர் ஆன்றோர். இச்செய்தியை நுணுகி ஆராய்ந்து உணர்க.

''அருவாகி நின்றானை யார் அறிவார் தானே உருவாகித் தோன்றானேல் உற்று'' எனவரும் இதனோடு ''காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே''. எனவரும் அப்பரடிகளது அருளிப்பாட்டை ஒப்பு நோக்கி உணர்க.

உற்று-ஆன்மாக்களின் செவ்வி அறியலுற்று என்றது அறித்து என்றவாறாம். செவ்வி அறிந்துஉருவாகித்தோன்றுவன் என இயையும்.

தானே என்பது கட்டுரைச் சுவைபட நின்றது.

இதனால் தாய் போலும் பேரருள் உடைய முதல்வன் தவம் செய்து இருவினை ஒப்பில் உள்ள ஆன்மாக்களுக்குக் குருவாய் வந்தும் உணர்த்துவன் எனவந்தமேற்கோள் முற்றவும் வலியுறுத்தப்பட்டவாறு அறிக.

இங்ஙனமாக முன்னைத்தவத்தாலும் முதற்குருவின் உபதேசத்தாலும் உண்மை ஞானம் பெறுதற்கு முன்னால் ஐயுணர்வுகளால் மயங்கித்தம்மையே உணராதிருந்த அவ்வான்மாக்களது நிலைமை இன்னதென உணர்த்தி, ஞானம் பெற்றதற்குப்பிறகு அவை தம்மையும் உணர்ந்து தம்முள்ளிருந்த தலைவனையும் உணர்ந்து பின் அவற்குத்தைவமாம் நிலையின்னை உணர்த்த வருவது அடுத்த அதிகரணம். விட்டு எனச்சூத்திரத்துள் வரும் சொல்லால் அமைகின்றது அந்த அதிகரணம் ஆகலின் விடுதற்கு முன்னிருந்தநிலையும், விட்டபின் அடையும் நிலையும் அதன்கண் உணர்த்தப்படுகின்றன.

## மூன்றாம் அதிகரணம்

*மேற்கோள் : இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளால் மயங்கித்தம்மை உணரா என்றது, அவைதாம் பளிங்கில் இட்ட வன்னம் போல் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

பளிங்கு என்பது தூய வெண்ணிறமுடைய ஒருவகைக்கல். அதில் வன்னங்கள் தீட்டினால் வன்னங்களது நிறத்தையே காணமுடிவதன்றிப் பளிங்கினது நிறத்தைக்காண முடிவதில்லை. அது போன்றதே ஆன்மாவும். ஆன்மாப் பொறி வழியாக நிகழும் புலன் உணர்வுகளின் வயப்பட்டு நிற்கும் போது அதன் தன்னியல்பு தோற்றப்படுவதில்லை. ஐயுணர்வுகளால் மயங்கித்திரிந்த ஒரு வேற்றியல்பே ஆன்மாவின்கண் அதுபொழுது தோற்றப்படுவதாம். ஆகவே அந்நிலையில் ஆன்மாத்தன்னையும் தன்னுள்ளிருந்த தலைவனையும் உள்ளபடி உணராது என்று ஆசிரியன் மேற்கொண்டான்.

அவைதாம் என்றது ஆன்மாக்களைக்குறித்து நின்றது. காட்டிற்றைக் காட்டும் என்றது பொறிகள் ஆன்மாவுக்குக் காட்டியதை ஆன்மாக்காட்டி நிற்கும் என்றதாம். அதாவது ஆன்மாத்தன்னியல்பைக் காட்டாது வேற்றியல்பையே காட்டும் என்பதாம். அந்நிலையில் ஆன்மாத்தன்னைத்தான் உள்ளபடி உணராது என்பதுதான்.

அப்புலன் உணர்வுகள் ஆன்மாவை இடையறாது திசை திருப்பிக்கொண்டிருந்தனவாதலால் ஆன்மா அதுபொழுது தன்னை உணராதிருந்தது என்பதாம்.

இவ்வதிகரணம் ஐம்புல வேடரின் அயர்ந்து வளர்ந்தது என்ற சூத்திரக்கூற்றையும் கண்ணழித்து மேற்கொண்டதாக லான் ஆன்மாக்கள் ஐயுணர்வுகளால் மயங்கித்தம்மை உணரா திருந்த நிலை முதல்வன் குருவாய் வந்து உணர்த்தற்கு முன்னால் இருந்த நிலை என்றும், அவன் உணர்த்தின பின்றை அவை தம்மையும் உணர்ந்து தம்முள் இருந்த தலைவனையும் உணர்ந்து பின் அவற்கே ஆட்படும் என்றும் உணர்க. இங்கு வரும் உரைப்பாட்டால் அது இனிது விளங்குவதாம்.

**பன்னிறமே காட்டும் படிகம்போல் இந்திரியம்**
**தன்னிறமே காட்டும் தகைநினைந்து பன்னிறத்துப்**
**பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய் பொய்யா**
**மெய்கண்டான்**
**மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.**

என்பது உரைப்பாட்டு. இது முதல்வன் குருவாய் வந்து உணர்த்தற்கு முன்னரும் உணர்த்திய பின்னரும்ஆன்மாவின் நிலை இதுவென உணர்த்துகின்றது. ஆன்ம தரிசனம் கூறியது எனினும் ஆம்.

கண்ணழிவு : பன்னிறமே காட்டும் படிகம்போல் இந்திரியந்தன் நிறமே காட்டும் தகை நினைந்து பன்னிறத்துப் பொய்ப்புலனை வேறு உணர்ந்து பொய் பொய்யாகவே மெய் கண்டான் பிறகு மெய்ப்பொருட்கே தைவம் ஆம் வேறு எ.து.

பொழிப்புரை : தன்மேல் தீட்டப்பட்ட பலவகை நிறங்களால் திரிந்து வேறுபட்ட பளிங்கானது தன்னிறம் காட்டாது வேற்று நிறமே காட்டினாற்போலப்பொறிவழி நிகழும்புலன் உணர்வுகளால் மயங்கித்திரிந்த ஆன்மாவும் தன்னியல்பைத் தோற்றாது வேற்றியல்பையே தோற்றி நின்ற தன்மையை எண்ணிப்பார்த்துப் பொய்ப்புலன்களை வேறாகப்பிரித்து உணர்ந்து அவற்றைப்பொய்யெனக் கண்டு கழிக்கவே ஆன்மாவின் மெய்யான தன்மை புருடற்குப் புலப்படுவதாம். புலப்பட்டவுடனே அவ்வான்மா இனித்தான் சாரவிருந்த மெய்ப்பொருளையும் முறையாக அறிந்து சார்ந்து பின் அதற்கே அது அடிமையுமாம் எ. று.

இது ஆன்ம தரிசனம் கூறியது. அவை அடக்கத்துள் ''தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்வார்''. எனச் சிவானுபூதிச்செல்வரைக் குறிப்பித்தானன்றே, அவரதுமுதல் அனுபவமாகிய தம்மை உணர்தல் இங்குக்கூறப்பட்டது.

ஆன்மாத்தான் சார்ந்திருந்த உடம்பு முதலிய பொய்ச் சார்புகளைப் பொய்யெனக்கண்டு கழித்துத்தன் தனித் தன்மையைப் பிரித்து உணரும் அனுபவமே ஆன்ம தரிசனம் எனப்படுவது. ஆன்மாத்தன்னைத்தான் தரிசித்தல் என்பது கூடாமையின் ஆன்மாவின் மறு படைப்பாகிய புருடன் என்பான் ஆன்மாவைத்தரிசிப்பன் என்று சொல்வது சைவ சித்தாந்த மரபு. இங்கு உணரப்பட்ட புருடன் என்பதும் ஆன்ம தத்துவங்கள் முப்பத்தொன்றனுள் ஒன்றாம் எனக்கருதுக. சத்தும் அசத்துமாகிய ஆன்மா அசத்தைச் சார்ந்து அசத்தாய் விளங்கிய அக்காலந்தொட்டு அது அவ்வசத்திற் பிரிந்து தன்னைத்தான் தரிசித்தலாகிய இக்காலம்வரை இப்புருட தத்துவத்திற்கு இடனுண்டு. அடுத்து நிகழும் சிவதரிசனமாகிய பதி தரிசனத்தின்போது இப்புருட தத்துவத்திற்கு அறவே இடனின்றாம் என வுணர்க. என்னை, வாக்கு மனாதீதமாகிய பதிப்பொருளை ஆன்மாத் தரிசிக்குங்கால்அ கக்கரணம் புறக்கரணங்களாகிய தத்துவச்சார்பு எத்துணையுமின்றி அப்பதிப்பொருளோடு ஆன்மாத்தானதுவாய் ஒன்றி நின்றே உணரும் என்பவாகலின்.

சைவ சித்தாந்தத்துள் வரும் தரிசனங்கள் இரண்டு என்பதே மெய்கண்டான் துணிபு. அவை பசு தரிசனம் பதிதரிசனம் என்பன. பாச தரிசனம் என்பது பசு தரிசனத்துள்ளே அடங்குவதாம். இவை இரண்டு அனுபவங்களையுமே ஆசிரியன் அவையடக்கத்துள் தம்மை உண்ர்தல், தமை உடைய தன் உணர்தல் எனக்குறித்துச் சென்றான் என்க.

பளிங்கு இங்கு ஆன்மாவுக்கு உவமை ஆயிற்று. அது தன் மேற்பூசப்பட்ட பூச்சினுக்கேற்பப்புன்னிறமும் காட்டலாம். பொன்னிறமும் காட்டலாம். அதுபோல ஆன்மாத்தான் சார்ந்த சார்பினுக்கேற்ப அசத்தாயும்விளங்கலாம், சத்தாயும் விளங்கலாம் என்பதொரு இறைச்சிப் பொருளும் அதனாற் காண்க.

பளிங்கின் மேற்பூச்சு பளிங்கொளியை மறைத்துக்காட்டினாற்போல ஆன்மாவைச் சார்ந்திருந்த இந்திரியங்கள் ஆன்மவொளியை மறைத்துக் காட்டுவனவாம். வன்னங்களைப் பொய்யெனக்கண்டு கழித்துப்பளிங்கினது தூய நிறத்தை வேறு உணர்ந்தாற்போல இந்திரியங்களின் சேட்டைகளைப்பொய்யெனக்கண்டு கழித்து ஆன்மாவைப் புருடன் வேறாய் உணரும்போதுதான் ஆன்மாவின் தூய இயல்புகள் புலப்படுவனவாம். அசத்தைச்சார்ந்து இதுகாறும் அசத்தாய் வியங்கிய ஆன்மா இனிச்சத்தைச்சார்ந்து சத்தாயும் விளங்கும் இயல்புடையதே என்று உணரும்போதுதான் ஆன்ம தரிசனம் முற்ற நிகழ்வதாம் எனவுணர்க. ஆன்மாவின் உண்மையான சொரூபத்தைப்புருடன் அப்போதுதான் உணர்கிறான். அவ்வுணர்வு நிகழ்ந்தவழிஅசத்தின் சார்புகள் ஆன்மாவை விட்டுச் சிறிது சிறிதாக விலகத்தலைப்படும். அதே நேரத்தில் புதியதொரு சார்பினையும் ஆன்மா உணர்ந்து சாரத்தலைப்படும். தன்னுள் சத்தாய் விளங்கும் சிவத்தோடு ஆன்மாச்சார்தல் என்பதுவே அப்புதியசார்பாகும் எனக்கருதுக. ஒன்றன் சார்பை விடுதலும் பிறிதொன்றன் சார்பைப் பற்றுதலுமாகிய இரண்டும் ஒரு சேர நிகழ்வனவாம். இந்த அனுபவத்தைத்தமிழ்மறை ''சார்புணர்ந்து சார்பு கெட வொழுகல்'' என்றுகூறும். இதனையேமெய்கண்டான் ''பொய் பொய்யா மெய் கண்டான்.'' என்று கூறினான்.

இனி ''மெய்ப்பொருட்குத்தைவமாம் வேறு,' என்ற தன் குறிப்பாவது, பொய்ப் பொருளாகிய உடம்பை ஆன்மாச் சார்ந்திருந்த நிலையில் அவ்வுடம்பு அவற்குஉடைமையாக அவன் அதற்கு உடையானாய் இருந்த நிலைமை மாறி, மெய்ப்பொருளைச்சார்ந்த நிலையில் அம்மெய்ப்பொருள் அவற்கு உடையானாக அவன் அம்மெய்ப்பொருட்கு உடைமையாம். என்பதை உணர்த்தற்காம் போலும் என்க. ''அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும், குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ.'' என வரும் வாதவூரர்தம் அனுபவத்தையும் இங்குச் சிந்திக்க என்பதாம்.

இனி ஆன்மா அசத்தாகிய சார்பினை விட்டொழிக்கின்ற அதே நேரத்தில் சத்தாகிய சார்பினைப் பற்றிக்கொள்ளும் என்ற அனுபவத்தை உணர்த்த வருவது அடுத்த அதிகரணம்.

## நான்காம் அதிகரணம்

*இனி இவ்வான்மாத்தன்னை இந்திரியத்தின் வேறா வான் காணவே தம்முதல் சீபாதத்தை அணையும் என்றது ஊசல் கயிறு அற்றால் தாய் தரையே யாம் துணையான்.*

மேற்கோளும் ஏதுவுமாய் வந்த இது ஆசிரியன் உரைத்தது.

கயிற்றினது பற்றுக்கோட்டில் ஆடிக்கொண்டிருந்த ஊஞ்சலானது கயிறு அறுந்தவழி விரைந்து சென்று தரைக் கண்ணதேயாம். ஏனென்றால் அதற்கு அப்பொழுது தாய் போல நின்று தாங்கவல்லது அத்தரையே ஆகலான். அது போல இந்திரியப்பற்றுக்களால் இதுகாறும் ஊசலாடிக்கொண்டிருந்த ஆன்மாவும் அப்பற்றுக்கள் நீங்கிய வழி விரைந்து சென்று தம் முதல்வனின் சீபாதங்களையே பற்றும். ஏனென்றால் அங்கு அதற்கு அப்பொழுது ஆதாரமாய் நிற்பன அவையே ஆகலான் என்க.

இனி, தாய்த் தரையே யாம் துணையான் என்பது பாடமாயின் ஊஞ்சற் கயிறு அற்றதும் அது தாவிச்சென்று தரைக் கண்ணதேயாம் என்னும் ஒப்புமையால் ஆன்மாத்தன்னை

இந்திரியத்தின் வேறாவான் கண்டதும் அதுவிரைந்துசென்று தம் முதல்வனது சீபாதங்களையே அணைந்து நிற்கும் என்று உரைத்துக்கொள்க.

இனிக் கயிறாகிய பற்றுக்கோட்டில் நிலைகொள்ளாமல் இப்படியும் அப்படியுமாய் ஆடிக்கொண்டிருந்த ஊஞ்சலானது கயிறு அறுந்ததும் தரையாகியபற்றுக்கோட்டில்நிலைகொண் டாற்போல இந்திரியங்களின் வயப்பட்டு நிலைகொள்ளாமல் அலைந்துகொண்டிருந்த ஆன்மா அவ்விந்திரியத்தொடக் கற்றதும் விரைந்து சென்று முதல்வனது சீபாதங்களில் நிலை கொள்ளும் என்பதோர் இறைச்சிப்பொருளும் ஊசல் என்னும் உவமப்பொருட்புறத்தே தோற்றியவாறு கண்டுகொள்க.

தம்முதல் என்றது ஆன்மாக்கட்கு முதல்வன் என்ற பொருளில் மரபாக வருகின்ற ஒரு தொடர் மொழியாகும். சீபாதம் என்றான், அது மங்கலமாகிய அருளுக்கு ஊற்றிட மாதலின். தாய் என்பது தாரகம் அல்லது ஆதாரம் என்ற பொருளில் வந்தது. ஒற்று மிகுந்த பாடமாயின் தாவி என்னும் வினையெச்சப்பொருளதாம்.

**சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்**
**சிறைசெய் புலனுணர்வின் தீர்ந்து சிறைவிட்**
**டலைகடலிற் சென்றடங்கும் ஆறுபோல் மீளா**
**துலைவிலரன் பாதத்தை உற்று.**

என்பது உரைப்பாட்டு. இது பாசம் அறுந்தவழிப்பசு பதி யிடத்தாம் என்ற மேற்கோளை உவமை முகத்தால் வலி யுறுத்துகிறது.

கண்ணழிவு: சிறை செய்ய நின்ற செழும் புனலின் உள்ளம் சிறைவிட்டு அலை கடலில் சென்று அடங்கும் ஆறு போல் சிறைசெய் புலன் உணர்வில் தீர்ந்து உலைவு இல் அரன் பாதத்தை உற்று மீளாது எ. து.

பொழிப்புரை :- அணை தடுக்கத்தடையுண்டிருந்த ஆற்று நீர்த்தேக்கம்போல ஐம்புலவுணர்வுகள் தடுக்கத்தடை யுண்டிருந்த ஆன்மாவானது, அணையை உடைத்துக் கொண்டுஅலைகடலில்சென்றுஅடங்கும்ஆற்றுவெள்ளத்தைப்

போல ஐம்புலவுணர்வுகளால் வருகின்ற பாசத்தடையை முறித்துக்கொண்டு போய்ச்சலனமில்லாத அரனது சீபா தத்தை அணைந்து அமைதியுறும், பின் திரும்பாது எ. று.

கடலை நோக்கி ஓடிக்கொண்டிருக்கும் இயல்புடைய ஆற்று வெள்ளம் ஓரிடத்தில் தேங்கி நிற்றற்கு அணை செய்த தடை காரணமானாற்போலச்சைதன்னியமுள்ள ஆன்மாச் சைதன்னியமுள்ள பரம்பொருளை நோக்கி ஓடாதவாறு இது காறும் தடையுண்டிருந்தமைக்குப்புலன் உணர்வுகளின் தடையே காரணமாம் என்பதும், அணையாகிய தடை நீங்கியவழி ஆற்றுவெள்ளம் விரைந்துசென்றுகடலில் கலந்து அடங்கினாற்போலப்புலன் உணர்வுகளாகிய தடைநீங்கிய வழி ஆன்மாவும் தாழாது சென்று அரன் திருவடிகளை அணைந்து அமைதியுறும் என்பதும் இதனால் உணர்த்தப் பட்டதாம்.

நின்ற செழும்புனல் என்றும், சென்றடையும் ஆறு என் றும் இவ்வாறு பகுத்துக்கூறியது ஆன்மாவின் பிறப்புநிலை வீட்டு நிலைகளைக் குறித்தற்காம் எனவுணர்க. செழுமை புனலின் மிகுதி குறித்து நின்றது. உணர்வின் தீர்ந்து-உணர் வினின்று விடுபட்டு. இன் ஐந்தனுருபு நீங்கற்பொருளில் வந் தது. தீர்தல் விடற்பொருட்டு.

ஆற்றுவெள்ளம் சென்று அடங்குவதுஅலைகடல் என்றும் ஆன்மாச்சென்று அமைவது சலனமில்லாத அரன் திருவடி என்றும் கூறிய வேற்றுமை நயத்தினை அறிந்து போற்றுக.

மீளாது என்றது மீண்டும் பிறவிக்குத் திரும்பாது என்ற தாம். பொருட்கு வந்த அதனை உவமைக்குக் கொள்ளற்க. என்னை, மேல் வேற்றுமை நயம் கருதியது அது குறித்தே ஆக்லான் என்க.

ஆறு சென்று கடலில் அடங்குவது போல ஆன்மாச் சென்று அரன் திருவடிகளை உறும் என்க. உற்று மீளாது எனக்கொண்டு முடிக்க.

ஆறும் கடலும் நீர் என்னும் பொருட்டன்மையால் ஒன்றாதல் போல ஆன்மாவும் முதல்வனும் சைதன்னியம்

என்னும் பொருட்டன்மையால் ஒன்றாமாகலின் பொருள் இரண்டன்றி ஒன்றேயாம் போலும் என்று ஐயுற்ற மாணாக் கற்கு ஐயமகற்றி, ஆன்மாத்தம்முதல் சீபாதத்தை அணை யும் என்றதன் தாற்பரியத்தையும் விளக்க வருகின்றது அடுத்த உரைப்பாட்டு.

**எம்வுருவும் தானென்னின் எய்துவார் இல்லையாம்.**
**இவ்வுருவின் வேறேல் இறையல்லன் எவ்வுருவும்**
**கண்போல் அவயவங்கள் காணாவக் கண்ணில்லான்**
**கண்பேறே காணக் கழல்**

என்பது உரைப்பாட்டு. இது முதல்வனது சருவ வியாபக நிலையை உணர்த்திச்சீபாதத்தை அணைதல் என்பதன் தாற்பரியமும் கூறுகின்றது.

கண்ணழிவு:- எவ்வுருவும் அவன்தானே என்னின்அவனே எய்துவார் இல்லையாம். இவ்வுருவின்அவன்வேறேல் அவன் இறையும் அல்லனாம். ஆதலின் அவன் சருவ வியாபகன் என்பதாம். எவ்வுருவையும் கண்போல் பிற அவயவங்கள் காணா. அக்கண் இல்லான் கண் பெற்ற பேறே அக்கழல் பெற்ற பேறு காண் எ. து.

பொழிப்புரை:- மாணாக்கனே, பிரமம் என்னும் அந்த ஒன்றே மற்றெல்லாம் என்னும் ஏகான்மவாதக்கொல்கையை ஏற்றுக்கொண்டு உலகிற்காணும் எல்லா உருவும் அம்முதல் வனே எனக்கொள்ளின் வீடு பேறு கருதித்தவத்தால் அவனை அடைய விரும்புவார் ஒருவரும் இல்லையாம். அங்ஙனமன்றி இவ்வுலகு உயிர்களின் வேறாய் உள்ள ஒருவனே இறைவன் எனக்கொண்டாலோ அவன் இறைவனும் அல்லனாம். ஆகவே அவனைச்சருவ வியாபி எனக்கோடலே தக்கதொன் றாம். அவ்வாறு கொள்வதால் பொருள் வகையால் அவன் உலகு உயிர்களின் வேறாயும் கலப்பு வகையால் உடனாயும் நின்றமை பெறப்படும். இனி, எந்தவொரு பொருளையும் இது இன்ன பொருள்எனக்கண்டறிவதில் கண்ணைப்போலப் பிறபொறிகள் உதவுவன அல்லவாமாதலின் கட்பொறியே பிறபொறிகளினும் சிறந்ததாம். உலகு உயிர்களிடத்துச்சருவ வியாபகனாய் உள்ள அம்முதல்வனைக் கண்டு உணர ஊனக்

கண் போதாவாகலான், கண் இல்லாத குருடன் ஒருவன் கண் பெற்ற பேறு போல்வதே இங்குக்கழல் பெற்ற பேறாம் என்று நீ தெளிய அறிவாய் எ. று.

எனவே, அதுவே ஞானக்கண் என்றபடியாம்.

உலகு உயிர்கள் அனைத்தினும் முதல்வன் சருவ வியாபி யாய் உள்ளான் என்று இங்குக் கூறப்பட்டதால் பொருள் ஒன்றன்று, மூன்றே என்பது இங்கும்வலியுறுத்தப்பட்டவாறா யிற்று. மூன்றெனக்கொள்ளாது ஒன்றே எனக்கொள்ளுமவர் அவனது சருவ வியாபகத்தன்மையை மறந்தவர் என்றதாம்.

எவ்வுரு, இவ்வுரு என்பன உடம்போடு கூடிநின்ற ஆன்மாக்களை உணர்த்தின.

எவ்வுருவும் தான் என்னின் எய்துவார் இல்லையாம் என்றதால் ஒரு பொருட்கொள்கை மறுப்புண்டதாம். உலகு உயிர் அனைத்தினும் அவன் சருவ வியாபி எனக்கொண்ட தால் முப்பொருட் கொள்கையே வலியுற்றதாம் என்வுணர்க.

இவ்வாறு உரைத்ததால் முதல்வன் உலகு உயிர்கட்கு வேறாயும் உடனாயும் நின்ற நிலைமை தெளிவாயிற்று என்டதாம். ஆகவே அணைவதும் அணைய நிற்பதுமெனப் பொருள் வேறெனக் கோடலேயன்றி ஒன்றெனக்கோடல் வலியுடைத்தாகாது என்பதாயிற்று.

இனிக்கட்பொறியே மற்றைப்பொறிகளினும் தலையா யது என்பதைக் "கண்போல் அவயவங்கள் காணா" என்பத னால் அறியலாம். காட்சி உணர்வே தலையாய உணர்வு என்பது அதன் கருத்தாம். மெய், வாய் மூக்கு செவியாகிய மற்றைப் பொறிகள் விடயங்களை ஆன்மாவுக்கு உணர்த்துங் கால் ஆங்கு நிகழும் குறைவுபாட்டினைக்கண்ணே முன்வந்து நிரப்புகிறது. யாரோ தொட்டதை மட்டும் உணர்ந்து ஆன்மாவுக்கு உணர்த்துவது மெய்யாகிய பொறி. அங்கு இன்னார்தாம் தொட்டது என்று கண்டு உணர்த்து வது கட்பொறி. இது கைப்புச்சுவை என்று மட்டும் உணர்த் துவது வாய்ப்பொறி. அச்சுவையினைப்பயந்ததுவேம்புஎன்று கண்டு உணர்த்துவது கட்பொறி. இது ஒரு நறுமணம் என்று

மட்டும் உணர்த்துவது மூக்குப்பொறி. ஆங்கு அந்நறுமணம் பரப்பியது மல்லிகை என்று கண்டு உணர்த்துவது கட்பொறி. இது ஒரு இன்னொலி என்று மட்டும் உணர்த்துவது செவிப் பொறி. அந்த ஒலியை எழுப்பியது ஒரு குயிற்பறவை என்று கண்டு உணர்த்துவது கட்பொறி. இவ்வாறாகப்பிறபொறி களின்உணர்வுக்குறைபாட்டினைக் கண்கண்டு நிரப்புவதால் கண்ணே பிற பொறிகளினும் சிறந்ததாகக் கருதப்பட்டது.

இனிக்கால தேச வர்த்தமானங்கட்கு அப்பாற்பட்ட சில செய்திகளையும் மனத்தின் உதவிகொண்டு ஒரு கண் கண்டறியும் என்பர் ஆன்றோர். அந்தக்கண்ணை அகக்கண் அல்லது மனக்கண் என்று சொல்லலாம்.

இனி, பொறிபுலன் அந்தக்கரணங்கள் முதலான தத்து வங்களால் எத்துணையும் எட்டலாகாப்பரம்பொருளை ஆன்மா உணரநிற்புழி அதற்குக்கண் போன்றதொருசாதனம் இன்றியமையாது தேவைப்பட்டதாம் என்றுஉணரவேண்டும் உடம்போடு வாய்த்த ஊனக்கணணாலோ அந்தக்கரணங்க ளோடு வாய்த்த மனக்கண்ணாலோ அதனை உணர முடியா தாகலான் ஞானக்கண் என ஒன்று ஆங்கு ஆன்மாவுக்குத் தேவைப்படுவதாம். மெய்ப்பொருளை ஆன்மா உணர முற் படும்போது ஊனக்கண்ணாலோ மனக்கண்ணாலோகூட அதனை உணர முடியாதாகலான் கண் இருந்தும் அது குருடே ஆயிற்று எனபதாம். அந்நிலையில் சிவன் கழல் ஒனறே ஆன்மாவுக்குக் கண்ணாக நின்று உதவுவதாம். அதனை விளக்கவே ஆசிரியன் கண் இல்லாத குருடன் ஒரு வன் கண் பெற்ற பேறு போல்வதே இங்குக்கழல் பெற்றபேறு என்று குறிப்பித்தான். இவ்வான்மாத்தன்னை இந்திரியத் தின் வேறாவான் காணவே தம்முதல் சீபாதத்தை அணையும் என வந்த மேற்கோட் கருத்தும் இதுவே யாதலைத்துணிந்து உணர்க. முதல்வனது சீபாதத்தை அணைதல் என்றது ஞானத்தினை உணர்தல் அதாவது ஞானக்கண் பெறுதல் என்பதேயாம் என்க. ''அவனருளாலே அவன்தாள்வணங்கி'' என்றார் திருவாதவூரடிகள்.

இங்ஙனம் ஆன்மாத்தன்னை இந்திரியத்தின்வேறாவான் கண்டு தமது முதல் சீபாதத்தை அணைந்து நின்றவழியும்

இந்திரியப்பற்று அறவே நீங்கிற்று எனல் கூடாது என்று உரைக்கும் உரைப்பாட்டு இனி வருவது.

**ஐம்பொறியின் அல்லையெனும் அந்த தரசிவனை**
**ஐம்பொறியை விட்டங் கணைசகலன் ஐம்பொறியின்**
**நீங்கான்நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மவரின்**
**நீங்கானை நீங்கும் நினைந்து.**

என்பது உரைப்பாட்டு. இது ஆன்மா ஞானத்தை உணர்ந்த வழியும் இந்திரியப்பற்று அறவே நீங்காது என்கின்றது.

கண்ணழிவு:- ஐம்பொறியின் அல்லை என்னும் அந்ததர ஐம்பொறியை விட்டு அங்குச் சிவனை அணை சகலன் நீர்ப் பாசிபோல் ஐம்பொறியின் நீங்கியும் நீங்கானுமாயிருந்து மலம் கன்மம் நீங்குதல்வரின் நீங்கானை நினைந்து அவற் றின் அறவே நீங்கும் எ. து.

பொழிப்புரை:- இதுபொழுது ஐம்பொறிகளோடு உள்ள தாகிய பற்றுச் சிறிதும் உடையை அல்லை என்ற சிந்தாந் தத்தை அறிந்து நின்ற மாணாக்கனே, அவவாறு நீ கருது வதும் இங்கு உண்மை ஆகாது. ஐம்பொறிகள் வழியாக வந்த பற்றினை ஓராற்றான் விட்டுச்சிவனது திருவடி ஞானம் பெற்றுநின்ற மும்மலங்களையுமுடைய அவ்வான்மாவானது நீர் மேல் படர்ந்த பாசிபோலப்பற்று ஒருவழி நீங்கியும் ஒரு வழி நீங்காதுமாயே இருந்து மாயாதனுவாகிய உடம்பு நீங் கும் காலத்தே மலகன்மங்களும் அறவே நீங்குமவ்வெல்லைக் கண்ணே தன்னுள்ளே நீங்காது நின்ற முதல்வனை இடை யறாது நினைந்து வந்த பழக்கத்தினால் உடம்போடு வந்த பற்றுக்களை உடம்போடே கழித்துச்சென்று முதல்வன் தாளை அணைந்துபின் பிறவிக்குத் திரும்பாது என்பதுவே உண்மையாம் என்பது.

பின் பிறவிக்குத் திரும்பாது என்றது முத்றகண் வந்த உரைப்பாட்டில் மீளாது எனவந்ததனைக் கருத்திற்கொண்டு உரைக்கப்பட்டதென்க.

ஐம்பொறியின் அல்லை எனும் அந்ததர என்றது இஞ் ஞான நூலை முறையாகப் பாடங்கேட்டுப்பயின்று வரும் மாணாக்கனை விளித்த விளி எனக்கொள்க. என்னை, அவனுந்தான் இதுபொழுது தன்னை அந்த நிலைக்கு உயர்த்திக்கொடு நின்றானாகலின் என்க. நூல் முதற்கண் ஒன்றும் அறியாதிருந்த அவனைப்பேதாய் என்று விளித்ததும், சத்தசத்துக்களை வரைசெய்து உணர்த்துமிடத்துச் சத்துமல்லாது அசத்துமல்லாதிருந்த அவனை அசத்தலாய் என்று விளித்ததும், நூல் முடிவில் நூல் கேட்டற்குரியார் இன்னார் என்று கூறவருமிடத்து அவன் அதுபொழுது நூல் முழுவதும் கற்றுச் சிவமாந்தன்மை எய்தி நிற்கும் காரணத் தால் சிவம் என்னும் அந்தர என்று விளிப்பதும் அந்தஅந்த எல்லைக்கண் அவனது தகுதி குறித்து விளிக்கும் விளி-யெனவே கருதுக.

அந்ததரன் என்றது சிந்தாந்தத்தை அறிந்தவன் என்ற பொருளதாம். சித்தாந்தம்—சிந்தையால் செய்து கொண்ட அந்தம் அல்லது முடிவு. தரன்-தரித்தவன், மேற்கொண்டவன், அறிந்தவன்.

சகலன் என்றதால் மும்மலங்களுமுடைய ஆன்மா என்று உரைக்கப்பட்டது.

நீர்ப்பாசியானது நீர்நிலையில் கல்லெறிந்த பொழுது விலகியும், கல்லெறிதல் நின்றபொழுது மூடியும் இருந்தாற் போல ஆன்மா முதல்வனது சீபாதத்தை அணைந்து நின்ற பொழுது இந்திரியப்பற்றுக்கள் விலகியும், பிராரத்த கன்மங் களைப் புசிக்கின்றபொழுது கூடியும் நிற்குமாகலான் ''ஐம் பொறியின் நீங்கான் நீர்ப் பாசிபோல்''. என்றான்.

மலகன்மம் நீங்கவரும் காலம் வரின் என்றதால் மாயா மலமாகியஉடம்பு நீங்கும் காலத்தே என்று உரைக்கப்பட்டது. என்னை, அக்காலத்தே அவன் ஏகனாகி இறைபணி நின்று மும்மலங்களும் கெட்டொழியும் பரிபக்குவம் எய்தி நிற்பான் ஆகலின் என்க.

மலகன்மம் நீங்குதல் வரின் எனக்கொண்டு கூட்டுக. நீங்குதல் எனற்பாலது தொழிற் பெயர் விகுதி குன்றி முதனிலையாக நின்றது. மலம்-ஆணவமலம். கன்மம்-இங்குப் புசிக்கைக்காக ஊழான் வரையறுக்கப்பட்டிருந்த பிராரத்த கன்மங்களை மட்டுமே குறித்ததெனக்கொள்க. சிவானுபூதிச் செல்வர்க்கு உடம்பு நீங்கும் காலத்து எஞ்சிநிற்பதொன்றும் இன்றாகலான் நீங்கானை நினைந்து நீங்கும் என்றான்.

முன்னைப் பல பிறவிகளில் சரியை முதலானதவங்களைச் செய்து பின்னர் நற்குடியில் வந்து பிறந்த அவ்வான்மாவிற்கு முதல்வன் குருவாய் வந்து உணர்த்தற்கு முன்னால் இருவினையொப்பு உணர்வு வாய்த்து விடுமாகலானும், சீபாதத்தை அணைந்து நின்ற பின்னர் ஏகனாகிஇறைபணிநின்று செய்யும் ஆகாமிய வினைகள் அவ்வான்மாவைச்சாராவாகலானும், ஞானப்பேருணர்வால் இருள்மலமும் தேய்ந்து போமாகலானும், ஊழான் வரையறுக்கப்பட்டுப் புசிக்கைக்கு இருந்த பிராரத்த வினைகளும் தேகாந்த பரியந்தம் புசிக்கப் பட்டு விடுமாகலானும், எஞ்சி நின்ற மாயாமலமும் உடம்பு நீங்கும் காலத்தொருசேர நீங்குமாகலானும் இவ்வாறு மும்மலங்களும் கெட்ட நிலையில் நீங்கானையே நினைந்து நீங்கும் அந்த முத்தான்மாத்தம் முதல் சீபாதத்தை நிரந்தரமாய் அணைந்து பின் பிறவிக்கு வாராது என்பது ஒருதலையாகலானும் சாதன சாத்திய முறையானும், சம்பிரதாய மரபானும் இவவெண்பாவிற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது என்பதாம்.

இம்மூன்று பாட்டுக்களானும் தன்னை இந்திரியத்தின் வேறாய்க்கண்ட ஆன்மா சிறைசெய்ய நின்ற செழும்புனல் சிறைவிட்டு அலைகடலில் சென்று அடங்கிய ஆறுபோல் உலைவில் அரன் பாதத்தை உறும் என்பதும், அதுவே ஞானக்கண் பெற்ற பேறாம் என்பதும், அந்நிலையில் மும்மலங்களும் அறக்கெடாவாகலான் நீர்ப்பாசிபோல் பற்று நீங்கியும் நீங்காதுமாயிருந்து உடம்பு நீங்கும் காலத்தே அவை முற்றவும் கெட்ட நிலையில் தம் முதல் சீபாதத்தை அணைந்து பின் பிறவிக்குத்திருப்பாது என்பதும் கூறி மேற்கோளை வலியுறுத்தவாறு காண்க.

இனி நீர்ப்பாசிபோல் உள்ள நிலை மாற ஆன்ம சுத்தி இன்றியமையாததாகலின் அடுத்து வரும் சூத்திரம்அதனையே கூறவருகின்றதென்பதாம்.

எட்டாம் சூத்திரம் முற்றிற்று.

## ஒன்பதாம் சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதிவிதி எண்ணுமஞ் செழுத்தே.

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோவெனின் ஆன்ம சுத்தி பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமாய் வந்தஇவை ஆசிரியன் உரைத்தவை.

முற்செய்தவத்தாலும் இருவினையொப்பு உணர்வாலும் தமது முதல் தானே குருவுமாய் வந்து உணர்த்த ஆன்மா ஞானத்தினை உணர்ந்த வழியும் நீர்ப்பாசிபோல இந்திரியப் பற்றுக்கள் நீங்கியும் நீங்காதுமாய் வருகின்ற அந்த அவல நிலை மாறத் திருவைந்தெழுத்தினை விதிப்படி உச்சரித்து ஆன்ம சுத்தி செய்து கொள்ளுமாறு பணிக்கின்றது இந்தச் சூத்திரம் என்பது.

சூத்திரத் தொடர்பும் இதனால் விளங்குவதாம்.

கண்ணழிவு:- ஊனக்கண்ணாலும் பாசத்தாலும் உணராப்பதியை ஞானக்கண்ணாலே சிந்தையுள் நாடி-நாடப் பாசம் உராத்துனைத்தேர்ந்து என ஒருவப் பதி தண்ணிழலாம், விதி அஞ்செழுத்து எண்ணும் எ. து.

பொழிப்புரை:- ஊன்க்கண்ணாலும் கருத்தாலும் கண்டும் கருதியும் உணரவொண்ணாத பதிப்பொருளை ஆன்மாத்தான் முன்னதாகப்பெற்றுள்ள ஞானக்கண்ணாலே சிந்தையுள்ளே தேடிக்கண்டு உணர உணரத்தனக்கு இது காறும் உடம்போடும் உலகோடும் இருந்து வந்த அக்ப்புறப் பற்றுணர்வுகள் சிறிது சிறிதாக விலகிப்பின் கானல் நீரைப் போல முற்றவும் இல்லையாகிக்கழியும். அவ்வாறு கழிந்த நிலையில் அப்பதிப்பொருள் குளிர்ந்த தருநிழலாய்த்தோன்றி அவ்வான்மாவை இளைப்பாற்றும். அந்தப் பேரின்ப அனுப

வம் மீளவும் மாறாதிருக்க ஆன்மாத்திருவைந்தெழுத்தினை விதிப்படி உச்சரித்து வருதல் கடமையாம் எ. று.

உடம்பு வழி வந்த உணர்வுப் பொறியாகலின் கண்ணை ஊனக்கண் என்றான். ஊன்-உடம்பு. கண்போல் அவயவங்கள் காணா எனக்கண்ணைச் சிறந்ததென மேற்கொண்டமையால் மற்றைப்பொறிகளை விலக்கிக்கட்பொறி ஒன்றையே கூறினான். கூறினானேனும் ஐந்து பொறியுணர்வுகட்கும் எட்டாது அப்பாற்பட்டதே அப்பதிப்பொருள் என்பதுவே கருத்தாகக்கொள்க. கண் என்பது இங்குக் கண் உணர்வைக் குறித்தது.

பாசம் என்றதும் பாசவுணர்வையாம். அது உலகத்துப் பொருள் வழியாக உள்ளத்தில் நிகழும் உணர்வெனக் கொள்க. அவை மாயாகாரியமாகத் தோன்றி விரிந்துள்ள கலை வித்தை அராகம் காலம் நியதி புருடன் ஆகிய இவற்றோடு மாயையும் சேர ஏழாக எண்ணி உணரப்படும் தத்துவ உணர்வுகளாம். இவையெல்லாம் கருதி உணரப்படும் காரணத்தால் கருத்தெனப்பட்டன. ஆகவே தான் கண்ணாலும் கருத்தாலும் கண்டும் கருதியும் உணரவொண்ணாத பதிப்பொருள் என்று உரைக்கப்பட்டது.

சைவசித்தாந்தத்துள் விவகரிக்கப்படுகின்ற தத்துவங்கள் முப்பத்தாறனுள் சிவதத்துவங்கள் எனப்பட்ட சுத்தவித்தை ஈசுரம் சதாசிவம் சத்தி சிவம் ஆகிய சுத்த தத்துவங்கள் ஐந்தும் நீங்கலாகவுள்ள ஏனைக்கலையாதி மண் அந்தம் வரையான தத்துவங்கள் முப்பத்தொன்றும் ஆன்ம தத்துவம் என்ப்படுவன. இந்தத் தத்துவங்கள் முப்பத்தொன்றாலுமே அறியவொண்ணாதது அப்பதிப்பொருள் எனபதையே ஊன்க் கண் பாசம் உணராப்பதி என்று ஆசிரியன் இங்குக்கூறியதெனவுணர்க. உணரவே ஆன்ம உணர்வால் உணரவொண்ணாததே அப்பதிப்பொருள் என்பதாம்.

இனி ஆன்ம உணர்வு இருவகையது: ஒன்று, பொறிகள் வழியாக உள்ளத்தே நிகழும் உணர்வு. மற்றொன்று, அந்தக் கரணங்கள் வழியாக உள்ளத்தே நிகழும் உணர்வு.

முன்னதைப்பசு ஞானம் என்றும் பின்னதைப்பாச ஞானம் என்றும் கூறுவதுண்டு. நுணுகி உணரவல்லார்க்கு இவ்விரண்டுமே ஒன்று பசு ஞானம் அல்லது பாச ஞானம் என்பது புலனாம். இவ்விருவகை உணர்வுகளுமே முதல்வனைஅறியப் போதாவாகலின் ஊனக்கண் பாசம் உணராப்பதி என்று ஆசிரியன் கூறினான்.

ஞானக்கண் என்பது திருவடி ஞானம். அது மேலைச் சூத்திரத்தால் அறிவுறுத்தப்பட்டது. அந்த ஒன்றால் மட்டுமே பதிப்பொருளை ஒருவாறு சிந்தையுள் வைத்துத்தேடி உணர்தல் கூடுவதாமாகலின் ''ஞானக்கண்ணினில் சிந்தைநாடி'' என்றான். சிந்தை நாடி என்றது வாக்குமனாதீதனாயுள்ள அவனை வேறெங்கும் தேடிக்காண்டல் அரிது என்னும் கருத்தால் என்க. நாடி என்பது நாட என்பதன் திரிபாகும்.

திருவடி என்றது முதல்வனது திருவருளேயன்றி வேறன்று ஆகலான் அவ்வருளை முதற்கண் உணர்ந்துதெளிந்து அருள் வழியிலே நிலைத்து நிற்பின் பாச வுணர்வு மறைந்து மெய்யுணர்வு தலைப்படும். அந்த மெய்யுணர்வுகொண்டு அந்த அருள் வந்த வழியே சென்று அவ்வருட்கு ஊற்றிடமாயுள்ள முதற்பொருளைத்தலைப்பட்டு உணர உணர அதுகாறும் இருந்து வந்த உடல் உலகப்பற்றுக்கள் சிறிது சிறிதாக நீங்கி முடிவில் முற்றுமாய் அகன்றுவிடுமாகலின் உராத் துனைத் தேர்ந்தெனப்பாசம் ஒருவும் என்றான். உராத்துனைத்தேர் என்பது மனிதர் யாரும் ஊரப்படாத வேகத்தையுடையதேர் என்பதாம். அதனால் அது பேய்த்தேர் எனப்படுவதாம். அத் தேரின்னைப் போன்றது கானல் நீராகலின் அதனைத்தேர்த்து என்னும் வினைக்குறிப்பாற் சுட்டினான். ஒருவுதல்-நீங்குதல். ஊரா என்பது உரா எனக்குறுக்கல் விகாரம் பெற்றது. தேர்த்து-தேரினைப் போன்றதாகிய கானல் நீர்-தேர்த்து என கானல் நீரைப்போல. என என்பது இங்கு உவம உருபு. அது தொல்காப்பிய உவமவியலுள்'ஆறாறவையும் அன்னபிறவும்' என்புழி, என வென்னெச்சம் பற்றி வருவனவும் உவம உருபாகக்கொள்ளப்படும் என்றதாற்கொள்ளப்பட்டது. அதற்கு எடுத்துக்காட்டு, ''தூதுணம் புறவெனத் துதைந்த நின் னெழில் நலம்'' என்பதாம்.

பின்னர் வந்த பாசம் என்பது பற்று அல்லது அவா வினைக்குறித்தது. அதுவும் இருவகையது. ஒன்று, உடலைப் பற்றி வருவது. அது, நானல்லாத உடலை நான்என்றுகருது வது. அதனை அகப்பற்று என்பர். மற்றொன்று, உலகத்துப் பொருளைப் பற்றி வருவது. அது, எனதல்லாத பொருளை எனது என்று கருதுவது. அதனைப் புறப் பற்று என்பர். அவ் விருவகைப் பற்றும் நீங்கிய நிலையே வீடுபேறாம் என்பது மெய்கண்டான் துணிபு. ''ஆகலான் பாசம் ஒருவத் தண்ணிழ லாம் பதி'' என்றான். ''யான் எனது என்னும் செருக்கறுப் பான் வானோர்க்குயர்ந்த உலகம் புகும்'' என்ற வள்ளுவன் தமிழ்மறை இங்குக்கருதற்பாலது.

பிறவியால் வந்த வெப்பத்தைத் தணிப்பதாகலான் வீடு பேறு தண்ணிழல் எனப்பட்டது. மெய்கண்டான் குறித்த தண்ணிழல் என்பதும், வள்ளுவன் குறித்த வானோர்க்கு உயர்ந்த உலகம் என்பதும் வீடுபேறு என்னும் ஒரு பொருளையே சுட்டின.

இவ்வீடுபேறுணர்வாகிய முடிந்த அனுபவம் வாய்த்த பின்றையும் வாதனை வயத்தால் ஒரோவழி அவ்விருவகைப் பற்றும் ஆன்மாவுக்கு நிகழ்தல் கூடுவதாமாகலின் அங்ஙனம் அது நிகழாமைப் பொருட்டு ஆன்மாத்திருவைந்தெழுத் தினை இடையறாது கணித்து வரல் வேண்டும் என்பான் ''எண்ணும் அஞ்செழுத்தே''. என்றான். அஞ்செழுத்தை எண்ணுதற்கண்ணும் ஓர் விதிமுறை உண்டாமாகலின் அவ் விதிப்படியே உச்சரிக்கவேண்டும் என்பான், ''விதிஎண்ணும்'' என்று ஒரு ஆணையும் தந்தான். அங்ஙனம் செய்யுமதுவே ஆன்மசுத்திபண்ணுமாறாம் என்று ஆசிரியன் இங்கு உணர்த்தினான் என அறிக.

உண்மை உணர்வு வாய்த்தபோதே கானல்நீர் இல்லை யானாற்போல மெய்யுணர்வு வாய்த்தபோதே பாசங்களும் இல்லையாமாதலின் அதற்கு அது உவமை ஆயிற்று.

திருவைந்தெழுத்தாவது பொதுவாக வணக்கம்சிவனுக்கு என்ற பொருளில் வருகின்ற ஐந்து எழுத்துக்களால் ஆன ஒரு மகாவாக்கியத் திருமந்திரம் எனவுணர்க. ''நமச்சிவாய

வாழ்க நாதன்தாள் வாழ்க'' எனவரும் திருவாசக முதலடியுள் முதற் சீராக வந்த அதனை ஒற்று நீக்கி உச்சரித்துக் காண்க என்பது.

இச்சூத்திரத்துள் ''ஊனக்கண் பாசம் உணராப்பதியை ஞானக்கண்ணினில் சிந்தை நாடி'' என்பது ஒரு அதிகரணம். உராத்துனைத் தேர்த்தெனப்பாசம் ஒருவத் தண்ணிழலாம் பதி என்பது ஒரு அதிகரணம். விதி எண்ணும் அஞ்செழுத்தே என்பது ஒரு அதிகரணம் ஆக மூன்று அதிகரணத்தது இச் சூத்திரம் என்பது.

## முதலாம் அதிகரணம்

*மேற்கோள் : ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க என்றது, அவன் வாக்கு மனாதீதகோசரமாய் நிற்றலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

முதல்வன் வாக்கு மனங்கட்கு எட்டாதவனாயும் ஒரு வகை மெய்யுணர்வுக்குமட்டுமே விடயமாகின்றவனாயும் நிற்பவன் ஆதலாலே அவனை வேறு எவ்வாற்றானும் காணமுடியாதாகலின் ஞானக்கண் கொண்டு சிந்தையில் தேடிக்காண்க என மேற்கொள்ளப்பட்டது என்பதாம்.

அம்முதல் என்ற சுட்டு, பொறியுணர்வானும் அந்தக் கரணங்களுணர்வானும் உணரவொண்ணாதிருந்த அப் பதியைச் சுட்டியது. அதீதம்-அப்பாற்பட்டது. கோசரம்-விடயமாவது. ஞானக்கண் என்றது திருவடி ஞானத்தை. அருள் ஞானம் என்பதுமது.

வாக்கு மனாதீதன் என்றதால் அவன் பிரபஞ்சம் போல அசத்தல்லன் என்பதும், கோச்ரமாய் நிற்பன் என்றதால் முயற்கோடு போலச் சூனியமும் அல்லன் என்பதும் உணர்த்தியவாறாம் என்க. எனவே அவனே மேல் சத்தென்று வரையறுக்கப்பட்ட சிவமென்னும் செம்பொருளாம் என்பதும்அறிக. அம்முதல் என்ற சுட்டு அச்செம்பொருளைச்சுட்டிய சுட்டாம் எனினும் அமையும். ஊனக்கண்களின் உணர்வுக்கும் பாச

வுணர்வுக்கும் அப்பாற்பட்டவன் என்றதால்ஞானக்கண்ணாற் காண்கவென மேற்கொள்ளப்பட்டது என்பதாம்.

**நாடிய என்போ நரம்புசீக் கோழையோ**
**தேடி எனையறியேன் தேர்ந்தவகை நாடியரன்**
**தன்னாலே தன்னையும் கண்டு தம்மைக்காணார்**
**என்னாம் எனஅறிவார் இன்று.**

என்பது உரைப்பாட்டு. இது அம்முதலை ஞானக்கண்ணாற் காணும் முறைமை கூறுகின்றது.

கண்ணழிவு:- நாடிய என்போ நரம்போ சீயோ கோழையோ தேடி எனை அறியேன் என்றிருந்த அவர்தாமே இன்று தேர்ந்த வகையால் நாடி அரன் தன்னாலே தன்னை யும் கண்டுபின் தம்மையே காணாரானபோது என் நாம் என அறிவார் எ. து.

பொழிப்புரை : என்பும் நரம்பும் சீயும் கோழையுமாய்க் கருதப்பட்டு வந்த இவ்வுடம்பினுள் நான் யாதொன்றாய் இருந்தேன் என்று தேடி அன்று பெத்த காலத்தில் தம்மையும் அறியாதிருந்த அவர் தாமே இன்று முத்திக்காலத்தில் முதல் வனது திருவடி ஞானமாகிய தெளிந்த வழியாலே தேடி முத் லில் தம்மை உணர்ந்து,பின் தம்முள் இருந்த தலைவனையும் உணர்ந்து பிறகு தம்மையே காணாரானபோது வியந்து இது காறும் நாம் என்னவாயிருந்தோம் என்றெண்ணித்தமக்காக இரங்குவர் எ. று.

தமக்காக இரங்குதலாவது தமது கடந்த காலத்திற்காக வருந்துதல் என்பதாம்.

ஆன்மா உடம்பைச்சார்ந்திருந்தபோது தம்மை அறியா திருந்த நிலை பெத்த காலத்து நிலை என்றும், முதல்வனைச் சார்ந்திருந்தபோது தம்மை அறியாதிருந்த நிலை முத்திக் காலத்து நிலை என்றும் உணர்க. முன்னது பிறவிக்கும், பின்னது பிறவியறுத்தற்கும் காரணமாம். இவையே அவை தம்முள் வேற்றுமை என்க.

தேடி எனை அறியேன் என்புழி என்றிருந்த அவர் தாமே எனச்சில சொற்கள் பெய்து உரைத்துக்கொள்க. அங்கு அவை சொல்லெச்சம்.

முத்திக்காலத்தைச்சுட்ட இன்று என்றமையால் பெத்த காலத்தைச்சுட்ட அன்று என ஒரு சொல் வருவித்து உரைக்கப்பட்டது.

தம்மை உணர்ந்த பின்னரே தமையுடைய தன்னை உணர்தல் கூடுவதாமாகலின் தன்னையும் கண்டு என்பதற்கு ஆன்மாத்தன்னையும் அறிந்து பின் தன்னுள்ளிருந்த தலைவனையும் அறிந்து என இருபொருள்பட உரைத்துக்கொள்க.

தேர்ந்த வகையால் என்றது திருவடி ஞானத்தை உணர்ந்து தெளிந்த வழியால் என்றதாம்.

அரன் தன்னால் என்றது அரன் அருளால் என்றவாறாம். "அவனருளாலே அவன்தாள் வணங்கி" என்வரும் பெரியோர் அனுபவத்தையும் ஈண்டுக்கருதுக.

முத்திக்காலத்தனுபவம் கூறவந்த ஆசிரியன் பெத்த காலத்தனுபவமும் உடன் கூறினான், அவ்விரண்டற்கும் வேற்றுமை உண்டென அறிவித்தற்கென்க.

ஆன்மா உடம்பைச் சார்ந்து உடம்பேதான் என்றிருந்த பொழுதும் அது தன்னை அறியாதிருந்தது. உடம்பைமறந்து உயிருக்குள் உயிராயிருந்த முதல்வனைச்சார்ந்து முதல்வனே தான் என்றிருக்கும் இப்பொழுதும் அது தன்னை அறியாதிருந்தது. அதனால் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை ஆன்மாவுக்கு உண்டென்பதும் இதனால் உணரலாம் என்பது.

என்நாம் என அறிவார் இன்று என்றது இன்று அறிந்து இரங்குவர் என்றதாம்.

காணார் என்பது எதிர்மறைத் தெரிநிலை முற்று; வினையெச்சப் பொருளில் வந்தது. காணாராகி, காணாரானபோது என ஏற்ற பெற்றி உரைத்துக்கொள்க.

**காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண்காணா காட்டிய
உள்ளம் தனைக்காணா உள்ளத்தின் கண்ணாய
கள்ளன்தான் உள்ளத்திற் காண்**

என்பது உரைப்பாட்டு. இதுவுமது.

கண்ணழிவு : காட்டிய கண் தனைக்காணா. கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தையும் கண்காணா. காட்டிய உள்ளம் தனைக்காணா. உள்ளத்தின் கண்ணாய கள்ளன் தன்னை உள்ளத்தாற் காண் எ. து.

பொழிப்புரை : மாணவகா, ஆன்மாவுக்குக் காட்டாயிருந்து உணர்த்திய கண் தன்னைக் காண்பதில்லை. தனக்குக் காட்டாயிருந்த ஆன்மாவையும் அது காண்பதில்லை. அது போலக்கண்ணுக்குக் காட்டாயிருந்த ஆன்மாத்தன்னை உணர்வதில்லை. தனக்குக் காட்டாயிருந்த முதல்வனையும் தான் உணர்வதில்லை. இது பெத்த காலத்து நிலைமை. முத்திக்காலத்து நிலைமை முற்றிலும் வேறாமாதலின் நீ நின் அறிவின்கண் ஒளிந்திராநின்ற அக்கள்வன்தன்னை அவ்வறிவு கொண்டே தேடிக்கண்டு தெளிவாய். அந்த அறிவிற்கு அவன் ஒருதலையாய்க்கோசரப்படுவான் எ. று.

எனவே அந்த அறிவு மெய்யறிவு என்றநாம்.

கண் தன்னையும் காண்பதில்லை, தனக்குக் காட்டாயிருந்த ஆன்மாவையும் காண்பதில்லை. அதுபோல ஆன்மாத் தன்னையும் காண்பதில்லை. தனக்குக் காட்டாயிருந்த முதல்வனையும் காண்பதில்லை என்றதால் இது எடுத்துக்காட்டுவமை அணி.

காட்டிய முதலாயின முன்வந்த சொல்லும் பொருளும் பின்னரும் வந்தமையின் சொற்பொருட் பின்வருநிலை அணியும் ஆயிற்று.

உள்ளம் தனைக்காணா என்பதற்கு இரட்டுற மொழிதலாற் பொருள் உரைத்துக்கொள்க.

பெத்த காலத்து ஆன்மாத்தன்னையும் தன்தலைவனையும் உணராதிருந்ததாயினும் முத்திக்காலத்து ஆன்மா குருவருள் பெற்றுத்தன்னையும் தன் தலைவனையும் உணருமாகலின் உள்ளத்தின் கண்ணாய கள்ளனை உள்ளத்தாற்காண் என அறிவுறுத்தான் ஆசிரியன். தான்-தன்னை என இரண்டனுருபு விரிக்க. உள்ளம் என்பது இங்கு அறிவு என்னும் பொருட்டாய் நின்றது. அவ்வறிவுதானும் திருவடி ஞானம் அல்லது மெய்யறிவு என்றே உணர்க. என்னை, அந்த ஒன்றாலன்றி அக்கள்ளனை வேறு ஒன்றாலும் அறிய முடியாதாகலின் என்க.

அறிவில் பிரிவின்றிக்கலந்து ஒளிந்திருந்தமை பற்றி முதல்வனைக் கள்ளன் என்றான். "கள்ளரோடில்ல முடையார் கலந்திடின், வெள்ள வெளியாமென் றுந்தீ பற, வீடும் எளிதாமென் றுந்தீ பற", என்றார் திருவியலூர் உய்ய வந்த தேவநாயனாரும் என்க.

உள்ளத்திற்காண் என்றது உள்ளத்தாற் காண் என்றவாறு. அது பாடம் கேட்டு வரும் மாணாக்கனை நோக்கிக் கூறியது எனக்கொள்க. மேற்கோளின்கண் அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க என்றதுமது.

இதனால் பெத்த காலத்தில் அவன் வாக்குமனாதீதனாயும் முத்திக்காலத்தில் கோசரனாயும் நிற்கும் பெற்றி கூறப்பட்டது.

இனி ஞான ஒளிகொண்டு இருளை ஓட்டினால் அக்கள்ளன் தானே வெளிப்படுவான் என்கின்றது அடுத்த அதிகரணம்.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள் :- இனி அசத்தாய் உள்ள வன்ன பேதங்களை அசத்தென்று காண உள்தாய் நிற்பது ஞானசொரூபம் என்று உணரற்பாற்று.*

மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

இங்கு அசத்தாயுள்ள வன்னபேதங்கள் என்றது அசத்தாகிய பிரபஞ்சத்தை என்றதாம். அதனை அசத்து என்று கண்டு கழித்து விட்டால் முப்பொருள்களில் இனி எஞ்சி நிற்பது சத்தாகிய ஞான சொரூபமே என்று உணரலாம். ஞானசொரூபம் என்றது அறிவு வடிவாயே திகழும் சத்தாகிய பதிப்பொருளை என்றதாம். வன்ன பேதங்கள் என்றது நிறவேறுபாடுகளை என்றதாம்.

இங்கு என் சொல்லியவாறோ எனின் சித்தாந்தம் வரையறுத்துக்கொண்ட முப்பொருள் உலகு உயிர் இறை என்பன மூன்றுமேயாம். உலகு அசத்தெனவரையறுக்கப்பட்டது. இறையோ சத்தென்று தெளியப்பட்டது. இடைநின்ற உயிர் சத்தும் அசத்துமாய் விளங்குவது. சத்தாகிய பதிப்பொருள் உலகு உயிர் அனைத்தினும் சருவவியாபகமாய் நின்றது. சத்து அசத்தை அறிந்து புசிக்காது. அசத்தும் சத்தை அறிந்துபுசிக்காது. சத்தையும் அசத்தையும் தனித்தனியாக அறிந்து புசிப்பது ஆன்மா ஒன்றுமே என்றெல்லாம் இதுகாறும் தெளியப்பட்டன. பதிப்பொருளின் வியாபகத்துள்அடங்கி நின்றஆன்மா முதலில் தன்னைத்தனியாக உணர்ந்தது. அதுவே தம்மை உணர்தலாயிற்று. அதாவது ஆன்ம தரிசனம் ஆயிற்று. இனி அடுத்து நிகழ வேண்டிய தரிசனம் இறை தரிசனம் ஒன்றேயாம். அதை எவ்வாறு தரிசிப்பது? இறையின் சருவ வியாபகத்தால் இறையும் உலகும் ஒன்றாய்க்கலந்த கலப்புத்தான் முதலில் தென்படுவது. இந்தக் கலப்பிலிருந்து இறையைத் தனியாகப்பிரித்து உணரும் அனுபவம் வேண்டும். அந்தஅனுபவத்தைத்தான் இந்த அதிகரணம் நமக்கு உணர்த்துகிறது. இறையோ பளிங்கு போன்றது. எந்த ஒரு நிறமும் இல்லாத தூய தனித்தன்மையுடையது. உலகோ பலவகை நிறங்களைக்கொண்டது. அதாவது ஒருவன் என்றும் ஒருத்தி என்றும் ஒன்றுஎன்றும் இவ்வாறு சுட்டி அறியப்படுகின்ற பல நிறங்களை உடையது. இந்த வேற்றுமைகளைக்கொண்டு அசத்தாகிய பிரபஞ்சத்தைப் பிரித்து உணர்ந்து விட்டால் சத்தாகிய பதிப்பொருளின் தரிசனம் தானே கிடைத்துவிடும். அசத்தாகிய வன்ன பேதங்களைக்கண்டு கழித்து விட்டால் எஞ்சி நின்ற சத்தாகிய ஞான சொரூபம் புலப்பட்டுவிடும். அதுவே பதிதரிசனம் எனப்பட்டதாம், அதைத்தான் இந்த

அதிகரணம் உணர்த்துகிறது. இதை உணர்ந்து கொள்ள முற்றிய அனுபவம் வேண்டும் என்பதாம். பாசதரிசனம் முதலில் நிகழ்ந்தால் பதிதரிசனம் தானே நிகழும் என்கின்றது இந்த அதிகரணம், ''பாசம் ஒருவத்தண்ணிழலாம் பதி'' என வந்த சூத்திரப்பகுதியும் இதனையே உணர்த்தியது எனக் கருதுக.

மேலைச்சூத்திரத்தால் பசு தரிசனம் உணர்த்திய ஆசிரியன் இந்தச்சூத்திரத்தால் பதி தரிசனம் உணர்த்தினான். பாச தரிசனம் என்பது பதி தரிசனத்திலே ஒட்டி நின்றதையும் கண்டு தெளிக.

இங்கெல்லாம் பாசம் என்பதற்குப்பற்று எனப்பொருள் கொண்டு மயங்கி இடர்ப்பட்டாரும் உளர். பற்று விடும் அனுபவங்களை ஆசிரியன் பின்னர் உணர்த்துவான். இங்கு உணர்த்தியது உணரும் அனுபவம் ஒன்றே எனக்கருதுக. அந்த அனுபவத்தையும் ஆசிரியன் உணர்தல் புணர்தல் பழகுதல் என மூன்றாகப் பகுத்துப்பின்வரும் மூன்று உரைப் பாட்டுக்களால் உணர்த்துவான். இவற்றையே ''சார்பு கெட ஒழுகல்''. என்று வள்ளுவன் குறித்தான் என்றும் உணர்க.

இனிப் பதியை உணரும் அனுபவத்தை விளக்க வரும் உரைப்பாட்டு வருமாறு.

> **நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்**
> **தற்பரமாய் நின்ற தனிமுதல்வன் அற்புதம்போல்**
> **ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானோ**
> **வானே முதல்களையின் வந்து.**

என்பது உரைப்பாட்டு. இது அசத்தை அசத்தென்று கண்டு கழிப்பின் சத்தாயுள்ள ஞான சொரூபம் புலனாம் எனவந்த மேற்கோளைச்சம்பிரதாய மரபால் விளக்குகிறது. பதியை உணரும் அனுபவம் கூறியது என்றுமாம்.

இவ்வருமைத் திருப்பாட்டு ஒரு மகா வாக்கியத் திருமந்திரம் எனவே உணர்க. மெய்ப் பொருளைத்தரிசிக்க வேண்டுவோர் இப்பாடலை இடையறாது உச்சரித்துக் கொண்டிருக்க என்பதாம்.

கண்ணழிவு:- வான்முதல் களையின் நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியானந்தனாய் தற்பரமாய் நின்ற தனி முதல்வன் அற்புதம்போல் ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானேோதோன்றுவன் எ. து.

பொழிப்புரை : வான் முதலாகிய ஐம்பெரும் பூதங்களாலான பிரபஞ்சத்தை ஆன்மாப்பதிப்பொருளின் சருவ வியாபக நிலையினின்று பிரித்து உணர்ந்து விட்டால் அவ்வாறு உணர்ந்த நிலையிலே முக்குணங்களும் அற்றவனாய், மும்மலங்களும் இல்லாதவனாய், என்றும் வற்றாத பேரின்ப வடிவினனாய், ஆன்மாக்களுக்கெல்லாம் மேலான பரமான்மாவாய் விளங்கும் ஒப்பற்ற முதல்வன் அற்புதமாக வெளிப்பட்டு அளவைகட்கு அப்பாலாய் நின்று அறிவை விட்டு நீங்கானாய்த்தோன்றுவன் எ. று.

எனவே, அங்ஙனம் தோன்றுமதுவே பதி தரிசனமாம் எனவுணர்க.

வான் முதல் என்றது வெளி முதலான ஐம்பெரும் பூதங்களை என்றதாம். அவை வெளி வளி தீ நீர் நிலம் என்பன. அவை, இங்கு அவை ஐந்தும் கலந்த மயக்கமாகிய பிரபஞ்சத்தைக்குறித்தன, களைய வேண்டுவது அதுவே ஆகலின். களைதல் பிரித்து உணர்தல். வானே என்புழி ஏகாரம் எதுகை இன்பம் குறித்து இசை நிறைக்க வந்தது.

நிர்க்குணன் என்பது முதலாயின முதல்வனது பளிங்கு போன்ற தூய வியல்புகளைப்புலப்படுத்தி நின்றன.

ஆன்மாக்களை வசியப்படுத்தி அவற்றை எஞ்ஞான்றும் அலட்டிக்கொண்டிராநின்ற சத்துவம் இராசதம் தாமதம் ஆகிய முக்குணங்களையும் இயற்கையிலேவென்றுயர்ந்தவன் முதல்வன் ஆனதாலே அவனை நிர்க்குணன் என்றும், ஆன்மாக்களை அநாதி தொட்டுப்பந்தித்து நின்ற ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலக்குற்றங்கள் அவ்வான்மாக்கட்கேயன்றி அவனுக்கு அறவே இல்லை ஆதலாலே நின்மலன் என்றும், அசத்தைச்சார்ந்து அழிதல் மாலைத்தாய இன்பமே இன்பமெனக்கொண்டு மயங்கும் ஆன்மாக்கள்

போலாது என்றும் வற்றாப்பேரின்பமே தனக்கு வடிவாக் கொண்டு விளங்குவன் ஆதலாலே நித்தியானந்தன் என்றும், தத்துவங்கள் அனைத்திற்கும் மேலான தத்துவம் ஆன்ம தத்துவம், அதனைப் புருட தத்துவம் என்றும் பெயரிட்டழைக் கும் சாத்திர நூல்கள், அத்தகைய ஆன்மாக்களுக்கெல்லாம் மேலான பரமான்மாவாகிய பரம்பொருள் அவன் ஆதலாலே தற்பரம் என்றும் கூறினான் ஆசிரியன். ஆன்மாக்களின் அறிவில் நீங்காது நின்று உறைபவனேயாயினும் பெத்த காலத்தில் அவற்றுக்குத்தனது இருப்பைப்புலப்படுத்தா திருந்து முத்திக்காலத்தில் அவை அதிசயிக்கும் வண்ணம் புலப்படத்தோன்றுவன் ஆதலாலே அற்புதம் போல் என்றும், அறிவினுளன்றி அவனை வேறெங்கும் அறிய வொண்ணா தாகலின் ஆனா அறிவாய்த்தோன்றுவன் என்றும், எந்த ஒரு அளவையினாலும் அவன் அளந்தறியப்படாதவன் ஆதலாலே அளவிறந்து தோன்றுவன் என்றும், பாச நீக்கத்தே அவன் தோன்றல் ஒருதலையாமாகலின் வான்முதல் களையின்வந்து தோன்றுவன் என்றும் கூறி முடித்தான் ஆசிரியன் என்க.

இதனால் அசத்து ஒருவியவழி முதல்வனது ஞான சொரூபம் புலனாம் எனவந்த மேற்கோட்பகுதி வலியுறுத்தப் பட்டவாறு அறிக.

இது சம்பிரதாய மரபாற் கூறியது.

இதனால் ஆனா அறிவாய்த் தோன்றிய பதிப்பொருளை ஆன்மா உணர்தல் கூறப்பட்டது. அடுத்து வரும் உரைப் பாட்டுக்கள் இரண்டானும் அதனோடுபுணர்தலும் பழகுதலும் வலியுறுத்துவான் என அறிக. என்னை, உணர்தல், புணர் தல், பழகுதல் என அனுபவங்கள் மூன்றாமாதலின் என்க.

**சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்தென்னச்**
**சட்ட இனியுளது சத்தேகாண் சுட்டி**
**உணர்ந்ததீ சத்தல்லை உண்மையைத் தைவம்**
**புணர்ந்ததனால் பொய்விட்டுப் போம்**

என்பது உரைப்பாட்டு. இது ஆனா அறிவாய்த் தோன்றிய பதியோடு ஆன்மாப்புணர்தல் கூறுகின்றது.

கண்ணழிவு : சுட்டி உணர்வதனை அசத்தெனச்சுட்டிக் கழிக்க சட்ட இனி உள்ளது சத்தேகாண். சுட்டி உணர்ந்த நீயோ சத்து அல்லை. உண்மையை தைவம் புணர்ந்த அதனால் பொய் விட்டுப்போம் எ. து.

பொழிப்புரை : மாணாக்கனே, அறிவினால் சுட்டி அறியப்படுவதாகிய பிரபஞ்சத்தை அசத்தாம் என்று கருதிக் கழிக்கவே அங்குச்சடுதியில் உனக்கு அறிவின்கண் தோற்ற மளித்தது சத்துப்பொருளாகிய சிவம் என்றேநீ தெளிவாயாக. சத்தினைச்சத்தெனக்கருதி உணர்ந்த நீயோ அந்தச்சத் தினுக்கு வேறான ஒன்றாம் அன்றிச்சத்தாகாய். அந்த உண்மைப் பொருளாகிய சத்தினோடு அதன் உடைமைப் பொருளாகிய நீ புணர்ந்து நின்ற அக்கணமே அந்நாள் பரியந்தம் உன்னைப்புணர்ந்திருந்த பொய்யான புணர்ச்சிகள் யாவும் உன்னை விட்டகன்று தூர விலகிப்போகும். அந்த ஒரு அனுபவத்தாலும் நீ அங்கு உணர்ந்துபுணர்ந்து நின்றது சத்துப்பொருளாகிய சிவம் என்றே தெளிவாய் எ. று.

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.

என உணர்தல் புணர்தல் பழகுதல் என்று நட்பிற்குக்கூறிய அனுபவங்கள் மூன்றும் மெய்யுணர்தற்கும் பொருந்துவனவா மாகலின் மேலை வெண்பாவால் உணர்தலை அறிவுறுத்திய ஆசிரியன் இந்த வெண்பாவால், உணர்ந்த அந்த ஒன்றோடு புணர்ந்துநிற்றலை அறிவுறுத்தினான். அம்முறையே அடுத்து வரும் உரைப்பாட்டால் அதனோடு பலகால் பயிலும் பழக்கம் அறிவுறுத்துவான் என அறிக.

உணர் உரு அசத்து என மேல் ஆறாம் சூத்திரத்துள் அளவை கூறப்பட்டமையான் சுட்டி உணர்வதனை அசத் தெனச் சுட்டிக் கழிக்கலாம் என்றான். சார்ந்து நின்ற பிர பஞ்சம் இதுபொழுது அசத்தாய்க் கழியவே இனிச் சார நிற்பது சத்தேயாதல் தெளியப்படுமென்பான் ''சட்ட இனி யுளது சத்தேகாண்'' எனத்தேற்றேகாரத்தாற்குறித்தான். சத்தே தன்னைச்சத்தென்று உணராதாகலான் சத்தைச் சத்தென்று கருதி உணர்ந்த நீ சத்தாக மாட்டாய் என்ற

கருத்தில் ''சுட்டி உணர்ந்த நீ சத்தல்லை'' என்றான். சத்தைச் சத்தென்று தெளிந்ததும் அதன் உடைமைப்பொருளாகிய ஆன்மா காலம் தாழ்த்தலின்றிஅச்சத்தோடுபுண்ர்ந்து நிற்கும் அக்கணமே அந்நாள் பரியந்தம் அவ்வான்மாவைச் சார்ந்து நின்று அலட்டிக்கொண்டிருந்த பொய்ச்சார்புகள் ஆன்மாவை விட்டு விலகிப்போதலை உணரலாம் என்பான், உண்மையைத்தைவம் புணர்ந்ததனால்பொய்விட்டுப்போம்'' என்று ஆசிரியன் தன் அனுபவமும் உடன் கூறினான் என வுணர்க. பொய் விட்டகலும் புதியதொரு அனுபவத்தைக் கொண்டும் ஆன்மா இதுபொழுது உணர்ந்து புணர்ந்துநின்ற அது சூனியமன்றிச்சத்துப்பொருளேயாம் என்று தெளியலாம் எனவும் ஆசிரியன் இங்குக் குறிப்பித்தானாகக்கொள்க.

பொய் விட்டுப் போம் என்றது ஆசிரியன் தன் அனுபவம் கூறியது எனக்கருதுக.

உணர்வது-உணரப்படுவது, அது பிரபஞ்சம். சுட்டி அசத்தென்ன-அசத்தென்று கருதிக்கழிக்க. சட்ட என்பது விரைவுப்பொருள் குறித்து வருவதோர் திசைச் சொல்லாகலாம் போலும். சத்து அல்லை என்றதால் சத்தின் வேறான் ஒன்று என உணர்த்தியவாறாம். தைவம் என்பது உடைமை அடிமை என்ற பொருளில் இந்நூலில் பிறவிடங்களிலும் வந்தமை காணலாம்.

இதனால் புணர்தல் கூறப்பட்டது.

**கண்டதை அன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்**
**அண்டனை ஆன்மாவின் ஆய்ந்துணரப் பண்டணைந்த**
**ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனின் ஒண்கருட**
**சானத்தின் தீர்விடம்போல் தான்**

என்பது உரைப்பாட்டு. இதுமேல் பொய்விட்டுப்போம் என்றதனை உவமம் வாயிலாகவும் விளக்கிச்சத்தினைப்புணர்ந்து நின்ற ஆன்மா அதனோடு மேன்மேலும் பயின்றொழுகல் வேண்டுவதான பழக்கம் கூறுகின்றது.

கண்ணழிவு : கண்டதை அன்று அன்று என விட்டு அவற்றை அசத்தாய்க்கண்டு அண்டனைஆன்மாவின்வைத்து ஆய்ந்து உணர பண்டு அணைந்த ஊனத்தை அதுதான் விடுமாறு உத்தமனின் ஒண் கருட சானத்தினால் விடம்தீர்தல் போலாம் எ. து.

பொழிப்புரை : கண்ணாற் காணப்பட்ட உலகத்துப் பொருள் ஒவ்வொன்றையும் இதுவன்று சத்துப்பொருள் இது வன்று சத்துப்பொருள் எனக்கழித்து அவற்றையெல்லாம் அசத்தாகவேகண்டு அப்பிரபஞ்சத்தையே தனக்குஉடம்பாகக் கொண்டு விளங்கும் உலக முதல்வனைஅவ்வுலகத்தினின்றும் வேறு பிரித்து ஆன்மாத்தன் அறிவின்கண்ணே வைத்து ஆய்ந்து உணர்ந்து ஒன்றிப்பழகப்பழக அதுதான் நெடுகால மாய்ப்பற்றியிருந்த உடல் உலகப்பற்றுக்களை எல்லாம் எளிதின் விட்டு நீங்குவதாம். அங்ஙனம்அப்பற்று ஆன்மாவை விட்டு நீங்குவதானது பாவகன் ஒருவனது கருடோபாவனை யால் விடம் தானாகவே நீங்குவதைப்போல்வதாம் எ. று.

மேலை வெண்பாவில் பொய் என்றதும் இந்த வெண்பா வில் ஊனம் என்றதும் அசத்தென்னும் ஒரு பொருளையே குறித்து நின்றன. அது சம்பிரதாய மரபாற்கூறியது, இது உவமை வாயிலாக உணர்த்தியது ஆகலான் கூறியது கூறலாகாமை உணர்க. அல்லதூஉம் அது புணர்தல் நிமித்த மும் இது பழகல் நிமித்தமும் கருதியதால் அதுவாகாது எனலுமொன்று.

உவமைக்கண் கருட சானம் என்றதால் பொருட்கண் உணர்தல் என்பதற்கு உணர்ந்து பழகல் என உரைக்கப் பட்டது. அவ்வாறு உரையாக்கால் இதுவும் கூறியது கூறலாய் முடியும் எனவுணர்க. சானம்-தியானம், ஒன்றுதல்.

கண்டதை என்றதனால் பிரபஞ்சத்துப்பொருள்கள் பல வற்றோடு உலகியல் நெறி நின்றார் வழிபட்டு உய்திபெறற் பொருட்டுத் திருக்கோயில்களில் கருவறையின்கண் எழுந் தருளியிராநின்ற திருமேனிகள் பலவும் கொள்க. முதல்வன் உலகிற்கு உடனாயும் வேறாயும் நிற்கும் இயல்பினன் என்ப

தால் உடனாய் நின்ற நிலைக்கண் அவற்கு ஆயிரம் ஆயிரம் திருமேனிகள் வேதகாலம் தொட்டுக்கூறப்பட்டிருப்பினும் மெய்யுணர்வார் உணர்வுநெறிக்கு அவையெல்லாமும் புறம் புறம் ஆகலின் கண்டதை அற்றன்றென விட்டு அவற்றை அசத்தாய்காண்க என்றான். இதனோடு மேல் உணர்வது அசத்தாதல், பாவகமேல் தானசத்தாம், சுட்டி உணர்வு தனை எனவந்த உரைப்பாட்டுக்களும் ஒக்கும் என வுணர்க. முதல்வற்குத் திருமேனி ஆயிரம் ஆயிரம் ஆதலினன்றே "ஆயிரம் திருநாமம் பாடி நாம்தெள்ளேணம்கொட்டாமோ" என்று வாதவூரடிகளும் அருளிப் போந்தார் என வுணர்க.

அண்டன் என்பது உலகமே தனக்கு வடிவாகக்கொண்டு விளங்கும் உலக முதல்வனைக் குறித்தது. மெய்யுணர்வார் மெய்ப்பொருளை உணருங்கால் உலக வடிவினனாகியமுதல் வனை அவ்வுலகினின்று வேறு பிரித்து மெய்யறிவின்கண் வைத்துத்தான் அவன் என்னும் வேற்றுமையுணர்வின்றி அவனோடொன்றி நின்றே உணர வேண்டியிருத்தலின் "அண்டனை ஆன்மாவின் ஆய்ந்து உணர்வர்" என்றான். அசத்தாகிய பிரபஞ்சத்தோடு பிரிவற நின்ற சத்தாகிய முதல்வனை அவ்வசத்தினின்று பிரித்துணரும்அனுபவத்தால் ஆன்மாவைச்சார்ந்துள்ள அசத்தாகிய உடல் உலகப் பற்றுக் களும் ஆன்மாவை விட்டு எளிதில் நீங்கிப் போவனவாம் என்பான். பண்டணைந்த ஊனத்தைத்தான் விடும் என்றான். உத்தமனின் ஒண்கருடசானம் என்பது ஊனம் விலகற்கு எடுத்தாண்ட மேலும் ஒரு உவமை என்க.

ஒண்கருட சானம் என்றதால் ஆதிதை விககருடன் எனக்கொள்க, தியானத்திற்கு உரியது அதுவேயாகலின். சானம் என்பது தியானம் என்ற வடசொல்லின் சிதைவு. அப்பொருளில் வரும் தமிழ்ச்சொல் ஒன்றுதல் என்பதே.

தான் என்பது முன்னையது எழுவாய். பின்னையது அசைநிலை. தீர்விடம்போல் என்பதனை விடம்தீர்தல்போல் எனப்பிரித்துக்கூட்டி உரைக்க. தீர் என்பது முதனிலைத் தொழிற் பெயர்.

இனிக் கருடோகம்பாவனை விளக்கம் வருமாறு. கருடன் என்பது ஆதி பௌதிக கருடன் என்றும், ஆதி தெய்விக கருடன் என்றும், ஆதி ஆத்மீக கருடன் என்றும் முத்திறப் படும். அவையாவன: உலகில் இப்பொழுது சஞ்சரிக்கும் பறவையாகிய கருடன் ஆதி பௌதிக கருடன் எனப்படும். அதனை உணர்த்துகின்ற அக்கரரூபமாகிய மந்திரமே ஆதி தெய்விக கருடனாம். மந்திரத்தை அதிட்டித்து நின்று மாந்திரிகனுக்குப் பலன் கொடுக்கின்ற அருட்சத்தியே ஆதி யர்த்மிக கருடனாம். பாவகன் கருட மந்திரத்தை நாள் தோறும் பாவகம் செய்துவரும் பாவனையால் அவனிடத்தில் ஆதியாத்மிக கருட சத்தி நிலையாகப் பதிந்து வேண்டுங் காலத்துப்பயன் தரா நிற்கும். அன்னோன் தன்பார்வையாலே விடவேகம் தீர்க்கும் ஆற்றல் பெற்றோனாவன் என்று சருவஞ் ஞானோத்தரம் முதலிய சுருதிகள் கூறாநிற்கும் என்பர்.

மேலும் இக்கருடனுக்கேயன்றி உலகின்கண் உள்ள ஏனைப்பறவை விலங்கு மரம் முதலிய பௌதிகப் பொருள்கள் அனைத்திற்கும் அக்கரரூபமாகிய மந்திரங்கள் உளவெனவும் அவற்றிற்கெல்லாம் பலன் கொடுப்பது சிவசத்தியேயாம் எனவும் அச்சுருதிகள் மேலும்கூறும். அதாவது ஆதிபௌதிகப் பொருள்கள் அனைத்திற்கும் அக்கரரூபமாகிய ஆதிதெய்விக மந்திரங்கள் உளவென்றும், அம்மந்திரங்களை அதிட்டித்து நின்ற சிவசத்தியானது பாவகனது ஆதியாத்மீகமாய் வெளிப் பட்டுப் பலன் தரா நிற்கும் என்றும் அந்நூல்கள் கூறும் என்ப தாம்.

இம்மூன்று பாட்டுக்களானும்அசத்தாயுள்ளபிரபஞ்சத்தை அசத்தென்று கண்டு களைய முதல்வன் ஆனா அறிவாய் உணர்வில் தோன்றுவன் எனவும், அங்ஙனம் தோன்றுமவனே ஆன்மாப்புணர்ந்து நிற்பதால் ஆன்மாவைப் புணர்ந்திருந்த பொய்கள் தாமாகவே அகலும் எனவும், அங்ஙனம் அப்பொய் விட்டகல்வது கருடசானத்தால், விடம் தீர்தல் போல்வதாம் எனவும் ஒன்றற்கொன்று தொடர்புடைய பொருளவாய் வந்து மேற்கோளை வலியுறுத்தியவாறு காண்க.

அன்றியும் இப்பாக்கள் மூன்றும் முறையே ஆன்மாச் சத்தினை உணர்தலும், புணர்தலும், பழகலுமாகிய ஞானானுபவங்களை உணர்த்தியவாறும் கண்டு தெளிக.

இனி, இங்ஙனம் ஆன்மாவை விட்டு விலகிய அசத்தாகிய பாசங்கள் மீளவும் ஆன்மாவைப்பற்றி அலக்கண் உறுத்தாவாறு ஆன்மாத்திருவைந்தெழுத்தை உச்சரித்து ஆன்ம சுத்தி செய்துகொள்ளுமாறு பணிக்கின்றது அடுத்துவரும் அதிகரணம் என்பது.

## மூன்றாம் அதிகரணம்

*மேற்கோள்:- இனி இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது, இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப் போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கெனக்கொள்க*

மேற்கோளும் பொழிப்புரையுமாய் வந்த இவை ஆசிரியன் உரைத்தவை.

வேம்பினையே தின்று பழகிய புழுவானது விளங்கனியும் தேமாங்கனியும் தனக்குத்தின்னக் கிடைப்பினும் அவற்றைப் புறக்கணித்துப்பழக்க வாசனையால் மீளவும் அவ்வேம்பினையே நாடிச்செல்லுதல்போல இங்கு இவ்வான்மாக்கட்கு ஞானம் விளங்கித்தோன்றிய நிலையிலும் பழக்க வாசனையால் தாம் முன்னம் நுகர்ந்திருந்த உடல் உலக விடயங்களையே நாடிச்சென்று அரிதின் விட்ட பற்றுக்களை மீளவும் பற்றிக்கொள்ளவே விழையுமாகலான் அதுவிலக்கற்பொருட்டு ஆன்மாத்திருவைந்தெழுத்தை விதிப்படி உச்சரித்து வரல் வேண்டுமென இங்கு மேற்கொள்ளப்பட்டதென்றதாம்.

எனவே அதுவே ஆன்ம சுத்தி பண்ணுமாறாம் என்பது.

**அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை**
**அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில் அஞ்செழுத்தால்**
**குண்டலியில் செய்தோமம் கோதண்டம் சானிக்கில்**
**அண்டனாம் சேடனாம் அங்கு.**

என்பது உரைப்பாட்டு. இது திருவைந்தெழுத்தை உச்சரித்தற்கண் ஒரு சார் விதிமுறை கூறுகின்றது.

கண்ணழிவு:- அஞ்செழுத்தால் உள்ளம் அரன் உடைமை கண்டு அரனை இதயத்தில் அஞ்செழுத்தால் அர்ச்சித்து, குண்டலியில் அஞ்செழுத்தால் ஓமம் செய்து, கோதண்டத்தில் அஞ்செழுத்தால் சானிக்கில் அங்கு அண்டனாம் சேடனாம் எ. து.

பொழிப்புரை:- மாணவகா, திருவைந்தெழுத்தின் கிடக்கை முறையால் ஆன்மா சிவனுக்கு உடைமைப் பொருளாயிருத்தலை அறிந்து அச்சிவனை முதற்கண் இதயத்தில் வைத்து ஐந்தெழுத்தால் அருச்சனை செய்து பிறகு நாபியில் ஐந்தெழுத்தால் ஓமம் செய்து முடிவில் புருவநடுவில் ஐந்தெழுத்தால் தியானஞ் செய்து வந்தால் அவ்விடத்து அப்பாவகன் சிவசொரூபனாகி அச்சிவனுக்கு அடிமையுமாவன் எ. று.

திருவைந்தெழுத்தின் கிடக்கைமுறை சிவாய நம என்பதும் உச்சரிப்பு முறை நமசிவாய என்பதுமாம் என்பது மேல் உரைக்கப்பட்டது.

உடம்பகத்தே பூசைக்குரிய தானங்களாக இதயம் நாபி புருவநடு ஆகிய மூவிடங்களையும் வரித்துக்கொண்டு இதயத்தில் அறிவுவடிவாயுள்ள அரனை வைத்து ஐந்தெழுத்தால் பூசனைசெய்து நாபியில் அவ்வறிவைச்செலுத்தி ஐந்தெழுத்தால் எரியோம்பலைச்செய்து முடிவில் புருவநடுவில்அறிவைச் செலுத்தி ஐந்தெழுத்தால் தியானித்து வருதலே திருவைந்தெழுத்தை விதிப்படிக்கணிக்கும் முறைமையாம் என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

எரியோம்பலும் தியானித்தலும் பூசைக்கு அங்கங்களாம் என்பதும் இதனால் அறியலாம். இதுஅகப்பூசனை. இதனாற் பயன் ஆன்மா மலங்களினின்று விடுவிக்கப்படுதலும் சிவசொரூபம் பெறுதலுமாம் என்பது. நமசிவாயஎன்றுஇவ்வாறு உச்சரிப்பதால், ஆன்மாவுக்கு மலநீக்கமும் சிவசொரூபமும் உண்டாம் என்று தெளிக.

பூசிக்குங்கால் நாவானது திருவைந்தெழுத்தை இடைய றாது கணித்துக்கொண்டிருக்க அறிவு வடிவாயுள்ள முதல் வனை இதயத்தில் வைத்து அவற்கு நீராட்டல் மலர்சூட்டல் நிவேதித்தல் ஆகிய கருமங்களை முறையாகப்பாவனை செய்க. எரியோம்புங்காலும் அவ்வாறு நாவானது திருவைந் தெழுத்தை இடையறாது உச்சரிக்க நாபியில் அவ்வறிவைச் செலுத்தி அங்கு நெய் தெளித்தல் எரிசூழ்ந்தெரியச்செய்தல் பொரி தூவல் ஆகிய செயல்களை முறையாகப் பாவனை செய்க. தியானிக்குங்காலும் நாவானது திருவைந்தெழுத்தை இடையறாது எண்ணிக்கொண்டிருக்க அறிவினைப்புருவ நடுவிற் செலுத்தி அறிவுக்குள் அறிவாய் விளங்கும் முதல் வனைத்தேடி அவனோடு ஒன்றுதலிலே கருத்தைச்செலுத்துக. இந்த முறையாகத்திருவைந்தெழுத்தினைக் கணிக்குங்கால் பாவகன் செய்யும் பூசனைகளை அவ்வறிவே ஏற்றுத்தூய் தாகிச் சிவசொரூபத்தையும் அது பெறுவதாமாகலின் அங்ஙனம் பெற்ற அந்த மெய்யுறிவு கொண்டு அதுதனக்குள் விளங்கும் முதல்வனை அறிந்து ஒன்றுதல் கூடுவதாம் என்பது. அதுவே மெய்யுணர் அனுபவமாம் எனவும் தெளிக. மெய்யுணரனுபவம் அவ்வாறாகலினன்றே ஆறாம் சூத்திரத்திரண்டாம் அதிகரணத்திறுதி வெண்பாக்கள் இரண்டானும் முறையே பெத்த காலத்தறிவு முதல்வனை அறியப்போதா எனவும் முத்திக்காலத்தில் அவனை அறியும் அறிவே சிவமுமாம் எனவும் ஆசிரியன் தன் அனுபவம் கூறிய தெனவும் உணர்க என்பதாம்.

திருவைந்தெழுத்தினை இவ்வாறு விதிப்படிக்கணிப்ப தால் ஆன்மாச்சிவசொரூபம் பெறுவதேயாயினும் அந்நிலை யிலும் அது அவற்கு அடிமைதானாம் என்ற எண்ணம் பாவகனுக்கு ஒருதலையாகவேண்டும் என்பான் அண்டனாம் சேடனாம் அங்கு என்றான் ஆசிரியன். அதனைப்பாவகன் மறவாது போற்றுவானாக.

உரைப்பாட்டில் தளை சிதையாவாறு காக்க அருச்சித்து எனற்பாலது அர்ச்சித்து என நின்றது.

இனித்திருவைந்தெழுத்தினை விதிப்படி உச்சரிப்பதால் ஆன்மாச்சிவசொரூபம் பெறுவதோடு சிவதரிசனமும் அதற்கு உண்டாம் என்பதை விளக்க வருகின்றது அடுத்த உரைப் பாட்டு.

**இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்**
**சிந்தையிற் காணின் சிவன்கண்ணாம் முந்தவே**
**காட்டத்தொல் தீயென்னக் கனல்சேர் இரும்பென்ன**
**ஆட்டானாம் ஓதஞ் செழுத்து.**

என்பது உரைப்பாட்டு. இது திருவைந்தெழுத்தை விதிப்படிக் கணிப்பதால் சிவதரிசனமும் உண்டாம் என்கின்றது.

கண்ணழிவு : இந்துவில் பானுவில் இராகுவையும் கேதுவையும் கண்டாங்கு சிந்தையில் காணின் சிவன் கண்ணாம். முந்தவே காட்டம் தொல் தீ என்னத்தோன்றி, கனல் சேர் இரும்பு என்னச்செய்வன் ஆனாலும் அங்கும் அது ஆள்தானாம் ஆகலின் அஞ்செழுத்து ஓது எ. து.

பொழிப்புரை : மாணாக்கனே, வானத்தில் காண்டற்கரிய இராகு கேதுக்களின் இருப்பினைக் கிரகணகாலத்தில் முறையே திங்களிடத்தும் ஞாயிற்றினிடத்தும் கண்டாற் போலப்புறத்தே காண்டற்கரியசிவனைத் திருவைந்தெழுத்தை உச்சரித்துச்சிந்தையில் காண முயன்றால் அச்சிவனே உனக்குக் காட்டாய் நின்று தனது இருப்பைப்புலப்படுத்துவான். அதுவேயன்றி விறகில் தொன்று தொட்டு ஒளிந்திருந்த தீயானது கடையுங்காலத்து வெளிப்பட்டுத் தோன்றினாற்போல ஆன்மாவின்கண் தொன்று தொட்டு ஒளிந்திருந்த முதல்வனும் திருவைந்தெழுத்தினை உச்சரிக்குங்காலத்து ஆன்மாவுக்கு முன்னால் வெளிப்பட்டுத்தோன்றி நெருப்புத்தன்னை அடைந்த இரும்பினைத்தன்வண்ணமாக்கினாற்போல முதல்வனும் தன்னை உணர்ந்த ஆன்மாவைத்தன் வண்ணமாக்குவன். அந்நிலையிலும்ஆன்மா முதல்வற்கு அடிமைதானாம் ஆதலின் பிரபஞ்சவாதனை நீங்கத்திருவைந்தெழுத்தினை இடையறாது உச்சரிப்பாய் எ. று.

தலைமைபற்றி இராகுவையே கூறினர்ன், பானுவென்ற தால் கேதுவும் உரையில் கொள்ளப்பட்டது. கிரகணத்தின் போதும் அவற்றின் உருக்காண்டல் இயலாதாகலின் இருப் பினை என்று உரைக்கப்பட்டது.

விறகில் ஒளிந்திருந்த தீயினது வெளிப்பாடு ஆன்மாவில ஒளிந்திருந்த முதல்வனது வெளிப்பாட்டிற்கும், கனல் சேர் இரும்பு கனல்வண்ணம் பெறுவது சிவனை உணர்ந்த ஆன்மாச்சிவசொரூபம் பெறுவதற்கும் உவமைகளாய் வந்தன.

காட்டத் தொல் தீயென்னத்தோன்றிக்கனல்சேர் இரும் பென்னச் செய்வன் என்று சிலசொற்கள் வருவித்து உரையை முற்றுவிக்க. தீயெனத்தோன்றி இரும்பெனச்செய்வன் என்றதால் அதுவே உச்சரிப்பின் பயனாம் என்றும் தெளிக. காட்டம்-விறகு.

உவமைகள் இரண்டும் முதல்வனது இருப்பினை உணர் தற்கும் வெளிப்பாட்டினை உணர்தற்கும் வந்தனவாகலின் ஒரு பொருட்கன்றி வேறு வேறு பொருள் குறித்தற்கு வந்தன வாகக் கருதுக.

கனலைச் சேர்ந்திருக்குங்காறும் கனல் வண்ணத்திருந்த இரும்பு கனலை விட்டு நீங்கியக்காலே கனல்வண்ணம் கெடு மாப்போலத்திருவைந்தெழுத்தை உச்சரிக்குங்காறும் சிவ சொரூபத்திலிருந்த ஆன்மா உச்சரிப்பு நின்றபோதே பிரபஞ்ச வாதனையால் தாக்குண்டு பாசப்பிடியிற் சிக்குமாகலான் அந்த அவலநிலை நேராதிருத்தற்பொருட்டுத்திருவைந் தெழுத்தை இடையறாது உச்சரித்துக்கொண்டிருக்க வென்பான் ''ஓது அஞ்செழுத்து'' என்று மீளவும் ஆணை யோடு வற்புறுத்தினான். எனவே விதிமுறையில் இதுவும் ஒன்றாம் எனவுணர்க.

இனிப்பாவனாருச்சனையின்போது இதயத்தை ஒரு தெய்விக கமலமாக உருவகித்துக்காண்க என்கின்றது அடுத்து வரும் உரைப்பாட்டு.

மண்முதல் நாளமலர் வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமுன் நண்ணிக்
கலைஉருவாம் நாதமாம் விந்துவதன்கண்ணாம்
நிலையதிலாம் அச்சிவன்தாள் நேர்.

என்பது உரைப்பாட்டு. இது பாவனாருச்சனையின்போது இதயத்தை ஒரு தெய்விக கமலமாக உருவகித்துக்காண்க என்கின்றது.

கண்ணழிவு :- மண்முதல் நாளம். வித்தை மலர். எண்ணிய கலாரூபம் ஈசர் சதாசிவம் முன் நண்ணிக்கலை உருவாம் நாதமாம் அதன்கண் விந்துவாம். அதில் அச்சிவன் தாள் நிலையாம் என நேர் எ. து.

பொழிப்புரை :- மாணாக்கனே, நிலம் முதலான ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கும் உந்தியினின்று தோன்றி யெழுந்த அந்த இதய கமலத்திற்குத்தண்டாகவும், கலை முதலான வித்தியா தத்துவங்கள் ஏழும் அத்தண்டிற் பூத்த மலரின் புறவிதழ்களாகவும், இவை முட்டத்தொன்றுக்கும் மேலாக மதிக்கப்படுகின்ற சுத்தவித்தை ஈசர் சதாசிவர்ஆகிய சுத்ததத்துவங்கள் மூன்றும் முறையே அம்மலரின் அகவிதழ் களாகவும் அவற்றுக்கு நடுவில் அமைந்த பொகுட்டாகவும் அப்பொகுட்டிற் பரந்துள்ள மகரந்தமாகவும், அம் மூன்றற்கும் மேலாய் விளங்குகின்ற சிவனும் சத்தியும் அம்மகரந்தத்தில் ஊறுகின்ற தேனும் அதன் சுவையுமாகவும் உருவகம் செய்து கொண்டு அண்டத்தில் உள்ள அவையே பிண்டத்திலுமாம் என நேர்ந்து அந்தப்பாவனையோடு திருவைந்தெழுத்தை இடையறாது உச்சரித்து வருவாய் எ. று.

எனவே இதுவுமொரு பாவனாருச்சனை எனவே அறிக. இதனை அந்தரியாக பூசை எனவும் கூறுப. இது அகப்பூசை ஆனதால் இதுவே சாலும். புறப்பூசையும் வேண்டுமேற் கொள்கவென்பதாம்.

சைவ சித்தாந்தத்துள் கூறப்படும் தத்துவங்கள் முப் பத்தாறும் இதன்கண் வந்தவாறு காண்க. இந்த முப்பத்தாறு தத்துவங்களுள் முடிந்த தத்துவம் சிவதத்துவம் எனவே

உணர்க. சுத்த தத்துவங்கள் ஐந்தனையும் சுத்தவித்தை ஈசர் சதாசிவர் சத்தி சிவன் என வரிசைப்படுத்திக்காண்க.

ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்காவன :- நிலம் நீர் தீ வளி வெளி எனப்பூதங்கள் ஐந்தும், அவற்றுக்கும்முதலாய் வருகின்ற நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை எனத்தன்மாத் திரைகள் ஐந்தும், அவற்றை அறிந்து புசித்தற்கான புறக் கருவிகளாகிய மூக்கு வாய் கண் மெய் செவி என ஞானேந் திரியங்கள் ஐந்தும், அவற்றுக்கு வேறாய்த்தொழிற்படுகின்ற வாய் கால் கை எருவாய் கருவாய் எனக் கன்மேந்திரியங்கள் ஐந்தும் பொறிகளாலன்றி எண்ணத்தால் எண்ணி அறியும் கருவிகளான மனம் புத்தி அகங்காரம் சித்தம் என அந்தக் கரணங்கள் நான்குமென இருபத்து நான்காம்.

வித்தியா தத்துவங்கள் ஏழாவன: கலை வித்தை அராகம் காலம் நியதி புருடன் ஆகிய இவற்றுடன் இவ் எல்லாம் தோன்றற்குக் காரணமாயுள்ள மாயை என ஒன்றும் கூட்டி ஏழாம் என அறிக. இவற்றை இவ்வாறு பிரித்து உணர்ந்தாலும் இவையும் ஆன்ம தத்துவங்களேயாம் என அறிக. அற்றாகலினன்றே "கலையாதி மண்ணந்தம் காணிலவை மாயை" என அவற்றை ஒருங்கு குறித்தான் ஆசிரியன் என்க.

சுத்த தத்துவங்கள் ஐந்தாவன மேற் கூறப்பட்டன.

பதி பசு பாசம் என்ற கிடக்கை முறையில் அமைந்த சிவாயநம என்னும் திருவைந்தெழுத்தில் ஆன்மாவைச் சார்ந்திருந்த மலங்களைக் குறித்து வரும் நம என்னும் எழுத்துக்கள் உச்சரிப்பு முறையில் சிவத்தைச் சார்ந்து நமசிவாய என்று உச்சரிக்க வருவதால் ஆன்மாவுக்கு மல நீக்கமும் கனல் சேர் இரும்பு போல்வதோர் சிவசொரூபமும் உண்டாகி அதுவே அப்பூசைக்குப்பயனாம் என்பதும் உணரக் கிடந்ததாம்.

நமசிவாய என்பது வணக்கம் சிவனுக்கு என்ற பொருளையே கொண்டிருப்பினும் அவ்வெழுத்து ஒவ் வொன்றுக்கும் சாத்திர நூல்கள் விரிவான பொருளைக்கூறுப

நிற்கும். அவ்வழியில் நம என்ற இரண்டு எழுத்துக்களும் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும் குறிக்கும் எனவும், சி என்பது சிவனையும் வா என்பதுசிவனருளையும் குறிக்கும் எனவும், ய என்பது ஆன்மாவைக்குறிக்கும் எனவும் அந்நூல்கள் கூறும். நமசிவாய என்ற உச்சரிப்பு முறையில் மலநீக்கம் பெற்ற ஆன்மா சிவத்தைச்சார்ந்து ஒரு பக்கம் நிற்றலையும், ஆன்மாவை விட்டு விலகிய மலவெழுத்துக்கள் சிவத்திற்குநிவேதனமாம்வகையில் மற்றொரு பக்கம் நிற்றலையும் அவ்விரண்டுக்கும் நடுவே நாயகமாகச் சிவம் நிற்றலையும் உணரலாம். ஆன்மாவுக்கு அந்தநிலை நீடிக்கவே திருவைந்தெழுத்தை அந்த வடிவத்தில்உச்சரித்து வரல் வேண்டும் என்பதும் விதிமுறைகளில் ஒன்றாம் எனவும் உணர்க. நால்வர் முதலிய பெரியோர்கள் நமசிவாய என்று உச்சரிப்பதையே தாம் அருளிச்செய்த திருப்பதிகங்களில் வைத்து வலியுறுத்திச்சென்றதையும் நாம் இங்கு மறத்தல் கூடாது என்பதாம்.

மண்முதல் என்பது நிலம் முதலாகிய தத்துவங்கள் இருபத்து நான்கினைக்குறித்தது. வித்தை என்பது வித்தியா தத்துவங்கள் ஏழினைக்குறித்தது. மலர் என்றது மலரின் புறவிதழ்களைக்குறிக்கும். கலாரூபம் என்றது சுத்த வித்தையைக்குறிக்கும். கலையுரு நாதம் விந்து என்பன முறையே மலரின் அகவிதழ்களையும் பொகுட்டினையும் மகரந்தத்தையும் உணர்த்தும். சிவன் தாள் என்பது சிவனையும் சிவனது அருளையும் உணர்த்தும். அவ்விரண்டும் மகரந்தத்தில் ஊறுகின்ற தேனும் அதன் சுவையும்போல அத்துவிதமாதலின் ஒன்றுமாய் இரண்டுமாய் இருந்தது என்ற கருத்தில் சிவன்தாள் என்றான். சுவையினை உணர்ந்த வாற்றால் சுவைப்பொருளை உணர்ந்தாற்போலத் திருவருளை உணர்ந்தவாற்றால் அவ்வருட்கு ஊற்றிடமான சிவத்தை உணரலாம் என்று குறிப்பித்தானாகக் கொள்க.

அதன்கண் என்றது பொகுட்டின்கண் என்றவாறு. அதனில் எனற்பாலது இன் சாரியை தொக்கு அதில் என நின்றது.

இம்மூன்று பாட்டானும் முறையே திருவைந்தெழுத்தை உச்சரிக்குமாறு இன்னவாறென்பதும், அவ்வாறு உச்சரிப்பதால் முதல்வன் விறகில் தீப்போல் வெளிப்பட்டுக்கனல் சேர் இரும்புபோல ஆன்மாவைத்தன்வண்ணமாச்செய்வான் என்பதும், மேலும் இதயத்தைத் தெய்விககமலமாகப்பாவித்து உச்சரிக்குங்கால் தத்துவச் சொரூபனாகி அண்ட முதல்வனாயுள்ள அவனே பிண்டத்தில் அறிவுக்குள் அறிவாயும் விளங்கி அருள் பாலிப்பன் என்பதும் உணர்த்தி மேற்கோளை வலியுறுத்தியவாறு காண்க.

இனி இவ்வாறு திருவடி ஞானம் பெற்றுத்திருவைந்தெழுத்தால் ஆன்ம சுத்தியும் பண்ணிக்கொடுநின்ற ஆன்மாத் தொடர்ந்து முதல்வனோடு தான் அவனாய் ஒன்றிநின்று பாசங்களைத்தேய்த்துக்கொள்ளுமாறு பணிக்க வருவது அடுத்த சூத்திரம் என்பது.

ஒன்பதாம் சூத்திரம் முற்றியது.

## பத்தாம் சூத்திரம்

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோவெனின் பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமாய் வந்த இவை ஆசிரியன் உரைத்தவை.

மேலைச் சூத்திரத்தால் பாசம் ஒருவிய நிலை நீடிக்கத் திருவைந்தெழுத்தை அங்கு விதிப்படிக்கணிக்க வேண்டும் என்றதால் உடற்பற்றும் உலகப்பற்றும் ஒருவாற்றான் நீங்கற்கு ஒரு உபாயம் கூறப்பட்டதாயினும் எடுத்தபிறவியில் இனி ஈட்டப்படும் புதிய வினைகள் அடுத்த பிறவிக்கு வித்தாகி அம்முறையே மேலும் மேலும் இறந்து பிறந்து வருதற்கு ஏதுவாம் ஆகலானும், அங்ஙனம் ஆகாவாறு ஆன்மா மேலும் ஒரு அனுபவத்தைப்பெற்றாக வேண்டும் ஆகலானும், அதனைப்பெறுகின்ற முகத்தால் புதியபற்றுக்கள்ஆன்மாவைச் சாராவாற்றுக்கு ஒரு வழியினை உணர்த்துகின்றது இச் சூத்திரம் என்பது. அதாவது புதிதாக ஈட்டப்படும் வினைப் பற்றுக்களைத்தேய்த்துக்கோடற்கு ஒருவழியினை உணர்த்து கின்றது இச்சூத்திரம் என்பது.

கண்ணழிவு : அவனே தானே ஆகிய அந்நெறியில் ஏகனாகி இறைபணி நிற்க மலம் மாயை தன்னொடு வல்வினை இன்றே எ. து.

பொழிப்புரை : கனலைச்சேர்ந்த இரும்பைப்போலச் சிவனைச்சேர்ந்து சிவசொரூபத்தைப்பெற்றுநின்ற ஆன்மா மேலும் ஒருபடி முன்னே சென்று பரமேசுவரன் ஆன்மாவே யாய் ஒன்றி நின்ற அந்த வழியானே ஆன்மாவும் அவனோடு ஒன்றி ஏகனாகி நின்று என்செயலாவது யாதொன்றும்இல்லை எல்லாம் இறை செயலே என எண்ணி இறையருள் பணித்த வாறே ஒழுகி வர அநாதி காலந்தொட்டு அவ்வான்மாவைத் தொடர்ந்து வந்த இருள் மலத்தினையும் மாயாமலத்தினை

யும் அவ்வான்மாவுக்கு இல்லையாகச்செய்வதோடு எடுத்த பிறவியில் தேகாந்த பரியந்தம் இனி ஈட்டவிருக்கும் புதிய வினைப்பற்றுக்களையும் இறைவன்தானே புசித்து அவ்வான் மாவுக்கு இல்லையாகச்செய்து அவற்றால் அதற்குவரவிருந்த புதிய பிறவியும் அதற்கு இல்லையாக்குவன் அம்முதல்வன் எ. று.

வல்வினை இன்றே என வினைமேல்வைத்துக் கூறினான் ஆயினும் அஃதில்லையாகச்செய்வன் அம்முதல்வன் என் பதுவே கருத்தாகக்கொள்க. என்னை, செய்பவர் செய்திப் பயன் விளைக்கும் செய் அவனாகலின் என்க.

வல்வினை என்றான் புதிய பல பிறவிக்கும் அது வித்தாம் ஆகலின்.

மேலைச் சூத்திரத்துட் கூறியாங்குத்திருவைந்தெழுத்தை விதிப்படிக்கணிப்பதால் மலமும் மாயையும் அகலுதற்கோ ரேதுண்டாமாகலின் மலமாயை தன்னோடு என அவற்றை ஒடுக்கொடுத்துப்பிரித்தான். வல்வினை இன்றே என்றதால் புதிய பாசத்தினைத்தேய்த்துக்கொள்ளற்கு ஒரு புதிய வழி யினை ஆசிரியன் இங்கு உணர்த்தினானாகக் கொள்க. அவ் வழியாவது ஏகனாகி இறைபணி நிற்றல் என்பதேயாம்.

ஏகனாகி இறைபணிநிற்றல் ஆன்மாவின் கடமையாக வினை இன்றாகச்செய்தல் முதல்வன் கடமையாயிற்றென உணர்க.

அவனே தானேயாகிய அந்நெறி என்றது உலகு உயிர் அனைத்தினும் ஈசன் பொன்னொளிபோற்பரந்து வியாபித்து ஒன்றென நின்ற வியாபக நெறியினை உணர்த்திற்று. அந் நெறியினை உள்ளவாறுணர்ந்து ஆன்மாத்தானும் அம்முதல் வனோடு ஏகனாகி ஒன்றி நிற்கப்பழகலும், பழகிப்பின் 'அவனருள் பணித்த வழி ஒழுகலுமே இங்கு இம்முத்தான் மாவுக்குக்கற்பித்த புதிய சாதனமென்று உணர்க.

இனி இதனுள் அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி நிற்க என்பது ஒரு அதிகரணம். இறைபணி நிற்க மலமாயை

தன்னொடு வல்வினை இன்றே என்பது ஒரு அதிகரணம் ஆக இரண்டு அதிகரணத்தது இச்சூத்திரம் என்பது.

### முதலாம் அதிகரணம்

*மேற்கோள் : ஈண்டுப்பரமேசுவரன் இவ்வான்மா வாய் நின்ற முறைமையான் அவ்விடத்து ஏகனாகி நிற்க என்றது, அவ்வாறு நிற்கவே யான் எனது என்னும் செருக் கற்று அவனது சீபாதத்தை அணையும் ஆகலான்.*

மேற்கோளும் பயனுமாய் ஒன்றி வந்த இது ஆசிரியன் உரைத்தது.

மேலைச்சூத்திரத்தால் இந்த முத்தான்மாத் திருவைந் தெழுத்தை இடையறாது உச்சரித்து வருங்காரணத்தால் அது கனலைச்சேர்ந்த இரும்புபோல்ச்சிவசொரூடத்தை அடை யும் என்றான் ஆசிரியன். இவ்வழிப்பரமேசுவரன் இவவான் மாவேயாய் நின்ற முறைமையானே ஆன்மாவும் அவனை ஒரு கணமும் பிரியாது ஏகனாயே நின்று ஒழுகிவருமாதலால் யான் என்றும் எனதுஎன்றும் வருகின்ற அகப்புறப்பற்றுக்கள் அவ்வான்மாவை விட்டு அகலும் ஆதலால் எடுத்த பிறவி யொன்றிலே அது அவனது திருவடியை அணைந்து வீடு பெறுதல் ஒரு தலையாம் ஆகலான் அவ்வான்மா அவ்வாறு ஏகனாய் நிற்றல் வேண்டும் என இங்கு மேற்கொள்ளப்பட் டது என்பதாம்.

**நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுளம் உண்டாதல்**
**தானெனவொன் றின்றியே தானதுவாய்**
**நானெனவொன்**
**றில்லென்று தானே எனுமவரைத் தன்னடிவைத்**
**தில்லென்று தானாம் இறை.**

என்பது உரைப்பாட்டு, இது ஏகனாகி நிற்க எனவந்த மேற் கோளைச் சம்பிரதாய முறையால் விளக்குகின்றது.

கண்ணழிவு : நான் அவன் என்றுஎண்ணினர்க்குநாடும் உளம் உண்டு ஆதலால். தான் என ஒன்று இன்றியே தான் அதுவாயே நின்று நான் என ஒன்று இல் என்றும் எல்லாம்

அவன் தானே என்றும் எண்ணிவரும் அவரை இறை தன்னடி வைத்து இல் என்று செய்து தானாம் எ. று.

பொழிப்புரை : எண்ணுங்கால் நான் என்றும் அவன் என்றும் இவ்வாறு பிரித்தெண்ணுவார்க்கு வினை செய்யுங் காலும் நான் செய்தேன் என்று பிரித்தெண்ணும் உள்ளமே உண்டாகுமாகலான் ஆன்மாத்தன்னைப்பிரித்தெண்ணும் எண்ணம் சிறிதுமின்றித்தான் அவனே என்று கருதிஏகனாயே நின்று நானாக ஒன்றும் செய்யவில்லை என்றும், எல்லாம் அவன் தானே செய்கின்றான் என்றும்இவ்வாறுதானொழிந்து ஒழுகும் ஆன்மாக்களை இறைவன் தன் திருவடியில் அணைத்துக்கொண்டு அவற்றுக்கு அவை செய்யும் வினைப் பயன்களும் இல்லையாம்படிச்செய்து அவைதானேயாய்ப் பிரிவின்றியே நிற்பனாம் எ. று.

எனவே நான் என்றுவரும் உணர்வு அகற்றலே வினைப் பயன் ஆகாதற்கு உபாயமாம் என்பது இதனால் உணர்த்தப் பட்டது.

நான் என்னும் அகப்பற்று அகன்றக்கால் எனது என்னும் புறப்பற்றும் தானாக அகன்று திருவடி அணைதல் அம் முத்தான்மாவுக்குச் சாத்தியமாம் என்பதும் பெற்றாம்.

திருவைந்தெழுத்து எண்ணலும் பாசம் ஒருவற்கு வழி யாம் எனினும் ஏகனாகி இறைபணிநிற்றல் அதற்கு மேலும் ஒரு வழியாயிற்று எனவுணர்க. முன்னதிற் பின்னது வலி யுடைத்தாமாகலின் அதுவே வீடு பேற்றை உறுதிப்படுத்துவ தாம் எனவும் உணர்க. என்னை, முன்னைப்பல பிறவிகளிலும் சரியை கிரியை யோகமாகிய தவங்களைச்செய்து முடித்து நற்குலத்தில் வந்து பிறந்து இருவினையொப்பு உணர்வு வாய்க்கப்பெற்று முதற்குருவின் உபதேசத்தால் ஞானமும் கைவரப்பெற்றுச்சிவனைச்சிந்தையுள்ளே தேடிக்கண்டு தெளிந்து திருவைந்தெழுத்தால் முன்னைப் பாசம் களைந்து நின்ற வழியும் தேகாந்த பரியந்தம் ஆன்மா உடம்பொடு கூடிநின்று புதுவினைகளைச் செய்தே பழவினைகளைப்புசிக்க வேண்டியிருத்தலின் அவ்வாறு செய்யும் புதுவினைகள் அடுத் தொரு பிறவிக்கு வித்தாகிவிடாவாற்றுக்கு (ஒரு வழிகோல

வேண்டிற்றாகலான் அவ்வழியினையே இச்சூத்திரம் உணர்த்தியதாகலான் என்க. அவ்வழியாவது ஏகனாகி இறைபணி நிற்றல் என்பதேயாம்.

உண்டாதலான் என்றபாலது ஆதல் எனக்குறைந்து நின்றது. தான் என்பன முன்னவை இரண்டும் ஆன்மாவையும் பின்னவை இரண்டும் முதல்வனையும் குறித்து நின்றன.

### இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள் : இனி இறைபணி வழுவாது நிற்க என்றது அவனருளாலல்லது ஒன்றையும் செய்யானாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா வாகலான்.*

மேற்கோளும் பயனுமாய் வந்த இவை ஆசிரியன்உரைத்தவை.

இங்குக் கன்மங்களை ஆசிரியன் இருவகையாகப்பிரித்து உணர்த்தினான் என்று உணர வேண்டும். அஞ்ஞான கன்மம் மெய்ஞ்ஞான கன்மம் என்பன அவை. பசுவினை, பதிவினை என்றும் அவற்றை உணரலாம். ஆன்மா இறையை மறந்து உடம்பைச் சார்ந்து நின்று செய்யும் வினை பசுவினை அல்லது அஞ்ஞான கன்மம் எனப்படும். ஆன்மா உடம்பை மறந்து இறையைச்சார்ந்து அவனே தானாகி நின்று இறையருள் பணித்த வழியே செய்யும் வினைபதி வினை அல்லது மெய்ஞ்ஞான கன்மம் எனப்படும். அஞ்ஞான கன்மப்பயன் ஆன்மாவையே சாரும். மெய்ஞ்ஞான கன்மப்பயன் ஆன்மாவைச் சாரலொழிந்து இறையையே சாரும். ஆகவே இங்கு இறைபணி வழுவாது நிற்பவன் அவ்விறையருள் பணித்த வழியே கன்மங்களைச்செய்வதன்றித்தானாக ஒன்றையும் செய்யானாகவே அக்கன்மப்பயன்களை இறைவனே ஏற்றுப்புசித்தொழிப்பன் ஆதலாலே அடுத்து வரும் பிறவிக்கு வித்தாகும் ஆகாமிய வினைப்பயன்கள் அம்முத்தான்மாவுக்கு இல்லையாமாகலின் எடுத்த பிறவியொன்றிலேயே மும்மலக்குற்றங்களை முற்றவும் தேய்த்துக் கொண்டு முதல்வனது சீபாதங்களைத்தேகாந்தத்தே நிரந்தரமாய் அணைந்து வீடுபேறடைதற்கு அவ்வாறு இறைபணி

வழுவாது நிற்கவேண்டும் என்று மேற்கொள்ளப்பட்டது. இங்கு வழுவாது நிற்க என்பதனை மறவாது போற்றல் வேண்டும் என்பதாம்.

அஞ்ஞான கன்மம்-மூன்றனுருபும் பயனும் உடன் தொக்கதொகை. இதனை உம்மைத்தொகையெனக்கொண்டு சொற்குணம் வாளாபோயினாரும் உளர். கன்மம்-பால்பகா வஃறிணைப்பெயர்.

**நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி**
**நாமல்லம் நாமும் அரனுடைமை யாமென்னின்**
**எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை**
**முற்செய் வினைதருவான் முன்**

என்பது உரைப்பாட்டு. இது இறைபணியார்க்கு வினைப் பயனில்லை என்பதுணர்த்தி மேற்கோளை வலியுறுத்து கின்றது.

கண்ணழிவு: இந்திரியங்கள் நாம்-நம வல்ல, வழி நம் வழியின் அல்ல. நாமும் அரன் உடைமை ஆதலின் நாம் அல்லம் என்னின் எத்தனுவில் நின்றும் இறைப்பணியார்க்கு வினை-வினைப்பயன் இல்லை. முன் செய்வினை-வினைப் பயனை முன் தருவான் இன்று தாரான் எ. து.

பொழிப்புரை: விடய நுகர்ச்சிக்குக்கருவியாயுள்ள மெய் முதலிய இந்திரியங்கள் இதுபொழுதுசிவனுடையனவே யன்றி நம்முடையனவல்ல. அவ்விந்திரியங்கள் வழியாக நிகழும் விடய நுகர்ச்சிகளும் சிவன் வழியாக நிகழ்வனவன்றி நம்வழியாக நிகழ்வனவல்ல. நாமும் அச்சிவன்உடைமையாம் ஆதலின் அவனே நாம் என்பதன்றி நாம் நாமல்லமாயிருந் தேம் என்றிவ்வாறு எண்ணிச்செயல் புரிந்து வருவாராயின் சீவன் முத்தராகிய அன்னோர் எந்த உடம்பில் நின்றாரா யினும் ஏகனாகி இறைப்பணியில் வழுவாது நிற்குமவர்க்கு அவர் செய்யும் புதிய வினைப்பயன் அவரைச் சார்தல் என்ப தில்லையாம். அதுவேயன்றி அவர்தாம் தம் முன்னைப் பிறவிகளில் ஈட்டப்பட்டு இப்பிறப்பில் நுகர்தற்கு ஊழான் வரையறுக்கப்பட்டிருந்த பழவினைப்பயனையும் முதல்வன்

பெத்தகாலத்தில் புசிக்கத்தந்தானேயன்றி இம்முத்திக்காலத்தில் தாரான் எ. று.

என்றது அவ்விருவகை வினைப்பயன்களையும் இன்று முதல்வனே புசித்தொழிப்பன் என்றவாறாம்.

எனவே ஏகனாகி இறைபணி வழுவாது நிற்பவர்க்கு ஆகாமிய வினைப்பயன்களும் இல்லை, பிராரத்த வினைப் பயன்களும் இல்லை என்பதாம்.

எத்தனுவில் நின்றும் என்றதன் குறிப்பாவது பெத்த காலத்துட்பேயாயினும் முத்திக்காலத்துட்பேயாயினும் இறைபணி வழுவாது நிற்பார்க்கு அவ்விருவகை வினைப் பயன்களும் இல்லையாம் என்பதே.

இனி யோக ஞானங்கள் ஒரு பிறவியிலே கைவரப்பெற்ற ஞானிகள் தம்யோகானுபவத்தால் தமது ஒரு கூட்டினின்று வேறோர் கூட்டினுட் சென்றும் வினைபுரிதல் கூடுமன்றே, அங்ஙனம் அவர் அக்கூட்டில் நின்று புரியும் வினையும் அவரைச் சார்தலின்றாம் என்பான் 'எத்தனுவில நின்றும் இறைபணியார்க்கில்லை வினை'' என்றான் எனலுமொன்று. திருத்தொண்டர் புராணத்துள் வரும் திருமூல நாயனார் வரலாற்றை இங்கு நினைவு கூர்க. அப்பெரியார் யோகானு பவத்தோடு ஞானானுபவமும் கைவரப்பெற்று முற்றிய முழு ஞானியாகவே திகழ்ந்தார் என்பதும், அவர்தாம் தமது ஒரு கூட்டினின்று பிறிதோர் கூட்டினுட்சென்று நெடுங்காலம்இம் மண்ணிலே வாழ்ந்தார் என்பதும், திருமந்திரம் என்னும் ஒப்புயர்வற்ற ஞானநூல் ஒன்று அவர்தம் திருவாயினின்று மலர்ந்ததாம் என்பதும் அவரது வரலாற்றால் நாம் உணரக் கிடந்தவையாம்.

சீவன் முத்தராயினார்க்கு மெய்ம்முதலான கரணங்களும் விடய நுகர்ச்சிகளும் பசுபோத உணர்வினாலன்றிச் சிவஞான உணர்வினால் நிகழ்வனவாமாகலின் இந்திரியங்களும் தம் முடையனவல்ல என்றும், விடய நுகர்ச்சிகளும் தம் வழியால் நிகழ்வனவல்ல என்றும் கருதுவர் என்றான். எனவே அவை சிவனுடையன என்றே கருதுவர் என்றதாம்.

நம எனற்பாலது செய்யுளில் மோனை எதுகை நலம் குறித்து நாம் என நின்றது. நம-குறிப்பு வினைப்பெயர், இங்குக்குறிப்பெச்சமாயிற்று, நாம் அல்லம்-அல்லம் தன்மைப்பன்மைக்குறிப்புமுற்று. அரன் உடைமையாம் ஆதலின் என ஒரு சொல் வருவித்துரைக்க.

என்னின்-என்று கருதுவராயின், என்றதால் இறைபணி நிற்பார் அவ்வாறு கருதுவர் என்றதாம்.

முன் செய்வினை முன் தருவான் என்றதால் இன்று தாரான் என்பது சொல்லெச்சம். முன் என்பது பெத்த காலத்தைக்குறித்தது. தருவான் என்றது கால வழுவமைதி.

இனி நாம் அல்ல இந்திரியம் என்பதற்கு இந்திரியங்கள் மாயேயம்ஆவனவன்றியாமாவனவல்ல என்றுரைத்துச்சொல் விளையாடல் புரிந்து சொற்குணம் வாளாபோயினாரும் உளர். வீட்டியலாதலின் அவ்வுரை பொருந்தாமையை நுனித்து உணர்க என்பதாம்.

இனி இவ்வாறு இறைபணி நிற்பார்க்குமட்டில் வினைப் பயன் இல்லையாகச்செய்து நில்லார்க்கு அது நுகரக்கொடுத் தல் எல்லோரிடத்தும் ஒப்பநிற்கும் முதல்வன்து பேரருட்டிறத் திற்கு இழுக்காம் போலும் என்றையுற்ற மாணாக்கற்கு ஐயமகற்றி மேற்கோளை வலியுறுத்த வருவது அடுத்த உரைப்பாட்டு.

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாம் சார்ந்தடியார்
தாம்தானாச் செய்துபிறர் தம்வினைகள்
தான் கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு.

என்பது உரைப்பாட்டு. இது முதல்வன் சார்ந்தாரைக்காக்கும் தகவுடைமை கூறும் முகத்தால் மேற்கோளை வலியுறுத்து கின்றது.

கண்ணழிவு : சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனா தல்-ஆதலால் சார்ந்தாரை காத்தும் அவன் சலம் இலனாம்,

சார்ந்த் அடியார் தம்மை தானாக்கச் செய்து பிறர்தம் வினைகளை அவர்க்கு நுகரக்கொடுத்தலை ஆய்ந்தார்க்கு முன்செய் வினையும் ஆங்கு-அவ்வாறேயாம் என்பது புலனாம்.

பொழிப்புரை : மாணாக்கனே, அடைக்கலம் என்று கேட்டு வந்தவரை ஆதரித்தல் அருளுடைய பெரியோர் கடன் ஆதலால் முதல்வன் தன்னைச்சாராதாரை ஒதுக்கிச்சார்ந்தவர்களைமட்டில் காத்தானாயினும் அவன் வஞ்சனை இல்லாதவனே ஆவன். தன்னைச் சார்ந்த அடியவர்தம்மைத் தானாகவே செய்தும், அவர் செய்யும் புதிய வினைப்பயனை அவர்க்கு இல்லையாகச்செய்தும், அதே நேரத்தில் தன்னைச் சாராத மற்றவர் செய்யும் புதுவினைப்பயனை அவரேநுகரக் கொடுத்தும் வருதலை, ஆராய்ந்து அறியவல்லார்க்கு அவ்விரு திறத்தவரின் பழவினைகளுங்கூட அவ்வாறு இரு திறப்படவே நிகழ்வனவாம் என்பது புலனாம் எ. று.

ஆகவே அதுபற்றி அவனது நடுவு நிலைமைக்கு இழுக்கின்றாம் என் அறிக என்றதாம்.

சலம் என்பது வஞ்சனைப்பொருள் தருவதோரிடைச் சொல் அஃதீண்டு நடுவன்மை குறித்து நின்றது. சார்ந்தடியார் என்புழிச்சார்ந்த வென்பதன் பெயரெச்சத்திறுதியகரம் தொக்குச்சார்ந்தென நின்றது. அடியார்தாம்-அடியார் தம்மை என் இரண்டனுருபு விரித்துரைக்க. ஆய்ந்தார் என் புழி நான்கனுருபு தொக்கது. ஆய்ந்தார்க்குப்புலனாம் என் ஒரு சொல் வருவித்துரைக்க. ஆங்கு என்பது அவ்வாறு என்னும் பொருள் தர நின்றது.

இரு திறப்பட நிகழ்தலாவது சார்ந்தார்க்குப்பிராரத்த வினைப்பயன் இன்மையும், சாராதார்க்கு அஃதுண்மையுமாய் நிகழ்தல் என்பதாம்.

முக்திக்காலத்தில் ஏகனாகி இறைபணி நின்றவர் வினை செய்யுங்கால் இறை உணர்வாற்செய்வர் ஆகலின் அன்னார் செய்யும் ஆகாமிய வினைகள் அன்னாரைச் சார்தலின்றாம் என்பது ஒப்ப முடிந்ததாயினும் அன்னார் தம் முன்னைப்பிறப்புக்களில் பெத்த நிலையில்

நின்று செய்து இப்பிறப்பில் நுகரக்கடவவாய் வரையறுக்கப் பட்டிருந்த பிராரத்த வினைப்பயன்களும் அன்னார்க்கு இன்று இன்றாம் என்றற்கோரேதின்றாமாயினும் இறைபணி நிற்றலை ஆராய்ந்து தெளியவல்லார்க்கு அப்பழவினையும் புதுவினையே போன்று சார்தலின்றாம் என்பது புலனாம் என்பான் ''ஆய்ந்தார்க்கு முன் செய்வினையும் ஆங்கு''. என்று மாட்டெறிந்தான். இவ்விருதிறப்பட்ட வினைகளும் சாரத்தக்க பெத்த காலத்தில் சார்ந்து பயன் விளைத்தன வன்றி முத்திக்காலத்தில் அவை எரிமுன் பஞ்சுத்துய்போல ஞானிமுன் தீய்ந்து கெடுமாகலான் சாராவாம் என்றுணர்க.

இதனானும் பெற்றாம் அவ்வினைப்பயன்களை அவ் வான்மாக்களில் ஒன்று நுகராமைக்கும் ஒன்று நுகர் கின்றமைக்கும் அவ்வான்மாக்களின் இருதிறப்பட்ட பரிபக் குவநிலையே காரணம் என்பதல்லது முதல்வன்காரணன் ஆகான் என்பதுபட்டு அவன் சலமில்லானேயாவன் என்பது.

இதனால் இறைபணி நிற்பார்க்கு அஞ்ஞான கன்மங்கள் விளையா என்பது உணர்த்தப்பட்டு மேற்கோள் வலியுற்ற வாறறிக.

இனிஞானிபால் முன்செய்வினை ஒரோவழி மூண்டாலும் பின்செய்வினை ஒரு தலையாய் மூளாது என்று உணர்த்த வருவது அடுத்த உரைப்பாட்டு.

**இங்குளி வாங்கும் கலம்போல ஞானிபால்**
**முன்செய் வினைமாயை மூண்டிடினும் பின்னைவினை**
**மாயையுடன் நில்லாது மற்றவன்தான் மெய்ப்பொருளே**
**ஆயவத னாலுணரும் அச்சு.**

என்பது உரைப்பாட்டு. இது வாதனை வயத்தால் முன்செய் வினை ஒரோவழி மூளினும் அதனால் மெய்ஞ்ஞானி தாக்கு றான் என்பதுணர்த்தி மேற்கோளைக்காக்கின்றது.

கண்ணழிவு: இங்குளி வாங்கும் கலம்போல ஞானி பால் முன்செய்வினை மாயையுடன் மூண்டிடினும் பின்னை வினை மாயையுடன் நில்லாது. மற்று அவன்தான் மெய்ப்

பொருளே ஆய அதனால் மூண்ட அம்முன் செய்வினைப் பயனை அச்சு உணரும் அதுவன்றி அவன் உணரான் என்பது.

பொழிப்புரை : காயத்தை வைத்தெடுத்த பாத்திரத்தில் அக்காயத்தின் மணம் நீங்காதாற்போல ஞானியிடத்தே அவன் முன்னால் ஈட்டிய பிராரத்த வினைகள் அவற்றால் தரப்பட்ட மாயாகாரியமாகிய உடம்போடு ஒரோவழி மூளு மாயினும் அவனால் இன்று ஈட்டப்படும் ஆகாமிய வினைகள் அவற்றை ஈட்டிய இம்முத்திக்காலத்து உடம்புடன் ஒருதலை யாக நில்லாவாம் என்பதே. மற்று அவன்தானும் இது பொழுது மெய்ப்பொருளைச் சார்ந்துநின்று மெய்ப்பொருளே ஆகி நின்ற காரணத்தால் மூண்ட அப்பழவினைப்பயனை அவனது உடம்பு ஒருவாறு உணருமாயினும் அவன் உணரான் எ. று.

எனவே மூண்ட அப்பழவினைதானும் ஞானியின் உடலூ ழாய்க்கழியும் என்றவாறாம்.

காயத்தை வைத்தெடுத்த பாத்திரத்தில் காயம்இன்றாம் ஆயினும் காயத்தின் மணம் நீங்காது நிற்றல் போல ஞானி யாவான் இறைபணியில் நிலைத்து நின்றதன் பின்னரும் வாதனை வயத்தால் முன்செய் வினையாகிய பழவினை அது தேடிக்கொடுத்த உடம்பில் ஒரோவழி மூளுமாகலின் அதற்கு அது உவமை ஆயிற்று. இன்னும் அவ்வுவமையானே பாத்தி ரம் உடைந்தவழிக்காயத்தின் மணமும் ஒருசேரக்கெடுமாப் போல ஞானி எடுத்த உடம்பு அழிந்தவழி அவன் இன்னும் புசிக்கைக்கு இருந்த பழவினைகளும் ஒருசேரக்கெடுமெனவும் அறிக.

இங்குளி என்பது இங்குக்காயத்தையும் கலம் என்பது பாத்திரத்தையும் குறித்தன. இதனை வழிநூலார், ''முன் செய்வினை இங்குத்தங்கிப்போம் பாத்திரமும், குலாலன் வினைதவிர்ந்த சக்கரமும் கந்தித்துச்சுழலுமாபோல், மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் எல்லா மலங்களும் பின் காயமொடு மாயுமன்றே''.என்று விளக்கினார். இங்குத் தங்கிப்போம் பாத்திரம் கந்திக்கும் எனவும், குலாலன் வினை

தவிர்ந்த சக்கரம் சுழலும் எனவும் ஆண்டு நிரல் நிரையாகப் பொருள் கொள்க. அங்கு இங்கு என்பது காயம் என்னும் பொருள் குறித்தது.

கலம் போல என்றது கலத்தின் மணம்போல என்றதாம்.

முன்செய் வினையைப்பிராரத்தம் என்பர். பழவினை என்பதும் அது. பின்செய் வினையை ஆகாமியம் என்பர். அது புதுவினையாம்.

மாயையுடன் என்பின்னர் வந்தமையால் உடன்என்பது முன்னரும் கூட்டி உரைக்கப்பட்டது.

இதுகாறும் அசத்தினைச்சார்ந்து அசத்தாய் நின்ற அவனே இதுபொழுது சத்தினைச்சார்ந்து சத்தாயும் நின்றான் என்பது உணர்த்தி நின்றமையால் மற்று அவன் என்புழி மற்று வினைமாற்றின் கண் வந்தது.

ஆன்மாவையொழிந்து அச்சுக்கு உணரும் தன்மை இல்தாயினும் அப்பழவினை நுகர்ச்சியால் இதுபொழுது தாக்குறுவது அச்சேயன்றி ஆன்மா அன்றாகலான் அச்சு உணரும் என்றான். அச்சு-உடம்பு.

மாயை என்பது மாயாமலத்தால் விளைந்த உடம்பினைக் குறித்தது.

முன்செய்வினைக்கு ஈடாக எடுத்த உடம்பு நின்றதால் அம்முன்செய்வினை மாயையுடன் அதாவது உடம்புடன் ஒரோவழி மூளும் எனவும், இறைபணி நிற்பார்க்கு ஆகாமியம் இன்றாகவே இனிவரும்உடம்பும் இல்லையாம் ஆகலான் பின்செய்வினை மாயையுடன் நில்லாது அதாவது நின்ற உடம்பு அழியுங்கால் பின்செய்வினையும் அழியும் எனவும் கூறிய ஆசிரியன்து மெய்யுணரனுபவத்தை வியந்து போற்றலாம்.

இனி முன்செய்வினைப்பயனை அச்சு உணருங்கால் ஆன்மா உணராதொழிதல் யாங்ஙனம் என்றையுற்ற

மாணாக்கற்கு ஐயமகற்றி மேற்கோளை வலியுறுத்த வருவன அடுத்து வரும் உரைப்பாட்டுக்கள் இரண்டும் என அறிக.

**நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்**
**பண்ணமர் மாச்செலுத்தும் பாகரினும் எண்ணி**
**அரனடி ஓர்பவர் ஐம்புலனிற் சென்றும்**
**அரனடி நீங்கார் அதற்கு**

என்பது உரைப்பாட்டு. இது மேல் 'அச்சு உணருங்கால் ஆன்மாஉணராதொழிதல் யாங்ஙனம் என்றையுற்ற மாணாக் கற்கு ஐயம் அகற்ற வருகின்றது.

கண்ணழிவு :- எண்ணி அரனடி ஓர்பவர் நண்ணனல் வேவாத நற்றவர்தம்மினும் பண்ணமர் மாச்செலுத்தும் பாகரினும் ஞானவீரம் குலையாராகலான் அதற்கு-முன்செய் வினை மாயையுடன் மூண்டவதற்கு ஐம்புலனில் சென்றும் அரனடி நீங்கார் எ. து.

பொழிப்புரை :- பதி பசு பாசம் என்னும் முப்பொருளி யல்பினை ஆய்ந்து, பதிப்பொருளே தாம் சாரக்கடவதொன் றென ஓர்ந்து அதனையே சார்ந்து நின்ற சிவஞானிகள் சூழ்ந் தெரிகின்ற நெருப்பிலே நின்று தவஞ்செய்தாலும் அந்நெருப் பினால் வெந்தொழியாத சிறந்த தவவலிமையுடையவர்தம் தவவீரம் குலையாமை போலவும், உயிரைமதியாது செய் கின்ற போரின்கண்ணே பரிமா கடவிச்சென்று போர்செய்து உயிரைத்துறக்கும் பரிமா வீரர்தம் போர்வீரம் குலையாமை போலவும் வென்றாலும் வீழ்ந்தாலும் தம் ஞான வீரம் குலை யாராகலான் அன்னார் முன் செய்வினை மாயையுடன் மூண்டக்கால் அதன்பொருட்டு ஐம்புலவிடயங்களிலே வீழ்ந்து தோய நின்றாராயினும் அங்கெல்லாம் அவர் அரனது திருவடி ஞானத்தை நெகிழவிடாது பற்றியே நிற்பர் எ. று.

எனவே அவ்வாறு அவர்தமது ஞானவீரம் குலையாது நின்ற காரணத்தால் மூண்ட அப்பழவினைப்பயனை அவர் தம் அச்சு உணருமதுவேயன்றி அவர் அதனாற் சிறிதும் தாக்குறார் என்பதே பெற்றாம்.

ஆலாலசுந்தரர வரலாறு ஈண்டுக்கருதற்பாலது.

நெருப்பில் நின்று தவஞ்செய்வரர் அங்கித்தம்பனை யுடையராகலான் அவரை அங்கி சுடாதாற்போலவும் பரிமா வீரர் களத்தில் உயிர் துறத்தலையே குறிக்கோளாகக் கொள்வராகலான் போரச்சம் அவரை அச்சுறுத்தாதாற் போலவும் சிவஞானிகளைப்பழவினைப்பயன்கள் தாக்கித் துன்புறுத்தாவெனவுணர்க.என்றது இடும்பைக்கும் இடும்பை படுக்கும் ஞான வீரமுடையவர் அச்சிவஞானிகள் என்றபடியாம்.

நண்ணனல் என்பதும், பண்ணமர்மா என்பதும் வினைத் தொகைகள். நண்ணுதல்-சூழ்தல்-சூழ்ந்தெரிதல். பண்ணுதல் போருக்குரிய ஒப்பனை செய்தல். நற்றவர் தம்மினும், பாகரினும் என்புழி இன் இருவழியும் உவமவுருபுகள். உவமைகள் இரண்டும் முறையே வேறல் குறித்தும் வீழல் குறித்தும் வந்தனவாகலான் ஒருபொருட்கண்மை அறிக. உவமைக்கண் வந்தன பொருட்கண்ணும் சென்றியைந்தன. நற்றவர் போலவும் பாகர் போலவும் ஞானவீரம் குலையாராகலான் என ஒரு சொல் வருவித்து உரையினை முற்றுவிக்க. அதற்கு என்புழிவந்த சுட்டு மேல் முன்செய்வினை மாயையுடன்மூண்ட அதனைச் சுட்டியது. ஆண்டுக்குவ்வுருபு பொருட்டு என்னும் பொருளில் வந்தது. அதற்கு-அதன்பொருட்டு.

இதனால் ஞானிபால் முன்செய்வினை மாயையுடன் மூண்டக்கால் அதனை அவனது அச்சு உணருமதுவன்றி அவன்உணரான் என்பதனை உவமை முகத்தால் மேலுமோரேதுக்கொண்டு விளக்கி இறைபணி வழுவாது நிற்பார்க்கு அஞ்ஞான கன்மம் பிரவேசியா எனவந்த மேற்கோளை வலியுறுத்தியவாறும் கண்டு கொள்க.

சதசத்தாம் மெய்கண்டான் தன்னான் உணரின்
இதமித்தல் பாசத்தின் இன்றிக் கதமிக்
கெரிகதிரின் முன்னிருள்போல் ஏலா அசத்தின்
அருக்கணையார் சத்தணைவார் ஆங்கு.

என்பது உரைப்பாட்டு. இதுவுமது.

கண்ணழிவு :- ஆங்கு சத்து அணைவார் கதம்மிக்கு எரி கதிரின்முன் இருள்போல் ஏலா அசத்தின் அருகு அணையார் ஆகலான் சத்து அசத்து ஆம் மெய் கண்டான் தன்னான் உணரின் பாசத்தின் இதமித்தலின்றி பதியிடத்தே இதமித்து நிற்பன் எ. து.

பொழிப்புரை :- முத்திக்காலத்தில் சத்தாகிய பதிப் பொருளை அணைந்து நிற்பவர்கள் சீற்றம் மிகுந்து எரிகின்ற கதிரவனுக்கு முன்னால் தோன்றாதொழியும் இருளினைப்போலச்சத்தினுக்கு முன்னால் தோன்றாதொழியும் அசத்தினுக்கருகில் நெருங்கவும் மாட்டாராகலான் சத்து அசத்துக்களின் உண்மைத்தன்மையைக்கண்டு தெளிந்த ஞானியொருவன் சத்தினை உணருங்கால் அத்தனைத்தன் ஆன்ம உணர்வால் உணராது இறை உணர்வால் உணர்ந்த காரணத்தால் அவன் உள்ளம் என்றுமே பாசத்தில் இலயித்தலின்றிப் பதியிடத்தே இலயித்து நிற்பதாம் எ. று.

எனவே பாசவுணர்வு குன்றிப்பதியுணர்வே மேலிட்ட அந்நிலைக்கண் முன்செய்வினை மாயையுடன் மூண்டக்கால் அதனை அவனது அச்சு உணருமதுவன்றி அவன் உணரான் என்பதுவே இதனாலும் சாதிக்கப்பட்டதென்பதாம்.

சத்தினை அணைந்தவர் அசத்தின் அருகிலும் நெருங்கார் என்னும் பொதுவிதிகொண்டு முறையாக மெய்ப் பொருளை உணர்ந்து தெளிந்த ஞானியொருவன் பாசத்தில் மூழ்குதல் இன்றாம் என்னும் சிறப்பு விதி வலியுறுத்தப் பட்டது என்பதாம்.

இதற்கு இவ்வாறு உரையாது பால் மயங்க உரைத்து இடர்ப்பட்டாரும் உளர்.

சத்து அசத்தாம் மெய்கண்டான் தன்னான் உணர்தல் என்பதற்குச்சத்தாகிய பதியின் உண்மையையும் அசத்தாகிய பிரபஞ்சத்தின் உண்மையையும் விசாரித்து அறிந்தவன் என்றும், அதனால் சத்தசத்தாயுள்ள ஆன்மாவின் உண்மையையும் விசாரித்து அறிந்தவன் என்றும், அவ்வாறு தன்னை அறிந்த பின்னர்த்தன்னுள்ளிருந்த தலைவனையும் அவனது

திருவடி ஞானத்தால் உணர்ந்து தெளிந்து அவனோடு ஏகனாகி இறைபணி நின்றவன் என்றும் ஈண்டைக்கு ஏற்பப் பொருள் உரைத்துக்கொள்க.

உணரின் என்பது செயின் என்றவாய்பாட்டு வினையெச்சம். அது மழை பெய்யின் நெல்விளையும் என்புழிப் போலக்காரணப் பொருட்டாய் நின்றதெனக்கொள்க.

தன்னான் உணர்தலாவது பதி ஞானத்தாலே பதியை உணர்தல் என்பதாம். அவ்வாறு உணர்வே பசு பாசவுணர்வுகள் மேலிடாவாகலான் உடம்பினைத்தாக்கும் பழவினைப் பயனால் மெய்ஞ்ஞானி ஒரு சிறிதும் தாக்குறான் என்பது தெளிவாம். ''பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்'' என்றார் வழி நூலாரும்.

இலயித்தல் எனற்பாலது எதுகை நோக்கி இதமித்தல் எனத்திரிந்து நின்றது. அதுபோலி, இலயித்தல், தோய்தல், மூழ்குதல்,அழுந்துதல் என்பன ஒருபொருள் தருஞ்சொற்கள். இதற்கு இவ்வாறு உரையாது இதம் செய்தல் எனப்பொருள் உரைத்து இடர்ப்பட்டாரும் உளர்.

பாசத்தின்கண் இலயித்தல் இன்றிஎன்றதால் பதியிடத்து இலயித்தல் பெற்றாம். அது வருவித்து உரைக்கப்பட்டது. இன்று என்பது இன்றி எனத்திரிந்து கட்டுரைச்சுவைபட நின்றது.

சீற்றம் மிகுந்து எரிதலாவது மிக்க வேகத்தோடு எரிதல். அவ்வாறு எரிகின்ற கதிரொளிக்கு முன்னால் இருள் தோன்றாதாற் போலச்சத்தினுக்கு முன்னால் அசத்துத் தோன்றாதாகலான் ''சத்து அணைவார் அசத்தின் அருகணையார்''. என்றான். என்றது அவ்வசத்து அவர்தம் கருத்தினும் படாது என்றவாறாம். இதனானும் பெற்றாம் ஞானியின் உடம்பு துய்க்கும் பழவினைப்பயனை ஞானி துய்யான் என்பது.

இவ்விரண்டு பாட்டுக்களானும் மேல் அச்சு உணரும் என்ற அதனையே உவமை முகத்தானும் சம்பிரதாய மரபானும் விளக்கி மேற்கோளை வலியுறுத்தான் ஆசிரியன் எனவுணர்க.

ஏகனாகி இறைபணி நிற்பதால் ஆகாமிய வினைகெடும் எனக்கூறிப்பாசத்தைத்தேய்த்துக்கொள்ளும் வழியினையே இச்சூத்திரத்தால் ஆசிரியன் உணர்த்தினான் என அறிக.

இனி அடுத்து வரும் சூத்திரத்தால் ஞான உணர்வால் மும்மலநீக்கம் பெற்ற ஆன்மாத்தேகாந்தத்தே பரமேசுவரனது சீபாதங்களை நிரந்தரமாய் அணைந்து வீடு பெறும் நிலையினை உணர்த்துவான் ஆசிரியன் எனவுணர்க.

பத்தாம் சூத்திரம் முற்றிற்று.

## பதினொன்றாம் சூத்திரம்

**காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்**
**காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்**
**அயரா அன்பின் அரன்கழல் செலுமே.**

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோ எனின் பரமேசுவரனது சீபாதங்களை அணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமாய் வந்தஇவை ஆசிரியன் உரைத்தவை.

சைவ சித்தாந்தப் பெருநெறி வரையறுத்து மேற்கொண்ட சத்து அசத்து சத்தசத்து என்னும் முப்பொருளியல்புகளை உணர்ந்த வழிநின்று பல பிறவிகளிலும் செய்து வந்த சரியை கிரியை யோகமாகிய தவங்களானும், இருவினையொப்புணர்வானும், முதற்குருவின் உபதேசத்தானும் ஞானத்தினை உணர்ந்து, அந்த ஞானக்கண் கொண்டு முதல்வனைச் சிந்தையுள் தேடி உணர்ந்து, பாசம் களைந்து, அந்த அனுபவம் மாறாதிருத்தற்பொருட்டுத்திருவைந்தெழுத்தை விதிப்படிக்கணித்து ஆன்ம சுத்தியும் செய்துகொண்டு, பின் அவனே தானாகிய நெறியால் ஏகனாகி இறைபணி நின்று கன்மங்களை முற்றவும் தேய்த்துக்கொண்ட முத்தான்மாவுக்கு இனித்தேகாந்தத்தே பரமேசுவரனது சீபாதங்களைப் பேரன்போடு இடையறாது மன முருகி நினைந்துஅணையும் வழியொன்றைத்தவிர வேறு வழியின்றாகலான் முறையாக அதனையே உணர்த்துகின்றது இச்சூத்திரம் என்பது.

கண்ணழிவு :- காணும் கண்ணுக்கு விடயங்களைக் காட்டிக்காணும் உள்ளம்போல முதல்வனும் உள்ளத்தைக் காணக்காட்டித்தானும் காண்டலின் அயரா அன்பின் அரன் கழல் செலுமே எ. து.

பொழிப்புரை :- பொருள்களைக் காண்கின்ற கண்ணுக்குக்கண்ணோடு ஒன்றி நின்று காட்டித்தானும் காண்கின்ற ஆன்மாவைப்போலவே விடயங்களைக்காண்கின்ற ஆன்மாவுக்கு ஆன்மாவோடு ஒன்றி நின்று காட்டி

இதுபொழுது தானும் காண்கின்றான் முதல்வன் ஆகலின் ஏகனாகி இறைபணி வழுவாது நின்று மும்மலங்களையும் களைந்தொழித்த அம்முத்தான்மாவானது இனி அரனை மறவா அன்போடு தேகாந்த பரியந்தம் அவனது சீபாதங் களை இடையறாது நினைந்து சிவானுபவத்தில் மூழ்கிநின்று தேகாந்தத்தில் நிரந்தரமாய் அணைந்து வீடுபெறும் எ. று.

ஆன்மாவின் உதவியால் கட்பொறி பொருள்களைக் காணுமாயினும் அக்காட்சியாற் பயன்கொள்ள நிற்பது கண்ணன்றி ஆன்மாவேயாதல் போல இதுபொழுது முதல் வனையின்றியமைந்து அம்முத்தான்மா ஒன்றையும் விடயியா வாகலான் அவ்விடயப் பயன்கொள்ள நிற்பதும் அவ்வான்மா வன்றி முதல்வனேயாம் என்பது உவமையாற்போந்த பொருளாம் எனவறிக. அறியவே இந்த முத்திக்காலத்தில் முத்தான்மாக்கள் நுகரும் விடயங்களை முதல்வனே நுகர் கின்றானென்பதும், அவ்வான்மாக்கள் செய்யும்வினைக்குரிய பயன்களையும் அவற்றுக்கு இல்லையாகச்செய்து அவன் தானே ஏற்று நிற்பனாம் என்பதும் தெளிதல் கூடுவதாம் என்க. எனவே நுகர்வும் செயலும் முற்செய்வினையும் பிற் செய்வினையுமே ஆமாகலின் அவ்விரண்டுமே இம்முத்திக் காலத்தில் முத்தான்மாவுக்கு இல்லையாம் என்று உணர லாம். முத்திக்காலத்து நிலைமை இவ்வாறெனவே பெத்த காலத்து நிலைமை முற்றிலும் வேறாம் எனவுணர்க. அது, ‘‘மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம்சேட்டிக்கும்’’. ஆயினும் ‘‘எண்ணான் சிவன் அசத்தை இன்று’’ என மேல் ஐந்தாம் சூத்திரத்துட் கூறியவதனாலும் தெளியலாம் என்பது. முதல்வனது இத்தகைய பேரருட்செயலை நினைந்து நினைந்து மனமுருகி அவனருளை மறவா அன் போடு அவ்வான்மா முதல்வனது சீபாதங்களை ஒரு கணமும் விட்டுப்பிரியாதிருந்தே தேகாந்தத்தே மும்மலங்களும்கழன்ற நிலையில் அவனது சீபாதங்களை நிரந்தரமாய் அணைந்து வீடு பெற்றுய்யும் என்பதே இச்சூத்திரத்தின் திரண்ட பொரு ளாம் எனக்கருதுக.

கட்பொறி மற்றைப் பொறிகளினும் சிறந்த தாமாகலின் கண்மேல் வைத்துக் கூறினானேனும் ஏனைப்பொறிகளும்

கொள்ளப்படும். கொள்ளவே உற்றறியும் மெய்க்கும் சுவைத்தறியும் வாய்க்கும் மோந்தறியும் மூக்குக்கும் கேட்டறியும் செவிக்கும் ஒப்ப ஆன்மாவே காட்டாய் நின்று காணும் எனவும் உணர்க. ''ஐம்பொறியை ஆண்டங்கரசாய் உளம் நிற்கும்''. என மேல் வந்ததனையும் ஈண்டு நினைவு கூர்க என்பது.

இனி, காட்டும் உளம் என்றது காட்டிக்காணும் உள்ளம் என்றவாறாம். எனவே பொருட்கண்ணும் கண்டு காட்டல் என்பதற்குக் காட்டிக்காண்டல் எனவே உரைத்து உரையை முற்றுவித்துக்கொள்க.

அயராமை-மறவாமை.என்றதால் இடையறாது நினைந்திருத்தல் பெற்றாம்.

அரன் கழல் தருமே என்ற பாட்த்திற்கு மறவாது ஏத்தும் அன்பினால் அவற்கு அரன் தன்கழலை அணையத்தருகுவன் என்று உரைத்துக்கொள்க.

இனி அரன் கழல் செலுமே என்று தேற்றேகாரத்தாற் கூறிய குறிப்பினால் உயிர் உடம்பில் வாழுங்காலம்வரை முத்தான்மாவானது அரனை மறவா அன்போடு அவனது சீபாதங்களை அணைந்திருந்து தேகாந்தத்தே மாயாமலமும் கழன்ற நிலையில் அவனது பேரருளில் நிரந்தரமாய்க்கலந்து பின் பிறவிக்குத் திரும்பாது எனவும் உணர்க.

இச்சூத்திரத்துள் காணும் கண்ணுக்குக்காட்டும் உளம் போல் காண உள்ளத்தைக்கண்டு காட்டலின் என்பது ஒரு அதிகரணம். அயரா அன்பின் அரன்கழல் செலுமே என்பது ஒரு அதிகரணம் ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரம் என்பது.

### முதலாம் அதிகரணம்

*மேற்கோள் :- ஈண்டவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றது. இவ்வான்மாக்கள் அவனையின்றியமைந்து ஒன்றையும் விடயியாவாகலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

ஈண்டு என்பது இங்கு முத்திக்காலத்தைக் குறித்தது. அவன்-பரமேசுவரன். அவற்றது-முத்தான்மாக்களது. விடயம் என்பது மூவகையான் வருவது. அவை ஞானேந்திரியங்களின் தொழிற்பாட்டால்வரும் நுகர்ச்சி. கன்மேந்திரியங்களின் தொழிற்பாட்டால் வரும் செயல், அந்தக்கரணங்களின் தொழிற்பாட்டால் வரும் அறிதல் முதலிய உணர்வுகள் என்பன. இவை மூன்றும் ஆன்மாவின் இச்சை கிரியை ஞானம் ஆகிய மூவகைத்திறன்களால் வரும் அனுபவங்களாம். இம் மூவகையானும் ஆன்மா அனுபவிக்கும் போகமே இங்கு விடயம் எனப்பட்டது. இவ்வான்மாக்கள்-முத்தான்மாக்கள். இன்றியமைந்து-தவிர்ந்து. விடயியா-நுகரா.

பெத்த நிலையில் உள்ள ஆன்மாவின் அனுபவம் நான் சுவைத்தேன், நான் செய்தேன், நான் அறிந்தேன் என்று இப்படியாக வருவது. முத்தி நிலையில் உள்ள ஆன்மாவின் அனுபவம் அவ்வாறன்று. எந்த ஒரு விடயத்தையும் அது முதல்வனைத்தவிர்ந்து அனுபவியாது. அவனே தானாகிய நெறியால் அவனோடு ஏகனாகி இறைபணி நின்ற காரணத் தால் நான் என்ற சொல்லுக்கு அங்கு இடமே இல்லை. அவன் சுவைக்கின்றான், அவன் செய்கின்றான், அவன் அறி கின்றான், என்றுவரும் அந்த அனுபவமே முத்தான்மாவின் அனுபவமாகும். ஆதலால் இங்கு ஆன்மா அனுபவிக்கும் விடயங்களை முதல்வனும் அநுபவிக்கின்றான் என்பதுதான் உண்மை. அதனாற்றான் ஆசிரியன் ஈண்டு அவனும் அவற் றது விடயத்தை உணரும் என மேற்கொண்டான் என்பது. ''நன்றே செய்வாய் பிழைசெய்வாய்நானோ இதற்கு நாயகமே'' என்ற திருவாதவூரடிகளின் அனுபவத்தை இங்கு உணர்க.

**ஐந்தையும் ஒக்க உணரா தவற்றுணர்வ**
**தைந்தும்போல் நின்றுணரும் ஆதலால் ஐந்தினையும்**
**ஒன்றொன்றாய் பார்த்துணர்வ துள்ளமே எவ்வுலகும்**
**ஒன்றொன்றாப் பார்க்கும் உணர்ந்து.**

என்பது உரைப்பாட்டு. இது சூத்திரத்திற்கு ஒரு புறனடை கூறுகின்றது. என்னை, பொறிகட்குக்காட்டாய் நின்று தானும் காணும் உள்ளம்போல உள்ளத்திற்குக்காட்டாய் நின்று இதுபொழுது தானும் காண்பன் முதல்வன் என்றதால் சீவனும் சிவனும் ஒருபுடை ஒப்புமை உடையராயினும் ஒருபுடை ஒவ்வாமையும் உடையர் என்பதோரொழிபு உணர்த்தி நிற்றலின் இது புறனடையாயிற்று.

கண்ணழிவு :- ஐந்தையும் ஒக்க உணராது அவற்றால் உணர்வதாகிய ஆன்மா ஐந்தும்போல் நின்று உணரும் ஆதலால் ஐந்தினையும் ஒன்று ஒன்றா பார்த்து உணர்வது. ஒன்று எவ்வுலகும் ஒன்றா உணர்ந்து பார்க்கும் என்பது.

பொழிப்புரை :- விடயங்களைப்பொறிகளின் உதவியால் உணர்வதாகிய ஆன்மா அப்பொறிகள் ஐந்தும் போல் தனித்தனி அதுவதுவாய் நின்றே உணரும் ஆதலால் அவ் விடயங்கள் ஐந்தையும் ஒரு காலத்தொருசேர உணராதாய் ஒரோவொன்றாகவேகண்டு உணர்வதாம். ஒப்பற்ற சிவபரம்பொருளோவென்னின், அது எல்லாஉலகங்களையும் உலகோடொன்றிய உயிர்களையும் ஒருகாலத்தொருசேரவே உணரும் என்று.

எனவே காட்டாகி நின்று உணர்கின்றுழி உள்ளத்தோடு முதல்வனிடை வேற்றுமை-உள்ளம் பொறிகளின் உதவியால் உணர்தலும், அப்பொறிகளோடு தனித்தனி அதுவதுவாய் நின்று உணர்தலும், உணருங்கால் ஒருகாலத்தொருசேர உணராதாய் ஒன்றொன்றாக உணர்தலுமாக, முதல்வன் அவ்வாறன்றி உலகு அனைத்தையும் ஒரு காலத்தொருசேர நின்றாங்கு நின்று உணர்வனாம் என்பது. எனவே சூத்திரத்துட்கூறிய உவமை காட்டிக்காண்டல் மாத்திரைக்கே என்பது இதனாற் பெறுதும்.

அவற்று உணர்வது என்புழி அவற்றால் என மூன்றனுருபு விரித்துரைக்க. ஐந்து என முன்னர் வந்தமையின் அவற்றால் என்ற சுட்டு அப்பொறிகள் ஐந்தனையுமே குறித்தது எனக் கொள்க.

ஐந்தும் போல் நின்று உணர்தலாவது, கண்ணோ டொன்றிக் கண்போல் நின்று கண்டும், செவியோடொன்றிச் செவிபோல் நின்று கேட்டும், வாயோடொன்றி வாய்போல் நின்று சுவைத்தும், மூக்கோடொன்றி மூக்குப்போல் நின்று மோந்தும், மெய்யோடொன்றி மெய்போல் நின்று உற்றும் உணர்தலாம் என்பது.

கண்ணின் சிறப்புக்கருதிக்கண்மேல்வைத்துப்பார்த் துணரும் என்றானாயினும் கேட்டுணர்தல் முதலிய பிறவும் கொள்க.

உள்ளம் பொறிவழி நின்று முதலில் பார்த்துப்பின்னர் உணருமாதலின் பார்த்துணரும் என்றான். முதல்வன்அவ்வா றன்றி நின்றாங்கு நின்றே உணர்வனாதலின் உணர்ந்து பார்க்கும் என்றான். எனவே உணர்தற்கண்ணும் அவ்விரண் டனிடை ஒரு வேற்றுமை உணர்க. உணர்ந்து பார்க்கும் என்பது உணரும் என்னும் பொருட்டாய் வந்த ஒரு சொல் நீர்மைத்து.

> **ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்**
> **போகமாய்த் தான்விளைந்த பொற்பினான் ஏகமாய்**
> **உள்ளத்தின் கண்ணானான் உள்குவார் உள்கிற்றை**
> **உள்ளத்தாற் காணானோ உற்று.**

என்பது உரைப்பாட்டு. இது அவனும் அவற்றது விடயத்தை உணரும் எனவந்த மேற்கோ. ளச்சம்பிரதாய மரபால் விளக்குகின்றது.

கண்ணழிவு:- முத்தான்மாக்கள் முதல்வனோடு ஏகமாய் நின்றே இணை அடிகளை ஒன்றி உணர போகமாய் தான் விளைந்த பொற்பினான், ஏகமாய் உள்ளத்தின்கண் ஆனான் உள்குவார் உள்கிற்றை உள்ளத்தால் காணானோ-காண்பன் எ. து.

பொழிப்புரை :- சிவஞானிகள் முதல்வனோடு ஏகமாய் ஒன்றி நின்றே அவனது இணையடிகளை உள்ளமொன்றி உணருந்தோறும் அவர்க்குச்சிவபோகமாயே விளைந்து

வரும் பொலிவினையுடைய முதல்வன் தானும் அவரிடத்து ஏகனாய் அவர்தம் உள்ளங்களில் நீங்காதே நின்றான் ஆதலாலே கருதுவார் கருதியனவெல்லாமும் அவர்தம் கருத்தில் நின்றவாறே காணானோ - காண்பன் என்றவாறு,

ஓகாரம் எதிர்மறை ஆகலின் காண்பன் என்றவாறாம்.

மன்னு சிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்த
தென்னும் மறையின் இயல்மறந்தாய் சொன்னசிவன்
கண்ணா உளம்வினையால் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணான் சிவனசத்தை இன்று.

என்பது ஆண்டுப் பெத்த நிலைக்கண் கூறியது. இது முத்தி நிலை ஆகலானும், இம்முத்தான்மாக்கள் அவனை இன்றியமைந்து ஒன்றையும் விடயியா ஆகலானும், அவை புசிக்கும் இன்பத்துன்பமாம் புசிப்பினை இங்கு இறைவனும் புசிப்பன் என்பதே ஈண்டைக்குப்பொருந்துவதாம் எனவே அறிக. பெத்தகாலத்தான்மாக்கள் சிவனைக்காட்டாகக்கொண்டு தத்தம் வினையாற் கண்டறிந்து நிற்கும் என்றான் ஆண்டு. முத்திக்காலத்திவ்வான்மாக்களோ அவனை இன்றியமைந்து ஒன்றையும் விடயியா என்றான் ஈண்டு. எனவே "எண்ணான் சிவனசத்தை இன்று" என ஆண்டுக்கூறியது ஆண்டைக்கு ஏற்புடையதே. "உள்குவார் உள்கிற்றை உள்ளத்தாற் காண் பன்" எனவும், காட்டிக்காணும் எனச்சூத்திரம் செய்து, மேற்கோளில் "ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணரும் எனவும் ஈண்டுக்கூறியது. ஈண்டைக்கு ஏற்புடையதே எனக்கருதுக. அதனால் முன்னுக்குப்பின் முரணு மாறில்லை எனவும் உணரலாம் என்பது.

ஒன்றி எனற்பாலது ஒன்று என ஈறு தொக்கது. கண் ஆதல்-காட்டாதல், எனவே அவனை இன்றியமைந்து ஒன்றையும் விடயியாமை பெறப்பட்டது. படவே கருதுவார் கருதியன எல்லாம் அவன் கருதியனவேயாம் ஆகலின் உள்கு வார் உள்கிற்றை உள்ளத்தாற் காண்பன் என்று கூறி முடித் தான் ஆசிரியன் என்க.

சீவன் முத்தராயினார்க்கு ஆகாமிய வினை இன்றாதல் "பின்னைவினை மாயையுடன் நில்லாது". என மேலைச்

சூத்திரத்து உரைப்பாட்டால் உணர்த்தப்பட்டதாகலான் இங்குப்புசிக்கைக்கு ஊழான் வரையறுக்கப்பட்டிருந்த பிராரத்த வினைப்பயன்களையும் இறைவனே புசித்தொழிப்பன் என்றதால் அதுவும் அவர்க்கு இன்றாதல் இங்குப்பெறப் பட்டது.

இங்கு விடயம் என்பது ஆன்மாவின் இச்சை செயல் அறிவு என்னும் மூன்றானும் வந்த விடயம் எனவேஉணர்க. உணரவே அவ்விச்சை செயல் அறிவுகட்குத்தூண்டுதல்களாயிருந்த ஞானேந்திரிய கன்மேந்திரிய அந்தக் கரணங்கள் அனைத்துமே சிவஞானிக்கு இதுபொழுது பசு கரணங்களாய் இயங்குதலின்றிச்சிவகரணங்களாய் இயங்கின என்றும் உணர்க. அதனால் உலக வாழ்வில் அச்சிவஞானி இதுபொழுது தாமரை இலைத்தண்ணீர் போல ஒட்டாதேநிற்பன் என்றும் உணரலாம். அதனாற்றான் ''எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தை பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே'' எனவும், ''ஏடுதரும் மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும் இறைஞானம், கூடுமவர் கூடரிய வீடுங்கூடிக்குஞ்சித்த சேவடியும் கும்பிட்டேயிருப்பர்'' எனவும் அன்னாரது சிவானுபவங்களைப்பெரியோர்கள் அடையாளம் காட்டிச்சென்றனர் என்றும் உணர்க.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள் : இனிப்பத்தியினால் மறவாதேத்த அவனது சீபாதத்தை அணையும் என்றது, அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

பரமேசுவரன் இம்முத்தான்மாக்களிடத்து வேறற நின்று அவை செய்யும் வினைக்கீடான பயனை அவற்றுக்கு விளைவித்துக்கொடுக்கும் விளைநிலம் போல்வன் ஆதலாலே அவை இதுபொழுது வேறொரு வினையும் செய்தலின்றிப்பத்தியினால் அவனை ஒரு கணமும்மறவாது ஏத்திக்கொண்டிருத்தலாலே தேகாந்தத்தே அவனது சீபாதங்களை அவை ஒருதலையாய் அணைந்து நிற்கும் என்றுமேற்கொள்ளப்பட்டது.

தருமே என்ற பாடத்திற்கு அவற்றுக்குச்சீபாதங்களை ஒருதலையாய் அணையத்தருகுவன் அம்முதல்வன் என்று உரைத்துக்கொள்க.

தருதலாவது அணையவரும் ஆன்மாக்கட்கு அவனருள் காட்டாய் நின்று உதவுதல் என்பதாம்.

அயரா அன்பின் அரன்கழல் தருமே என்றும் பாடம் ஓதினமையின் இதற்கு இவ்வாறும் உரைக்கப்பட்டது. இதன் பயன் அவ்வுண்மையாளரிடத்து அவன் ஒருபோதும் ஒளிந்தி ரான் என்பதாம்.

**அருக்கனேர் நிற்பினும் அவ்விருளே காணார்க்**
**கிருட்கண்ணே பாசத்தார்க் கீசன் அருட்கண்ணால்**
**பாசத்தை நீக்கும் பகலலர்த்தும் தாமரைபோல்**
**நேசத்தர் தம்பால் நினைந்து.**

என்பது உரைப்பாட்டு. இது முதல்வனது சீபாதங்களை அணையவிருந்த முத்தான்மாக்கட்குப்பாசத்தை நீக்கும் முறைமையினை விளக்குகிறது.

கண்ணழிவு : காணார்க்கு அருக்கன் நேர் நிற்பினும் அல் இருளே. அதுபோல பாசத்தார் கண்ணுக்கு ஈசன்இருளே. ஆதலால் அவன் நேசத்தர் தம்பால் நினைந்து வந்து தாமரையை அலர்த்தி உலர்த்தும் பகலவன்போல் அருட்கண்ணால் பாசத்தை நீக்கும். பாசம் நீங்கவே நேசத்தர் அவனது சீபாதத்தை அணைவர் எ. து.

பொழிப்புரை : கண்ணால் காணமாட்டாத குருடர் ஆயினார்க்கு ஞாயிறு அவரெதிரே தோன்றினும் அது இராக் காலத்து இருளாகவே அவர்க்குத்தோற்றமளிப்பதாம். அது போல மலப்பற்றுடையார் கண்ணுக்கு ஈசன் இருளாகவே தோன்றுவன் ஆதலால் பத்தியினால் இடையறாது தன்னை நினைந்து வழிபடும் நேசமுடையாரிடத்து முதல்வன் அவரை உய்விக்கும் எண்ணத்தோடு நெருங்கிவந்து மலரும் பூக்குவத் தில் உள்ள தாமரை அரும்புகளைப்பகலவன் தன் ஒளிக்கதிர் களால் மலர்த்தி உலர்த்துவதுபோல அருளாகிய காட்டினால்

அவர்தம் பாசத்தை நீக்கிப் பரிபக்குவம் செய்வன். பாசம் நீங்கப்பெற்ற அவர்தாமும் அவ்வருளையே காட்டாகக் கொண்டு அவனை இடையறாது அணைந்தே நிற்பர் எ. று.

பாசநீக்கம் முதல்வனருளால் நிகழவே அணைதல் அவர்க்கு எளிதில் சாத்தியமாயிற்று எனவுணர்க. இதனால் அயரா அன்பின் அரன் கழல் செலுமே எனவும் தருமே என்வும் வந்த பாடங்கள் இரண்டுமே கொள்ளத்தகுவனவே என்றுணர்க.

இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன் என்பதனைப்பாசத் தார் கண்ணுக்கு ஈசன் இருளே எனக்கொண்டு கூட்டிப் பொருள் உரைக்க.

பகல்-பகலவன். பகலவன் தன் ஒளிக்கதிரால் தாமரை அரும்பினை நாள்தோறும் அலர்த்தியும் குவித்தும் வந்து முடிவில் ஒரு நாள் உலர்த்தியே விடுதல் போல ஈசனும் தன் அருள் ஆற்றலால் நேசத்தர் தம் பாசத்தை உலர்த்துவன் என்றதாம். ''வள்ளலால் பொன் வாள் அலர் சோகம் செய்கை மலத்தாம்'', என ஆசிரியன் மேலே கூறியதையும் இங்கு நினைவு கூர்க என்பதாம்.

பகல் அலர்த்தும் தாமரைபோல் என்பதனைத்தாமரையை அலர்த்தும் பகல்போல் என மாறிக்கூட்டிப்பொருள் உரைக்க. அலர்த்துதல் ஈண்டு அலர்த்தி உலர்த்துதல் என்றபொருளில் வந்தது.

இதனால் மலபரிபாகம் கூறப்பட்டது.

இனிப்பாச நீக்கம் முதல்வனருளால் நிகழுமாயினும் அவன் நிருவிகாரியே என்பதை உணர்த்த வருவது அடுத்த உரைப்பாட்டு.

**மன்னும் இருளை மதிதுரந்த வாறன்பில்**
**மன்னும் அரனே மலந்துரந்து மன்னி**
**வலித்திரும்பைக் காந்தம் வசம்செய்வான் செய்தல்**
**சலிப்பில் விகாரியலன் தான்.**

என்பது உரைப்பாட்டு. இது பாசம் முதல்வனால் நீங்கு மாயினும் அதுகுறித்து அவன் விகாரியல்லன் என்பதுணர்த்து கிறது.

கண்ணழிவு : மன்னும் இருளை மதி துரந்தவாறுபோல் அன்பில் மன்னும் அரனே மலம் துரந்து காந்தம் மன்னி இரும்பை வசம் செய்வான் ஒருவனைப்போலச்செய்தலால் அவன்தான் சலிப்பு இலன், விகாரியலன் எ. து.

பொழிப்புரை :- இராக்காலத்தே நிலவும் இருளினைத் திங்கள் தன் தண்ணொளியால் ஓட்டியவாறு போல முத்தான் மாக்களது அன்பில் நிலைகொண்ட முதல்வன்தன்அருளொளி யால் மலவிருளை அகற்றிக்காந்தத்தை நேரொக்கக்காட்டி இரும்பினைக்கவர்விக்கும் ஒருவனைப்போலத்தனதுஅருளை நேரொக்கக்காட்டி அவ்வான்மாக்களைத்தன்னோடு அணைத்துக்கோடலாலே அவன் சலிப்பும் விகாரமும் அற்றவ னேயாம் எ. று.

பெத்தகாலத்தவனருள் வினைப்பயனை நுகர்வித்தது என்றாலும், முத்திக்காலத்தவனருள் தன்னை அணைய உதவிற்று என்றாலும் அவன் நிருவிகாரியே என்றான்.

காந்தத்தையும் இரும்பையும் நேரொக்க நிறுத்தும் ஒருவனைப்போல அருட்டிருவடிகளை முத்தான்மாவுக்கு நேரொக்க நிறுத்தலே முதல்வனது சங்கற்பமாம் என்பதும்; காந்தம் இரும்பை வலித்தலும் இரும்பு காந்தத்தால்வலிக்கப் படுதலும் அவை தம்மில் தாமே நிகழ்ந்தாற்போல முதல் வனது அருட்டிருவடி முத்தான்மாவைஅணைத்துக்கோடலும் ஆன்மா அதனை அணைதலும் ஆகிய செயல்கள் அவை தம்மில் தாமே நிகழ்வனவாம் என்பதும், அது குறித்து முதல்வன்பாற் சலனமோ விகாரமோ நேர்தற்கோரேது வின்றாம் என்பதும் இதனால் உணர்த்தியவாறாம் என்க.

துரந்தவாறு என்புழியும் வசம் செய்வான் என்புழியும் போல என்னும் உவமவுருபுகள் தொக்கன. மன்னுவித்து என்றபாலது மன்னி என நின்றது. விகாரியலன் என்பதிலுள்ள அன் விகுதியைச்சலிப்பில், என்பதனோடும் கூட்டிச்சலிப்

பிலன் விகாரியலன் என்று உரைக்க.செய்தலால் எனற்பாலது செய்தல் என நின்றது.

உவமைக்கண் ஞாயிற்றைக்கூறாது திங்களைக் கூறினான், பொருட்கண் இதுபொழுது முற்றவும் கெடாதாகலான். முற்றக்கெடுதல் தேகாந்தத்தேயாகலான் அங்கது உரையிற்கொள்ளப்படும் என அறிக.

சலிப்பின்மை-ஒருபாற்கோடாமை. விகாரமின்மை. வினைப்பற்றின்மை. முத்தான்மாவுக்கு மட்டில் மலங்கெடுத்ததால் சலிப்பிலன் என்றும், அது அவனது சங்கற்பவினையால் நிகழ்ந்ததால் விகாரியலன் என்றும் கூறினான். சங்சற்ப வினை வினையல்லாவினை என்பதுமேலே உரைக்கப்பட்டது.

> **நசித்தொன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா**
> **நசித்திலதேல் ஒன்றாவ தில்லை நசித்துமலம்**
> **அப்பணைந்த உப்பின் உளமணைந்து சேடமாய்க்**
> **கப்பின்றாம் ஈசன் கழல்.**

என்பது உரைப்பாட்டு. இதுமேலதற்கு ஒரு புறனடை கூறுகின்றது. என்னை, சீவான்மா சிவனது பாதத்தைஅணைந்து நிற்கும் முறைமைக்கண் அது கெட்டுக்கூடுவதுமன்றாய்க் கெடாது நிற்பதுமன்றாய் ஒருவகை மலம் கெட்டுக்கூடுவதாம் என்பதொரு ஒழிபு உணர்த்தலின் இதுபுறனடை ஆயிற்று.

கண்ணழிவு :- உள்ளம் நசித்து ஒன்றின்-ஒன்றுவதென்னின் நசித்தலால் ஒன்றா. நசித்திலதேல் ஒன்றாவதில்லை. ஆதலால் மலம் நசித்து அப்பு அணைந்த உப்பின் உளம் ஈசன்கழல் அணைந்து சேடமாய் கப்பின்றாம் எ. து.

பொழிப்புரை : ஆன்மாச்சிவன் கழலைக்கூடுமிடத்து அது கெட்டுக்கூடுவதாம் என்னின் கெடுவதாயின் கூடுதலின்றாம். கெடுவதின்றாயின் கூடுமிடத்து அது வேறாயே பிரிந்து நிற்பதன்றி ஒன்றாதல் இல்லையாம். ஆகவே இவ்விருவகையானுமன்றி ஆன்மாவை அநாதி காலம் தொட்டு அலக்கணுறுத்தி வந்த மலவிருள் மட்டுமே வீறழிந்து அப்

பொடுகலந்த உப்புப்போல ஆன்மாச் சிவன்கழலை அணைந்து அவன் ஆண்டானும் இவன் அடிமையுயாய் என்றும் பிரிவின்றியே நிற்கும் எ. று.

ஏகனாகி இறைபணி நின்ற எல்லைக்கண் கன்ம மலம் வீறழிதல் பெறப்பட்டதாகலானும், தேகாந்தத்தே மாயா மலமும் கெடும் என்பது அடுத்து வரும் உரைப்பாட்டால் பெறப்படுமாகலானும் ஈண்டு மலம் நசித்தல் என்பதற்கு ஆணவ மலம் வீறழிதல் ஒன்றே கொள்ளப்படும். ஆணவம் வீறழிந்த காலைச்சீவன் சிவனாகிச்சிவமாந்தன்மை எய்தும் என்பதாம். அது இரசவாதத்தால் களிம்பு நீங்கியவழிச்செம்பு பொன்னாதல் போல்வதாம் என்க.

நசித்தல்-வீறழிதல். ஒன்றாது எனற்பாலது ஒன்றா என விகுதி குறைந்து நின்றது, செய்யுளாதலின்.

இதனால் ஆன்மாக்கெட்டும் கூடாது, கெடாதும்கூடாது, ஒருவகை மலம் கெட்டுக் கூடுவதாம் என்பது உணர்த்தப் பட்டது.

அப்பணைந்த உப்புப்பிரிவின்றிக்கலத்தற்கும் கலந்தக் கால் அளவின் மிகாமைக்கும் வந்த உவமையாம் என்பது.

அணைந்த காலத்தும் அவன் ஆண்டானும் இவன் அடிமையுமாம் என்பதால் சேடமாய் என்றான். சேடம்என்பது இங்கு அடிமை என்னும் பொருள் உணர்த்தி நின்றது.

கப்புதல்-கிளைத்தல் எனப்பொருள் கொண்டு மீண்டும் பிறத்தலின்றாம் என்று உரைப்பினும் அமையும்.

உளம் ஈசன் கழல் அணைந்து எனக்கொண்டு கூட்டுக.

இனித்தேகாந்தத்தே மாயாமலமும் கெட்டொழியும் என்பதும்அதுவே சாயுச்சியமாம் என்பதும் உணர்த்தவருவது அடுத்த உரைப்பாட்டு.

**பொன்வாள்வெங் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்**
**தன்வாளே எங்குமாம் தன்மைபோல் முன்வாள்**
**மலத்தில்மறைந் துள்ளம் மற்றுலகை உண்டு**
**மலத்திரித்துச் செல்லும் வரத்து.**

என்பது உரைப்பாட்டு. இது சிவன்தாளை அணைந்து சீவன் முத்தராய் நின்ற அன்னோர் தேகாந்தத்தே மாயா மலமும் கெட்டொழிய வீடு பெற்றுய்வர் என்பது உணர்த்துகிறது.

கண்ணழிவு : வெங்கொண்மூவில் புக்கு பொன் வாள் ஒடுங்கி அக்கொண்மூ போய் அகல எங்கும் தன்வாளேயாம் தன்மைபோல் உள்ளம் முன் வாள் மலத்தில் மறைந்து மற்று உலகை உண்டு பின் அம்மலத்தினையும் இரித்து வரத்து செல்லும் எ. து.

பொழிப்புரை : சொல்லவொண்ணாப்பேரொளி வாய்ந்த ஞாயிறானது மேன்மேலும் வந்து குவிந்த முகிற் படலத்துள் மறைந்து ஒளி தோன்றாதிருந்து பின் அம்முகிற் படலம் அகன்றுபோக உலகெங்கணும் தன்னொளியே தோற்றினாற்போல ஆன்மா அநாதியே மாயாமலத்தில் மறைப்புண்டு தன் ஆன்மவொளி மங்கியிருந்து கன்மங்களால் தரப்பட்ட இவ்வுலக இன்பத்துன்பமாம் அசத்தினை முற்று மாய்ப்புசித்துத்தீர்த்துத்தேகாந்தத்தே அம்மாயா மலத்தினையும் உதறியெறிந்து முதல்வனது சீபாதங்களைச் சென்றணைந்து வீடுபெற்று உய்யும் எ. று.

மேகபடலத்தால் மறைப்புண்டு ஒளி தோன்றாதிருந்த ஞாயிறு அம்மறைப்பு நீங்கிய வழிஉலகெங்கும் தன்னொளியே தோற்றி நின்றாற்போல உடம்பாகிய மாயா மலத்தால் நெடுங்காலம் மறைக்கப்பட்டுத்தன்னொளி மங்கிக்கிடந்த ஆன்மாவும் அவ்வுடம்பு நீங்கிய வழித்தன்னியற்கைப் பேரொளியோடு சென்று முதல்வனது சீபாதங்களை நிரந்தரமாய் அணைந்து பின்பிறவிக்குத்திரும்பாது என்பது இதனால் உணர்த்தப்பட்டதாம் என்க.

வினையின் வந்ததும் வினைக்கு விளைவாயதுமான உடம்புகள் ஆன்மாவுக்குப்பல கோடியுமாகலான் அது வாள் மலத்தால் நெடுங்காலம் மறைப்புண்டிருந்தமை பெற்றாம். கணக்கிலவாகிய உடம்புகளால் மறைக்கப்பட்டிருந்த ஆன்மா விற்கு மேன்மேலும் வந்து குவிந்த முகிற்படலத்தால் மறைப் புண்டிருந்த ஞாயிறு உவமையாயிற்று.

ஆணவ மலத்தினை இருள்மலம் என்றும் மாயாமலத் தினை ஒளிமலம் என்றும் சாத்திரங்கள் கூறாநிற்குமாகலான் ஈண்டுவாள் மலம்என்றது மாயாமலத்தினையே என்றுணர்க. ''மாயாதனு விளக்கா மற்றுள்ளம் காணாதேல்''. என ஆசிரியன் மேலே கூறியதை இங்கு நினைவு கூர்க.

போதகாரியம் மறைத்து நின்றது புகல் மலங்காண்
ஓதலாம் குணமுமாக உயிரினுள் விரவலாலே
காதலால் அவித்தை சிந்தத் தரும் கலையாதிமாயை
ஆதலால் இரண்டும் சோதி இருள் எனவேறாமன்றே.

என்று வழி நூலார் கூறியதும் இங்குக் கருதற்பாலது.

விடிவாமளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து எனவும்,
ஒளியால் இருள்தேடச் சொல்லார்கள் எந்தாய்
ஒளியால் இருள்தேடச் சொன்னாய் எனவும்

புடைநூலார் கூறியளவும் ஈண்டுச் சிந்திக்கற்பாலன.

பொன்வாள் - பொன்னினது ஒளி. பொன்-ஞாயிறு. கொண்மூ-மேகம், மேலும் மேலும் வந்து குவிந்ததாகலின் வெங்கொண்மூ என்றான். ஒடுங்கி-ஒடுங்கியது ஒளி. போய் அகல-அகன்றது மேகம். முன் என்றது அநாதி காலத்தைக் குறித்தது. அன்று தொட்டு இன்றுவரையும் ஆன்மாப்பிறந் திறந்து உழன்றதாம் என அறிக. வாள்மலம்-மாயாமலம். உள்ளம்-ஆன்மா. மற்று, வினைமாற்றின் கண் வந்தது. உலகை உண்டலாவது உலகத்து இன்பத்துன்பங்களைப் புசித்தல் என்பதாம். மாயாமலம் முற்றவும் தேயுங்காறும் அது அவ்வாறு புசித்து வந்தது என்பதாம். மலத்தினை இரித்து

என்க. வரத்துச்செல்லும் என்றதால் மேலான வீடுபெற்று உய்யும், இனித்திரும்பாது என்றதாம். இது ஆசிரியன் தன் மெய்யுணர் அனுபவத்தால் ஆணையோடு அறிவுறுத்திய தென உணர்க.

வீட்டியல் ஞானமாகிய சிவஞானத்தைப்போதிக்கத் தொடங்கிய ஆசிரியன் மெய்கண்டான், அதற்கு அடிப்படையாக உணர்த்த வேண்டுவனவற்றைப்பெத்த வியற்கண்ணும் பொதுவியற்கண்ணும் உணர்த்திச்சிவஞானத்தினை உணரும் முறைமையினை வீட்டியலில் எட்டாம் சூத்திரம் தொடங்கி உணர்த்திக்கொண்டு வந்தவன் பதினொன்றாம்சூத்திரத்தில் முத்தான்மாத்தேகாந்தத்தே வீடு பெற்றுய்யும் நெறியினை இனிதாக உணர்த்தி முடித்துவிட்டான். சிவஞான போதம் இங்கு இனிது முடிந்ததாயினும் சிவஞானி எடுத்ததேகம் இன்னும் நின்றதாகலின் அது தேய்ந்து அழியுங்காறும் அச் சிவஞானி கடைப்பிடிக்க வேண்டிய நெறி இன்னதென்பதை இனி வரும் பன்னிரண்டாம் சூத்திரத்தால் உணர்த்தி நூலை இனிதே முடிப்பான் என்று உணர்க.

பதினொன்றாம் சூத்திரம் முற்றியது.

## பன்னிரண்டாம் சூத்திரம்

செம்மலர் நோன்தாள் சேர லொட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே.

*என்பது சூத்திரம் என் நுதலிற்றோவெனின் அசிந்திதனாய் நின்ற பதியைச்சிந்திதனாகக் கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

சூத்திரமும் சூத்திரம் நுதலிய பொருளுமாய் வந்த இவை ஆசிரியன் உரைத்தவை.

சைவ சித்தாந்தப்பெருநெறி வரைசெய்து கண்ட பதி பசு பாசம் என்னும் முப்பொருளியல்புகளை ஆராய்ந்து தெளிந்த வழியானே முன்செய்தவத்தாலும் இருவினை யொப்பு உணர்வாலும் முதற்குருவின் உபதேசத்தாலும் சிவ ஞானத்தினை உணர்ந்து, அந்த ஞானக்கண்கொண்டே முதல்வனைச் சிந்தையுள்ளே தேடிக்கண்டு, பாசங்களைந்து, அந்த அனுபவம் மாறாதிருக்கத்திருவைந்தெழுத்தினை விதிப்படிக்கணித்து ஆன்ம சுத்தியும் செய்துகொண்டு, அவனே தானாகிய நெறியால் அவனோடு ஏகனாகி இறை பணி நின்று பாசங்களை முற்றவும் தேய்த்துக்கொண்டு, தமக்குக்காட்டாயிருந்து தம் இச்சை செயல் அறிவுகள் அனைத்தையும் உடனிருந்து கண்டுகொண்டிருந்த முதல் வனது சீபாதங்களை இடையறாப்பேரன்பால் மனமுருகி நினைந்து வழிபட்டு, அவனை எந்நேரமும் அணைந்தே நின்ற சீவன் முத்தராயினோர் இனித்தாம் எடுத்த உடம்பு அழியுங்காறும் தாம் பெற்றிருந்த சிவானுபவம் மாறாதிருத் தற்பொருட்டும், உலகியலில் நின்றாரும் தமது அடிச்சு வட்டைப்பின் தொடர்ந்து வந்து நன்னெறி சேர்ந்து உய்தற் பொருட்டும், பேரருளோடு உலகியற்கண் தாழவந்து தாம் இதுகாறும் உணர்ந்து வந்த சிந்தைக்கெட்டாச்சிவ பரம் பொருளை இனிச்சிந்தைக்கெட்டும் திருவுருவில் வைத்து வழி படுமாற்றினை உணர்த்துகின்றது இச்சூத்திரம் என்பது.

கண்ணழிவு :- செம்மலர் நோன் தாள் சேரல் ஒட்டா அம்மலம் கழீஇ, அன்பரொடு மரீஇ, மால் அற நேயம் மலிந் தவர் வேடமும் ஆலயம் தானும் அரன் எனக்கண்டு தொழும் எ. து.

பொழிப்புரை :- சிவந்த தாமரை மலர் போலும் மென்மையுடையதும், அன்பராய் அணைந்தாரது மலம் கெடுக்கும் வன்மையுடையதுமான சிவனது திருவடியைச்சேர வொட்டாது தடுக்கின்ற மும்மலக்குற்றங்களை அன்றாடம் ஞானநீரால் கழுவிக்களைந்து, அவ்வாறு ஒழுகிவரும் அன்ப ரோடு எந்நேரமும் கூடிக்கலந்து, உலகினரது மலமயக்கம் நீங்குமாறு சிவநேயத்தோடு உலாவிவரும் சிவனடியாரது திருவேடத்தையும் சிவாலயத்துக் கருவறையின் கண்ணே விளங்கும் சிவலிங்கத்திருமேனியையும் சிவன் எனவே கண்டு தொழுது வருவான் சீவன் முத்தன் எ. று.

சிவனுடைய தாள்கள் அன்பராய் அணைந்தாரை அணைத்துக்கொள்கின்ற தன்மையால்மலர்போலும்மெல்லிய வாயினும் அவர்தம் மும்மலங்களையும் வீறழியக்கெடுக்கும் வலியளியல்பும் உடைமையின் செம்மலர் நோன்தாள் என்றான். அநாதிதொட்டு ஆன்மாவைப்பற்றிநின்று அலக் கழித்து வந்த மலங்களாதலின் அவற்றை அம்மலம் என்று உலகறி சுட்டாற் சுட்டினான். கழுவி என்றதால் ஞானநீர் உரையிற் கொள்ளப்பட்டது. சிவனிடத்து அன்பில்லார்இருள் வழி உய்ப்பராகலான் அவரை ஒழிந்து அன்பரொடு மருவும் என்றான். சிவனடியார் திருவேடமும் சிவலிங்கத்திருமேனியும் முதல்வனது சிந்தைக்கெட்டும் திருவுருவங்களாதலின் அவ் விரண்டனையும் ஒப்பச்சிவனெனவே கருதித்தொழுது வரு தலே சீவன் முத்தராயினார்க்கு வலியுடைத்தென்பான் "மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரன் எனத்தொழுமே" என்று வற்புறுத்திக் கூறினான்.

அரன் எனத்தொழுமே என்றது அரன் எனக்கண்டு தொழும் என்றதாம். எனவே காண்டல் ஒரு அதிகரணமாக வும் தொழுகை ஒரு அதிகரணமாகவும் கொள்ளக்கிடந்தன வாம் என்று குறிப்பித்தவாறாம்.

இனி இச்சூத்திரத்துள், செம்மலர் நோன்தாள் சேரலொட்டா அம்மலம் கழீஇ என்பது ஒரு அதிகரணம். அன்பரொடு மரீஇ என்பது ஒரு அதிகரணம். மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம்தானும் அரன் எனக்கண்டு என்பது ஒரு அதிகரணம். கண்டு தொழுமே என்பது ஒரு அதிகரணமாக நான்கு அதிகரணத்தது இச்சூத்திரம் என்பது.

### முதலாம் அதிகரணம்

மேற்கோள் : ஈண்டு ஆணவம் மாயை கன்மம் என்னும் மலங்களைக்களைக என்றது, அவைதாம் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தையே உணர்த்துமாகலான்.

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

ஆணவம் மாயை கன்மம் எனப்பட்ட உயிர்க்குற்றங்கள் மூன்றும் ஆன்மாவைத் தவநெறியிற் செலுத்தாது அவநெறியிற் செலுத்துமாகலான் ஞானியாவான் அவற்றை வேரறக் களைய வேண்டுமென மேற்கொள்ளப்பட்டது என்பதாம்.

**புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமும்**
**மண்முதல் மாயைகாண் மாயையும் கண்ணிய**
**அஞ்ஞானம் காட்டுமால் ஆணவமும் இம்மூன்றும்**
**மெய்ஞ்ஞானிக் காகா விடு.**

என்பது உரைப்பாட்டு. இது மும்மலங்களைக் களைக என வந்த மேற்கோளை விளக்குகிறது.

கண்ணழிவு : புண்ணியம் பாவம் பொருந்தும் இக்கான்மியமும், மண்முதல் மாயை ஈறாக்காண்கின்ற மாயையும், கண்ணிய அஞ்ஞானம் காட்டும் மால் ஆணவமும் இம்மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகாவாகலின் அவற்றை விடு எ. து.

பொழிப்புரை :- மாணவகா, நல்வினையும் தீவினையுமாய் ஈட்டப்பட்டு வருகின்ற இக்கன்ம மலமும், மண்முதலாக மாயை ஈறாகக்கண்டறியப்படுகின்ற முப்பத்தொரு தத்துவக் கூட்டமாகிய மாயாமலமும், தீது எனக்கருதப்பட்ட

அறியாமை இருள் ஒன்றையே ஆன்மாவுக்குக்காட்டி அதனை மயங்க வைக்கும் கொடிய ஆணவ மலமும் ஆகிய இம்மூன்றும் மெய்ப்பொருளை உணர்ந்த மெய்ஞ்ஞானியாவானுக்கு இருத்தலாகாவாகலின் அவற்றை நீ அறக்களைவாய் எ. று.

கான்மியம் என்றது ஈண்டு ஆகாமிய வினைகளை. பிராரத்த வினைகளைப்புசித்தே கழிக்க வேண்டுதலின் ஈண்டு விடுதற்கு ஆகாமியம் ஒன்றே கூறினான். நல்வினையும் பிறவிக்கு ஏதுவாகலான் அதனையும் கூட்டிப்புண்ணிய பாவம் என்றான்.

நிலம் நீர் தீ வளி வெளியெனப்பூதங்கள் ஐந்தும், அவற்றுக்கும் முதலாகிய நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை யென்னும் தன்மாத்திரைகள் ஐந்தும், அவற்றை உணர்தற் கருவியாய் உடம்பின்கண் அமைந்த மூக்கு வாய் கண் மெய் செவியாகிய உணர்வுப்பொறிகள் ஐந்தும், அவற்றின் வேறாய் வரும் வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என்னும் தொழிற்பொறிகள் ஐந்தும் அவற்றையெல்லாம் அறிந்தாளு கின்ற மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் ஆன்மாவின் சிதறல்களாயுள்ள அத்தக் கரணங்கள் நான்கும் ஆக இருபத்து நான்கனோடு கலை வித்தை அராகம் காலம் நியதி புருடன் மோகினி என்னும் மாயை ஆகிய இவ்வேழும்கூடித்தொகைப் பட்ட தத்துவங்கள் முப்பத்தொன்றும் மாயாமலத்தின் விளைவுகளேயாம் ஆதலின் அவற்றை மண் முதல் மாயை என முதலும் இறுதியுமாகச்சுட்டியொழிந்தான். இம்மாயா மலத்தின் விளைவுகளைச்சற்றே கூர்ந்து நோக்கின் அவை உடம்பைப்பற்றியும் உலகைப்பற்றியும் உள்ளத்தே தோன்றும் உலகறிவே என்பது புலனாம். இவ்வறிவினால் ஆன்மா அகப்பற்றும் புறப்பற்றும் கொண்டு உலகப்புசிப்பில்சிக்குண்டு உண்மைப்பொருளாய் நின்ற முதல்வனையே மறத்தற்கு ஏதுவாகலாம். இவற்றைத்தெய்வப்புலன் யான் எனது என்னும் செருக்கு எனச்சுருங்கக்கூறியொழிந்தான் என்று உணர்க.

இனி அறியும் தன்மையுடைய உயிரினிடத்து அறியாமை விளைக்கும் குற்றமாய் அமைந்ததுவே ஆணவம் என்னும்

மலவிருளாம். அது உயிரோடு ஒருங்கு தோன்றிய உயிர்க் குற்றமாய் உயிரினது உண்மை அறிவுக்குத் துணை நில்லாது எஞ்ஞான்றும் அதனை மய்க்கித்திரியவே உணர்த்திவரும் ஆகலின் அதனை ''அஞ்ஞானம் காட்டும் மால் ஆணவம்''. என்றான். மால் என்பது பெருமையை உணர்த்துமாயினும் இங்கு அதன் கொடுமை மிகுதியைக்குறித்து நின்றது. அதுவே ஏனை இருமலங்கட்கும் வேர் ஆதலின் அதனை மூலமலம் என்றும் கூறுவர் சாத்திர நூலார். இம்மூன்று குற்றங்களும் மெய்ப்பொருளை அறிந்து சாரும் மெய்ஞ் ஞானிக்கு ஆகாவாகலின் அவற்றை ஒருங்கு விடுக என ஆசிரியன் ஆணையோடு அறிவுறுத்தான் என அறிக. அவற்றை விடுமாறு ஆசிரியன் ஒன்பதாம்சூத்திரம் தொடங்கி ஆங்காங்கு உணர்த்தியது கொண்டு தெளியலாம். அல்ல தூஉம் அடுத்துவரும் அதிகரணத்து உரைப்பாட்டானும் அவற்றை விடுமாற்றுக்கோருபாயம்கூறும் ஆசிரியன்என்பது.

விடு என்றது மாணவகனை நோக்கிக்கூறியதென்க.

## இரண்டாம் அதிகரணம்

இனிச்சிவபத்தர்களோடு இணங்குக என்றது; அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவராகலான்;

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

சீவன் முத்தனாவான் சிவபத்தரல்லாரோடு இணக்கம் கொள்ளின் அன்னார் ஞானநெறிக்கு மாறானவற்றையே உணர்த்துவர் ஆகலானும், ஒரு குடம் பாலில் ஒரு துளி நஞ்சு கலக்கினும் குடம் பாலும் நஞ்சாகி வீணாகுமாப்போலஅவன் இதுகாறும் வருந்திப்பெற்ற ஞானானுபவங்கள்அத்தனையும் கெட்டொழியும் ஆகலானும், அந்த அவலநிலைநேராதிருக்க அவன் எந்நேரமும் சிவபத்தர்களோடே இணக்கம் கொள்க வென மேற்கொண்டதென்பது.

இது அன்பரொடு மரீஇ என்வந்த சூத்திரக்கூற்றைக் கண்ணழித்து மேற்கொண்டதென்க.

**மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்**
**சிறப்பிலார் தம்திறத்துச் சேர்வை அறப்பித்துப்**
**பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரும்**
**மெய்த்தவரை மேவா வினை**

என்பது உரைப்பாட்டு. இது சிவபத்தர்களோடு இணங்குக என வந்த மேற்கோளைச்சம்பிரதாய மரபால் விளக்குகிறது.

கண்ணழிவு: தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்கும்-வீழ்த்தும் சிறப்பில்லார்தம் திறத்துச்சேர்வை - சேர்தலை அறப்பித்து-அறுப்பித்து பத்தர் இனத்தாய் பரன் உணர்வினால் உணரும் மெய்த்தவரை வினைமேவா எ. று.

பொழிப்புரை: உண்மையான தவமுடையராகியசீவன் முத்தர் தாமிதுகாறும் வருந்திப்பெற்ற ஞானானுபவங்களை மறக்கச்செய்து மீளவும் தம்மை மும்மலசேற்றில் வீழ்த்து கின்ற ஞானச்சிறப்பில்லாத வீணர் கூட்டத்தோடு சேர்தலை அறுத்துக்கொண்டு சிவபத்தர் கூட்டத்தோடு எப்பொழுதும் இணக்கமுடையராகிப் பரமனை நினைந்த உணர்வோடு எந்த ஒரு செயலையும் செய்து வருகின்ற அன்னாரை மேற் கூறிய ஆகாமிய வினைகள் சாரமாட்டாவாம் எ. று.

மெய்ஞ்ஞானிக்கு ஆகாவிடு என்று மேல் ஆணைதந்தான் ஆசிரியன் ஆகலின் அவற்றை விடுதற்கு ஒரு உபாயம் ஈண்டுக் கூறினான் என வுணர்க. அது பத்தர் கூட்டத்தோடு இணக்கம் உடையராயிருத்தலும், பரமனை நினைந்தஉணர்வோடு செயல் செய்துவருதலுமாம் என்பது.

அறுப்பித்து எனற்பாலது எதுகை நோக்கி அறப்பித்து என நின்றது. அறுப்பித்தல்—அறுத்துக்கொள்ளல். சேர்வை அறுப்பித்து என்றது சேராதிருந்து என்னும் பொருட்டாய் நின்றது.

பரன் உணர்வே அவர் அறிவை எக்காலமும் கவர்ந்து நிற்கும் ஆதலால் அவ்வுணர்வோடு செய்யும் வினை கள் பரனையே சார்வனவாமன்றி மெய்ஞ்ஞானியைச் சாரா வென்றான். ''நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ

இதற்கு நாயகமே''. எனவரும் மேலோர் அனுபவத்தையும் இங்கு நினைவு கூர்க என்பது.

உணரும் மெய்த்தவர் என்றது உணர்ந்து செய்யும் மெய்ஞ்ஞானி என்றதாம்.

## மூன்றாம் அதிகரணம்

*மேற்கோள்: இனிப் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுவரன் எனக்கண்டு வழிபடுக என்றது, அவன மற்றிவ் விடங்களில் பிரகாசனாய்நின்றே அல்லாத விடத்து அப்பிரகாசனாய் நிற்றலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோளிது ஆசிரியன் உரைத்தது.

உயிர்ப்பொருளும் உயிரல்பொருளுமாயுள்ள பிரபஞ்ச மெங்கணும் முதல்வன் சருவவியாபகனாய்க்கலந்து விளங்கும் இயல்பினனே என்றாலும் சிவபத்தரது திருவேடத்திலும் சிவாலயத்திலும் அவன்தன் சொரூபம் தோன்ற நின்று அல்லாத விடங்களில் அவ்வாறு தோன்றானாகி நிற்றலால் சீவன்முத்தனாவான் அவ்விரண்டு இடங்களையும் பரமேசுவரன் எனவே கண்டு வழிபடுக என்று மேற்கொள்ளப் பட்டது என்பதாம்.

கண்டு வழிபடுக என்று ஆசிரியன் இங்கு உரைத்தானா யினும் காண்டல் ஒன்றே ஈண்டைக்குக்கருத்தாகக்கொள்க. என்னை, வழிபடுமாற்றுக்கு ஆசிரியன் வேறுமோரதிகரணம் வகுப்பானாகலின். அல்லதூஉம் ஈண்டுவரும் உரைப்பாட்டுக் கள் இரண்டும் வழிபடுமாற்றினை உணர்த்தாவாய்த் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனக்காண்க வென்றே உணர்த்தினமையானும் அது பெறுதும் என்பது. இங்கு இவ்வாறு ஆசிரியன் கருத்தறியாது உரைத்துப் பெரிதும் இடர்ப்பட்டாரும் உளர். அதனை அவர் உரையிற் காண்க.

ஞானக்கண்கொண்டு முதல்வனைத்தம் சிந்தையுள்தேடி உணர்ந்த சீவன்முத்தர்க்கு உலகத்துப்பொருள்களாய்க் கண்ணில் தோன்றும் கல்லினும் முள்ளினுங்கூட அவனைக் காண்டல் எளிதேயாயினும் உலகியலில் நிற்பார்க்குஅவ்வாறு காண்டல் அரிதாகலின் அவரும் தம் அடிச்சுவட்டைப்பின்

தொடர்ந்து வந்து உய்யும் பொருட்டாகவே அன்னார் அவ் விரண்டு இடங்களையும் தேர்ந்தெடுத்துக்கொண்டு முதல் வனை ஆண்டுக்கண்டு வழிபடுவர் என்று உணர்க. காட்டு விறகில் காணாத தீயினைக்கடைந்த விறகில் காண்டல் எளிதாகலின் முதல்வனைப்பிரகாசனாய்க்கண்டு வழிபடற்கு அவ்விரண்டு இடங்களையுமே மெய்கண்டான் தேர்ந்து எடுத்துரைத்தான் எனவுணர்க.

தமக்காகவன்றி உலகமக்கள் உய்யும் பொருட்டாகவே திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரர் வாதவூரர்ஆகிய நால்வர் முதலியோரும் மேற்கொண்டு கடைப்பிடித்த திருநெறி இதுவே யாதலைக் கூர்ந்து நோக்கித்தெளிக என்ப தாம்.

பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்து அடிப்படை உண்மையும் இதுவேயாதலை அதனுள் வரும் அடியார் வரலாறுகளைப்படித்து உணர்ந்துகொள்க.

**தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்**
**தன்னுணரத் தம்முள் ளிருத்தலால் தன்னுணரும்**
**நேசத்தர் தம்பால் நிகழும் ததிநெய்போல்**
**பாசத்தார்க் கின்றாம் பதி.**

என்பது உரைப்பாட்டு. இது மேற்கோளின் முதற்பகுதியை விளக்கும் முகத்தால் திருவேடத்தாரிடத்து முதல்வன் பிரகாச னாய் நிற்றலை உவமை வாயிலாக வலியுறுத்துகின்றது.

கண்ணழிவு : நேசத்தர் தன்னையே உணரவேண்டி முதல்வன் அவர்க்கு தன் உருவை தானே விரும்பிக்கொடுத்து தன்னையே உணர அவர்தம் உள்ளத்தும் தங்கியிருத்தலால் தன்னை உணரும் நேசத்தர் தம்பால் ததி நிகழும் நெய்போல் விளங்கித்தோன்றுவன். பாசத்தார்க்கு-பாசத்தாரிடத்து பதி அவ்வாறு இன்றாம் எ. து.

பொழிப்புரை : சருவ வியாபகனாய் உலகெங்கணும் பதியநின்றவனாகிய முதல்வன் சிவநேயம் மிக்கசிவபத்தர்கள் எந்நேரமும் தன்னையே நினைந்திருக்க வேண்டி அவர்க்குத்தான் தனது உருவையே விரும்பிக்கொடுத்தும், அன்னார் தன்னையொழிந்து வேறு ஒன்றையும் நினையா

திருக்கவேண்டி அவர்தம் உள்ளத்திலும் நீங்காதிருந்தானாக லின் தயிரில் விளங்கித்தோன்றும் நெய்போல அவரிடத்தே அவன் விளங்கித்தோன்றுவன். ஆனால் பாசக்கட்டுடையார் பிறரிடத்தே அவன் அவ்வாறு தோன்றான் எ. று.

திருவேடத்தாரோடு பாசக்கட்டுடையார் பிறரை ஒருங்கு வைத்து எண்ணலுமாகாது என்றற்கே பாசத்தார்க்கு இன்றாம் பதி என அவரியல்பும் உடன் கூறி விலக்கினான் ஆசிரியன் எனவுணர்க.

உலகினர் எளிதில் வழிபட்டு உய்தி பெறற்பொருட்டுச் சிவாலயத்தைப்போன்று திருவேடத்தாரும் இன்றியமையாத வர் என்பது இதனால் உணர்த்தப்பட்டது. சிவாலயங்கள் நின்றாங்குநின்று அன்பர்க்கு அருளைப்பொழிவன. திருவேடத்தாரோ என்னின் அன்பர் இருக்குமிடம் தேடிச் சென்று அவர்க்கு அருளை வழங்குவர். அதனால் இப் பெரியாரை நடமாடுங்கோயிலார் எனத்திருமந்திரம் அருளிய திருமூலர் போற்றிப்பாடினர்.

> படமாடக் கோயில் பரமற்கொன் றீயின்
> நடமாடுங் கோயில் நம்பர்க்கங் காகா
> நடமாடுங் கோயில் நம்பர்க் கொன்றீயின்
> படமாடக் கோயில் பரமற் கதாமே,

என்பது அப்பெரியார் நடமாடுங்கோயிலாரைப்போற்றிப் பாடியது. திருவேடத்தார்க்குச்சங்கமர் என்ற பெயரும் அது குறித்து வந்ததெனவே கருதுக. சங்கமம்-இயங்கியல்புடை யது. சங்கமர்-நடமாடுங்கோயிலார்.

சிவநேயமுடைய திருவேடத்தாரிடத்துத்தயிரில் நெய் போல் விளங்கித்தோன்றும் முதல்வன் பாசக்கட்டுடையா ரிடத்து அவ்வாறு தோன்றான் என்றதால் அவரிடத்தும் அவன் அப்பிரகாசனாய் நின்றான் எனவே கொள்க. அவ்வாறு கொள்ளாக்கால் முதல்வனது சருவ வியாபகத் தன்மைக்கு அது இழுக்காகுமென அறிக.

தனதுருவைத்தான்கொடுத்தலாவது ஆகமங்களில் கூறப் பட்ட திருநீறும் கண்டிகையும் காவியுடையும் சடைமுடியும் ஆகிய தவக்கோலத்தைக்கொடுத்தல். ''சடையும் பிறையும் சாம்பற்பூச்சும் கீழ் உடையும் கொண்ட உருவம் என் கொலோ'' என்பது பிள்ளையார் அருள்வாக்கு.

ததி நிகழும் நெய்போல் எனக்கொண்டு கூட்டுக. நிகழ்தல் விளங்கித்தோன்றல்.

பாசத்தார்க்கு இன்றாம் என்றதால் நேசத்தார்க்கு உண்டாம் என ஒரு சொல் வருவித்து உரைக்கப்பட்டது.

இனி நேசத்தர் தம்பால் ததி நெய்போல் நிகழும் எனக் கொண்டு கூட்டி நிகழும் என்பதனைப்பயனிலையாக்கி உரைக்கினும் அமையும்.

இதனால் பத்தரது திருவேடத்தைச்சிவன் எனக்காணு மாற்றுக்கு உவமை வாயிலாக விளக்கம் கூறினான். இனிச் சிவாலயத்தைச்சிவன் எனக்காணுமாற்றுக்கும் அடுத்துவரும் உரைப்பாட்டால் விளக்கம் கூறுவான் என அறிக.

கண்டதொரு மந்திரத்தால் காட்டத்தில் அங்கிவே
றுண்டல்போல் நின்றங் குளதாமால் கண்டவுருத்
தானதுவாய் அன்றானான் தானதுவாய்த் தோன்றானோ
தானதுவாய்க் காணும் தவர்க்கு.

என்பது உரைப்பாட்டு. இது சிவாலயத்திடத்து முதல்வன் பிரகாசனாய் நிற்றலை உவமை முகத்தால் விளக்குகிறது.

கண்ணழிவு : காட்டத்தில் அங்கி வேறு உண்டுபோல் அன்று போல் நின்று கண்டதொரு மந்திரத்தால் அங்கு உளதாம். ஆகலின் கண்ட உருவில் தான் அதுவாயும் அன்றா யும் ஆனவன் தான் அதுவாய் காணும் தவர்க்கு தான் அது வாய் தோன்றானோ-தோன்றுவன் எ. து.

பொழிப்புரை : விறகுத்தீயானது கடையுங்கால் வேறாய் வெளிப்பட்டும் கடையாக்கால் உடனாய் மறைந்தும் நின்றாற் போலச்சிவாலயத்து விளங்கும் சிவலிங்கத்திருமேனியில் முதல்வன் வேறாயும் உடனாயும் நின்றே வழிபடுவோர் தாம் அறிந்ததொரு மந்திரத்தால் அருச்சித்து வழிபடுங்காலை

அதனின் வேறாய் வெளிப்பட்டுத்தோன்றுவன் ஆதலாலே உலகிற் காணப்படும் பொருள் ஒரோவொன்றின்கண்ணும் தான் அது வாயும் அன்றாயும் விளங்கும் முதல்வன் அத்திரு மேனியைச்சிவனாகவே நினைந்து வழிபடும் சிவநேயத் தார்க்கு அவர் நினைந்தவாறு தான் அதுவேயாய் வெளிப் பட்டுத்தோன்றான் கொல்லோ எ. று.

ஓகாரம் எதிர்மறையாகலின் தோன்றுவன் என்றவாறாம்.

விறகின்கண் உடனாய் மறைந்து நின்ற தீயானது அதனைக்கடைவார்க்கு வேறாய்வெளிப்பட்டுத்தோன்றினாற் போலச்சிவலிங்கத்திருமேனியின்கண் உடனாய் மறைந்து நின்ற சிவபரம்பொருள் மந்திரத்தால் அருச்சித்து வழிபடும் அடியவருக்கு வேறாய் வெளிப்பட்டு அருள்புரியும் பொது வியல்பை ஏதுவாக்கி, அவ்வேதுக்கொண்டு சீவன் முத்தரா யினார்க்கும் அவன் அங்கு அவ்வாறு வெளிப்பட்டு அருள் புரியும் சிறப்பியல்பு வலியுறுத்தப்பட்டதாம்என்பது. அதனால் இது ஏதுவணியாம். உவமையும் உடன்கலத்தலால் கலப் பணியுமாம் என்பது.

''கண்டவுருத்தானதுவாய் அன்றானான்''. என்பது ஒரு மகாவாக்கியம். அது முதல்வனது சருவ வியாபகத்தைப் புலப்படுத்தியது.

உண்டல்போல் என்பதனை உண்டுபோல் அன்றுபோல் எனப்பகுத்துப் பொருள் உரைக்க. ஆண்டு அன்று என்பது செய்யுளாகலின் விகுதிகுன்றி அல் என நின்றது.

அங்கு என்பது அதிகாரத்தால்சிவாலயத்தைக்குறிக்கும்.

மேலைப்பாட்டில் ததி நிகழும் நெய் என்றதும், இந்தப் பாட்டில் காட்டத்தில் அங்கி என்றதும் முதல்வன் அவ்விடங் களில் பிரகாசனாய் நின்றதை விளக்கவந்த உவமைகளாம்.

விறகில் தீயினன் பாலிற்படும் நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல் நட்டுணர்வு கயிற்றினால்
முறுகவாங்கிக் கடைய முன்னிற்குமே.

எனவரும் அப்பரடிகளது அருள்வாக்கினை இங்கு நினைவு கூர்க என்பது.

இதனால் சிவாலயத்தைச்சிவன் எனக்காணுமாற்றுக்கு உவமை முகத்தால் விளக்கம் கூறினான் ஆசிரியன். இனிஇவ் விரண்டிடங்களையும் சீவன் முத்தன் வழிபடுமாறு உணர்த்த வருவது அடுத்த அதிகரணம் என்றறிக.

### நான்காம் அதிகரணம்

*மேற்கோள் : இனி இவ்விடங்களின் வழிபடுக என்றது, நரம்பு நாடி முதலானவற்றைத்தானதுவாய் வரும் புருடன் அவை ஆகாவாறு அப்புருடனுமாகலான்.*

ஏதுவுடன் கூடிய மேற்கோள் இது ஆசிரியன் உரைத்தது.

இவ்விடங்கள் என்ற சுட்டு மேல் சிவன் எனக்கண்ட அவ் விரண்டிடங்களையும் சுட்டியது. அவை சிவபத்தரது திருவேடமும் சிவாலயமும் ஆம் என்பது.

நரம்பு நாடி முதலானவை என்றது உடம்பினை என உணர்க.

புருடன் என்றது ஆன்மாவைக்குறிப்பதாம். முன்னது பெத்தகாலத்து ஆன்மாவையும் பின்னது முத்திக்காலத்து ஆன்மாவையும் குறித்தன.

இனி உடம்பினைத்தானதுவாய்ச்சார்ந்து வந்த பெத்த காலத்தான்மா விசாரிக்குங்கால் அவ்வுடம்பாகாது உடம்பின் வேறாயினாற்போலவே முதல்வனைத்தானதுவாய்ச்சார்ந்து வரும் இம்முத்திக்காலத்தான்மாவும் அம்முதல்வனாகாது முதல்வனின் வேறாம் ஆதலால்-அங்கு அவன் ஆண்டானும் இது அடிமையுமே ஆதலால் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சீவன்முத்தன் சிவன் எனவே கருதி வழி படல் வேண்டும் என்று இங்கு மேற்கொள்ளப்பட்டது என்பதாம்.

இதற்கு இவ்வாறு உரையாது தமக்குத்தோன்றியவா றெல்லாம் உரைத்துச்சொற்குணம் வாளா போயினாரும் உளர். அதனை அவர் உரைகளிற் காண்க.

**அதுவிது வென்ற ததுவல்லான் கண்டால்**
**அதுவிது வென்றதுவும் அல்லான் பொதுவதனில்**
**அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே**
**அத்துவிதி அன்பின் தொழு.**

என்பது உரைப்பாட்டு. இது சீவன் முத்த நிலையினும் வழிபாடு ஒன்றே வலியுடைத்தாம் என்கின்றது.

கண்ணழிவு :- அத்துவிதி, அது இது என்றது அது அல்லான் கண்டால் அது இது என்றதுவும் அல்லானாம். பொதுவதனில் அது அத்துவிதம் ஆதலால் அகண்டமும் அதற்கு தைவமே ஆதலால் அன்பின் தொழு எ. து.

பொழிப்புரை :- இந்த ஞான நூலினை முறையாகக் கேட்டுப்பயின்று சிந்தித்துத்தெளிந்தவழியானே இதுபொழுது சிவத்தோடு இரண்டறக்கலந்து சிவமாம் தன்மைஎய்தி நின்ற மாணாக்கனே, அந்த உடம்பே இந்த ஆன்மாவாம் என்று சொல்லும்படி உடம்பைத்தானதுவாய்ச்சார்ந்து வந்த பெத்த காலத்து ஆன்மா விசாரிக்குமிடத்து உடம்பாகாது உடம்பின் வேறாயினாற்போல அந்த முதல்வனே இந்த ஆன்மாவாம் என்று சொல்லும்படி முதல்வனைத்தானதுவாய்ச்சார்ந்து வரும் இம்முத்திக்காலத்து ஆன்மாவும் முதல்வனாகாதாய் முதல்வனின் வேறாம் என்றது அவன் ஆண்டானும் இவன் அடிமையும் ஆம் என்பது. சித்தும் சடமும் ஆகிய இரண்டற்கும் பொதுவாய் வருகின்ற பிரபஞ்சத்துள் முதல்வன் சருவ வியாபகனாய் இரண்டறக்கலந்துள்ளான்ஆகலான்வியாப்பியமாய் நின்ற உலகு உயிர்கள் அனைத்துமே வியாபகனாய் நின்ற முதல்வற்குத்தொழும்பு உடையவாம் ஆகலின் அத் தொழும்பு கருதி நீயும் இதுகாலை அவனை அன்போடு வழிபடுவாய் எ. று.

அன்பில்லாத வழிபாடு வழிபாடன்றாமாகலின் அன்பினால் வழிபடுவாய் என்றான். அன்பின் என்புழிச்சாரியை நிற்க உருபு தொக்கது. தொக்கது மூன்றனுருபு.

அது இது என்றது என்பது அது இதுவாம் என்று கருதி வந்த பெத்த காலத்தான்மா என்பதாம். என்றதுவும்-என்று கருதி வந்த முத்திக்காலத்தான்மாவும். இருவழியும் இது என்பன ஆன்மாவைக்குறித்து நிற்க அது என்பன முன்னது உடம்பையும் பின்னது முதல்வனையும் குறித்து நின்றன.

அதுவல்லான் என்புழி வந்த அது பின்னரும் கூட்டி உரைக்கப்பட்டது,

சடப்பொருள் உயிர்ப்பொருள் ஆகிய இரண்டற்கும் பிரபஞ்சம் பொதுவாதலின் அது பொதுவெனப்பட்டது.பொது வதனில் என்புழி அது பகுதிப்பொருள் விகுதி.

ஆதலால் எனற்பாலது ஆதல் எனக்குறைந்து நின்றது.

கண்டம்-பிரிவுடையது. அகண்டம்-பிரிவற்றது. எனவே அகண்டம் என்பது சடமும் உயிரும் எனப்பிரிவின்றியிருந்த பிரபஞ்சத்தைக்குறித்தது. அக்கண்டமும் என்புழிவந்த உம்மை முற்றும்மை ஆகலின் பிரபஞ்சம் அனைத்தும் என உரைக்கப் பட்டது, அவையுந்தாமெண்ணிலவாகலின்.

அன்பின் தொழு என்றதன் குறிப்பு அவன் ஆண்டானும் நீ அடிமையுமாம் என எண்ணி அந்த உறவுக்குக் குறை நேராதவாறு பத்திமையோடு தொழுவாய் என்றதாம். நால்வரது தேவார திருவாசகப்பாடல்களில் அவரது பத்திமையை நுனித்துக்கண்டறிந்து கொள்க.

ஆன்மா உடம்பைச்சார்ந்து வாழ்ந்து வந்த பெத்தகாலத்தில் உடம்பு உடைமையாக ஆன்மா உடையானாயிருந்தது. அதுவே முதல்வனைச்சார்ந்து வாழும் முத்திக்காலத்தில் முதல்வன் உடையானாக ஆன்மா உடைமையாக மாறியது. இந்த மாற்றத்தை விளக்கவே ''அகண்டமும் தைவம்'' என்று ஆசிரியன் விதந்தெடுத்து மொழிந்தான் என அறிக. ''உடையாய் உன் அடைக்கலமே''. என்றெல்லாம் வரும் ஆன்றோர் வாக்குக்களை அறிந்து போற்றுக.

அத்துவிதி என்றது சிவஞானத்தைப்போதிக்கும் ஆசிரியன் மாணாக்கனை விளித்த விளியெனக்கொள்க, அவனுந்தான் இந்த ஞான நூலினை முறையாகக்கேட்டுப்

பயின்று வந்து இதுபொழுது தன்னை அந்த ஒரு உன்னத நிலைக்கு ஆளாக்கிக்கொடு நின்றானாகலின்.

இதனால் சீவன்முத்த நிலையினும் தொழுகை வலி யுடைத்தாம் என்று வலியுறுத்தப்பட்டது.

**வினையால் அசத்து விளைதலான் ஞானம்**
**வினைதீரி னன்றி விளையா வினைதீர**
**ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்**
**ஆனத்தால் அன்பின் தொழு.**

என்பது உரைப்பாட்டு. இது தொழுகையால் வினையும் தீர்ந்து ஞானமும் விளைந்து சிவபோகமும் தழைக்கும் என் கின்றது.

கண்ணழிவு :- வினையால் அசத்து விளைதலானும். ஞானம் வினைதீரினன்றி விளையா ஆகலானும், வினைதீர ஞானத்தை நாடி தொழவே அது நிகழும் ஆனத்தால்-ஆன தால் அன்பின் தொழு எ. து.

பொழிப்புரை :- மாணவகா, முதல்வனை அணைந்து நிற்கும் இம்முத்திக்காலத்திலும் ஒரோவழி முதல்வனை மறந்து செய்யும் சிறிய வினையொன்றினால் பிறவிகள் பலவும் நேர வழியுண்டாம் ஆகலானும், அவ்வினை அறவே ஒழிந்தாலன்றி ஞானம் முழுமையாய் விளையாதாகலானும், வினையொழியவும் ஞானம் விளையவும் முதல்வனை இடைய றாது நினைந்து வழிபட்டுவரின் அவ்வழிபாட்டால் அவ் விரண்டனோடு சிவபோகமும் தழைக்குமாகலான் நீ அவனை அவ்விடங்களில் அன்போடு வழிபடுவாய் எ. று.

சீவன் முத்தராயினார் வழிபாடின்றியிருப்பராயின் வினை யில் நாட்டம் உண்டாகி ஒரோவழி முதல்வனை மறந்தும் வினைகளைச்செய்து மீண்டும் பிறவியைத்தேடிக்கொள்ளற்கு ஒரு ஏது உண்டாமாகலின் அதற்குச்சிறிதும் இடம்கொடா ராய் வழிபாடு ஒன்றிலேயே பொழுதைக்கழித்து வருவாராக என்றும், அவ்வாறு வரவே கரும்பயிற்குக்கூலியும் கிடைத் தாற்போல வழிபாட்டால் வினையும் ஒழிந்து ஞானமும் விளைந்து அவற்றோடு சிவபோகமும் பெருக வாய்ப்பு உண் டாம் என்றும் கூறியவாறாம்.

அசத்து உடம்பைக்குறிக்குமாகலின் பிறவி என்று உரைக்கப்பட்டது.

அவசத்தால் பரமனை மறந்து செய்யும் சிறுவினைத் துளியால் பெரியதோர் பிறவிக்கடலுள் வீழ்ந்து அழுந்துதற் கோரேதுண்டாமாகலின் வினையால் அசத்து விளையும் என்றும், வினைத்தீர்வு ஒன்றினால் மட்டுமே ஞானம் விளையும் என்பான் ஞானம் வினை தீரினன்றி விளையா என்றும், வழிபாட்டால் வினையும் ஒழிந்து ஞானமும் விளைந்து அவற்றோடு சிவபோகமும் தழைக்குமென்பான் தொழவே அது நிகழும் என்றும் கூறினான். வினைதீரத் தொழ அது நிகழும் என்றும் ஞானத்தை நாடித்தொழ அது நிகழும் என்றும் அது என்பதனைத் தனிதனிக்கூட்டி உரைக்க. அவ்வாறு தொழுதே உலகோர்க்கு வழிகாட்டி யருளிய நால்வர் முதலியோரையும் ஈண்டுச்சிந்திக்க வென்ப தாம்.

விளையா என்பது எதிர்மறைப்பலவின்பால் முற்று. ஞானம்-பால்பகா அஃறிணைப்பெயர். பலவேறு காலத்துப் பலவேறிடத்துப் பலவேறு வழிகளான் விளைதலின் ஞானங் கள் எனலுமாம். ''நானார் என்னுள்ளமார் ஞானங்களார் என்னையாரறிவார்''. எனவரும் வாதவூரடிகளது அருளிப் பாட்டை நோக்குக.

ஆனதால் என்பது எதுகைநோக்கி ஆனத்தால் என விரித்தல் விகாரம் பெற்றது.

> தன்னை அறிவித்துத் தான்தானாச் செய்தானைப்
> பின்னை மறத்தல் பிழையலதும் முன்னவன்தான்
> தானேதா னாச்செய்தும் தைவமென்றும் தைவமே
> ஆனால் தொழுகை வலி.

என்பது உரைப்பாட்டு. இது தன்னை உணர்த்தியோனைப் பின்னை மறத்தல் பிழையாம் என்று கூறித்தொழுகையை மேலும் வலியுறுத்துகிறது.

கண்ணழிவு :- தன்னை அறிவித்து தான் தானா செய் தானை பின்னை மறத்தல் பிழை. அல்லதூஉம் முன்னவன் தான் தானே தானா செய்தும் தைவம் என்றும் தைவமே ஆனால்-ஆனதால் தொழுகையே வலியாம் எ. து.

பொழிப்புரை :- ஐம்புல வேடர் கூட்டத்தே அகப்பட்டு வளர்ந்து வந்த ஆன்மாவை அதற்குள்ளிருந்தும் குருவாய் வந்தும் உணரப்பண்ணி அதுதானேயாம்படியும்செய்துவிட்ட தலைவனைப்பின்னர் மறந்து வழிபடாதொழிதல் செய்ந் நன்றி கொன்றபாவமாம் அன்றியும் உலகு உயிர் அனைத் திற்கும் முதற்காரணனாயுள்ள முதல்வன் தானே வலியவந்து அவ்வான்மாவைத்தானாகுப்படிச்செய்தணைத்துக்கொண் டானாயினும் பெத்தம் முத்தி இரண்டினுமே அது அவற்கு அடிமை அடிமையே ஆனதால் சீவன்முத்தன்ஈான் தன் தேகாந்த பரியந்தம் அவனை அன்போடு வழிபட்டு வருதலே அவற்கு வலியுடைத்தாம் எ. று.

அவ்வாறு வரவே, பாசங்களினின்று முற்றவும் விடுபட்டுத் தேகாந்தத்தே முதல்வனது சீபாதங்களை நிரந்தரமாய் அணைந்து வீடு பெற்றுய்வர் சீவன் முத்தர் என்பது ஒருதலை ஒருதலை ஒருதலையாமெனக்கருதுக. அது மீள்வும் வந்த வலியென்ற சொல்லாற்கொள்ளக்கிடந்ததெனவும் உணர்க.

ஆன்மாத்தன்னை உணர்த்தலும் அது தானாகும்படிச் செய்தலும் முதல்வன் செயலாக முதல்வனை உணர்தலும் உணர்ந்து அவனேயாய் நின்று அவனை அணைதலும் ஆன் மாவின் செயலாம் என்று கருதுக. ''ஆட்டுவித்தால் ஆரொரு வர் ஆடாதாரே'' எனவரும் பெரியோர் வாக்கினை இங்குச் சிந்திக்க என்பதாம். முதல்வனது அத்தகைய பேரருட்டிறத் தினை மறப்பது நன்றி கொன்ற பாவமாகலானும், அப் பாவந்தொலையப்பின்னும் பல பிறப்பெடுக்கவேண்டி வரு மாகலானும் அதனை மறவற்க என்றானாம்.

முன்னவன்தான் தானே தானாச்செய்தும் என மடங்கக் கூறியது அவன்தான் வலியவே வந்து ஆட்கொண்ட பேரருட் டிறத்தை உணர்த்திற்று.

தைவம் என்றும் தைவமே என்றதால் பெத்த காலத்தில் உடம்பைச்சார்ந்து நின்று உடம்பிற்குத் தொழும்பு பூண்டிருந்த ஆன்மா முத்திக்காலத்தில் முதல்வனைச்சார்ந்துநின்று அம்முதல்வற்குத் தொழும்புடையதாமாகலின் யாதானும் ஒன்றைச்சார்ந்தன்றித்தனித்து நிற்றலாற்றாத ஒன்றே ஆன்மாவாம் என்பதும் அதனால் அது இருவழியும் அடிமைதானாம் என்பதும் உணர்த்தியவாறாம் என்க. என்றும் அது தைவமே ஆனதால் நீ அவனை அன்பின்தொழு என்று மீளவும் ஆணை தந்தான் ஆசிரியன் என்க. இங்கு ஆனால் என்றது ஆனதால் என்ற பொருளைத்தந்தது.

**கல்லால் நிழல்மலை**
**வில்லார் அருளிய**
**பொல்லார் இணைமலர்**
**நல்லார் புனைவரே.**

என்ற காப்புச்செய்யுளை நூலுக்கு முதலாகக்கொண்டுநூலைத் தொடங்கிய ஆசிரியன் மெய்கண்டான்அவையடக்கச்செய்யுள் ஒன்றானும், சூத்திரங்கள் பன்னிரண்டானும், அச்சூத்திரங் களைக்கண்ணழித்து மேற்கொண்ட மேற்கோள்கள் முப்பத் தொன்பதானும், அதிகரணங்களுள் ஏதுவுடன் கூடிவந்த அம்மேற்கோள்களை விளக்க வந்த உரைப்பாட்டுக்கள் எண்ப தானும், நூல் இறுதியில் அது கேட்டற்குரியார் இன்னார் என்று உணர்த்தவரும் வெண்பா ஒன்றானும் சிவஞான போதம் என்ற இச்சீரிய ஞானநூலினை இனிதே முடித்தான்

பன்னிரண்டாம் சூத்திரம் முற்றியது.

இனி அந்நூலிறுதி வெண்பா வருமாறு.

**சிவமென்னும் அந்நாமம் சிந்தைநேர் நோக்கப்**
**பவமின்றாம் கண்வா சகத்திற் சிவமுண்டாம்**
**ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கிங் கொண்குருவால்**
**இன்றிந்நூல் மும்மை மலர்க்கு.**

என்பது நூலிறுதி வெண்பா. இது இந்நூல் கேட்டற்கு உரியார் இன்னார் என்கின்றது.

கண்ணழிவு : சிவம் என்னும் அந்ததர, ஒன்றும்இரண்டும் ஆகிய மலத்தார்க்கு அவர் சிந்தை நேர் நோக்கலால் பவம் இன்றாம். கண் வாசகத்தில் அன்னார்க்கு சிவம் உண்டாம். இன்று இங்கு இந்நூல் மும்மை மலர்க்கு ஒண்குருவால் ஆம் எ. து.

பொழிப்புரை :- சிவம் என்னும் அந்தத்தை அணைந்து நின்ற மாணாக்கனே, ஒன்றும் இரண்டும் ஆகியமலங்களைச் சிறிதளவேயுடைய விஞ்ஞானகலர் பிரளயாகலர் என்னும் இருவகை ஆன்ம வருக்கத்தாருக்கு அவர் முதல்வனை எஞ்ஞான்றும் தம் சிந்தையுள்ளே பிறழாமற்கொண்டு எந் நேரமும் நேர்நோக்கி நிற்றலாலே பிறவி என்பது அவர்க்கு இன்றாம். அன்னார் முதல்வனது அருள் நோக்காலும்அருள் மொழியாலுமே சிவமாந்தன்மை எய்தப்பெறுவராம்.ஆகலின் அவர்க்கு இந்நூல் வேண்டிற்றன்றாம். இவ்வுலகில் இக்கால எல்லையில் எழுந்த இந்நூலானது ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களையும் உடைய சகலர் எனப்பட்ட வர்க்கே ஞான குரவனால் உபதேச முறையில் கேட்டற்கு உரியதொன்றாம் எ. று.

ஆன்ம வருக்கத்தார் மூவகையார் இயல்பு மேல் உரைக்கப் பட்டது. இம்மூவகையாருள் விஞ்ஞானாகலரும் பிரளயா கலரும் முதல்வனை எஞ்ஞான்றும் தம் சிந்தையுள் பிறழா மற் கொண்டிருப்பவராதலின் பிறவி என்பது அவர்க்கு இன்றாம் ஆகலானும், அன்னார் முறையே முதல்வனது அருள் நோக்கினாலும் அருள் மொழியாலுமே சிவமாந் தன்மை எய்தப்பெறுவராம் ஆகலானும் அவர்க்கு இந்நூல் வேண்டிற்றன்றாம் என்பதே ஆசிரியனது துணிபாம். ஏனைச் சகலர் ஆயினார்க்கு இந்நூல் வேண்டியதொன்றேயாயினும் அவருந்தாம் ஞானகுரவன் ஒருவனால் உணர்த்தப்பட்டு உணரினல்லது தாமாக ஓதியுணர்தல் என்பது கூடாதாகலின் 'ஒண்குருவால் இன்று இந்நூல் மும்மை மலர்க்கு' என்றான்.

அவிச்சையை இருள் என்றும் விச்சையை ஒளி என்றும் கூறும் மரபும் உண்மையின் ஞானாசிரியனை ஒண்குரு என்றான்.

மும்மை என்பது இங்கு மூன்று என்னும் பொருள்தந்தது. தெரிமாண் தமிழ் மும்மைத்தென்னம் பொருப்பன் என்புழி மும்மை என்பது அப்பொருட்டாய் வந்தமை காண்க.

இதனால் இந்நூல் கேட்டற்கு உரியார் இன்னார் என்று உணர்த்தப்பட்டது.

சிவஞானபோதம் விளக்கவுரை முற்றிற்று.

உரையாசிரியன் :

**பேராசிரியன் திரு. வை. முருகேசன்,**

திருவோத்தூர். வையாபுரி. முருகேசன்.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 11 | ஏந்திழையள் | ஏந்திழையாள் |
| 2 | 15 | என்றது | என்பது |
| 3 | 16 | பெருளாகிய | பொருளாகிய |
| 7 | 21 | அசிரியன் | ஆசிரியன் |
| 9 | 19 | அதிகாரம் என்பது | அதிகரணம் என்பது |
| 17 | 19-20 | குளவியாதாலும் | குளவியாதலும் |
| 24 | 10-11 | ஆன்மாகட்கும் | ஆன்மாக்கட்குப் |
| 25 | 12 | கலத்தல் பிரிவின்றிக் | கலத்தல்-பிரிவின்றி |
| 27 | 13 | ..................... | என்பது உரைப்பாட்டு. இது ஆன்மாக்கள் முதல்வனேயாம்படி நிற்கும் எனவந்த மேற்கோளை உவமை முகத்தால் விளக்குகிறது. |
| 27 | 23 | நின்றார்ற்போல் | நின்றாற் போல |
| 32 | 29 | பாசக்கட்டுகளின் | பாசக்கட்டுக்களின் |
| 41 | 6 | உள்ளதாயிருந்து | உள்ளனவாயிருந்து |
| 48 | 21 | இவ்வாசிரியது | இவ்வாசிரியனது |
| 49 | 3 | அங்ஙண் | அங்கண் |
| 49 | 17 | வந்தன | வந்தது |
| 52 | 27 | அவ்வான்மாவாம். என்று | அவ்வான்மாவாம் என்று |
| 56 | 25 | இது எனது எனது உடல் | இது எனது உடல் |
| 57 | 9 | இது. எனது உடல் | இது எனது உடல் |
| 69 | 12 | மேலு. அறிய முயன்றும் | மேலும் அறிய முயன்றும் |
| 75 | 28 | விட்டு விலகுவதேயாம். | விட்டு விலகுவதால் அது பொழுது புருட தத்துவமும் ஆன்மாவை விட்டு விலகுவதேயாம். |
| 78 | 27 | அந்தக்கரணம் அற்றின் | அந்தக்கரணம் அவற்றின் |
| 87 | 9 | என்பதற்கும் | என்பதற்குப் |
| 90 | 21 | முழுவழுமாய் | முழுவதுமாய் |
| 90 | 29 | மாயா விளக்கா | மாயா தனுவிளக்கா |
| 90 | 31 | காட்டம் பால் | காட்டம் போல் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 95 | 3 | வாக்கா | வாக்காதி |
| 104 | 22 | காணாதேல் கண்ணும் காணாது | காணாதேல் அதுதானும் காணாது, அதுதான் அவ்வாறு காணாதேல் கண்ணும் காணாது. |
| 106 | 3-4 | என்றதாம் | என்பதாம். |
| 112 | 11 | உணருரு அகத்தெனின் | உணருரு அசத்தெனின் |
| 118 | 12 | அற்கு இல்லை | அதற்கு இல்லை |
| 125 | 25 | அவ்வருவில் | அவ்வுருவில் |
| 138 | 26 | மூன்றாம் அ ணம் | மூன்றாம் அதிகரணம் |
| 142 | 20 | இருதிறனறிவு திரண்டலா | இருதிறனறிவுள திண்டலா |
| 150 | 32 | தவத்தா | தவத்தால் |
| 153 | 12-13 | மூதல்வன் | முதல்வன் |
| 163 | 15 | இங்குக்கூறப்பட்து | இங்குக்கூறப்பட்டது |
| 164 | 21 | வியங்கிய | விளங்கிய |
| 191 | 5 | அசத்தாய் காண்க | அசத்தாய்க் காண்க |
| 209 | 2-3 | நம-குறிப்பு வினைப்பெயர், இங்குக் குறிப்பெச்சமாயிற்று. | நமவல்ல—எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று |
| 210 | 28 | முக்திக்காலத்தில் | முத்திக்காலத்தில் |
| 231 | 2 | அடிமையுயாய் | அடிமையுமாய் |
| 240 | 10 | எ. று. | எ. து |
| 241 | 16 | சீவன்மூத்தன் | சீவன்முத்தன் |





திருவோத்தூரில் வாழ்ந்து வரும் இப்பேராசிரியர் திரு. வை. முருகேசனர் அவர்கள் சித்தாந்த நூல்களைக் கற்றுத்துறைபோகிய அனுபவம் உடையவர்கள் பலர்க்கும் கற்பித்துவரும் அனுபவமும் வாய்க்கப் பெற்றவர்கள் மயிலாடுதுறையில் தருமை ஆதீனம் 24 ஆவது குருமகா சன்னிதானம் அருளாட்சிக் காலத்தில் அமைக்கப் பெற்ற மெய்கண்டார் சைவ சித்தாந்தக் கல்லூரியில் கற்பித்த திறம் உடையவர்கள். தாம் பல்லாண்டுகளாகச் சிந்தித்துத் தெளிந்தவகையில் இந்த விளக்கவுரையை வரைந்துள்ளார். இந்த அரிய நூலைப் படித்து மகிழ்ந்தேன். காலந்தோறும் மெய்யுணர்வு நூல்களுக்குத் தக்கவரைக்கொண்டு விளக்கம் காணச்செய்து ஞான நூல் நெறியை வாழையடி வாழையாக வளரச் செய்து வருகின்ற பெருங் கருணையாளன் இறைவன் என்ற உண்மை என்னுள் முறுகி எழுந்தது.

சுருங்கக் கூறினல் பேராசிரியர் திரு. வை. முருகேசனர் வரைந்துள்ள இச்சிவஞான போத விளக்கவுரை இந்த நூற்ருண்டு கண்டுள்ள சிறந்த உரைகளுள் ஒன்ருகத் திகழ்கின்றது. பேராசிரியர் தம் அனுபவ அறிவின் துணையாலும் இறைவன் திருவருளாலும் பல்லாண்டுகள் வாழ்ந்து மெய்கண்ட சாத்திர நெறிப்பட்ட தத்துவ வுலகிற்கும் பெரும்பயன் தரத்தக்க பல வேறு படைப்புக்களை வழங்கி சிறப்பிப்பாராக.

**தருமை ஆதீனப் புலவர் செஞ்சொற் கொண்டல்**
**தமிழாகரர் திருமுறை உரைமணி நல்லாசிரியர்**
**டாக்டர் சிங்காரவேலன், M.A., Ph.D.**
**மயிலாடுதுறை.**

---

MK Colour Process, Madras-14. Phone : 841478